॥ श्रीमते कृष्णाय परस्मै ब्रह्मणे नमः ॥





# श्रीमद्भागवते

अष्टम नवम स्कन्धौ ॥

## ஸ்ரீமத்பாகவதம்.

எட்டாவது, ஒன்பதாவது ஸ்கந்தங்கள்.

தமிழுரையுடன்.

இச்சிறந்த உரை
மஹாமஹோபாத்தியாய வேதாந்தகேஸரி
பங்காநாடு ப்ரம்ஹஸ்ரீ கணபதி சாஸ்திரிகள்
அவர்களின் முக்கிய சிஷ்யரும், வியாகரண வேதாந்த
சாஸ்திரபாரங்கதரும், பாகவத பகவத்கீதோபன்யாஸகரும்,
சோதிட-மந்திரசாஸ்திர வித்வானும் 'ஆர்யமதஸம்வர்த்தனீ'
பத்திராதிபருமான

**ப்ரம்ஹஸ்ரீ கடலங்குடி நடேச சாஸ்திரிகள்**

அவர்களால் இயற்றி

தமது 'ஆர்யமதஸம்வர்த்தனீ' அச்சு இயந்திரசாலையில்
அச்சியற்றி சென்னையில் பிரசுரஞ்
செய்யப்பட்டது.

காபிரைட்.] 1937. [விலை. ரூ. 4-0-0.

ॐ नमो भगवते वासुदेवाय ॥



# ஸ்ரீமத்பாகவதம்.

## எட்டாவது ஒன்பதாவது ஸ்கந்தங்கள்.



## முகவுரை.

ஸ்ரீமத்பாகவதமானது கல்நெஞ்சையும் கரைத்து பகவத்சரணங்களிலீடுபடச் செய்யவல்லது என்பது உலகப்ரஸித்தம். ஆனால் இப்புராணரத்தினமானது ஏனையபுராணங்கள் போல் எளியநடையில் அமையாது கடினமான நடையில் அமைந்திருப்பதால் இதை அடிமுதல் முடிவரை படித்து அதன்பொருளை யறிய ஆவலுள்ளவர் கூடத் தமது எண்ணத்தை நிறைவேற்றிக் கொள்ள முடியாதவர்களாய் இடையிடையே அங்குமிங்குமாகச் சிலவுபாக்கியானங்களையும் அவற்றிலும் சில சுலோகங்களையும் மட்டுமே படித்து பரமானந்தமடைவரேயன்றி முற்றும் ஒருபதங்கூடவிடாது படித்து முழுப்பொருளையும் அறிந்து கொள்ளாதவர்களாகவே இருக்கின்றனர் என்பது வெள்ளிடைமலை. இந்நிலை நந்தமிழுலகுக்கு நேராவண்ணம் இப்புராண ரத்தினத்தைத் தேவநாகரலிபியில் மூலத்துடன் தமிழில் பெயர்த்து அதன்பொருளை எளிதில் எவருமறிந்து கொள்ளுமாறு செய்யவேண்டு மென்று ஆவல்கொண்டோம். அந்த எம்முடைய ஆவலை ஸர்வேஶ்வரனும் பக்தபக்ஷபாதியுமான ஸ்ரீகோபாலன் பூர்த்திசெய்து வைத்ததற்கு அவரது திருவடிகளையே நாம் இடையறாது ஏற்றிப் போற்றக்கடமைப் பட்டுவிட்டோம்.

மேலும் இப்புராண ரத்தினத்துக்கு நமது மொழிபெயர்ப்புக்கு முந்தி வேறு சில மொழிபெயர்ப்பும் வெளிவந்திருப்பது உண்மைதானாயினும், அவற்றையும், நமதுமொழிபெயர்ப்பையும் சீர்தூக்கிப்படித்துப் பார்ப்பவர்க்கு நமது மொழிபெயர்ப்பின் தேவை நன்குவிளங்குமாதலால் அவ்விஷயத்தில் நாம் அதிகம் சொல்லத் தேவையில்லை என்று எண்ணுகிறோம்.

மேலும் இந்த மொழிபெயர்ப்புடன் கேரளத்தில் குருவாயூர் என்ற ஸ்ரீகிருஷ்ணக்ஷேத்திரத்தில் வஸித்துவந்து இடையறாது

ஆண்டவனை யுபாஸித்து அவனதருளைப் பெற்ற மஹாகவி நாராயணபட்டர் என்ற பாகவதோத்தமரால் இயற்றப்பட்டதும் ஆயிரத்துமுப்பத்தாறு சுலோகங்களுள்ளதும், ஸ்ரீமத்பாகவதார்த்த ஸங்கிரஹரூபமானதுமான நாராயணீயம் என்ற பகவத்ஸ்துதிரூபமான கிரந்தத்தையும் தேவநாகரலிபியில் மூலத்துடனும் தமிழில் பதவுரையுடனும் ஸ்ரீமத்பாகவதத்திலுள்ள அந்தந்த ப்ரகரணத்துக்கேற்றவாறு அந்தந்த விடங்களில் சேர்த்து நாம் அச்சிட்டு வெளியிருட்டிருப்பது ஸ்ரீபாகவதார்த்தத்தை உள்ளபடி அறிந்து கொள்ள முயற்சிப்பவர்க்குப் பேருபகாரமாகவே இருக்கும் என்பது எமது துணிபு.

மேலும், இம் மொழிபெயர்ப்பு வேலையை 10-7-1932 தேதியில் தொடங்கி ஸ்ரீதரீயம் வம்சதரீயம் முதலிய அருமையான வியாக்கியானங்களைத் தழுவி 10-7-1937 வரை இரவுபகலாய் வேலைசெய்து ஒருவாறு அவ்வேலையை இன்று 10-7-1937ல் முடித்ததை நினைக்க நினைக்க நமக்குண்டாகும் ஆனந்தத்துக் கோளவே இல்லை.

ஆகவே நாம் எந்தத் தமிழ்மக்களுக்கு உதவவேண்டி ஸ்ரீகோபாலன் கிருபையை முன்னிட்டு இவ்வருமையான காரியத்தைச் செய்யத்தொடங்கி இன்று செய்தும் முடித்தோமோ அந்தத் தமிழ் மக்கள் இதுவறை நடந்துகொண்டது போல இனியும் நடவாது இத்துறையில் பாடுபடும் நம்மை யாதரிக்கும் வாயிலாக இதை அடிமுதல் முடிவறைபடித்துப் பயன்படுத்திக் கொண்டு தமது ஜன்மத்தை ஸபலமாக்கிக்கொள்ளுவாரென நம்பி அவ்விதமே ஸபலமாக்கிக்கொள்ளும்படி நாமும் வேண்டுகிறோம். இங்ஙனம் ஸ்ரீ கோபாலனது கிருபையையும், கோபாலபக்தர்களின் கிருபையையும், ஆவலுடன் எதிர்பார்க்கும்—

ஸ்ரீராதாகிருஷ்ணதாஸன்,

**கடலங்குடி நடேசசாஸ்திரிகள்.**

கஸ்தூரிரங்க விலாஸ், 17, நடேசய்யர் தெரு,
(10-7-1937) புதுமாம்பலம், தியாகராயநகர் போஸ்டு, சென்னை.




# எட்டாவது ஸ்கந்தம்.

## விஷய அட்டவணை.

பக்கம்.

### அத்தியாயம் 1.



### அத்தியாயம் 2.

### கஜேந்திர மோக்ஷம்.

## விஷய அட்டவணை.

பக்கம்.



### அத்தியாயம் 3.



### அத்தியாயம் 4.

பக்கம்.



அத்தியாயம் 5.

## அமிருதமதன சரித்திரம்.

பக்கம்.

## அத்தியாயம் 6.



## அத்தியாயம் 7,

பக்கம்.

## அத்தியாயம் 10.

## தேவாஸுரயுத்தம்.



## அத்தியாயம் 11.

பக்கம்.



அத்தியாயம் 12.

## ருத்திரனுக்கு மோஹினீரூபதர்சனம்.



அத்தியாயம் 13.

பக்கம்.

பக்கம்.



அத்தியாயம் 19,



அத்தியாயம் 20.



அத்தியாயம் 21.

பக்கம்.

பக்கம்.

அத்தியாயம் 23.



அத்தியாயம் 24.

## மத்ஸ்யாவதார சரித்திரவர்ணனம்.

எட்டாவது ஸ்கந்தத்தின் விஷய அட்டவணை முற்றிற்று.



# ஒன்பதாவது ஸ்கந்தம்.

## விஷய அட்டவணை.



பக்கம்.

அத்தியாயம் 1.

பக்கம்



அத்தியாயம் 2.



அத்தியாயம் 3.



அத்தியாயம் 4.

பக்கம்.

பக்கம்.



அத்தியாயம் 6.



அத்தியாயம் 7.



அத்தியாயம் 8.

பக்கம்.



## அத்தியாயம் 9.

பக்கம்.



அத்தியாயம் 10.



அத்தியாயம் 11.



அத்தியாயம் 12.



அத்தியாயம் 13.

பக்கம்.



அத்தியாயம். 14

பக்கம்



அத்தியாயம் 16.



அத்தியாயம் 17.



அத்தியாயம் 18.

ஒன்பதாவது ஸ்கந்தத்தின் விஷய அட்டவணை முற்றிற்று.



ॐ नमो भगवते वासुदेवाय ॥



# श्रीमद्भागवते

## अष्टमस्कन्धः प्रारभ्यते ॥

श्रीधरीयव्याख्यानावतरणिकास्थाः श्लोकाः ॥

अथाष्टमे चतुर्विंशत्यध्यायैर्मनुवर्णनम् ।
तत्सुतैर्ऋषिदेवेन्द्रैर्मूर्तिभिश्च हरेस्सह ॥ १ ॥

---

# ஸ்ரீமத்பாகவதம்.

## எட்டாவது ஸ்கந்தம்.

### முதலாவது அத்தியாயம்.

(க-ரை) பிறகு எட்டாவது ஸ்கந்தத்தில் இருபத்து நான்கு அத்தியாயங்களினால் மனுபுத்திரர்கள் ருஷிகள் தேவர்கள், இந்திரர்கள் இவர்களுடனும், ஹரியின் அவதாரங்களுடனும் கூட ஸ்வாயம்புவர் முதலிய மனுக்களின் வர்ணனமானது செய்யப்படுகிறது. (1) ஒவ்வொரு மன்வந்தரத்திலுமே மனுவாதியர்களான ஆறு பேர்கள் தனித்தனியே ஸத்தர்மங்களை=வேதோக்தங்களான தர்

प्रतिमन्वन्तरं चैव मन्वाद्याः षट् पृथक्पृथक् ।
प्रवर्तयन्ति सद्धर्मान् पालयन्त्याचरन्ति च ॥ २ ॥

अतो मन्वन्तरस्योक्तं सद्धर्म इति लक्षणम् ।
येन वै क्रियमाणेन नरो न निरयं व्रजेत् ॥ ३ ॥

तत्र तु प्रथमे स्वयंभुवस्स्वारोचिषस्तथा ।
उत्तमस्तमसश्चेति चतुर्मनुनिरूपणम् ॥ ४ ॥

स्वायंभुवेऽन्तरेऽनन्तदुरन्तगुणवर्णनात् ।
मुदितः परिपप्रच्छ सर्वमन्वन्तरस्थितिम् ॥ ५ ॥

## अथ प्रथमोऽध्यायः ॥

राजोवाच—स्वायंभुवस्येह गुरो वंशोऽयं विस्तराच्छ्रुतः । यत्र विश्वसृजां सर्गो मनूनन्यान्वदस्व नः । (यत्र धर्माश्च विविधाश्चातुर्वर्ण्याश्रिताः शुभाः) ॥ १ ॥ यत्र यत्र हरेर्जन्म कर्माणि च महीयसः । गृण-

---

மங்களை, உலகில் ப்ரவிருத்திக்கச் செய்வதுடன் பரிபாலனமும் செய்து தாங்களும் அனுஷ்டிக்கின்றனரன்றோ. (2) ஆனதுபற்றியே மன்வந்தரத்துக்கு ஸத்தர்மம் என்றே லக்ஷணமானது சொல்லப்பட்டது. இந்த ஸத்தமர்த்தினல் மனிதன் ஒருபொழுதும் நரகத்தையடையவே மாட்டான் (3) அவற்றுள் முதலாவது அத்தியாயத்தில் ஸ்வாயம்புவர், அதுபோல ஸ்வாரோசிஷர், உத்தமர், தாமஸர் என்ற நான்கு மனுக்களின் நிரூபணஞ்செய்யப்படுகிறது. (4) ஸ்வாயம்புவ மன்வந்தரத்தில் அனந்தனை பகவானுடைய எல்லையற்ற குணங்களின் வர்ணனமூலம் ஸந்தோஷித்த அரசன் எல்லா மன்வந்தரங்களுடைய ஸ்திதியையும் கேட்கிறுர். (5)

அரசன் சொல்லலுற்றுர்—ஹே குரோ! இப்பொழுது எதில் மனுவின் கன்னிகைகளிடத்தில் விஸ்வஸ்ரஷ்டாக்களான மரீச்யாதிகளுடைய புத்திரபௌத்திராதி விருஷ்டியானதேற்பட்டதோ அந்த ஸ்வாயம்புவமனுவின் இந்த வம்சமானது விரிவாகக் கேட்கப்பட்டது. மற்ற மனுக்களையும் எங்களுக்குச் சொல்லுவீராக. (1) ஹே ப்ரப்ஹன்! எந்த எந்த மன்வந்தரத்தில் மஹத்தமரான ஹரியினுடைய அவதாரத்தையும், கர்மங்களையும் கவிகள் வர்ணிக்

न्ति कवयो ब्रह्मंस्तानि नो वद श्रृण्वताम् ॥ २ ॥ यद्यस्मिन्नन्तरे ब्रह्मन्भग-
वान्विश्वभावनः। कृतवान्कुरुते कर्ता ह्यतीतेऽनागतेऽद्य वा ॥ ३ ॥

ऋषि रुवाच—मनवोऽस्मिन्व्यतीताः षट् कल्पे स्वायंभुवादयः।
आद्यस्ते कथितो यत्र देवादीनां च संभवः ॥ ४ ॥ आकूत्यां देवहूत्यां च
दुहित्रोस्तस्य वै मनोः। धर्मज्ञानोपदेशार्थं भगवान्पुत्रतां गतः ॥ ५ ॥
कृतं पुरा भगवतः कपिलस्यानुवर्णनम्। आख्यास्ये भगवान्यज्ञो यच्च-
कार कुरूद्वह ॥ ६ ॥ विरक्तः कामभोगेषु शतरूपापतिः प्रभुः। विसृज्य
राज्यं तपसे सभार्यो वनमाविशत् ॥ ७ ॥ सुनन्दायां वर्षशतं पदैकेन भुवं
स्पृशन्। तप्यमानस्तपो घोरमिदमन्वाह भारत ॥ ८ ॥

---

கின்றனரோ அவற்றைக் கேட்கின்ற எங்களுக்குச் சொல்லுவீராக. (2) ஹே ப்ரம்ஹன்! ப்ரபஞ்சத்தை விருத்தி செய்பவரான பகவான் சென்ற எந்த மன்வந்தரத்தில் எந்தக் காரியத்தைச் செய்தாரோ, இனிவரும் மன்வந்தரத்தில் எந்தக் காரியத்தைச் செய்யப் போகின்றாரோ, இந்த மன்வந்தரத்தில் எதைச் செய்கின்றாரோ அவற்றை எங்களுக்குச் சொல்லுவீராக என்றார். (3)

ருஷி சொல்லலுற்றார்—இந்தக் கல்பத்தில் ஸ்வாயம்புவரை ஆதியாகவுடைய ஆறுமனுக்கள் சென்று விட்டனர். எதில் தேவாதிகளினுத்பத்தியேற்பட்டதோ அந்த ஆதிமனு உமக்குச் சொல்லப்பட்டார். (4) அந்த ஸ்வாயம்புவமனுவினுடைய புத்திரிகளான ஆகூதி தேவஹூதி இவர்களிடத்தில் தர்மக்ஞானோபதேசத்துக்கு வேண்டிப் பகவான் புத்திரனாக அவதரித்தார். (5) ஹே குரூத்வஹ! முன்னர் பகவானான கபிலரைப் பற்றின வர்ணனமானது செய்யப்பட்டது. பகவானான யக்ஞர் எதைச் செய்தாரோ அதைச் சொல்லப்போகிறேன். (6) சதரூபையின் பதியும் ப்ரபுவுமான மனு காமபோகங்களில் வெறுப்பை யடைந்தவராய் ராஜ்யத்தை விட்டு நீங்கித் தவஞ்செய்யவேண்டி மனையாளுடன் கூடக் காட்டில் ப்ரவேசித்தார். (7) ஹே பாரத! ஸுனந்தை யென்ற கங்கைக்கரையில் நூறுவருஷங்கள் முடிய ஒரேகாலினால் பூமியைத் தொட்டுக் கொண்டு கொடூரமான தவத்தைச் செய்கின்றவராய்ப் பின்வரும் வார்த்தையைச் சொன்னார். (8)

मनुरुवाच—(वासुदेवो वसत्येषु सर्वदेहेष्वनन्यदृक्) । येन चेतयते विश्वं विश्वं चेतयते न यम् । यो जागर्ति शयानेऽस्मिन्नायं तं वेद वेद सः ॥ ९ ॥ आत्मावास्यमिदं विश्वं यत्किंचिज्जगत्यां जगत् । तेन त्यक्तेन भुञ्जीथा मा गृधः कस्यस्विद्धनम् ॥ १० ॥ यं न पश्यति पश्यन्तं चक्षुर्यस्य न रिष्यति । तं भूतनिलयं देवं सुपर्णमुपधावत ॥११॥ न यस्याद्यन्तौ मध्यं च स्वः परो नान्तरं बहिः । विश्वस्यामूनि यद्यस्माद्विश्वं च तदृतं महत् ॥ १२ ॥ स विश्वकायः पुरुहूत ईशः सत्यः स्वयंज्योतिरजः पुराणः ।

---

மனு சொல்லலுற்றூர்—சிதாத்மாவான எவரால் ப்ரபஞ்சமானது சேதனனுள்ளதாகவாகிறதோ, ஸ்வயம் சித்ரூபராக இருப்பதுபற்றி எவரை ப்ரபஞ்சமானது சேதனேயுள்ளவராகச் செய்வதில்லேயோ, எவர், இந்த ப்ரபஞ்சமானது தூங்கினபோதிலுங்கூட விழித்துக் கொண்டிருக்கின்றூரோ அவரை இந்த ஜனமானது அறிந்துகொள்ளுவதில்லே. அவரோ இந்த ஜனத்தை யறிந்துகொண்டே இருக்கிறூர். (9) உலகிலுள்ள பூதஸமூஹமானது யாதுண்டோ இவை யாவும் ஆத்மாவினல் (பரமாத்மாவினல்) ஆவாஸ்யமாக=அவரது ஸத்தை சைதன்யம் இவற்றுல் நிறைவுபெற்றதாக, இருக்கிறது. ஆனதுபற்றி அந்த ஈஶ்வரனுல் கொடுக்கப்பட்ட தனத்தினுலேயே பூமியிலுள்ள போகங்களே அனுபவிப்பீர்களாக. பிறர் ஒருவருடைய தனத்திலும் ஆசைப்படாதீர். (10) பார்க்கின்ற எவரை ஜனமானது பார்ப்பதில்லேயோ, பார்க்கின்ற எவருடைய ஞானமானது நாசத்தை யடைவதில்லேயோ, ஸர்வாந்தர்யாமியும் அஸங்கனுமான அந்தத் தேவனேப் பஜியுங்கள். (11) எவருக்கு ஆதியும் அந்தமும், நடுவும், சொந்தமும், பிறரும், உள்ளும் வெளியும் கிடையாதோ எக்காரணம்பற்றி எவரிடமிருந்து ப்ரபஞ்சத்துக்கு ஆதி அந்தம் முதலிய இவைகள் ஏற்படுகின்றனவோ ப்ரபஞ்சமும் எவருடைய ஸ்வரூபமோ அக்காரணம்பற்றி அவர் முக்காலத்திலுமழிவற்ற பரிபூர்ண ப்ரம்ஹமாகிறூர். (12) அந்த ஈஶன் அஜனும், ஸத்யரும், ஸ்வப்ரகாசரும், புராணரும்=என்றும் புதுமை வாய்ந்தவரும், விஶ்வத்தையே சரீரமாக வுடையவரும், பலநாமங்களேயுடையவருமாக இருக்கிறூர். அவ்விதமிருந்தபோதிலுங்கூட தனது

धत्तेऽस्य जन्माद्यजयात्मशक्त्या तां विद्ययोदस्य निरीह आस्ते ॥ १३ ॥ अथाग्रे ऋषयः कर्माणीहन्तेऽकर्महेतवे । ईहमानो हि पुरुषः प्रायोऽनीहां प्रपद्यते ॥ १४ ॥ ईहते भगवानीशो नहि तत्र विषज्जते । आत्मलाभेन पूर्णार्थो नावसीदन्ति येऽनु तम् ॥ १५ ॥ तमीहमानं निरहंकृतं बुधं निराशिषं पूर्णमनन्यचोदितम् । नॄन् शिक्षयन्तं निजवर्त्मसंस्थितं प्रभुं प्रपद्येऽखिलधर्मभावनम् ॥ १६ ॥

श्रीशुक उवाच—इति मन्त्रोपनिषदं व्याहरन्तं समाहितम् । दृष्ट्वाऽसुरा यातुधाना जग्धुमभ्यद्रवन्क्षुधा ॥ १७ ॥ तांस्तथावसितान्वीक्ष्य यज्ञः

---

சக்தியான மாயையினுல் இந்த ப்ரபஞ்சத்துக்கு ஜன்மாதிகளையுண்டுபண்ணுகிருர். வித்தையினுல் அதைப் போக்கிக்கொண்டு முடிவில் எவ்வித சேஷ்டையுமற்றவராக இருக்கிருர். (13) (எக்காரணம்பற்றி ஈஸ்வரன் கர்மங்களைச் செய்து பிறகு அவற்றை விடுத்து நிர்வ்யாபாரராக இருக்கின்ருரோ) அக்காரணம்பற்றியே ருஷிகள் முதலில் மோக்ஷத்துக்கு வேண்டிக் கர்மங்களைச் செய்கின்றனர். கர்மத்தைச் செய்கின்ற புருஷன் முடிவில் கர்மநிவிருத்தியை யடைகின்ருனன்ருே. (14) பகவானுன ஈஸ்வரன் கர்மங்களைச் செய்கின்ருன். ஆயினும் ஆத்மலாபத்தினுல் பரிபூர்ணமான ஆனந்தமுள்ளவராக இருப்பதுபற்றி அவற்றில் பற்றையடைவதில்லை. ஆகவே எவர்கள் அவரைப் பின்பற்றுகின்றனரோ அவர்கள் சோர்வையடைவதுமில்லை. கர்மப்பற்றை யடைவதுமில்லை. (15) தனது வழியில் (நராவதாரரூபமான மார்க்கத்தில்) இருப்பவரும், ஆனதுபற்றியே கர்மத்தை யனுஷ்டிப்பவரும், ஆயினும் புதனுக=ஸர்வக்ஞராக, இருப்பதுபற்றியும் ஸர்வபரிபூர்ணராக இருப்பதுபற்றியும் அஹங்காரமற்றவரும், எதிலும் காமனையற்றவரும், ப்ரபுவாக இருப்பதுபற்றி எவருக்குமுட்படாதவரும் (ஸர்வஸ்வதந்திரரும்) தனது அனுஷ்டானமூலம் மனிதர்களை அவ்வழியில் ப்ரவிருத்திக்கச் செய்கின்றவரும், ஸகலமான தர்மங்களையும் ப்ரவிருத்திக்கச் செய்கின்றவருமான அவரை நான் சரணமாக அடைகின்றேன் என்ருர். (16)

सर्वगतो हरिः । यामैः परिवृतो देवैर्हत्वाशासत्त्रिविष्टपम् ॥ १८ ॥ स्वारोचिषो द्वितीयस्तु मनुरग्नेः सुतोऽभवत् । द्युमत्सुषेणरोचिष्मत्प्रमुखास्तस्य चात्मजाः ॥ १९ ॥ तत्रेन्द्रो रोचनस्त्वासीद्देवाश्च तुषितादयः । ऊर्जस्तम्भादयः सप्त ऋषयो ब्रह्मवादिनः ॥ ऋषेस्तु वेदशिरसस्तुषितानाम पत्न्यभूत् । तस्यां जज्ञे ततो देवो विभुरित्यभिविश्रुतः ॥ २१ ॥ अष्टाशीतिसहस्राणि मुनयो ये धृतव्रताः । अन्वशिक्षन्व्रतं तस्य कौमारब्रह्मचारिणः ॥ २२ ॥ तृतीय उत्तमो नाम प्रियव्रतसुतो मनुः । पवनः सृञ्जयो

---

ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—ஸமாஹிதராக இருந்தபோதிலுங்கூட இவ்விதம் மந்திரரஹஸ்யத்தைச் சொல்லும் மனுவைக் கண்டு (தூங்கி மூச்சுவிடுபவனைப் போல ஸ்வாதீனமற்றவராக எண்ணிக் கொண்டு) அஸுரர்களும், ராக்ஷஸர்களும் பசியினால் அவரைச் சாப்பிடுவதற்காக ஓடிவந்தனர். (17) அவர்கள் அவ்விதமுறுதி கொண்டிருப்பதை யறிந்து ஸர்வகதரும் யக்ஞருமான ஹரியானவர் யாமர்களென்ற தனது புத்திரர்களினாலும் தேவர்களினாலும் சூழப்பட்டவராய் அவர்களைக் கொன்று ஸ்வர்க்கத்தைப் பாலனஞ் செய்து வந்தார். (தானே இந்திரனாக இருந்தார்.*) (18) அக்னியின் புத்திரர் ஸ்வாரோசிஷர் என்ற இரண்டாவது மனுவாக ஆனார். த்யுமான், ஸுஷேணன், ரோசிஷ்மான் முதலியோர் அவருடைய புத்திரர்களாவர். (19) அந்த ஸ்வாரோசிஷ மன்வந்தரத்தில் ரோசனன் இந்திரனாகவானான். துஷிதர் முதலியோர் தேவர்களாகவாயினர். ஊர்ஜஸ்தம்பரை ஆதியாகவுடையவர்களான ஏழு ப்ரம்ஹவாதிகள் ருஷிகளாயினர். (20) வேதசிரஸ் என்ற ருஷிக்கு துஷிதை என்ற பத்னி இருந்தாள். அவளிடத்தில் அந்த வேதசிரஸ்ஸுக்கு விபு என ப்ரஸித்தி பெற்ற தேவன் பிறந்தார். (21) அந்த விபுவினுடைய ப்ரம்ஹசரிய வ்ரதத்தை, வ்ரதானுஷ்டானஞ் செய்கின்றவர்களும், ப்ரம்ஹசாரிகளுமான யாதொரு எண்பத்தெட்டாயிரம் ருஷிகளுண்டோ அவர்கள் பின்பற்றினர். (22) ப்ரிய வ்ரத புத்திரரான உத்தமர் என்பவர் மூன்றாவது மனுவாகவானார்.

---

* ஒவ்வொரு மன்வந்தரத்திலும் மனு, தேவர்கள், மனுபுத்திரர்கள், ஸுரேச்வரன், ருஷிகள், ஹரியின் அம்சாவதாரம் என ஆறும் அடங்கியதாகவாகும்.

यज्ञहोत्राद्यास्तत्सुता नृप ॥ २३ ॥ वसिष्ठतनयाः सप्त ऋषयः प्रमदादयः । सत्या वेदश्रुता भद्रा देवा इन्द्रस्तु सत्यजित् ॥ २४ ॥ धर्मस्य सूनृतायां तु भगवान्पुरुषोत्तमः । सत्यसेन इति ख्यातो जातः सत्यव्रतैः सह ॥ २५ ॥ सोऽनृतव्रतदुःशीलानसतो यक्षराक्षसान् । भूतद्रुहो भूतगणांस्त्ववधीत्सत्यजित्सखः ॥ २६ ॥ चतुर्थ उत्तमभ्राता मनुर्नाम्ना च तामसः । पृथुः ख्यातिर्नरः केतुरित्याद्या दश तत्सुताः ॥ २७ ॥ सत्यका हरयो वीरा देवास्त्रिशिख ईश्वरः । ज्योतिर्धामादयः सप्त ऋषयस्तामसेऽन्तरे ॥ २८ ॥ देवा वैधृतयो नाम विधृतेस्तनया नृप । नष्टाः कालेन यैर्वेदा विधृताः स्वेन तेजसा ॥ २९ ॥ तत्रापि जज्ञे भगवान्हरिण्यां हरिमेधसः । हरिरित्याहृतो येन गजेन्द्रो मोचितो ग्रहात् ॥ ३० ॥

---

ஹே ந்ருப! பவனர், ஸ்ருஞ்ஜயர், யக்ஞஹோத்ரர் முதலியோர் அவருடைய புத்திரர்களாவர். (23) வஸிஷ்டருடைய புத்திரர்களான ப்ரமதர் முதலிய ஏழு பேர்கள் ருஷிகளாக இருந்தனர். ஸத்யர், வேதஶ்ருதர், பத்ரர் இவர்கள் தேவர்களாயினர். ஸத்யஜித்தோ இந்திரனானார். (24) புருஷோத்தமனான பகவானே தர்மனுக்கு ஸூந்ருதை என்ற பத்தினியினிடத்தில் ஸ்த்யவ்ரதர்களுடன்கூட ஸத்யஸேனர் என்ற ப்ரஸித்திபெற்றவராய் அவதரித்தார். (25) அவர் ஸத்யஜித் என்ற இந்திரனுக்கு ஸகாவாக இருந்துகொண்டு பொய்யான வ்ரதமுள்ளவர்களும் கெட்ட ஸ்வபாவமுள்ளவர்களும் அஸத்துக்களுமான யக்ஷர் ராக்ஷஸர் இவர்களையும், ப்ராணிகளுக்கு த்ரோஹஞ்செய்கின்ற பூதகணங்களையும் வதஞ்செய்தார். (26) பெயரினால் தாமஸரென்ற உத்தமருடைய ப்ராதாவானவர் நான்காவதான மனுவாகவானார். ப்ருது, கியாதி, நரன், கேது என்றதாதிப் பத்துபேர்கள் அவருடைய புத்திரர்கள். (27) ஸத்யகர், ஹரிகள், வீரர்கள் என்பவர் தேவர்களாவர். த்ரிஸிகர் என்ற ஈஶ்வரன் இந்திரனானார். தாமஸ மன்வந்தரத்தில் ஜ்யோதிர்தாமன் என்பவரை ஆதியாகக் கொண்ட ஏழுபேர்கள் ருஷிகளாயினர். (28) ஹே ந்ருப! விதிருதியின் புத்திரர்களான வைதிருதிகள் என்பவர்கள் தேவர்களாக இருந்தனர். காலத்தினால் நஷ்டமான வேதங்கள் இவர்களால் சொந்தத் தேஜஸ்ஸினால்

राजोवाच—बादरायण एतत्ते श्रोतुमिच्छामहे वयम्। हरिर्यथा गजपतिं ग्राहग्रस्तममूमुचत् ॥ ३१ ॥ तत्कथासु महत्पुण्यं धन्यं स्वस्त्ययनं शुभम्। यत्र यत्रोत्तमश्लोको भगवान्गीयते हरिः ॥ ३२ ॥ सूत उवाच—परीक्षितैवं स तु बादरायणिः प्रायोपविष्टेन कथासु चोदितः। उवाच विप्राः प्रतिनन्द्य पार्थिवं मुदा मुनीनां सदसि स्म शृण्वताम्॥३३॥

इति श्रीमद्भागवते महापुराणेऽष्टमस्कन्धे मन्वन्तरानुचरितवर्णनं नाम प्रथमोऽध्यायः ॥ १ ॥

—••❀••—

---

தரிக்கப்பட்டன. (29) அந்தத் தாமஸமன்வந்தரத்திலும், எவரால் கஜேந்திரன் முதலையினின்றும் விடுவிக்கப்பட்டாரோ ஹரி என்று சொல்லப்பட்ட அந்தப் பகவான் ஹரிமேதஸ் என்பவருக்கு ஹரிணி என்பவளிடத்தில் அவதரித்தார் என்றார். (30)

அரசன் சொல்லுற்றார்—ஹே பாதராயணே! ஹரியானவர் முதலையினால் பிடித்துக்கொள்ளப்பட்ட கஜேந்திரனை எவ்விதம் விடுவித்தாரோ இதை உம்மிடமிருந்து நாம் கேட்க விரும்புகின்றோம். (31) எந்த எந்தக் கதைகளில் உத்தமஶ்லோகனும் பகவானுமான ஹரியானவர் கானஞ்செய்யப்படுகின்றாரோ அந்தக் கதைகளுக்குள் இது மஹத்தான புண்ணியமானதும், தன்யமானதும், க்ஷேமத்தைத் தரக்கூடியதும், சுபமானதுமாகும் என்றார். (32) ஸூதர் சொல்லுற்றார்—ஹே விப்ரர்காள்! ப்ராயோபவேசத்தைச் செய்தவரான பரீக்ஷித்தினால் பகவத்கதை விஷயமாக இவ்விதம் கேட்கப்பட்ட அந்தச் சுகாசாரியரோவெனில் அரசனைப் புகழ்ந்துவிட்டு சந்தோஷத்துடன் ஶ்ரவணஞ் செய்கின்ற முனிகளின் ஸபையில் சொல்லவாரம்பித்தார். (33) (எ—று)

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண அஷ்டமஸ்கந்தத்தில் மன்வந்தரசரிதவர்ணனமென்ற முதலாவது அத்தியாயம் முற்றிற்று.



## अथ द्वितीयोऽध्यायः ॥

श्रीशुक उवाच—आसीद्गिरिवरो राजंस्त्रिकूट इति विश्रुतः । क्षीरोदेनावृतः श्रीमान्योजनायुतमुच्छ्रितः ॥ १ ॥ तावता विस्तृतः पर्यक् त्रिभिः शृङ्गैः पयोनिधिम् । दिशः खं रोचयन्नास्ते रौप्यायसहिरण्मयैः ॥ २ ॥ अन्यैश्च ककुभः सर्वा रत्नधातुविचित्रितैः । नानाद्रुमलतागुल्मैर्निर्घोषैर्निर्झराम्भसाम् ॥ ३ ॥ स चावनिज्यमानाङ्घ्रिः समन्तात्पयऊर्मि-

---

## இரண்டாவது அத்தியாயம்.

(அ—கை) तुर्ये मन्वन्तरे प्रोक्तं गजेन्द्रस्य विमोक्षणम् ।
द्वितीयादित्रिभिस्तत्तु विस्तरेणोपवर्ण्यते ॥ १ ॥
द्वितीये तु गजेन्द्रस्य गजीभिः क्रीडतो जले ।
दैवाद्ग्राहगृहीतस्य हरिस्मृतिरुदीर्यते ॥ २ ॥

(க—ரை) நான்காவது மன்வந்தரத்தில் கஜேந்திரமோக்ஷணஞ் சொல்லப்பட்டது. அந்தக் கஜேந்திரமோக்ஷணமோ இரண்டு முதல் மூன்று அத்தியாயங்களினல் விரிவாக வர்ணிக்கப்படுகிறது. (1) இந்த இரண்டாவது அத்தியாயத்திலோவெனில் பெண் யானைகளுடன்கூட ஜலத்தில் க்ரீடிக்கின்றவனும், முதலையினல் பிடித்துக் கொள்ளப்பட்டவனுமான கஜேந்திரனுக்கு முந்தின புண்ணியங்காரணமாய் ஏற்பட்ட ஹரியின் ஸ்மரணமானது வர்ணிக்கப்படுகிறது. (2)

ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—ஹே ராஜன்! த்ரிகூடம் என ப்ரஸித்தி பெற்றதும், பாற்கடலினல் சூழப்பட்டதும், காந்தியுள்ளதும், பதினயிரம் யோஜனமுயரமுள்ளதுமான சிறந்த மலையொன்றிருந்தது. (1) வெள்ளி இரும்பு பொன் மயங்களான மூன்று கொடிமுடிகளினல் திக்குகளையும் ஆகாசத்தையும் ப்ரகாசப்படுத்திக்கொண்டும், பதினயிரம் யோஜன விஸ்தாரமுள்ளதாய் பாற்கடலைச் சுற்றிலும் இருந்துகொண்டுமிருந்தது. (2) அஃதுடன் ரத்தினம், நற்சங்குப் பொடிகள் இவற்றினல் விசித்திரமாக்கப்பட்டனவும், பலதறப்பட்ட மரங்கள், கொடிகள், புதறுகள் இவற்றையுடையனவுமான மற்றுமுள்ள கொடிமுடிகளினலும், அருவி

भिः । करोति श्यामलां भूमिं हरिन्मरकताश्मभिः ॥ ४ ॥ सिद्धचारण-
गन्धर्वविद्याधरमहोरगैः । किन्नरैरप्सरोभिश्च क्रीडद्भिर्जुष्टकन्दरः ॥ ५ ॥

यत्र सङ्गीतसन्नादैर्नदद्गुहममर्षया । अभिगर्जन्ति हरयः श्लाघिनः
परशङ्कया ॥६॥ नानारण्यपशुव्रातसङ्कुलद्रोण्यलङ्कृतः । चित्रद्रुमसुरोद्यानक-
लकण्ठविहङ्गमः ॥ ७ ॥ सरित्सरोभिरच्छोदैः पुलिनैर्मणिवालुकैः । देव-
स्त्रीमज्जनामोदसौरभाम्ब्वनिलैर्युतः ॥ ८ ॥ तस्य द्रोण्यां भगवतो वरुणस्य

---

ஜலங்களின் சப்தங்களினுலும் எல்லாத் திக்குகளேயும் ப்ரகாசப்ப டுத்திக்கொண்டுமிருந்தது. (3) சுற்றிலுமுள்ள பால் அலைகளி னுல் நனைக்கப்படுகின்ற அடிப்ரதேசத்தையுடைய அந்த மலையா னது மரகதப்பச்சைக் கற்களினுல் பூமியைக் கருநிறமுள்ளதாகச் செய்வதாகவும், விளையாடுகின்றவர்களான ஸித்தர், சாரணர், கந்தர்வர், வித்யாதரர், மஹோரகர் இவர்களாலும், கின்னரர்களி னுலும், அப்ஸரஸ்ஸுகளினுலும் ஸேவிக்கப்பட்ட குஹைகளே யுடையதாகவுமிருந்தது. (4–5)

எந்த மலைப்ராந்தத்திலுள்ள ஸங்கீதசப்தங்களினுல் எதி ரொலியிடுகின்ற குஹையையுடைய அந்த மலையைச் சிறந்த சிங்க ங்கள் சத்துரு சிங்கங்களென்ற சங்கை கொண்டு பொறுமையினுல் தாங்களும் கத்துகின்றனவோ அப்பேர்பட்டதாகவும், பலதறப் பட்ட காட்டுமிருகங்களின் கூட்டத்தினுல் நிறையப்பெற்ற குஹை களினுல் அலங்கரிக்கப்பட்டதாகவும், விசித்திரங்களான மரங் களேயுடைய தேவோத்யானங்களிலுள்ள இனிப்பான குரல்களே யுடைய பக்ஷிகளே யுடையதாகவும், தெளிந்த ஜலத்தை யுடைய நதி ஸரஸ்ஸு இவற்றுடன் கூடினதாகவும், மணிகள் போன்ற மணல்களேயுடைய மணல் திட்டுகளுடன் கூடினதாகவும், தேவஸ்தி ரீகளின் ஸ்னனத்தினுலேற்பட்ட மணத்தினுல் நறுமணமுள்ளவை களான ஜலங்கள், காற்றுகள் இவற்றுடன் கூடினதாகவுமிருந்தது. (6–8) அந்த த்ரிகூடமலையின் தாழ்வரையில், சுற்றிலும் தேவஸ் திரீகளின் விளையாட்டையுடையதும், ருதுமான் என்ற பெயரையு டையதும், மஹாத்மாவும் பகவானுமான வருணனுடையதும் நித் யமான புஷ்பம், பழம், இவற்றுடன் கூடின தேவலோகவிருக்ஷங்க

महात्मनः । उद्यानमृतुमन्नाम आक्रीडं सुरयोषिताम् ॥ ९ ॥ सर्वतोऽलङ्कृतं दिव्यैर्नित्यं पुष्पफलद्रुमैः । मन्दारैः पारिजातैश्च पाटलाशोकचम्पकैः ॥ १० ॥ चूतैः प्रियालैः पनसैराम्रैराम्रातकैरपि । क्रमुकैर्नालिकेरैश्च खर्जूरैर्बीजपूरकैः ॥ ११ ॥ मधूकैः सालतालैश्च तमालै रसनार्जुनैः । अरिष्टोदुम्बरप्लक्षैर्वटैः किंशुकचन्दनैः ॥ १२ ॥ पिचुमन्दैः कोविदारैः सरलैः सुरदारुभिः । द्राक्षेक्षुरम्भाजम्बूभिर्बदर्यक्षाभयामलैः ॥ १३ ॥ बिल्वैः कपित्थैर्जम्बीरैर्वृतो भल्लातकादिभिः । तस्मिन्सरः सुविपुलं लसत्काञ्चनपङ्कजम् ॥ १४ ॥ कुमुदोत्पलकह्लारशतपत्रश्रियोर्जितम् । मत्तषट्पदनिर्घुष्टं शकुन्तैश्च कलस्वनैः ॥ १५ ॥ हंसकारण्डवाकीर्णं चक्राह्वैः सारसैरपि । जलकुक्कुटकोयष्टिदात्यूहकुलकूजितम् ॥ १६ ॥ मत्स्यकच्छपसंचारचल-

---

ளினல் சுற்றிலு மலங்கரிக்கப்பட்டதுமான உத்யானமிருக்கிறது. மந்தாரம், பாரிஜாதம், பாடலம், அசோகம், சம்பகம், மாமரம், ப்ரியாளம், பலா, ஒட்டுமா, ஆம்ராதகம், பாக்கு, தென்னை, பேரீச்சை, மாதுளை, மதூகம் ஸாலம், பனை, தமாலம், அஸனம், அர்ஜுனம், அரிஷ்டம், அத்தி, அரசு, ஆல், கிம்சுகம், (முள்ளு முருங்கை) சந்தனம், வேம்பு, கோவிதாரம், ஸரளம், தேவதாரு, திராக்ஷை, கரும்பு, வாழை, நாகை, இலந்தை, ருத்ராக்ஷம், அபயம், அமலம், பில்வம், விளாமரம், எலுமிச்சை, பல்லாதகம், முதலிய மரங்களினுலும் அந்த மலையானது சூழப்பட்டதாக இருந்தது. அந்த மலையில், மிக்க விஸ்தாரமுள்ளதும், ப்ரகாசிக்கின்ற பொன்மயமான தாமரஸபுஷ்பத்தை யுடையதும், ஆம்பல் நீலோத்பலம், செங்கழுநீர் புஷ்பம், தாமரஸபுஷ்பம் இவற்றினுல் நிலைத்த சோபையுள்ளதும், மதங்கொண்ட வண்டுகளினுலும், அழகிய குரலையுடைய பக்ஷிகளினுலும், சப்திக்கப்பட்டதும், ஹம்ஸம் நீர்காக்கை இவை நிறைந்ததும், சக்கிரவாகப்பக்ஷி, ஸாரஸமென்ற பக்ஷி இவற்றால் நிறையப்பெற்றதும், நீர்கோழி கோயஷ்டி வால்நீண்ட குருவி இவற்றின் கூட்டத்தால் சப்திக்கப்பட்டதும், மீன் ஆமை இவற்றின் ஸஞ்சாரத்தினுல் அசைகின்ற தாமரஸபுஷ்பங்களினின்றும் உதிர்ந்த பொடியுடன்கூடின ஜலத்தை யுடையதும், கதம்பம், நீர்நொச்சில், வெட்டிவேர், அடம்பம், வஞ்ஜுளம் என்ற மரங்களால் சூழப்

त्पद्मरजःपयः । कदम्बवेतसनलनीपवञ्जुलकैर्वृतम् ॥ १७ ॥ कुन्दैः कुरबकाशोकैः शिरीषैः कुटजेङ्गुदैः । कुब्जकैः स्वर्णयूथीभिर्नागपुन्नागजातिभिः ॥ १८ ॥ मल्लिकाशतपत्रैश्च माधवीजालकादिभिः । शोभितं तीरजैश्चान्यैर्नित्यर्तुभिरलं द्रुमैः ॥ १९ ॥

तत्रैकदा तद्गिरिकाननाश्रयः करेणुभिर्वारणयूथपश्चरन् । सकण्टकान्कीचकवेणुवेत्रवद्विशालगुल्मं प्ररुजन्वनस्पतीन् ॥ २० ॥ यद्गन्धमात्राद्धरयो गजेन्द्रा व्याघ्रादयो व्यालमृगाः सखड्गाः । महोरगाश्चापि भयाद्द्रवन्ति सगौरकृष्णाः शरभाश्चमर्यः ॥ २१ ॥ वृका वराहा महिषर्क्षशल्या गो-

---

பட்டதும், குந்தம், மருதாணி, அசோகம், வாகை, காட்டுமுல்லை, இங்குதம், குப்ஜகம் ஸ்வர்ணம் என்ற மரங்களாலும், யூதி என்ற கொடியினாலும் நாகை புன்னாகை ஜாதி இவற்றாலும், மல்லிகை சதபத்ரம் இவற்றாலும், மாதவீ ஜாலகம் என்ற கொடி முதலியவற்றாலும் நித்யங்களான=பழம் புஷ்பம் முதலியவற்றின் நிறைவுக்குக் காரணங்களான, ருதுக்களை யுடையனவும் கரையில் முளைத்தனவுமான மரங்களினாலும் நன்கு அலங்கரிக்கப்பட்டதுமான ஸரஸ்ஸானது இருக்கின்றது. (9–19)

இவ்விதமிருக்கும்பொழுது ஒருஸமயம் அந்த மலையிலுள்ள காட்டைத் தனது வாஸஸ்தலமாகவுடைய யானைக்கூட்டங்களுக்குத் தலைவனான யானையானது பெண் யானைகளுடன்கூட முள்ளுடன்கூடின மரங்களையும், கீசகங்கள்=வண்டு துளைத்த மூங்கில்கள், கல்மூங்கில்கள், பிரம்பு இவையுள்ள விசாலமான புதறையும் நாசஞ்செய்துகொண்டு ஸஞ்சரித்து வந்தது. (20) எதனுடைய வாஸனைமாத்திரத்தினாலேயே ஸிம்ஹங்களும், பெரிய யானைகளும், புலி முதலியனவும், கட்கமென்ற மிருகத்துடன்கூடின துஷ்டமிருகங்களும்,பெரிய பாம்புகளும், வெளுத்தும் கருத்தும் இருக்கின்ற சவுரிமான்களும், சரபமிருகங்களும் பயந்து ஓட்டம் பிடிக்கின்றனவோ, (21) செந்நாய்களும், பன்றிகளும், காட்டெருமைகளும், கரடிகளும், முள்ளம்பன்றிகளும், கொண்டமுசருகளும், செந்நாய்களும், குரங்குகளும், சிறுமான்களும், முயல்களும் எதனுடைய

पुच्छसालावृकमर्कटाश्च । अन्यत्र क्षुद्रा हरिणाः शशादयश्चरन्त्यभीता यदनुग्रहेण ॥ २२ ॥ स घर्मतप्तः करिभिः करेणुभिर्वृतो मदच्युत्कलभैरनुद्रुतः । गिरिं गरिम्णा परितः प्रकम्पयन्निषेव्यमाणोऽलिकुलैर्मदाशनैः ॥ २३ ॥ सरोऽनिलं पङ्कजरेणुरूषितं जिघ्रन्विदूरान्मदविह्वलेक्षणः । वृतः स्वयूथेन तृषार्दितेन तत्सरोवराभ्याशमथागमद्द्रुतम् ॥ २४ ॥ विगाह्य तस्मिन्नमृताम्बु निर्मलं हेमारविन्दोत्पलरेणुवासितम् । पपौ निकामं निजपुष्करोद्धृतमात्मानमद्भिः स्नपयन्गतक्लमः ॥ २५ ॥ स्वपुष्करेणोद्धृतशीकराम्बुभिर्निपाययन्संस्नपयन्यथा गृही । घृणी करेणूः कलभांश्च दुर्मदो नाचष्ट कृच्छ्रं कृपणोऽजमायया ॥ २६ ॥

---

அனுக்கிரஹத்தினல் பயமற்றனவாய் கண்ணுக்குத் தென்படாதபடி மறைந்து வஸிக்கின்றனவோ அந்த யானையானது வெய்யிலினல் தாபத்தை யடைந்ததாய்க் கொண்டும், ஆண் யானைகளினுலும் பெண்யானைகளினுலும் சூழப்பட்டதாய்க்கொண்டும், மதஜலத்தைப் பெருகவிடுகின்ற யானைக்குட்டிகளினுல் பின்தொடரப்பட்டதாய்க் கொண்டும், தனது தேஹத்தின் சுமையினுல் மலையைச் சுற்றிலும் ஆடும்படி செய்துகொண்டும், மதஜலத்தைக் குடிக்கின்ற வண்டுக் கூட்டங்களினுல் சுற்றிலும் சூழப்பட்டதாய்க்கொண்டும், தாமரஸ புஷ்பத்தின் பொடிகளினுல் பூசப்பட்ட ஸரஸ்ஸின் காற்றை வெகு தூரத்திலிருந்தே முகர்ந்துகொண்டும் மதத்தினுல் கலங்கின கண்களையுடையதாய்க்கொண்டும், தாஹத்தினுல் பீடிக்கப்பட்ட தனது கூட்டத்தினுல் சூழப்பட்டதாய்க் கொண்டும் அந்தச் சிறந்த ஸரஸ்ஸின் அருகில் வேகமாக வந்து சேர்ந்தது. (22–24) அந்த ஸரஸ்ஸில் முழுகி, சுத்தமானதும் பொன்மயமான அரவிந்தம் நீலோத்பலம் இவற்றின் பொடிகளினுல் வாஸனையேற்றப்பெற்றதுமான அமுதத்துக்கொப்பான ஜலத்தைத் தனது துதிக்கையினுலெடுத்து வேண்டியவளவு குடித்தது. ஜலத்தினுல் தனது சரீரத்தை நனைத்துக்கொண்டு போக்கப்பட்ட ச்ரமமுள்ளதாகவுமாயிற்று. (25) கெட்ட மதமுள்ள அந்த யானையானது கருணையுள்ள கிருஹஸ்தன் போல துதிக்கையினுலெடுக்கப்பட்ட குளிர்ந்த ஜலங்களினுல் பெண் யானைகளையும், யானைக்குட்டிகளையும் பானஞ்செய்வித்துக்

तं तत्र कश्चिन्नृप दैवचोदितो ग्राहो बलीयांश्चरणे रुषाग्रहीत् । यदृच्छयैवं व्यसनं गतो गजो यथाबलं सोऽतिबलो विचक्रमे ॥ २७ ॥ तथातुरं यूथपतिं करेणवो विकृष्यमाणं तरसा बलीयसा । विचुक्रुशुर्दीनधियोऽपरे गजाः पार्ष्णिग्रहास्तारयितुं न चाशकन् ॥ २८ ॥ नियुध्यतोरेवमिभेन्द्रनक्रयोर्विकर्षतोरन्तरतो बहिर्मिथः । समाः सहस्रं व्यगमन्महीपते सप्राणयोश्चित्रममंसतामराः ॥ २९ ॥ ततो गजेन्द्रस्य मनोबलौजसां कालेन दीर्घेण महानभूद्व्ययः । विकृष्यमाणस्य जलेऽवसीदतो विपर्ययोऽभूत्सकलं जलौकसः ॥ ३० ॥ इत्थं गजेन्द्रः स यदाप संकटं प्राणस्य देही

---

கொண்டு பகவன் மாயையினல் கிருபணனுக=உண்மையறியாத தாக, இருப்பதுபற்றிப் பின்னர்வரும் கஷ்டத்தை யறியவில்லை.

ஹே ந்ருப! அப்பொழுது அந்த யானையைத் தைவத்தாலே வப்பட்டதும், மிக்க பலமுள்ளதுமான ஒரு முதலையானது கோபத்துடன் காலில் பிடித்துக் கொண்டது. எதிர்பாராதபடி இவ்விதம் கஷ்டத்தை யடைந்த மிக்க வலுவுள்ள அந்த யானையானது தனது வலுவுக்குத் தக்கபடி இழுத்தது. (27) தீனமான புத்தியை யுடையவைகளான பெண்யானைகளும், பக்கத்தில் நின்றவைகளான மற்றுமுள்ள யானைகளும் பலமுள்ள முதலையினல் வலுவாக இழுக்கப்படுகின்றதும், பீடையை யடைந்ததுமான கஜேந்திரனை விடுவிக்க முடியாதனவாகவாகி வீறிட்டன. (28) ஹே மஹீபதே! இவ்விதம் போராடுகின்ற யானையும் முதலையும் வெளியிலும் உள்ளிலுமாக ஒன்றுக்கொன்று இழுக்குங்கால் உயிருடன் கூடின அவற்றுக்கு ஆயிரம் வருஷங்கள் சென்றன. தேவர்கள் அதை ஆஶ்சரியமாகவே=புதுமையாகவே, எண்ணினர். (29) பிறகு நீண்டகாலத்தினல் ஜலத்திலிழுக்கப்படுகின்றதும் ஆனதுபற்றியே தளர்ச்சியை யடைகின்றதுமான கஜேந்திரனுடைய உத்ஸாஹ சக்தி, சரீரபலம் இந்திரியபலம் இவற்றுக்கு மஹத்தான நாசமானது ஏற்பட்டு விட்டது ஜலத்தில் வஸிக்கும் முதலைக்கோ உத்ஸாஹசக்தி தேஹபலம் இந்திரியபலம் ஆகிய இவை யாவும் அதிகமாகவே உண்டாயின. (30) அந்தக்கஜேந்திரன் தேஹாபிமான முள்ளதாக இருப்பதுபற்றி விவசனய் எப்பொழுது ப்ராண

विवशो यदृच्छया । अपारयन्नात्मविमोक्षणे चिरं दध्याविमां बुद्धिमथा-
भ्यपद्यत ॥ ३१ ॥ न मामिमे ज्ञातय आतुरं गजाः कुतः करिण्यः प्रभव
न्ति मोचितुम् । ग्राहेण पाशेन विधातुरावृतोऽप्यहं च तं यामि परं परा-
यणम् ॥ ३२ ॥ यः कश्चनेशो बलिनोऽन्तकोरगात्प्रचण्डवेगादभिधावतो
भृशम् । भीतं प्रपन्नं परिपाति यद्भयान्मृत्युः प्रधावत्यरणं तमीमहि ॥३३॥

इति श्रीमद्भागवते महापुराणेऽष्टमस्कन्धे मन्वन्तरानुवर्णने
गजेन्द्रोपाख्याने द्वितीयोऽध्यायः ॥ २ ॥



ஸங்கடத்தை யடைந்ததோ அப்பொழுது தன்னை விடுவித்துக் கொள்ளமுடியாததாய்க் கொண்டு வெகுகாலம் தியானித்துப் பிறகு ஈஸ்வரஸங்கல்பத்தால் பின்வரும் புத்தியை அடைந்தது. (31) அதாவது:—ஆதுரனான என்னை ஞாதிகளான இந்த ஆண் யானைகளே விடுவிக்கமுடியாதனவாக இருக்கப் பெண் யானைகள் எங்ஙனம் விடுவிக்கச் சக்தங்களாக வாகப்போகின்றன. முதலையாகிற கர்த்தனுடைய பாசத்தினால் கட்டுண்டவனாக இருப்பதுபற்றி நானும் என்னை விடுவித்துக் கொள்ள அசக்தனாகவே தானிருக்கிறேன். ஆயினும் பரமேஸ்வரனும், ப்ரம்ஹாதியர்களுக்கு ஆஸ்ரய பூதனுமான அவரைச் சரண்புகுகின்றேன் என்றும். (32) எந்தவொரு ஈஸ்வரன் மஹாவலுவுள்ளதும், பயங்கரமான வேகமுள்ளதும், வேகமாக வோடிவருகின்றதுமான யமனாகிற பாம்பினின்றும் பயந்தவனான ப்ரபன்னனை ரக்ஷிக்கின்றாரோ, எவரிடமிருந்துண்டான பயத்தினால் மிருத்யுவானவன் ஓடுகின்றானோ அவரைச் சரண்புகுகின்றேன் என்றது. (33) (எ-று)

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண அஷ்டமஸ்கந்தத்தில்
கஜேந்திரோபாக்கியானத்தில் இரண்டாவது
அத்தியாயம் முற்றிற்று.



## अथ तृतीयोऽध्यायः ॥

श्रीशुक उवाच—एवं व्यवसितो बुद्ध्या समाधाय मनो हृदि । जजाप परमं जाप्यं प्राग्जन्मन्यनुशिक्षितम् ॥ १ ॥ गजेन्द्र उवाच—ओं नमो भगवते तस्मै यत एतच्चिदात्मकम् । पुरुषायादिबीजाय परेशायाभिधीमहि ॥ २ ॥ यस्मिन्निदं यतश्चेदं येनेदं य इदं स्वयम् । योऽस्मात्परस्माच्च परस्तं प्रपद्ये स्वयंभुवम् ॥ ३ ॥ यः स्वात्मनीदं निजमाययार्पितं क्वचिद्विभातं

---

## மூன்றாவது அத்தியாயம்.

(அ—கை) तृतीये तु गजेन्द्रेण स्तुतो हरिरुपेत्य तम् ।
समुद्दधार तं ग्राहादग्राहं देवलशापतः ॥ १ ॥

(க—ரை) கஜேந்திரனால் ஸ்துதிக்கப்பட்ட ஹரியானவர் வந்து அந்தக் கஜேந்திரனை முதலையினின்றும் விடுவித்தார் என்றும், அந்த முதலையைத் தேவலசாபத்தினின்றும் விடுவித்தாரென்றும் இந்த மூன்றாவது அத்தியாயத்தி லுபதேசிக்கப்படுகிறது. (1)

ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—இவ்விதம் புத்தியினால் நிஶ்சயித்துக்கொண்டு மனத்தை ஹ்ருதயத்தில் அசையாது நிறுத்தி முந்தின ஜன்மத்தில் அப்யஸிக்கப்பட்டதும் மேலானதுமான ஸ்தோத்திரத்தைச் செய்தான். (1) கஜேந்திரன் சொல்லலுற்றான்—சித்ரூபரான எவர்மூலம் இந்தத்தேஹாதிப் பொருளானது சிதாத்மகமாக=சேதனமாக, வாகின்றதோ, புருஷரும்=சரீரங்களில் ப்ரவேசித்தவரும், ஆதிபீஜரும்=ப்ரகிருதி புருஷஸ்வரூபரும், பரேசருமான அந்தப் பகவானுக்கு நமஸ்காரத்தைச் சொல்லுகிறோம். (2) அதிஷ்டானபூதரான எவரிடத்தில் இந்த ப்ரபஞ்சமானது கல்பிதமோ, உபாதானகாரணரான எவரிடமிருந்து இந்த ப்ரபஞ்சமுண்டாயிற்றோ, எந்தக் கர்த்தாவினால் இந்த ப்ரபஞ்சமுண்டுபண்ணப்பட்டதோ, எவர் தானே இந்தப்ரபஞ்சஸ்வரூபமாக இருக்கின்றாரோ, எவர் இந்தக் காரியத்தையும் காரணத்தையும்விட பரரோ=மேலானவரோ, ஸ்வதஸ்ஸித்தரான அவரைச் சரணமாக அடைகிறேன். (3) எவர் தனது அதீனமான மாயையினால் தன்னிடத்தில் அர்ப்பணஞ்செய்ய (தோற்றும்படி செய்ய) ப்பட்டதும் சில

क च तत्तिरोहितम् । अविद्धदृक्साक्ष्युभयं तदीक्षते ।स आत्ममूलोऽवतु मां परात्परः ॥ ४ ॥ कालेन पञ्चत्वमितेषु कृत्स्नशो लोकेषु पालेषु च सर्वहेतुषु । तमस्तदासीद्गहनं गभीरं यस्तस्य पारेऽभिविराजते विभुः ॥ ५ ॥ न यस्य देवा ऋषयः पदं विदुर्जन्तुः पुनः कोऽर्हति गन्तुमीरितुम् । यथा नटस्याकृतिभिर्विचेष्टतो दुरत्ययानुक्रमणः स माऽवतु ॥ ६ ॥ दिदृक्षवो यस्य पदं सुमङ्गलं विमुक्तसङ्गा मुनयः सुसाधवः । चरन्त्यलोकव्रतमव्रणं वने भूतात्मभूताः सुहृदः स मे गतिः ॥ ७ ॥

न विद्यते यस्य च जन्म कर्म वा न नामरूपे गुणदोष एव वा । तथापि लोकाप्ययसंभवाय यः स्वमायया तान्यनुकालमृच्छति ॥ ८ ॥

---

பொழுது அபிவ்யக்தமாக இருந்துகொண்டு சிலபொழுது (ப்ரளயத்தில்) ஒடுங்கினதாயுமிருக்கும் காரியகாரணாத்மகமான அந்த இந்த ப்ரபஞ்சத்தை அழியாத திருஷ்டியுள்ளவராக இருப்பதுபற்றி ஸாக்ஷியாக இருந்து பார்க்கின்றாரோ, ப்ரகாசமான சக்ஷுராதிகளைக் காட்டிலும் பரரும், ஆனதுபற்றி ஆத்மமூலரும்=ஸ்வப்ரகாசரும், ஆன அவர்என்னை ரக்ஷிக்கட்டும். (4) எல்லாவுலகங்களும், லோகபாலர்களும், எல்லாக் காரணவஸ்துக்களும் காலத்தினால் நாசத்தையடைந்தபொழுது, ப்ரவேசிக்கவியலாததும், அனந்தமும், ப்ரஸித்தமுமான எந்தத் தமஸ்ஸானது இருந்ததோ அந்த இருளின் கறையில் எந்த ப்ரபுவானவர் ப்ரகாசிக்கின்றாரோ, எவருடைய ஸ்வரூபத்தைத் தேவர்களும் ருஷிகளும் அறியமாட்டார்களோ, பிற்காலத்திலுள்ள எந்த ஜீவனும் எவருடைய ஸ்வரூபத்தை அறிவதற்கோ வாயினால் சொல்லுவதற்கோ அருஹனாகவாகமாட்டானோ நடனுடையதுபோன்ற ஆகிருதிகளினால் பலதறப்பட்ட சேஷ்டிதத்தையுடையவரும், அறியவியலாத சரிதத்தை யுடையவருமான அவர் என்னை ரக்ஷிக்கட்டும். (5–6) எவருடைய மிக்க மங்களமான ஸ்வரூபத்தைப் பார்க்கவெண்ணமுள்ளவர்களும், விஷயப்பற்றை யொழித்தவர்களும், மிக்க ஸாதுக்களும், பூதங்களில் ஆத்மதிருஷ்டியை யுடையவர்களும், யாவர்க்கும் ஸுஹிருத்துக்களுமான ருஷிகள் வனத்திலிருந்துகொண்டு இடையறுது ப்ரம்ஹசரிய வ்ரதத்தை யனுஷ்டிக்கின்றனரோ அவர் எனக்குக் கதியாகிறார். (7)

तस्मै नमः परेशाय ब्रह्मणेऽनन्तशक्तये। अरूपायोरुरूपाय नम आश्चर्यकर्मणे ॥ ९ ॥ नम आत्मप्रदीपाय साक्षिणे परमात्मने। नमो गिरां विदूराय मनसश्चेतसामपि ॥ १० ॥ सत्त्वेन प्रतिलभ्याय नैष्कर्म्येण विपश्चिता। नमः कैवल्यनाथाय निर्वाणसुखसंविदे ॥ ११ ॥ नमः शान्ताय घोराय मूढाय गुणधर्मिणे। निर्विशेषाय साम्याय नमो ज्ञानघनाय च ॥ १२ ॥ क्षेत्रज्ञाय नमस्तुभ्यं सर्वाध्यक्षाय साक्षिणे। पुरुषायात्ममूलाय मूलप्रकृतये नमः ॥ १३ ॥ सर्वेन्द्रियगुणद्रष्ट्रे सर्वप्रत्ययहेतवे। असता छाययोक्ताय

---

எவருக்குப் பிறவியோ, பிறவிக்கு ஹேதுவான கர்மமோ கிடையாதோ நாமரூபங்களுமோ குணதோஷங்களுமோ கிடையாவோ ஆயினும் உலகங்களின் ப்ரளயம் ஜன்மம் இவற்றுக்குவேண்டி அந்தந்த காலத்துக்குத் தக்கபடி தனததீனமான மாயைமூலம் ஜன்மம் முதலியவற்றை எவர் தரிக்கின்றாரோ, பரேசரும் ப்ரம்ஹமும் ஆனதுபற்றியே அரூபருமான அவருக்கு நமஸ்காரம். அனந்தமான சக்தியை யுடையவரும் ஆனது பற்றியே அதிகமான ரூபத்தை யுடையவரும், ஆஶ்சரியங்களான கர்மங்களை யுடையவருமான அவருக்கு நமஸ்காரம். (8–9) ஸாக்ஷியாக இருப்பதுபற்றி தன்னைத் தானே ப்ரகாசப்படுத்திக் கொள்ளுகின்றவரும், ஜீவரியந்தாவும், ஆனதுபற்றியே வாக்குகளுக்கும், மனத்துக்கும் சித்தத்தின் விருத்திகளுக்கும் எட்டாதவருமான அவருக்கு நமஸ்காரம். (10) இவ்வித மிருந்தபோதிலுங்கூட வித்வானால் ஸன்னியாஸத்தினாலும் சுத்தமான சித்தத்தினாலும் அறிந்து கொள்ளக்கூடியவரும், கைவல்யத்துக்குப் பதியும், மோக்ஷானந்தானுபவரூபருமான அவருக்கு நமஸ்காரம். (11) சாந்தரும்=ஸத்துவத்தை யனுஸரிப்பவரும், கோரரும் = ரஜோகுணத்தை யனுஸரிப்பவரும், மூடரும்= தமோகுணதர்மமுள்ளவரும் ஸத்துவாதிகுணங்களின் தர்மங்களை அனுஸரிப்பவரும், எத்தகைய விசேஷமுமற்றவரும், ஸர்வஸமரும், ஞானகனருமான அவருக்கு நமஸ்காரம். (12) ஸர்வத்துக்கும் அத்யக்ஷராயும் க்ஷேத்ரக்ஞராயு மிருப்பினும் ஸாக்ஷியாகவுள்ள உமக்கு நமஸ்காரம். புருஷராக=முன்னரே இருப்பவராக, இருப்பதுபற்றி ஜீவாத்மாக்களுக்கு மூலமாகவுள்ளவரும், மூலமான ப்ர

सदाभासाय ते नमः ॥१४॥ नमो नमस्तेऽखिलकारणाय निष्कारणायाद्भुतकारणाय। सर्वागमाम्नायमहार्णवाय नमोऽपवर्गाय परायणाय ॥ १५ ॥ गुणारणिच्छन्नचिदूष्मपाय तत्क्षोभविस्फूर्जितमानसाय। नैष्कर्म्यभावेन विवर्जितागमस्वयंप्रकाशाय नमस्करोमि ॥ १६ ॥ मादृक्प्रपन्नपशुपाशविमोक्षणाय मुक्ताय भूरिकरुणाय नमोऽलसाय। स्वांशेन सर्वतनुभृन्मनसि

---

தானத்துக்கும் காரணமானவருமான உமக்கு நமஸ்காரம். (13) எல்லா இந்திரியங்களுடையவும் குணங்களான விஷயங்களுக்கு த்ரஷ்டாவும், எல்லா இந்திரியவிருத்திகளையும் தனக்கு ஞாபகமாக வுடையவரும், விஷயங்களில் ஸத்ரூபமான ஆபாஸத்தை=தோற்றத்தை, யுடையவராக இருப்பதுபற்றி அஹங்காராதி ப்ரபஞ்சத்தில் *அஸத்ரூபமான சாயையினால் ஸூசிப்பிக்கப் பட்டவருமான உமக்கு நமஸ்காரம். (14) ஸர்வத்துக்கும் காரணமான ஸ்வரூபமுள்ளவரும், ஆனதுபற்றியே தனக்கு வேறு காரணமற்றவரும், மண் முதலிய காரணப்பொருள்களுக்குப்போல விகாரமெதுவுமற்றவராக இருப்பதுபற்றி ஆஸ்சரியம் வாய்ந்த காரணஸ்வரூபரும், எல்லா ஆகமங்களுக்கும் வேதங்களுக்கும் ஸமுத்திரமாக=முடிவிடமாக, உள்ளவரும், மோக்ஷஸ்வரூபரும், உத்தமர்களுக்கும் ஆஸ்ரயபூதருமான அவருக்கு அடிக்கடி நமஸ்காரமிருக்கட்டும். (15) குணங்களாகிற அரணிக்கட்டையினால் மறைக்கப்பட்ட ஞானமாகிற அக்னிஸ்வரூபரும், அந்தக் குணங்களின் சலனரூபமான காரிய விஷயத்தில் வெளிப்பட்ட விருத்தியுள்ள மனஸ்ஸையுடையவரும், ஆத்மதத்துவத்தின் பாவனையினால் போக்கப்பட்ட விதிநிஷேதரூபமான சாஸ்திரத்தை யுடையவர்களிடத்தில் ஸ்வயமாகவேயுள்ள ப்ரகாசத்தை யுடையவருமான அவரையும் பொருட்டு நமஸ்கரிக்கிறேன். (16) அதிகமான கருணையுள்ளவராக இருப்பதுபற்றி என்போன்ற ப்ரபன்னனாகிற பசுவின் பாசத்தை=அவித்யையை, மீதமின்றி போக்குகின்றவரும், ஸ்வயம் முக்தரும், ஆனதுபற்றியே அவ்விஷயத்தில் சோம்பலற்றவரும், தனது அம்சமான அந்தர்யாமி ஸ்வரூபத்தினால் எல்லா ஜீவர்களுடையவும் மனத்தில் ப்ரகாசிக்கப்

---

* ஜலத்தில் காணும் ப்ரதிபிம்பத்தினால் பிம்பமான ஸூரியாதிகள் ஸூசிப்பிக்கப்படுவது எவ்விதமோ அவ்விதமே இங்கும் காண்க.

प्रतीतप्रत्यग्दृशे भगवते बृहते नमस्ते ॥ १७ ॥ आत्मात्मजाप्तगृहवित्तजनेषु सक्तैर्दुष्प्रापणाय गुणसङ्गविवर्जिताय । मुक्तात्मभिः स्वहृदये परिभाविताय ज्ञानात्मने भगवते नम ईश्वराय ॥ १८ ॥

यं धर्मकामार्थविमुक्तिकामा भजन्त इष्टां गतिमाप्नुवन्ति । किं त्वाशिषो रात्यपि देहमव्ययं करोतु मेऽदभ्रदयो विमोक्षणम् ॥ १९ ॥ एकान्तिनो यस्य न कञ्चनार्थं वाञ्छन्ति ये वै भगवत्प्रपन्नाः । अत्यद्भुतं तच्चरितं सुमङ्गलं गायन्त आनन्दसमुद्रमग्नाः ॥ २० ॥ तमक्षरं ब्रह्म परं परे-

---

பட்ட ப்ரத்யகாத்மஸ்வரூபரும், பகவானும்=எல்லா ஜீவர்களுடைய நியமனத்திலும் ஸமர்த்தரும், (அவர்களின் மனத்தில் தோன்றின போதிலும்) ப்ருஹத்தும்=அபரிச்சின்னரும், ஆன உமக்கு நமஸ்காரம். (17) குணங்களுடன் ஸங்கமற்றவராக இருப்பதுபற்றி, சரீரம் புத்திரன் இஷ்டன் வீடு பணம் மற்றுமுள்ள ஜனம் இவர்களிடத்தில் பற்றுள்ளவர்களால் அடையமுடியாதவரும், தேஹாதிகளில் பற்றற்றவர்களினால் தங்களுடைய மனத்தில் ஞானஸ்வரூபராகச் சிந்திக்கப்பட்டவரும், பகவானுமான ஈச்வரனுக்கு நமஸ்காரம். (18)

தர்மம் அர்த்தம் காமம் மோக்ஷம் இவற்றில் ஆசைகொண்டு எவரைப் பஜிக்கின்றவர்கள் தங்களுக் கிஷ்டமான தர்மாதிபலனை யடையவே செய்கின்றனரோ, மேலும் எவர், பஜிப்பவர் எதிர்பாருதமற்றுமுள்ள காமனைகளையும் அழிவற்ற தேஹத்தையும் தருகின்றாரோ அதிகமான தயையுள்ள அவர் எனது விமோக்ஷணத்தை மட்டுமே செய்யட்டும். அதிகத்தை நான் யாசிக்கவில்லை. (19) பகவான்களை=ஸர்வக்ஞான யுக்தர்களான பாகவதர்களை, ஸேவிக்கின்றவர்களும், அதிகம் அத்புதம் வாய்ந்ததும் மிக்க மங்களம் வாயந்ததுமான அந்தச் சரித்திரத்தைக் கானஞ்செய்து கொண்டு ஆனந்தஸமுத்திரத்தில் முழுகினவர்களுமான எவருடைய ஏகாந்த பக்தர்கள் வேறு ஒன்றையும் விரும்பமாட்டார்களோ, அக்ஷரனும், பரம் ப்ரம்ஹமும், பரேசனும், அவ்யக்தரும், ஆத்யாத்மிகயோகத்தினால் அடையக்கூடியவரும், இந்திரியங்களுக்கு எட்டாதவரும், ஸூக்ஷ்மரும், அவிவேகிகளுக்கு வெகுதூரம் போன்றவரும், அனந்தரும்,

शमव्यक्तमाध्यात्मिकयोगगम्यम् । अतीन्द्रियं सूक्ष्ममिवातिदूरमनन्तमाद्यं परिपूर्णमीडे ॥२१॥ यस्य ब्रह्मादयो देवा वेदा लोकाश्चराचराः । नामरूपविभेदेन फल्ग्व्या च कलया कृताः ॥ २२ ॥ यथार्चिषोऽग्नेः सवितुर्गभस्तयो निर्यान्ति संयान्त्यसकृत्स्वरोचिषः । तथा यतोऽयं गुणसंप्रवाहो बुद्धिर्मनः खानि शरीरसर्गाः ॥ २३ ॥ स वै न देवासुरमर्त्यतिर्यङ् न स्त्री न षण्ढो न पुमान्न जन्तुः । नायं गुणः कर्म न सन्न चासन्निषेधशेषो जयतादशेषः ॥ २४ ॥ जिजीविषे नाहमिहामुया किमन्तर्बहिश्चावृतयेभयोन्या । इच्छामि कालेन न यस्य विप्लवस्तस्यात्मलोकावरणस्य मोक्षम् ॥

---

ஆத்யரும், எங்கும் நீக்கமற நிறைந்தவருமான அவரை ஸ்துதிக்கின்றேன். (20–21) ப்ரம்ஹாதிதேவர்களும், வேதங்களும், சராசரங்களான லோகங்களும், எவருடைய அற்பமான அம்சமூலம் பெயர் ரூபம் இவற்றின் பேதத்துடன் செய்யப்பட்டனரோ, ஸ்வயம்ஸித்தமான காந்தியை யுடைய அக்னியிலிருந்து ஜ்வாலைகளும் சூரியனிடமிருந்து கிரணங்களும் அடிக்கடி வெளிவருவதும் திரும்பவும் அவற்றிலேயே ஒடுங்குவதும் எப்படியோ அப்படியே இந்த குண ப்ரவாஹமும், புத்தியும், மனஸ்ஸும், இந்திரியங்களும், சரீரஸிருஷ்டிகளும் எவரிடமிருந்தே உண்டாயிற்றோ, தேவர் அஸுரர் மனிதர் பசு இவையாக இல்லாதவரும் ஸ்திரீயாக இல்லாதவரும், அலியாக இல்லாதவரும், புருஷனாக இல்லாதவரும், ப்ராணியாக இல்லாதவரும், இந்தக் குணமாக இல்லாதவரும், கர்மமாக இல்லாதவரும், ஸத்தாகவோ அஸத்தாகவோ இல்லாதவரும் இவை எல்லாவற்றையும் நீக்குமிடத்துச் சேஷமாக எஞ்ஜியுள்ளவரும் அசேஷருமான அவரே தனது மேன்மையை வெளிக்காட்டட்டும். (22-24) உள்ளிலும் வெளியிலும் அவிவேகத்தினால் மறைக்கப்பெற்ற இந்த யானைப்பிறவியினால் பயன் எதுவுமில்லையாதலால் நான் இப்பொழுது ஜீவிக்க விரும்பவில்லை. எந்த மோக்ஷத்துக்குக் காலத்தினால் நாசமானது கிடையாதோ அந்த ஆத்மப்ராகாசத்தை மறைக்கின்ற அக்ஞானத்தின் நிவிருத்திரூபமன மோக்ஷத்தையே நான் விரும்புகின்றேன். (25)

सोऽहं विश्वसृजं विश्वमविश्वं विश्ववेदसम् । विश्वात्मानमजं ब्रह्म प्रणतोऽस्मि परं पदम् ॥ २६ ॥ योगरन्धितकर्माणो हृदि योगविभाविते । योगिनो यं प्रपश्यन्ति योगेशं तं नतोऽस्म्यहम् ॥२७॥ नमो नमस्तुभ्यमसह्यवेगशक्तित्रयायाखिलधीगुणाय । प्रपन्नपालाय दुरन्तशक्तये कदिन्द्रियाणामनवाप्यवर्त्मने ॥ २८ ॥ नायं वेद स्वमात्मानं यच्छक्त्याहंधिया हतम् । तं दुरत्ययमाहात्म्यं भगवन्तमितोऽस्म्यहम् ॥ २९ ॥ श्रीशुक उवाच—एवं गजेन्द्रमुपवर्णितनिर्विशेषं ब्रह्मादयो विविधलिङ्गभिदाभिमानाः । नैते

---

முமுக்ஷுவான அந்த நான், ப்ரபஞ்சஸ்ரஷ்டாவும், விஸ்வரூபரும், ப்ரபஞ்சத்தைவிட வேறுபட்டவரும், ப்ரபஞ்சத்தை வேதமாக=தனமாக=உபகரணமாக, உடையவரும், ப்ரபஞ்சத்துக்கு ஆத்மபூதரும், ஜனனமற்றவரும் பரமபதமுமான ப்ரம்ஹத்தை வணங்கினவனாக இருக்கின்றேன். (26) யோகமென்ற பகவத்தர்மத்தினால் பொசுக்கப்பட்ட கர்மத்தை யுடையவர்களான யோகிகள் யோகத்தினால் சுத்தஞ்செய்யப்பட்ட ஹிருதயத்தில் எவரைப் பார்க்கின்றனரோ அந்த யோகேசனை நான்வணங்கினவனாக இருக்கிறேன். (27) பொருக்க முடியாத ராகாதியாகிற வேகத்தையுடைய சக்தித்ரயத்தையுடையவரும், வெளியில் எல்லா இந்திரியங்களுடையவும் விஷயமான சப்தாதிகுணங்களாக ப்ரகாசிக்கின்றவரும், பக்தனைக் காப்பவரும், முடிவற்ற சக்தியை யுடையவரும், கெட்ட இந்திரியங்களை உடையவர்களுக்கு அடையமுடியாத வழியை யுடையவருமான உமக்கு அடிக்கடி நமஸ்காரம். (28) எவருடைய சக்தியாகிற மாயையினாலேற்பட்ட அஹங்காரத்தினால் மறைக்கப்பட்ட சொந்த ஆத்மாவை இந்த ஜனமானது உள்ளபடி அறிந்து கொள்ளாதிருக்கின்றதோ அழிவற்ற மாஹாத்மியத்தையுடையவரான அந்தப் பகவானை நான் ஆஸ்ரயித்தவனாக இருக்கின்றேன் என்றான். (29) ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—இவ்விதம் மூர்த்திபேதங்களை விடுத்து பரதத்துவத்தையே வர்ணித்தவரான கஜேந்திரனுடைய அருகில் பலதறப்பட்ட மூர்த்திபேதத்தில் அபிமானத்தை யுடையவர்களான இந்த ப்ரம்ஹாதிகள் எப்பொழுது வரவில்லையோ அப்பொழுது எல்லாவற்றுக்கும் ஆத்மபூதராக இருப்பதுபற்றி ஸர்

यदोपससृपुर्निखिलात्मकत्वात्तत्राखिलामरमयो हरिराविरासीत् ॥ ३० ॥
तं तद्वदार्तमुपलभ्य जगन्निवासः स्तोत्रं निशम्य दिविजैः सह संस्तुवद्भिः ।
छन्दोमयेन गरुडेन समुह्यमानश्चक्रायुधोऽभ्यगमदाशु यतो गजेन्द्रः ॥ ३१ ॥
सोऽन्तःसरस्युरुबलेन गृहीत आर्तो दृष्ट्वा गरुत्मति हरिं ख उपात्तचक्रम् ।
उत्क्षिप्य साम्बुजकरं गिरमाह कृच्छ्रान्नारायणाखिलगुरो भगवन्नमस्ते
॥ ३२ ॥ तं वीक्ष्य पीडितमजः सहसावतीर्य सग्राहमाशु सरसः कृपयो-
ज्जहार । ग्राहाद्विपाटितमुखादरिणा गजेन्द्रं संपश्यतां हरिरमूमुचदुस्त्रिया-
णाम् ॥ ३३ ॥

इति श्रीमद्भागवते महापुराणेऽष्टमस्कन्धे गजेन्द्रमोक्षणवर्णनं नाम
तृतीयोऽध्यायः ॥ ३ ॥

---

வதேவதாமயரான ஹரியானவர் வந்துதோன்றினர். (30) அவன் அவ்விதம் ஆர்த்தனுகைபீடிதனுக, இருப்பதை யறிந்தும் அவன் செய்த ஸ்தோத்திரத்தைக் கேட்டும் ஜகன்னிவாஸரான ஹரியானவர் சக்கிராயுதத்தைக் கையில் தாங்கிக் கொண்டு ஸ்துதிக்கின்ற தேவர்களுடன் கூட வேதமயரான கருடனுல் சுமக்கப்படுகின்றவராய் எங்கு கஜேந்திரனிருக்கின்றுனே அங்கு வேகமாகவந்துசேர்ந்தார். (31) ஸரஸ்ஸின் உள்ளில் அதிகம் வலுவுள்ள முதலையினுல் பிடித்துக் கொள்ளப்பட்டவனும் ஆர்த்தனுமான அந்தக் கஜேந்திரன் சக்கிராயுதத்தைத் தாங்கிக்கொண்டு கருடன் மீதிருக்கும் ஹரியை ஆகாசத்தில் கண்டு தாமரஸபுஷ்பத்துடன் கூடின துதிக்கையை உயரத்தூக்கிக்கொண்டு வெகு கஷ்டத்துடன் ஹே நாராயண! ஹே பகவன்! ஹே அகிலகுரோ! உமக்கு நமஸ்காரம் என்முன். (32) அஜனுன பகவான் அவன் பீடிக்கப்பட்டிருப்பதை நேரில் கண்ணுற்றுக் கிருபையினுல் வேகமாக மடுவிலிறங்கி முதலையுடன்கூட அவனை ஸரஸ்ஸிலிருந்து கறையிலெடுத்துப் போட்டார். சக்கிராயுதத்திஞல் பிளக்கப்பட்ட வாயையுடையதான முதலையிலிருந்து தேவர்கள் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுது ஹரியானவர் கஜேந்திரனை விடுவித்தார் என்றார். (33)

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண அஷ்டமஸ்கந்தத்தில்
கஜேந்திரமோக்ஷணவர்ணனமென்ற மூன்றுவது
அத்தியாயம் முற்றிற்று.

## अथ चतुर्थोऽध्यायः ॥

श्रीशुक उवाच—तदा देवर्षिगन्धर्वा ब्रह्मेशानपुरोगमाः । मुमुचुः कुसुमासारं शंसन्तः कर्म तद्धरेः ॥ १ ॥ नेदुर्दुन्दुभयो दिव्या गन्धर्वा ननृतुर्जगुः । ऋषयश्चारणाः सिद्धास्तुष्टुवुः पुरुषोत्तमम् ॥ २ ॥ योऽसौ ग्राहः स वै सद्यः परमाश्चर्यरूपधृक् । मुक्तो देवलशापेन हूहूर्गन्धर्वसत्तमः ॥ ३ ॥ प्रणम्य शिरसाधीशमुत्तमश्लोकमव्ययम् । अगायत यशो·

---

## நான்காவது அத்தியாயம்.

(அ-கை) चतुर्थे तु तयोर्ग्राहः प्राप गन्धर्वतां पुनः ।
गजं स्वपार्षदं कृत्वा हरिर्निन्ये निजं पदम् ॥ १ ॥

(க-ரை) கஜேந்திரன், முதலே அவ்விருவருள் முதலேயானது திரும்பவும் கந்தர்வத்தன்மையையடைந்தது. ஹரியானவர் யானேயைத் தனது பார்ஷதனுகச் செய்துகொண்டு தனது வைகுண்டலோகஞ் சேர்த்தார் என இந்த நான்காவது அத்தியாயத்திலுபதேசிக்கப்படுகிறது. (1) (எ-று)

ஸ்ரீசுகர் சொல்லலுற்ருர்—அப்பொழுது ப்ரம்ஹதேவன் மஹாதேவன் இவர்களே முதன்மையாகக்கொண்ட தேவர் ருஷிகள் கந்தர்வர் இவர்கள் ஹரியினுடைய அந்தக் கர்மத்தைப் புகழ்ந்து கொண்டு பூமாரியைப் பெய்தனர். (1) தேவலோகத்திலுள்ள துந்துபி வாத்தியங்கள் முழங்கின. கந்தர்வர்கள் பாடினர். (அப்ஸரஸ்ஸுகள்) ஆடினர். ருஷிகளும், சாரணர்களும், ஸித்தர்களும் புருஷோத்தமனே ஸ்துதித்தனர். (2) யாதொரு இந்த முதலேயுண்டோ அது அப்பொழுதே *தேவல சாபத்தினின்றும் விடு

---

* ஸரஸ்ஸில் ஸ்திரீகளுடன் ஜலக்ரீடை செய்கின்ற ஹூஹூ என்ற கந்தர்வன் அதில் ஸ்னனஞ்செய்ய இறங்கின தேவலரின் காலேப் பிடித்து இழுத்தான். அவர் கோபங்கொண்டு முதலேயாக ஆகக் கடவது எனச் சபித்தார். பிறகு அவனுல் வேண்டப்பட்ட அவர் இவ்விதமே கஜேந்திரனேப் பிடித்துக் கொள். பிறகு அவனே கறையேற்றும் ஹரியானவர் உன்னேயும் சாபத்தினின்றும் விடுவிக்கப் போகிருர் என்ருர் என இதிஹாஸத்தில் சொல்லப் பட்டிருக்கிறது.

धाम कीर्तन्यगुणसत्कथम् ॥ ४ ॥ सोऽनुकम्पित ईशेन परिक्रम्य प्रणम्य तम् । लोकस्य पश्यतो लोकं स्वमगान्मुक्तकिल्बिषः ॥ ५ ॥ गजेन्द्रो भगवत्स्पर्शाद्विमुक्तोऽज्ञानबन्धनात् । प्राप्तो भगवतो रूपं पीतवासाश्चतुर्भुजः ॥ ६ ॥ स वै पूर्वमभूद्राजा पाण्ड्यो द्रविडसत्तमः । इन्द्रद्युम्न इति ख्यातो विष्णुव्रतपरायणः ॥ ७ ॥ स एकदाराधनकाल आत्मवान्गृहीतमौनव्रत ईश्वरं हरिम् । जटाधरस्तापस आप्लुतोऽच्युतं समर्चयामास कुलाचलाश्रमः ॥ ८ ॥ यदृच्छया तत्र महायशा मुनिः समागमच्छिष्यगणैः परिश्रितः । तं

---

பட்டு மிக்க வாஸ்சரியகரமான ரூபத்தைத் தரித்துக் கொண்டு ஹூஹூ என்ற கந்தர்வஸ்ரேஷ்டனாகவாகி, ஸர்வத்துக்கும் நியந்தாவும், உத்தமஸ்லோகனும், அவ்யயனுமான பகவானைத் தலையினால் வணங்கி யசஸ்ஸுக்கு ஆஸ்ரயமானவரும் கீர்த்தனஞ் செய்யத்தகுந்த குணங்களையும் நல்ல கதையையுமுடையவருமான அவரைக் கானத்தினால் ஸந்தோஷப்படுத்தினான். (3–4) ஈசனால் அனுக்கிரஹிக்கப்பட்ட அவன் பாபத்தினின்றும் விடுபட்டவனாய் அவரை வலம்வந்து நமஸ்கரித்து விட்டு உலகமானது பார்த்துக் கொண்டிருக்கும் பொழுது சொந்தமான கந்தர்வலோகத்தை யடைந்தான். (5) கஜேந்திரன் பகவானுடைய ஸ்பர்சத்தினால் அக்ஞானமாகிற பந்தத்தினின்றும் விடுபட்டவனாய் பொன்னிறமுள்ள வஸ்திரத்தை யுடையவனாயும், நான்கு கைகளை யுடையவனாயுமாகிப் பகவத்ஸாரூப்யத்தையடைந்தான். (6) அவனே முன்னர் தமிழ் தேசத்தில் சிறந்தவனும் இந்திரத்யும்னன் என்ற ப்ரஸித்திபெற்றவனும், விஷ்ணுவ்ரதத்தி லீடுபட்டவனுமான பாண்டிய அரசனாக இருந்தான். (7) அவன் ஒருஸமயம் பகவதாராதன காலத்தில் மனோஜயமுள்ளவனாயும், மௌனவ்ரதத்தை யாஸ்ரயித்தவனாயும், ஜலத்தில் ஸ்னானஞ்செய்தவனாயும், ஜடாதரனாயும், தாபஸனாயுமாகிக் குலாசலமான மலயபர்வதத்திலிருந்துகொண்டு ஈஸ்வரனான ஹரியை ஆராதித்து வந்தான். (8) அந்த மலயபர்வதத்தில் வஸிப்பவரும் மஹத்தான யசஸ்ஸுள்ளவருமான அகஸ்த்யமுனியானவர் சிஷ்யக்கூட்டங்களினால் சூழப்பட்டவராய் எதிருச்சையாக அங்கு வந்து சேர்ந்தார். அந்த ருஷியானவர், மௌனமாக

वीक्ष्य तूष्णीमकृतार्हणादिकं रहस्युपासीनमृषिश्चुकोप ह ॥९॥ तस्मा इमं शापमदादसाधुरयं दुरात्माऽकृतबुद्धिरद्य । विप्रावमन्ता विशतां तमोऽन्धं यथा गजः स्तब्धमतिः स एव ॥ १० ॥

श्रीशुक उवाच—एवं शप्त्वा गतोऽगस्त्यो भगवान्नृप सानुगः । इन्द्रद्युम्नोऽपि राजर्षिर्दिष्टं तदुपधारयन् ॥ ११ ॥ आपन्नः कौञ्जरीं योनिमात्मस्मृतिविनाशनीम् । हर्यर्चनानुभावेन यद्गजत्वेऽप्यनुस्मृतिः ॥ १२ ॥ एवं विमोक्ष्य गजयूथपमब्जनाभस्तेनापि पार्षदगतिं गमितेन युक्तः । गन्धर्वसिद्धविबुधैरुपगीयमानकर्माऽद्भुतं स्वभवनं गरुडासनोऽगात् ॥१३॥ एतन्महाराज तवेरितो मया कृष्णानुभावो गजराजमोक्षणम् । स्वर्ग्यं यश-

---

ஏகாந்தமான விடத்திலுட்கார்ந்திருப்பவனும் வந்த தனக்குப்பூஜை முதலியவற்றைச் செய்யாதவனுமான அவனைக் கண்டு கோபங்கொண்டார். (9) அஸாதுவும் கெட்ட புத்தியுள்ளவனும் அசிக்ஷித மான புத்தியையுடையவனும் இப்பொழுது ப்ராம்ஹணனை தன்னை அவமதித்தவனுமான இவன் யானைபோல ஸ்தப்தமான புத்தியுள்ளவனாக இருப்பதால் அதே யானையாகவாகி அந்ததமஸ்ஸை (அக்ஞானம்நிறைந்த பிறவியை) அடையக்கடவன் என அவனையும் பொருட்டு சாபத்தைக் கொடுத்தார் என்றார். (10)

ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—ஹே ந்ருப! பகவானான அகஸ்த்யர் இவ்விதம் சபித்துவிட்டுச் சிஷ்யர்களுடன் கூடச் சென்றுவிட்டார். இந்திரத்யும்னன் என்ற ராஜருஷியும் அந்தச் சாபத்தைத் தைவாதீனமாக நேர்ந்ததெனவாலோசித்துக்கொண்டு தனது நினைவையழிக்கக்கூடிய யானைப்பிறவியை யடைந்தான். ஆயினும் ஹரியைப் பூஜித்ததன் பெருமையினால் யானைப் பிறவியிலுங்கூட முந்தின பிறவியின் நினைவானது அவனுக்கு அழியாததாக இருந்தது. (11–12) பத்மநாபனான பகவான் இவ்விதம் கஜேந்திரனைச் சாபத்தினின்றும் விடுவித்து பார்ஷதநிலையை யடைவிக்கப்பட்ட அவனுடன்கூடினவராய்க் கருடன் மீதேறிக்கொண்டும் கந்தர்வர் ஸித்தர் தேவர் இவர்களால் கொண்டாடப்படும் கர்மத்தை யுடையவராய்க் கொண்டும் ஆஸ்சரியம் வாய்ந்த தனது லோகத்தை யடைந்தார். (13) ஹே குருவர்ய! ஹே மஹாராஜ! கேட்பவர்களுக்கு ஸ்வர்க்கத்தைத்

स्यं कलिकल्मषापहं दुःस्वप्ननाशं कुरुवर्य श्रृण्वताम् ॥ १४ ॥ यथानुकी-
र्तयन्त्येतच्छ्रेयस्कामा द्विजातयः । शुचयः प्रातरुत्थाय दुःस्वप्नाद्युपशा-
न्तये ॥ १५ ॥ इदमाह हरिः प्रीतो गजेन्द्रं कुरुसत्तम । श्रृण्वतां सर्वभू-
तानां सर्वभूतमयो विभुः ॥ १६ ॥

श्रीभगवानुवाच—ये मां त्वां च सरश्चेदं गिरिकन्दरकाननम् ।
वेत्रकीचकवेणूनां गुल्मानि सुरपादपान् ॥ १७ ॥ श्रृङ्गाणीमानि धिष्ण्यानि
ब्रह्मणो मे शिवस्य च । क्षीरोदं मे प्रियं धाम श्वेतद्वीपं च भास्वरम् ॥१८॥
श्रीवत्सं कौस्तुभं मालां गदां कौमोदकीं मम । सुदर्शनं पाञ्चजन्यं सुपर्णं
पतगेश्वरम् ॥ १९ ॥ शेषं च मत्कलां सूक्ष्मां श्रियं देवीं मदाश्रयाम् ।

---

தரக்கூடியதும் யசஸ்ஸைத் தரக்கூடியதும், கலியினாலேற்படும் தோஷத்தைப் போக்கக்கூடியதும், கெட்ட ஸ்வப்பினத்தை நாசஞ் செய்யக்கூடியதுமான இந்தக்கஜேந்திரமோக்ஷணமென்ற கிருஷ்ண மஹிமையானது உமக்கு என்னால் சொல்லப்பட்டது. (14) ஆக வே இதை ஶ்ரேயஸ்ஸில் விருப்பமுள்ள எந்த த்விஜாதிகளுண்டோ அவர்கள் காலையிலெழுந்து ஸ்நானாதிகளினால் சுத்தர்களாகவாகி இரவில் கண்ட கெட்ட ஸ்வப்பினமூலம் நேர்ந்த தோஷத்தைப் போக்கிக்கொள்ள வேண்டி உள்ளபடி சொல்லுகின்றனர். (15) ஹே குருஸத்தம! ஸர்வபூதமயனும் விபுவுமான ஹரியானவர் ப்ரீதியை யடைந்தவராய்க் கொண்டு எல்லா ப்ராணிகளும் கேட்டுக் கொண்டிருக்கும் பொழுது பின்வரும் வார்த்தையைச் சொன்னார்.

ஸ்ரீபகவான் சொல்லலுற்றார்—எவர்கள் விடியற்காலத்திலெழுந்து சுத்தர்களாயும், மனத்தை அசையாது நிறுத்தினவர்களாயுமிருந்து கொண்டு என்னையும், கஜேந்திரனான உன்னையும், இந்த ஸரஸ்ஸையும், மலை அதிலுள்ள குஹை காடு இவற்றையும், பிரம்பு வண்டு துளைத்த மூங்கில்கள் வேறுமூங்கில்கள் இவற்றின் புதருகளையும், தேவவிருக்ஷங்களையும், ப்ரம்ஹதேவனுடையவும், என்னுடையவும், சிவனுடையவும் ஸ்தானங்களான இந்தக் கொடிமுடிகளையும், எனக்கு ப்ரியஸ்தானமான க்ஷீரஸமுத்திரத்தையும், ப்ரகாசிக்கின்ற ஶ்வேதத்வீபத்தையும், ஸ்ரீவத்ஸத்தையும், கௌஸ்துபத்

**ब्रह्माणं नारदमृषिं भवं प्रह्लादमेव च ॥ २० ॥ मत्स्यकूर्मवराहाद्यैरवतारैः
कृतानि मे । कर्माण्यनन्तपुण्यानि सूर्यं सोमं हुताशनम् ॥ २१ ॥ प्रणवं
सत्यमव्यक्तं गोविप्रान्धर्ममव्ययम् । दाक्षायणीर्धर्मपत्नीः सोमकश्यपयो-
रपि ॥ २२ ॥ गङ्गां सरस्वतीं नन्दां कालिन्दीं सितवारणम् । ध्रुवं ब्रह्म-
ऋषीन्सप्त पुण्यश्लोकांश्च मानवान् ॥ २३ ॥ उत्थायापररात्रान्ते प्रयताः
सुसमाहिताः । स्मरन्ति मम रूपाणि मुच्यन्ते ह्येनसोऽखिलात् ॥२४॥ ये
मां स्तुवन्त्यनेनाङ्ग प्रतिबुध्य निशात्यये । तेषां प्राणात्यये चाहं ददामि
विमलां मतिम् ॥ २५ ॥ श्रीशुक उवाच—इत्यादिश्य हृषीकेशः प्रध्माय
जलजोत्तमम् । हर्षयन्विबुधानीकमारुरोह खगाधिपम् ॥ २६ ॥**

**इति श्रीमद्भागवते महापुराणेऽष्टमस्कन्धे गजेन्द्रमोक्षणवर्णनं नाम
चतुर्थोऽध्यायः ॥ ४ ॥**



---

த்தையும், வனமாலையையும், கௌமோதகீ என்ற எனது கதையையும், ஸுதர்சனத்தையும், பாஞ்சஜன்யமென்ற சங்கத்தையும், பக்ஷிராஜனான கருடனையும், எனது ஸூக்ஷ்மகலையான ஆதிசேஷனையும், என்னையே ஆஶ்ரயித்தவளான லக்ஷ்மீ தேவியையும், ப்ரம்ஹதேவனையும், நாரதருஷியையும், மஹாதேவனையும், ப்ரஹ்லாதனையும், மத்ஸ்யகூர்ம வராஹாதி அவதாரங்களினால் செய்யப்பட்டனவும் அளவற்ற புண்ணியங்களுள்ளனவுமான என்னுடைய கர்மங்களையும், சூரியனையும், சந்திரனையும், அக்னியையும், ஸத்யமான ப்ரணவத்தையும், அவ்யக்தத்தை (மாயையை)யும், பசு ப்ராம்ஹணர் இவர்களையும், அழிவற்ற பக்திரூபமான தர்மத்தையும், தக்ஷகுமாரிகளான ஸோமன் கஶ்யபர் இவர்களின் தர்மபத்னிகளையும், கங்கையையும், ஸரஸ்வதி நதியையும், அளகநந்தா நதியையும், யமுனையையும், ஐராவதம் என்ற யானையையும், த்ருவனையும் எழு ப்ரம்ஹருஷிகளையும், புண்ணிய ஶ்லோகர்களான மனிதர்களையும், எனது ரூபங்களையும் நினைக்கின்றனரோ அவர்கள் எல்லாப் பாபத்தினின்றும் விடுபடுகின்றனர். (17-24) ஹே அங்க! எவர்கள் விடியற்காலையிலெழுந்து இந்த ஸ்தோத்திரத்தினால் என்னை ஸ்துதிக்கின்றனரோ அவர்களுக்கு நான் ப்ராணத்யயகா

## अथ पञ्चमोऽध्यायः ॥

श्रीशुक उवाच—राजन्नुदितमेतत्ते हरेः कर्माघनाशनम्। गजेन्द्र-
मोक्षणं पुण्यं रैवतं त्वन्तरं शृणु ॥ १ ॥ पञ्चमो रैवतो नाम मनुस्तामस-

---

லத்தில் சுத்தமான புத்தியைத் தருகின்றேன் என்றார். (25) ஸ்ரீ சுகர் சொல்லலுற்றார்—ஹ்ருஷீகேசன் இவ்விதமுபதேசித்து விட்டுச்சங்கையூதித் தேவர்களை ஸந்தோஷமடையச் செய்துகொண்டு பக்ஷிராஜனான கருடன்மீதேறினார். (26) (எ—று)

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண அஷ்டமஸ்கந்தத்தில்
கஜேந்திரமோக்ஷண வர்ணனமென்ற நான்காவது
அத்தியாயம் முற்றிற்று.

—••✿••—

### ஐந்தாவது அத்தியாயம்.

(அ—கை) अमृताख्यानमध्याभिरष्टाभिरनुवर्ण्यते ।
स्वभक्तपक्षपातेन यत्र योषायितं प्रभोः ॥ १ ॥
पञ्चमे पञ्चमश्चाथ षष्ठश्चाकथयन्मनुम् ।
विप्रशापाच्च निःश्रीकैः कृतां देवैर्हरेः स्तुतिम् ॥ २ ॥

(க—ரை) இதன் பிறகு எட்டு அத்தியாயங்களினால் எதில் தனது பக்தபக்ஷபாதத்தினால் ப்ரபுவான பகவானுக்கு ஸ்திரீரூபமானது ஏற்பட்டதோ அந்த அமிருதமதனக் கதையானது வர்ணிக்கப்படுகிறது. (1) அவற்றுள் இந்த ஐந்தாவது அத்தியாயத்தில் ஐந்தாவதும் ஆறாவது:மான மனுக்களையும், ப்ராம்ஹண சாபத்தினால் ஐஸ்வரியத்தை இழந்தவர்களான தேவர்களினால் செய்யப்பட்ட ஹரியின் ஸ்துதியையு முபதேசிக்கிறார். (2) (எ—று)

ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—புண்ணியமானதும் பாபத்தைப் போக்கக்கூடியதுமான கஜேந்திரமோக்ஷணமென்ற இந்த ஹரியின் காரியமானது உமக்குச் சொல்லப்பட்டது. ரைவதமன்வந்தரத்தைக் கேளும். (1) தாமஸமனுவின் ஸஹோதரரான ரைவதர் ஐந்தாவது மனுவாவார். பலிவிந்த்யனை ஆதியாகக்கொண்ட அர்ஜு

सोदरः । बलिविन्ध्यादयस्तस्य सुता अर्जुनपूर्वकाः ॥ २ ॥ विभुरिन्द्रः सुरगणा राजन्भूतरयादयः । हिरण्यरोमा वेदशिरा ऊर्ध्वबाह्वादयो द्विजाः ॥ ३ ॥ पत्नी विकुण्ठा शुभ्रस्य वैकुण्ठैः सुरसत्तमैः । तयोः स्वकलया जज्ञे वैकुण्ठो भगवान्स्वयम् ॥ ४ ॥ वैकुण्ठः कल्पितो येन लोको लोकनमस्कृतः । रमया प्रार्थ्यमानेन देव्या तत्प्रियकाम्यया ॥ ५ ॥ तस्यानुभावः कथितो गुणाश्च परमोदयाः । भौमान्रेणून्स विममे यो विष्णोर्वर्णयेद्गुणान् ॥ ६ ॥ षष्ठश्च चक्षुषः पुत्रश्चाक्षुषो नाम वै मनुः । पूरुपूरुषसुद्युम्नप्रमुखाश्चाक्षुषात्मजाः ॥ ७ ॥ इन्द्रो मन्त्रद्रुमस्तत्र देवा आप्यादयो गणाः । मुनयस्तत्र वै राजन्हविष्मद्वीरकादयः ॥ ८ ॥ तत्रापि देवः संभूत्यां वैरा-

---

னன் முதலியோர் அவருடைய புத்திரர்களாவர். (2) ஹே ராஜன்! விபுவான பகவானே இந்திரன். பூதரயன் முதலியோர் தேவ கணங்கள். ஹிரண்யரோமா, வேதசிரஸ், ஊர்த்வபாஹு முதலியோர் ப்ராம்ஹணர்கள். (3) சுப்ரனுடைய பத்தினி விகுண்டா என்பவள். அந்தத் தம்பதிகளிடத்தில் வைகுண்டர்களென்கிற தேவஸ்ரேஷ்டர்களுடன் கூட தனது அம்சத்தினுல் பகவான் தானுகவே வைகுண்டனுக அவதரித்தார். (4) தேவியான லக்ஷ்மியினுல் ப்ரார்த்திக்கப் படுகின்ற எவரால் அவளுக்கு ப்ரியத்தைச் செய்யவேண்டுமென்ற விருப்பத்தினுல் லோக (ஜன) ங்களினுல் நமஸ்கரிக்கப்பட்ட வைகுண்ட மென்ற லோகமானது அமைக்கப் பட்டதோ, (5) அவருடைய மஹிமை சொல்லப்பட்டது. மேலான விருத்தியையுடைய குணங்களும் சொல்லப்பட்டன. ஆனுல் எவன் விஷ்ணுவின் குணங்களை வர்ணிக்கத் தொடங்குவானே அவன் பூமியிலுள்ள பொடிகளைக் கணக்கிட்டுக் கண்டுபிடிக்கக்கூடும். (6) சக்ஷுஷ் என்பவரின் புத்திரனுன சாக்ஷுஷன் என்பவன் ஆறுவது மனுவாக வாகிருன். பூரு, பூருஷன், ஸுத்யும்னன் முதலியோர் சாக்ஷுஷனுடைய புத்திரர்கள். (7) அந்த மன்வந்தரத்தில் மந்த்ரத்ருமன் இந்திரனுனன். ஆப்யரை ஆதியாகக் கொண்ட கூட்டங்கள் தேவர்கள். ஹே ராஜன்! அந்த மன்வந்தரத்தில் ஹவிஷ்மான் வீரகன் முதலியோர் த்விஜர்களாக இருந்தனர். (8) அந்த மன்வந்தரத்திலும் பகவானுன தேவன்

जस्याभवत्सुतः। अजितो नाम भगवानंशेन जगतः पतिः॥ ९॥ पयोधिं येन निर्मथ्य सुराणां साधिता सुधा। भ्रममाणोऽम्भसि धृतः कूर्मरूपेण मन्दरः॥ १०॥

राजोवाच—यथा भगवता ब्रह्मन्मथितः क्षीरसागरः। यदर्थं वा यतश्चाद्रिं दधारांबुचरात्मना॥११॥ यथामृतं सुरैः प्राप्तं किंचान्यदभवत्ततः। एतद्भगवतः कर्म वदस्व परमाद्भुतम्॥ १२॥ त्वया सङ्कथ्यमानेन महिम्ना सात्वतां पतेः। नातितृप्यति मे चित्तं सुचिरं तापतापितम्॥ १३॥ सूत उवाच—संपृष्टो भगवानेवं द्वैपायनसुतो द्विजाः। अभिनन्द्य हरेर्वीर्यमभ्याचष्टुं प्रचक्रमे॥ १४॥ श्रीशुक उवाच—यदा युद्धेऽसुरैर्देवा बाध्य-

---

வைராஜனுக்கு ஸம்பூதி என்பவளிடத்தில் அம்சத்தினுல் அஜிதன் என்ற பெயருள்ள புத்திரனுகப் பிறந்து உலகுக்குப் பதியாகவானார். (9) இவரால் ஸமுத்திரத்தைக் கடைந்து தேவர்களுக்கு அமிருதம் ஸாதித்துத் தரப்பட்டது. ஜலத்தில் சுத்துகின்ற மந்தரமலையும் ஆமையுருவமெடுத்த இவரால் சுமக்கப்பட்டது என்றார்.

அரசன் சொல்லலுற்றார்—ஹே ப்ரம்ஹன்! பகவானுல் எந்தப் பாற்கடல் கடைவதற்கு வேண்டி ஆமையுருவத்தினுல் மந்தரமலையானது சுமக்கப்பட்டதோ அந்தப் பாற்கடலானது என்ன ப்ரயோஜனத்துக்காக எவ்விதம் கடையப்பட்டது. (11) தேவர்களினுல் அமிருதமானது எவ்வித மடையப்பட்டது. அப்பொழுது வேறுஎன்ன நடந்தது. பரமாத்புதமான இந்தப் பகவானுடைய காரியத்தைச் சொல்லுவீராக. (12) உம்மால் நன்கு உபதேசிக்கப்படுகின்ற ஸாத்வதர்களுக்குப் பதியின் மஹிமையினுல் மிகத்தாபதப்தமான என்னுடைய சித்தமானது போதுமென்ற எண்ணத்தையடையாதிருக்கின்றது என்றார். (13) சூதர் சொல்லலுற்றார்—ஹே த்விஜர்காள்! இவ்விதம் கேட்க்கப்பட்டவரும் பகவானுமான வியாஸகுமாரர் அரசனைப் புகழ்ந்து ஹரியின் வீரியத்தைச் சொல்லவாரம்பித்தார். (14) ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—எப்பொழுது யுத்தத்தில் அசுரர்களினுல் தேவர்கள் கூர்மையான பாணங்களினுலடிக்கப்பட்டு உயிரற்றவர்களாய் விழுந்து திரும்பவும் பிழைக்காதிருந்

माना: शितायुधै: । गतासवो निपतिता नोत्तिष्ठेरन्स्म भूयश: ॥ १५ ॥
यदा दुर्वाससः शापात्सेन्द्रा लोकास्त्रयो नृप । नि:श्रीकाश्चाभवंस्तत्र
नेशुरिज्यादय: क्रिया: ॥ १६ ॥ निशाम्यैतत्सुरगणा महेन्द्रवरुणादय: ।
नाध्यगच्छन्स्वयं मन्त्रैर्मन्त्रयन्तो विनिश्चयम् ॥ १७ ॥ ततो ब्रह्मसभां
जग्मुर्मेरोर्मूर्धनि सर्वश: । सर्वं विज्ञापयांचक्रु: प्रणता: परमेष्ठिने ॥ १८ ॥
स विलोक्येन्द्रवाय्वादीन्नि:सत्त्वान्विगतप्रभान् । लोकानमङ्गलप्रायानसु-
रानयथा विभु: ॥ १९ ॥ समाहितेन मनसा संस्मरन्पुरुषं परम् । उवा-
चोत्फुल्लवदनो देवान्स भगवान्पर: ॥ २० ॥

अहं भवो यूयमथोऽसुरादयो मनुष्यतिर्यग्द्रुमघर्मजातय: । यस्याव-
तारांशकलाविसर्जिता व्रजाम सर्वे शरणं तमव्ययम् ॥ २१ ॥ न यस्य

---

தனரோ, (15) ஹே ந்ருப! துர்வாஸஸ்ஸின் சாபத்தினால் இந்திரனுடன்கூடின மூன்று வுலகங்களும் சோபையற்றனவாகவாயினவோ அப்பொழுது உலகில் யாகாதிகளான க்ரியைகள் நாசமடைந்தன. (16) மஹேந்திரன் வருணன் இவர்களை ஆதியாகவுடைய தேவ கணங்கள் இதைக் கண்டு தாங்கள் மந்திராலோசனைகளைச் செய்த போதிலுங்கூட நிஸ்சயத்தை யடையாதவர்களாக இருந்தனர். (17) அப்பொழுது யாவரும் மேருவின் சிகரத்திலிருக்கும் ப்ரம்ஹதேவனின் ஸபையையடைந்து ப்ரம்ஹதேவனையும் பொருட்டு வணங்கி யாவையும் தெரிவித்துக் கொண்டனர். (18) விபுவான அந்த ப்ரம்ஹதேவன் இந்திரன் வாயு முதலியவர்கள் வலுவற்றவர்களாகவும் சோபையற்றவர்களாகவு மிருப்பதையும், உலகங்கள் பெரும்பாலும் அமங்களம் நிறைந்தனவாக இருப்பதையும் அஸுரர்கள் தேவர்களுக்கு நேர்மாறாகத் தேஹபுஷ்டி வலு இவையுள்ளவர்களாக இருப்பதையும் கண்டு ஒரே இடத்தில் நிருத்தின மனத்தினால் பரமபுருஷனைத் தியானித்துக் கொண்டு பரனும் பகவானுமான அவர் மலர்ந்த முகத்துடன் தேவர்களைப் பார்த்துச் சொல்லலுற்றார். (19–20)

நானும், மஹாதேவனும், நீங்களும் (தேவர்களும்) பிறகு அஸுராதிகளும், மனுஷ்யர், பசுக்கள் மரங்கள் வியர்வையினின்று

वध्यो न च रक्षणीयो नोपेक्षणीयादरणीयपक्षः । अथापि सर्गस्थितिसंयमार्थं धत्ते रजःसत्त्वतमांसि काले ॥ २२ ॥ अयं च तस्य स्थितिपालनक्षणः सत्त्वं जुषाणस्य भवाय देहिनाम् । तस्माद्व्रजामः शरणं जगद्गुरुं स्वानां स नो धास्यति शं सुरप्रियः ॥ २३ ॥ श्रीशुक उवाच—इत्याभाष्य सुरान्वेधाः सह देवैररिन्दम । अजितस्य पदं साक्षाज्जगाम तमसः परम् ॥ २४ ॥ तत्रादृष्टस्वरूपाय श्रुतपूर्वाय वै विभो । स्तुतिमब्रूत दैवीभिर्गीर्भिस्त्ववहितेन्द्रियः ॥ २५ ॥

---

முண்டானவைகள், அந்தப் பகவானுடைய அவதாரமான புருஷனுடைய அம்சமான ப்ரம்ஹதேவனுடைய அம்சர்களான மரீச்யாதிகள் அவர்களாலுண்டுபண்ணப்பட்ட புத்திரபௌத்திராதிகள் ஆகியயாவரும் அவ்யயரான அவரைச்சரணமாக அடைவோம். (21) எவருக்கு வதஞ்செய்ய வேண்டியவருமில்லையோ, ரக்ஷிக்கவேண்டியவருமில்லையோ, ஒதுக்கித்தள்ளவேண்டியவரும் ஆதரவுகாட்டவேண்டிய பக்ஷத்திலுள்ளவரும் இல்லையோ ஆயினும் அவர் காலத்தில் ஸிருஷ்டி ஸ்திதிப்ரளயங்களுக்குவேண்டி ரஜோகுண ஸத்துவகுண தமோகுணங்களை தரிக்கிறார். (22) இது ஸத்துவகுணத்தைப் பின்பற்றினவரான அவருக்கு ஜீவர்களின் க்ஷேமத்துக்குவேண்டி ஸ்திதியைப்பாலனஞ்செய்யும் காலமாகும். ஆகவே ஜகத்குருவான அவரை நாம் சரணமாக அடைவோமாக. தேவர்களிடம் ப்ரேமையுள்ளவரான அவர் தன்னைச் சேர்ந்தவர்களான நமக்கு க்ஷேமத்தைச் செய்வார் என்றார். (23) ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—ஹே அரிந்தம! ப்ரம்ஹதேவன் இவ்விதம் தேவர்களைச் சொல்லிவிட்டுத் தேவர்களுடன்கூட லோகாலோகத்தைக்காட்டிலும் பரமான யாதொரு தமஸ்ஸுண்டோ அதைக்காட்டிலும் பரமான ஹரியினுடைய பதத்தை நேரில் அடைந்தார். (24) ஹே விபோ! அவ்விடத்தில் அடக்கப்பட்ட இந்திரியங்களையுடையவராய்க் கொண்டு அதிருஷ்டமான ஸ்வரூபத்தையுடையவரும் சாஸ்திரமூலம் முன்னர் ஶ்ரவணஞ்செய்யப்பட்டவருமான பகவானையும் பொருட்டு தைவங்களான= வைதிகங்களான, வாக்குகளினால் ஸ்தோத்திரத்தைச் செய்தார். (25)

ब्रह्मोवाच—अविक्रियं सत्यमनन्तमाद्यं गुहाशयं निष्कलमप्रतर्क्यम्। मनोऽग्रयानं वचसानिरुक्तं नमामहे देववरं वरेण्यम् ॥२६॥ विपश्चितं प्राणमनोधियात्मनामर्थेन्द्रियाभासमनिद्रमव्रणम्। छायातपौ यत्र न गृध्रपक्षौ तमक्षरं खं त्रियुगं व्रजामहे ॥ २७ ॥ अजस्य चक्रं त्वजयेर्यमाणं मनोमयं पञ्चदशारमाशु। त्रिणाभि विद्युच्चलमष्टनेमि यदक्षमाहुस्तमृतं प्रपद्ये ॥२८॥ य एकवर्णं तमसः परं तदलोकमव्यक्तमनन्तपारम्। आसांचकारोपसुप

---

ப்ரம்ஹதேவன் சொல்லலுற்றார்—அந்தமும் ஆதியுமற்றவரும், ஆனதுபற்றி அவிக்ரியரும், ஆனதுபற்றி ஸத்யரும்=முக்காலத்திலுமழிவற்றவரும், மனதைக் காட்டிலுங்கூட வேகமாகச் செல்லுபவரும், ஆனதுபற்றி ஊஹித்தறிய வியலாதவரும், ஆனதுபற்றி நிஷ்களரும்=உபாதிஸம்பந்தமற்றவரும், ஆனதுபற்றி எல்லாவற்றுக்கும் உள்ளிலிருப்பவரும், வாக்குக் கெட்டாதவரும், வரேண்யருமான தேவஶ்ரேஷ்டரை நமஸ்கரிக்கின்றோம். (26) ப்ராணன் மனஸ் புத்தி அஹங்காரம் இவற்றுக்கு ஞாதாவும், சப்தாதி விஷயங்கள் அவற்றைக் கிரஹிக்கும் இந்திரியங்கள் ஆகிய இவ்விரண்டின் ரூபமாகவும் தோற்றத்தை யடைகின்றவரும், ஆயினும் தேஹமற்றவராக இருப்பதுபற்றி நித்திரை (அக்ஞானம்) அற்றவரும், ஆனதுபற்றியே அக்ஷரரும், ஆகாசம்போல எங்கும் நீக்கமற நிறைந்திருப்பவரும், எவரிடத்தில் ஜீவபக்ஷபாதிகளான அவித்தையும் வித்தையும் கிடையாவோ அப்பேர்ப்பட்டவரும், மூன்று யுகங்களில் மட்டுமே ஆவிர்ப்பாவத்தை யடைகின்றவருமான அவரைச் சரணமாக அடைகின்றோம். (27) மாயையினால் ப்ரேரணை செய்யப்படுகின்றதும், மனத்தை ப்ரதானமாக வுடையதும், பத்து இந்திரியங்கள் ஐந்து ப்ராணங்கள் ஆகிய பதினைந்து ஆரக்கால்களை யுடையதும், வேகமாகச் செல்லக்கூடியதும், மூன்று குணங்களை குடம்போல நடுவிலுடையதும், மின்னல் போல நிலைத்திராததும், மூலப்ரகிருதி மஹத் அஹங்காரம் பஞ்சதன்மாத்திரை இவையாகிற எட்டு நேமியை யுடையதுமான ஜீவனுடைய சக்கிரத்தை=தேஹாதிப் பொருள்களை, எவரை அக்ஷமாக=குடமாக, உடையதெனச் சொல்லுகின்றனரோ ஸத்யரான அவரைச் சரணமடைகின்றேன். (28) எவர் பக்தரக்ஷணத்துக்கு

र्णमेनमुपासते योगरथेन धीराः ॥ २९ ॥ न यस्य कश्चातितितर्ति मायां यया जनो मुह्यति वेद नार्थम्। तं निर्जितात्मात्मगुणं परेशं नमाम भूतेषु समं चरन्तम् ॥ ३० ॥

इमे वयं यत्प्रिययैव तन्वा सत्त्वेन सृष्टा बहिरन्तराविः। गतिं न सूक्ष्मामृषयश्च विद्महे कुतोऽसुराद्या इतरप्रधानाः ॥ ३१ ॥ पादौ महीयं स्वकृतैव यस्य चतुर्विधो यत्र हि भूतसर्गः। स वै महापुरुष आत्मतन्त्रः

---

வேண்டி கருடன் மீதுட்கார்ந்தாரோ, எவர், ஏகவர்ணமும்= ஞானமொன்றையே ஸ்வரூபமாக வுடையதும், ப்ரகிருதியைக் காட்டிலும் பரமானதும், அலோகமும்=கண்ணுல் காணக்கூடாத தும், அவ்யக்தமும்=எவ்வித பேதமுமற்றதும், அனந்தபாரமும்= தேசத்தாலும் காலத்தாலும் பரிச்சேதமற்றதும், ஆன அந்த ப்ரம்ஹமாகவே இருக்கிருரோ, ஆனதுபற்றியே எந்த இவரை தீரர்கள்=புத்தியைத் தன்வசமாக்கினவர்கள், யோகமாகிற ஸாத னத்தினுல் பஜிக்கின்றனரோ அவரை நமஸ்கரிக்கின்ருேம். (29) எந்த மாயையினுல் ஜனமானது மோஹத்தை யடைந்து ஆத்மஸ் வரூபத்தை யறிவதில்லேயோ எவருடைய அந்த மாயையை ஒருவ னும் எளிதில் தாண்ட முடிவதில்லேயோ, ஜயிக்கப்பட்ட ஆத்மா வையும்=ஆத்மசக்தியான மாயையையும், ஆத்மகுணங்களேயும்= மாயாகுணங்களேயும், உடையவரும், பரேசனும், பூதங்களிடத்தில் ஸமமாக ஸஞ்சரிப்பவருமான அவரை நமஸ்கரிக்கின்ருேம். (30)

தேவர்களான இந்த நாங்களும், ருஷிகளும் எவருடைய ப்ரிய சரீரமான ஸத்துவகுணத்தினுல் ஸிருஷ்டிக்கப் பட்டவர்களாக இருந்த போதிலுங்கூட வெளியிலும் உள்ளிலும் ப்ரகாசித்த போ திலுங்கூட எவருடைய ஸூக்ஷ்மமான கதியை=நிருபாதிகமான ஸ்வ ரூபத்தை, அறியாதவர்களாக இருப்பதுபற்றி ரஜோகுண தமோ குண ப்ரதானர்களான அசுரர் முதலியோர் எப்பாடுபட்டும் அறிய மாட்டார் என்பதில் ஆக்ஷேபமில்லேயோ அவரை நமஸ்கரிக்கின் ருேம். (31) எந்தப் பூமியில் ஆண்டஜம் ஸ்வேதஜம் உத்பிஜ்ஜம் ஜராயுஜம் என்ற நான்கு விதமான ப்ராணி ஸர்க்கமானது இருக் கிறதோ தன்னுல் ஸிருஷ்டிக்கப்பட்ட இந்தப் பூமியே எவருடைய

प्रसीदतां ब्रह्ममहाविभूतिः ॥ ३२ ॥ अम्भस्तु यद्रेत उदारवीर्यं सिध्यन्ति जीवन्त्युत वर्धमानाः । लोकास्त्रयोऽथाखिललोकपालाः प्रसीदतां ब्रह्म महाविभूतिः ॥ ३३ ॥ सोमं मनो यस्य समामनन्ति दिवौकसां वै बलमन्ध आयुः । ईशो नगानां प्रजनः प्रजानां प्रसीदतां नः स महाविभूतिः॥३४॥ अग्निर्मुखं यस्य तु जातवेदा जातः क्रियाकाण्डनिमित्तजन्मा । अन्तःसमुद्रेऽनुपचन्स्वधातून्प्रसीदतां नः स महाविभूतिः ॥ ३५ ॥ यच्चक्षुरासीत्तरणिर्देवयानं त्रयीमयो ब्रह्मण एष धिष्ण्यम् । द्वारं च मुक्तेरमृतं च मृत्युः

---

பாதங்களோ அழியாத ஸ்வரூபமுள்ளவராக இருப்பதுபற்றி ஆத்ம தந்திரும்=பாதாதிகளுள்ளவராயினுங்கூட அவற்றுக்கு உட்படா தவரும், மஹத்தான ஐஶ்வரியத்தையுடையவருமான அந்த மஹா புருஷன் அருள் புரியக்கடவர். (32) எந்த ஜலங்களிலிருந்து மூன்று உலகங்களும் லோகபாலர்களும் உண்டாகவும் ஜீவிக்க வும் விருத்தியடையவும் செய்கின்றனரோ அதிகமான சக்தியை யுடைய அந்த ஜலமானது எவருடைய வீரியமோ அழியாத ஸ்வரூ பமுள்ளவரும் மஹத்தான ஐஶ்வரியத்தை யுடையவருமான அவர் எங்கள் விஷயத்தில் அருள் புரியக்கடவர். (33) தேவர்களுக்கு அன்னமும் ஆனதுபற்றியே பலமும் ஆயுளுமாகவிருப்பவனும், மரங்களை விசேஷமாக வளர்ப்பவனுமான சந்திரனை எவருடைய மனஸ்ஸாகச் சொல்லுகின்றனரோ மஹத்தான ஐஶ்வரியமுள்ள அவர் ப்ரஜைகளான எங்கள் விஷயத்தில் அருள் புரியக்கடவர். (34) தனத்தை யுண்டாக்குகின்றவரும், கர்மகாண்டத்தினால் சொல்லப் படும் கர்மத்துக்கு நிமித்தமான பிறவியையுடையவரும், வயிற்றின் நடுவில் பாகஞ்செய்வதற்குத் தகுதியானவற்றையே அடிக்கடி பாக ஞ்செய்கின்றவரும், (ஸமுத்திரமத்தியில் பாடபரூபத்தினால் ஜலங் களையே குடிக்கின்றவரும்) ஆன அக்னியானவர் எவருடைய முக மாகவாகிறாரோ மஹத்தான ஐஶ்வரியத்தை யுடைய அவர் எங்கள் விஷயத்தில் அருள் புரியக்கடவர். (35) அர்ச்சிராதி மார்க்கதே வதையும், மூன்று வேதஸ்வரூபரும், ப்ரம்ஹோபாஸனத்துக்கு ஸ்தானமானவரும், முக்திக்கு வழியாக வுள்ளவரும், புண்ணிய லோகமாக இருப்பதுபற்றி அமிருதரும், காலாத்மகராக இருப்பது பற்றி மிருத்யுவுமான இந்தச் சூரியன் எவருடைய கண்ணோ

प्रसीदतां नः स महाविभूतिः ॥ ३६ ॥ प्राणादभूद्यस्य चराचराणां प्राणः सहो बलमोजश्च वायुः । अन्वास्म सम्राजमिवानुगा वयं प्रसीदतां नः स महाविभूतिः ॥ ३७ ॥

श्रोत्राद्दिशो यस्य हृदश्च खानि प्रजज्ञिरे खं पुरुषस्य नाभ्याः। प्राणेन्द्रियात्मासुशरीरकेतं प्रसीदतां नः स महाविभूतिः॥ ३८ ॥ बलान्महेन्द्रस्त्रिदशाः प्रसादान्मन्योर्गिरीशो धिषणाद्विरिञ्चिः। खेभ्यश्च छन्दांस्यृषयो मेढ्रतः कः प्रसीदतां नः स महाविभूतिः ॥३९॥ श्रीर्वक्षसः पितरश्छाय-

---

மஹத்தான ஐச்வரியமுள்ள அவர் எங்களுக்கு அருள் புரியக்கடவர். (36) எந்த ப்ராணனை புத்தியாதி அதிஷ்டாதிருதேவர்களான நாங்கள் சக்கிரவர்த்தியை அவரது வேலைக்காரர்கள் போல அனுஸரித்தவர்களாக இருக்கின்றோமோ, சரங்களும் அசரங்களுமான ப்ராணிகளுக்கு ப்ராணனும், ஸஹஸ்ஸும்=மனத்தின் உத்ஸாஹ சக்தியும், பலமும்=சரீரபலமும், ஓஜஸ்ஸும்=இந்திரிய பலமும், ஆக இருக்கும் வாயுவானது எவருடைய ப்ராணனிலிருந்து உண்டாயிற்றோ மஹத்தான ஐச்வரியமுள்ள அவர் எங்கள் விஷயத்தில் அருள் புரியக்கடவர். (37)

எந்தப் புருஷனுடைய காதிலிருந்து திக்குகளும், எவருடைய ஹிருதயத்திலிருந்து தேஹத்திலுள்ள ஓட்டைகளும் உண்டாயினவோ, பஞ்சவிருத்தி ப்ராணன்களுக்கும் இந்திரியங்களுக்கும் மனத்துக்கும் நாகம் கூர்மம் க்ரகரம் தேவதத்தம் தனஞ்ஜயம் என்ற வேறு ப்ராணவ்ருத்திகளுக்கும் சரீரத்துக்கும் ஆச்ரயபூதமான ஆகாசமானது எந்தப் புருஷனுடைய நாபி (உந்தி) யிலிருந்து உண்டாயிற்றோ மஹத்தான ஐச்வரியத்தையுடைய அவர் எங்கள் விஷயத்தில் அருள் புரியக்கடவர். (38) எவருடைய பலத்திலிருந்து மஹேந்திரனும், ப்ரஸாதத்திலிருந்து தேவர்களும், கோபத்திலிருந்து கிரீசனும், புத்தியிலிருந்து ப்ரம்ஹதேவனும், ஓட்டைகளிலிருந்து வேதங்களும், ருஷிகளும், மேட்ரத்தி (ஆண்குறியி) லிருந்து ப்ரஜாபதியும் உண்டாயினரோ மஹத்தான ஐச்வரியத்தையுடைய அவர் எங்கள் விஷயத்தில் அருள்புரியக் கடவர். (39) எவருடைய மார்பிலிருந்து லக்ஷ்மியும், நிழலிலிருந்து பிதிருக்க

यासन्धर्मः स्तनादितरः पृष्ठतोऽभूत् । द्यौर्यस्य शीर्ष्णोऽप्सरसो विहारा-
त्प्रसीदतां नः स महाविभूतिः ॥४०॥ विप्रो मुखं ब्रह्म च यस्य गुह्यं राजन्य आसीद्भुजयोर्बलं च । ऊर्वोर्विडोजोऽङ्घ्रिरवेदशूद्रौ प्रसीदतां नः स महाविभूतिः॥ ४१ ॥ लोभोऽधरात्प्रीतिरुपर्यभूद्द्युतिर्नस्तः पशव्यः स्पर्शेन कामः। भ्रुवोर्यमः पक्ष्मभवस्तु कालः प्रसीदतां नः स महाविभूतिः॥४२॥ द्रव्यं वयः कर्मगुणान्विशेषं यद्योगमायाविहितान्वदन्ति । यद्दुर्विभाव्यं प्रबुधापबाधं प्रसीदतां नः स महाविभूतिः ॥ ४३ ॥

---

ஞும், ஸ்தனத்திலிருந்து தர்மமும், பிருஷ்டபாகத்திலிருந்து அதர்மமும், தலையிலிருந்து த்யுலோகமும், விளையாட்டிலிருந்து அப்ஸரஸ்ஸுகளும் உண்டாயினரோ மஹத்தான ஐஸ்வரியத்தையுடைய அவர் எங்கள் விஷயத்தில் அருள்புரியக் கடவர். (40) ப்ராம்ஹணனும் ரஹஸ்யமான வேதமும் எவருடைய முகமாகவும், க்ஷத்திரியன் புஜங்களிலுள்ள பலமாகவும், நைபுண்யமென்ற விருத்தியையுடைய வைஸ்யன் துடைகளாகவும், வேதத்தைவிட வேறான வ்ருத்தியையுடைய சூத்திரன் கால்களாகவும் ஆயினரோ மஹத்தான ஐஸ்வரியத்தையுடைய அவர் எங்கள் விஷயத்தில் அருள் புரியக்கடவர். (41) எவருடைய கீழுதட்டிலிருந்து லோபமும், மேலுதட்டிலிருந்து ப்ரீதியும், மூக்கிலிருந்து காந்தியும், ஸ்பர்சம் என்ற குணத்திலிருந்து பசுக்களுக்கு ஹிதமான காமமும், புருவங்களிலிருந்து யமனும், இமைமயிரிலிருந்து காலமும் உண்டாயினவோ மஹத்தான ஐஸ்வரியத்தையுடைய அவர் எங்கள் விஷயத்தில் அருள் புரியட்டும். (42) எக்காரணம்பற்றி திரவ்யம்முதலியயாவும் ஞானிகளினால் உண்மையானதன்று என நிஷேதிக்கப்படுகின்றனவாகவும் நிர்ணயிக்கமுடியாதனவாகவும் இருக்கின்றனவோ அக்காரணம்பற்றி த்ரவ்யத்தையும்=ப்ருதிவீ அப்பு தேஜஸ் வாயு ஆகாசம் ஆகிய பூதங்களையும், வயஸ்ஸையும்=காலத்தையும், கர்மத்தையும், குணங்களையும்=சப்தம் ஸ்பர்சம் முதலிய இருபத்து நான்கு குணங்களையும், விசேஷத்தையும்=பௌதிகமான ப்ரபஞ்சத்தையும், எவருடைய யோகமாயையினால் செய்யப்பட்டனவாகச் சொல்லுகின்றனரோ மஹத்தான ஐஸ்வரியத்தையுடைய அவர் எங்கள் விஷயத்தில் அருள் புரியக்கடவர். (43)

नमोऽस्तु तस्मा उपशान्तशक्तये स्वाराज्यलाभप्रतिपूरितात्मने । गुणेषु मायारचितेषु वृत्तिभिर्न सज्जमानाय नभस्वदूतये ॥ ४४ ॥ स त्वं नो दर्शयाऽत्मानमस्मत्करणगोचरम् । प्रपन्नानां दिदृक्षूणां सस्मितं ते मुखाम्बुजम् ॥ ४५ ॥ तैस्तैः स्वेच्छाधृतै रूपैः काले काले स्वयं विभो । कर्म दुर्विषहं यन्नो भगवांस्तत्करोति हि ॥ ४६ ॥ क्लेशभूर्यल्पसाराणि कर्माणि विफलानि वा । देहिनां विषयार्तानां न तथैवार्पितं त्वयि ॥ ४७ ॥ नावमः कर्मकल्पोऽपि विफलायेश्वरार्पितः ॥ कल्पते पुरुषस्यैष स ह्यात्मा दयितो हितः ॥ ४८ ॥ यथा हि स्कन्धशाखानां तरोर्मूलावसेचनम् । एव-

---

ஓய்ந்த சக்தியை யுடையவரும், ஸ்வாராஜ்யலாபத்தினால்= ஆத்மலாபத்தினால், ப்ரதிபூரிதமான=பூர்ணமான, ஆத்மாவை=ஸ்வரூபத்தை, உடையவரும், மாயையினால் செய்யப்பட்டவைகளான குணங்களில்=இந்திரியங்களில், உள்ள தர்சனம் முதலிய விருத்களுடன் ஸங்கத்தை யடையாதவரும், வாயுவுக்கொப்பான லீலையை யுடையவருமான அவருக்கு நமஸ்காரம். (44) அந்த நீர், புன்சிரிப்புடன் கூடின உம்முடைய முகாரவிந்தத்தைப் பார்க்க எண்ண முள்ளவர்களும் பரபன்னர்களுமான எங்களுக்கு உமது ரூபத்தை எங்களது இந்திரியங்களுக்குத் தெரியும்படி காட்டுவீராக. (45) ஹே விபோ! பகவானான நீர் உமது ஸங்கல்பமாத்திரத்தினால் எடுத்துக்கொள்ளப்பட்ட அந்த அந்த ரூபங்களினால், எங்களால் செய்யமுடியாத காரியம் யாதுண்டோ அதை அந்த அந்தக் காலத்திலும் ஸ்வயமாகவே செய்கின்றீரன்றோ. (46) விஷயங்களினால் பீடிக்கப்பட்டவர்களான ஜீவர்களுடைய கர்மங்கள் பயனற்றவைகளாகவும் கிலேசம் நிறைந்தனவாகவும் அற்பமான பலனுள்ளனவாகவுமாகின்றன. உம்மிடம் அர்ப்பணஞ்செய்யப்பட்ட கர்மமோ அவ்விதமாவதில்லை. (47) அற்பமும், கர்மம்போல் தோன்றும் போலிகர்மமுங்கூட எந்த ஈஶ்வரனிடம் அர்ப்பணஞ்செய்யப்பட்டால் பயனற்றதாக வாவதில்லையோ அந்த இந்த ஈஶ்வரன் ஜீவனுடைய ஆத்மாவும் ஆனதுபற்றியே தயிதரும் ஹிதருமாகிறார். (48) வேரில் ஜலத்தினால் நனைத்தலானது மரத்துக்கும் பெரிய கிளைகளுக்கும் சிறிய கிளைக்கும் பயன் தருவது எவ்விதமோ இவ்விதமே

माराधनं विष्णोः सर्वेषामात्मनश्च हि ॥ ४९ ॥ नमस्तुभ्यमनन्ताय दुर्वितर्क्यात्मकर्मणे । निर्गुणाय गुणेशाय सत्त्वस्थाय च सांप्रतम् ॥ ५० ॥

इति श्रीमद्भागवते महापुराणेऽष्टमस्कन्धेऽमृतमथनोपाख्याने पञ्चमोऽध्यायः ॥ ५ ॥

## अथ षष्ठोऽध्यायः ॥

श्रीशुक उवाच—एवं स्तुतः सुरगणैर्भगवान्हरिरीश्वरः । तेषामाविरभूद्राजन्सहस्रार्कोदयद्युतिः ॥ १ ॥ तेनैव महसा सर्वे देवाः प्रतिहते-

---

விஷ்ணுவின் ஆராதனமானது எல்லோருக்கும் தனக்கும் பயன் தருவதாகவாகிறது. (49) அனந்தரும், ஆலோசித்தறியவியலாத சொந்த கர்மங்களை யுடையவரும், உண்மையில் நிர்க்குணரும், குணங்களுக்கு நியந்தாவும் (ஸாத்விகர்களான தேவர்களை ரக்ஷிக்க வேண்டி) இதுபோழ்து ஸத்வகுணத்திலிருப்பவருமான உமக்கு நமஸ்காரம் என்றூர். (50) (எ-று)

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண அஷ்டமஸ்கந்தத்தில்
அமிருதமதனேபாக்கியானத்தில் ஐந்தாவது
அத்தியாயம் முற்றிற்று

## ஆறுவது அத்தியாயம்.

(அ-கை) षष्ठे पुनः स्तुतिर्विष्णावाविर्भूते सुरैः कृता ।
तन्मन्त्राच्चासुरैः साकममृतार्थे महोद्यमः ॥ १ ॥

(க-ரை) விஷ்ணுவானவர் ஆவிர்ப்பாவத்தை யடைந்ததும் திரும்பவும் தேவர்களாற் செய்யப்பட்ட ஸ்துதியும் பகவானுடைய ஆலோசனையை முன்னிட்டு அஸுரர்களுடன்கூட அமிருதத்தை யடைவதற்கு வேண்டி செய்யப்பட்ட மஹத்தான முயற்சியும் இந்த ஆறுவது அத்தியாயத்திலுபதேசிக்கப்படுகிறது. (1) (எ-று)

ஸ்ரீசுகர் சொல்லலுற்றூர்—ஹே ராஜன்! இவ்விதம் தேவக் கூட்டங்களால் ஸ்துதிக்கப்பட்ட ஹரியும் ஈஶ்வரனுமான பகவான் ஆயிரம் சூரியர்களுடைய உதயகாலத்திலுள்ளது போன்ற காந்தி

क्षणा:। नापश्यन्खं दिशः क्षोणिमात्मानं च कुतो विभुम् ॥ २ ॥ विरिञ्चो भगवान्दृष्ट्वा सह शर्वेण तां तनुम् । स्वच्छां मरकतश्यामां कञ्जगर्भारुणेक्षणाम् ॥ ३ ॥ तप्तहेमावदातेन लसत्कौशेयवाससा । प्रसन्नचारुसर्वाङ्गीं सुमुखीं सुन्दरभ्रुवम् ॥ ४ ॥ महामणिकिरीटेन केयूराभ्यां च भूषिताम् । कर्णाभरणनिर्भातकपोलश्रीमुखाम्बुजाम् ॥ ५ ॥ काञ्चीकलापवलयहारनूपुरशोभिताम् । कौस्तुभाभरणां लक्ष्मीं बिभ्रतीं वनमालिनीम् ॥ ६ ॥ सुदर्शनादिभिः स्वास्त्रैर्मूर्तिमद्भिरुपासिताम् । तुष्टाव देवप्रवरः सशर्वः पुरुषं परम् । सर्वामरगणैः साकं सर्वाङ्गैरवनिं गतैः ॥ ७ ॥

---

யை யுடையவராய் அவர்களுக்கெதிரில் தோன்றினர். (1) எல்லாத் தேவர்களும் அதே காந்தியினல் தடுக்கப்பட்ட கண்ணெளியை யுடையவர்களாய் ஆகாசத்தையும் திக்குகளையும் பூமியையும் தங்கள் சரீரத்தையுமே காணச் சக்தியற்றவர்களாக இருக்கும்பொழுது விபுவான ஆண்டவனை எங்கிருந்து காண்பர். (2) தெளிந்ததும், மரகதம்போல் கருநிறமுள்ளதும், தாமரஸபுஷ்பத்தின் நடுப்பிரதேசம் போலச் சிவந்த கண்களையுடையதும், உருக்கின தங்கம்போலச் சுத்தமானதும் ப்ரகாசிக்கின்றதுமான பீதாம்பரத்துடன் கூடினதும், தெளிந்தனவும் அழகியனவுமான எல்லா அங்கங்களையுமுடையதும், அழகிய முகத்தையுடையதும், ஸுந்தரங்களான புருவங்களையுடையதும், விலையுயர்ந்த மணிகள் பதித்த கிரீடத்தினுலும் தோள்வளைகளினுலும் அலங்கரிக்கப்பட்டதும், காதிலுள்ள குண்டலங்களினல்மிக ப்ரகாசிக்கின்ற கன்னங்களினலேற்பட்ட சோபையையுடைய முகாரவிந்தத்தையுடையதும், ஒட்டியாணம் என்ற ஆபரணம் காப்பு முக்தாஹாரம் பாதஸரம் இவற்றல் அலங்கரிக்கப்பட்டதும், கௌஸ்துபமென்ற மணியைக் கழுத்திலணிந்ததும், லக்ஷ்மியை மார்பிலணிந்ததும், வனமாலையை மார்பிலணிந்ததும், ஸுதர்சனத்தை ஆதியாகக்கொண்டனவும் சரீரத்துடன் கூடினவுமான தனது அஸ்திரங்களினல் உபாஸிக்கப்பட்டதுமான அந்தச் சரீரத்தைத் தேவஶ்ரேஷ்டரான ப்ரம்ஹதேவன் மஹாதேவனுடன்கூடக் கண்டு பூமியில் பட்ட எல்லா அங்கங்களுடன் கூடினவராக (ஸாஷ்டாங்கமாக) நமஸ்கரித்து மஹாதேவனு

ब्रह्मोवाच—अजातजन्मस्थितिसंयमायाऽगुणाय निर्वाणसुखार्णवाय। अणोरणिम्नेऽपरिगण्यधाम्ने महानुभावाय नमो नमस्ते ॥ ८ ॥ रूपं तवैतत्पुरुषर्षभेज्यं श्रेयोर्थिभिर्वैदिकतान्त्रिकेण। योगेन धातः सह नस्त्रिलोकान्पश्याम्यमुष्मिन्नु ह विश्वमूर्तौ ॥९॥ त्वय्यग्र आसीत्त्वयि मध्य आसीत्त्वय्यन्त आसीदिदमात्मतन्त्रे। त्वमादिरन्तो जगतोऽस्य मध्यं घटस्य मृत्स्नेव परः परस्मात् ॥ १० ॥ त्वं माययात्माश्रयया स्वयेदं निर्माय विश्वं तदनु प्रविष्टः। पश्यन्ति युक्ता मनसा मनीषिणो गुणव्यवायेऽप्य-

---

டனும் எல்லாத் தேவக்கூட்டங்களுடனும் கூட பரமபுருஷனை பகவானை ஸ்துதிக்கவாரம்பித்தார். (3–7)

ப்ரம்ஹதேவன் சொல்லலுற்றார்—எவ்வித குணஸம்பந்த முமற்றவராக இருப்பதுபற்றி ஸ்ருஷ்டி ஸ்திதி ப்ரளயம் இவை யற்றவரும், மோக்ஷ ஸுகத்துக்கு ஸமுத்திரமாகவுள்ளவரும், ஆயினும் அணுவைக் காட்டிலுங்கூட அணுவும், உண்மையில் இத் தகையது என்று அளவிடமுடியாத மூர்த்தியை யுடையவரும், ஆலோசித்தறிய வியலாத மஹிமையை யுடையவராக இருப்பவரு மான உமக்கு அடிக்கடி நமஸ்காரம். (8) ஹே புருஷர்ஷப! ஹே தாத:! இந்த உம்முடைய ரூபமானது வைதிகமாயும் தாந்த் ரிகமாயு முள்ள உபாய மூலம் ஶ்ரேயஸ்ஸில் விருப்பமுள்ளவர் களினால் எப்பொழுதும் பூஜிக்கத்தக்கதாகவே இருக்கிறது. (ஆக வே இது இப்பொழுது புதிதாக ஏற்பட்டதன்று.) விஸ்வமூர்த்தி யான உம்மிடத்தில் எங்களையும் மூன்று உலகங்களையும் ஒரேஸ மயத்தில் பார்க்கிறேன். (ஆகவே உமது இந்த ரூபமானது பரிச் சின்னமாக வாகமாட்டாது.) (9) இந்த ப்ரபஞ்சமானது ஸ்வ தந்திரரான உம்மிடத்திலேயே ஆதியிலும்=ஸ்ருஷ்டிக்கு முந்தி யும், உம்மிடத்திலேயே மத்தியிலும், உம்மிடத்திலேயே ப்ரளயத்தி லும் இருந்தது. குடம் என்ற காரியத்திரவியத்துக்கு மண் என்ற காரணத்ரவியமானது போல ஸர்வத்துக்கும் காரணமான ப்ரதான த்தைக் காட்டிலும் பரரான நீரே இந்த ப்ரபஞ்சத்துக்கு ஆதியும் அந்தமும் நடுவுமாகிறீர். (10) நீர், ஸ்வரூபத்தை யாஶ்ரயமாக வுடையதும், ஸ்வாதீனையுமான மாயையினால் இந்த ப்ரபஞ்சத்தை

गुणं विपश्चितः ॥ ११ ॥ यथाग्निमेधस्यमृतं च गोषु भुव्यन्नमम्बूद्यमने च वृत्तिम् । योगैर्मनुष्या अधियन्ति हि त्वां गुणेषु बुद्ध्या कवयो वदन्ति ॥ १२ ॥ तं त्वां वयं नाथ समुज्जिहानं सरोजनाभातिचिरेप्सितार्थम् । दृष्ट्वा गता निर्वृतिमद्य सर्वे गजा दवार्ता इव गाङ्गमम्भः ॥ १३ ॥ स त्वं विधत्स्वाखिललोकपाला वयं यदर्थास्तव पादमूलम् । समागतास्ते बहिरन्तरात्मन्किं वान्यविज्ञाप्यमशेषसाक्षिणः ॥ १४ ॥ अहं गिरित्रश्च सुरा-

---

ஸிருஷ்டித்து பிறகு அதில் ப்ரவேசத்தை யடைந்திருக்கின்றீர். ஆகவே குணங்களுக்குப் பரிணாமமேற்பட்டபோதிலுங்கூடக் குண ஸம்பந்தமற்றவரான உம்மை விபஸ்சித்துக்களான=சாஸ்திரக்ஞானமுள்ளவர்களான, மனீஷிகள்=விவேகிகள் (சுத்தமான) மனத்துடன் கூடினவர்களாய்க் கொண்டு ஸாக்ஷாத்கரிக்கின்றனர். (11) கடைதலினால் கட்டையில் நெருப்பையும், கரத்தல் முதலியவற்றினால் பசுக்களிடத்தில் நெய்யையும், உழவு முதலியவற்றினால் பூமியில் நெல் முதலிய உணவு பொருள்களையும், தோண்டுதலினால் ஜலத்தையும், வியாபாரம் முதலியவற்றினால் முயற்சி செய்வதால் பிழைப்பையும் மனிதர்கள் முயற்சியினாலெவ்விதமடைகின்றனரோ அவ்விதமே கவிகள் உம்மை புத்தியினால் குணங்களில் அறிந்து பிறர்க்கு உபதேசமும் செய்கின்றனர். (12) ஹே ஸரோஜநாப! ஹே நாத! வெகு காலமாக விரும்பப்பட்ட புருஷார்த்தரூபமானவரும், யோகமொன்றினால் மட்டுமே அடையக்கூடியவரும், நன்கு வெளியில் யாவருமறியுமாறு தோற்றத்தை யடைகின்றவருமான உம்மை நாங்கள் யாவரும் கண்கூடாகக் கண்டு காட்டுத்தீயினால் பீடிக்கப்பட்டு கங்காஜலத்தை யடைந்த யானைகள் போலச் சுகத்தை யடைந்து விட்டோம். (13) ஹே அந்தராத்மன்! லோகபாலர்களான நாங்கள் எல்லோரும் எந்தக் காரியத்துக்கு வேண்டி உமது பாதமூலத்தை யடைந்திருக்கின்றோமோ அதை நீர் செய்துதருவீராக. எல்லாவற்றுக்கும் ஸாக்ஷியான உமக்கு வெளிப்படையாகப் பிறரால் தெரிவித்துக் கொள்ளவேண்டுவதுண்டோ? (14) ஹே ஈச! நானும், மஹாதேவனும், தேவாதிகளும், தக்ஷன் முதலியோர் எவர்களோ அவர்

दयो ये दक्षादयोऽग्नेरिव केतवस्ते। किंवा विदामेश पृथग्विभाता विधत्स्व शं नो द्विजदेवमन्त्रम् ॥ १५ ॥

श्रीशुक उवाच—एवं विरिञ्चादिभिरीडितस्तद्विज्ञाय तेषां हृदयं तथैव। जगाद जीमूतगभीरया गिरा बद्धाञ्जलीन्संवृतसर्वकारकान् ॥१६॥ एक एवेश्वरस्तस्मिन्सुरकार्ये सुरेश्वरः। विहर्तुकामस्तानाह समुद्रोन्मथनादिभिः ॥ १७ ॥ श्रीभगवानुवाच—हंत ब्रह्मन्नहो शम्भो हे देवा मम भाषितम्। शृणुतावहिताः सर्वे श्रेयो वः स्याद्यथा सुराः॥१८॥ यात दानवदैतेयै-

களும் அக்னியினின்றும் பிரிந்த பொறிகள்போல உம்மிடமிருந்து பிரிந்து வேறாகக் காணப்பட்டவர்களாக இருந்துகொண்டு தனக்குரிய க்ஷேமம் இன்னதென்பதை எவ்விதமறியமுடியும். ஆனதுபற்றி நீரே த்விஜர்களுக்கும் தேவர்களுக்குமுரிய மந்திரத்தை= இதைச் செய்யுங்கள் என்றவுபாயத்தை, உபதேசிப்பீராக என்றார்.

ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—இவ்விதம் ப்ரம்ஹாதியர்களால் ஸ்துதிக்கப்பட்ட பகவான் "உபாயத்தை யுபதேசிக்க வேண்டும்" என்ற அவர்களுடைய அபிப்பிராயத்தை யுள்ளபடியே அறிந்துகொண்டு இருகைகளையும் கூப்பினவர்களும் எல்லா இந்திரியங்களையும் அடக்கினவர்களுமான அவர்களைப் பார்த்து ஸுரேஸ்வரனான பகவான் ஒருவராகவே அந்தத் தேவகாரியத்தை ஸாதிக்கும் விஷயத்தில் ஸமர்த்தராக இருந்த போதிலுங்கூட ஸமுத்திரத்தைக் கடைதல் முதலிய காரியங்கள் மூலம் தேவாஸுரர்களுடன் விளையாட வெண்ணங்கொண்டவராய் இடிபோல் கம்பீரமான வாக்கினால் சொல்லலுற்றார். (16-17) ஸ்ரீபகவான் சொல்லலுற்றார்—ஹே ப்ரம்ஹன்! ஹே மஹாதேவ! தேவர்காள்! மற்றுமுள்ள ஹே கந்தர்வர்காள்! நீங்கள் யாவரும் உங்களுக்கு க்ஷேமமானது எவ்விதமுண்டாகுமோ அவ்விதம் ஸாவதானர்களாக என்னுடைய வார்த்தையை உள்ளபடி கேளுங்கள். (18) உங்களுடைய ஆத்மாவுக்கு ஸ்வயமாகவே விருத்தியானது எவ்வளவுக்குள் உண்டாகுமோ அதுவரை காலத்தினால் அனுக்கிரஹிக்கப்பட்ட அந்தத் தானவதைதேயர்களுடன் ஸந்தியானது=ஸ்னேஹமானது, செய்து கொள்ளப்படட்டும். (அதற்கு வேண்டி நீங்களே வலு

स्तावत्सन्धिर्विधीयताम् । कालेनानुगृहीतैस्तैर्यावद्वो भव आत्मनः ॥१९॥ अरयोऽपि हि सन्धेयाः सति कार्यार्थगौरवे । अहिमूषकवद्देवा ह्यर्थस्य पदवीं गतैः ॥ २० ॥ अमृतोत्पादने यत्नः क्रियतामविलम्बितम् । यस्य पीतस्य वै जन्तुर्मृत्युग्रस्तोऽमरो भवेत् ॥ २१ ॥ क्षिप्त्वा क्षीरोदधौ सर्वा वीरुत्तृणलतौषधीः । मन्थानं मन्दरं कृत्वा नेत्रं कृत्वा तु वासुकिम् ॥२२॥ सहायेन मया देवा निर्मन्थध्वमतन्द्रिताः । क्लेशभाजो भविष्यन्ति दैत्या यूयं फलग्रहाः ॥ २३ ॥ यूयं तदनुमोदध्वं यदिच्छन्त्यसुराः सुराः । न संरम्भेण सिध्यन्ति सर्वेऽर्थाः सान्त्वया यथा ॥ २४ ॥ न भेतव्यं कालकूटाद्विषाज्जलधिसंभवात् । लोभः कार्यो न वो जातु रोषः कामस्तु वस्तुषु ॥

---

வில்) செல்லுங்கள். (19) அடைய வேண்டிய பயன் பெரிதாக இருக்கும்பொழுது அதற்கு வேண்டி சத்துருக்களும் ஸிநேஹிக்கத் தக்கவர்களாகவே யன்றோ ஆகின்றனர். ஆகவே ஹே தேவர்காள்! ப்ரயோஜனத்தின் ஸித்தியானது ஏற்பட்டபிறகு பாம்பும் எலியும் போல கொல்லுகின்றவர்களாகவும் கொல்லப்படுகின்றவர்களாகவுமாகவேண்டும். (20) எதைப் பானஞ்செய்த மாத்திரத்தினால் மிருத்யுவினால் விழுங்கப்பட்ட ப்ராணி கூடப் பின்னர் மரணமற்றதாகவாகிவிடுமோ அந்த அமிருதத்தை உண்டாக்கும் விஷயத்தில் தாமதமின்றி முயற்சியானது செய்யப்படட்டும். (21) செடி புல் கொடி மற்றுமுள்ள ஓஷதி ஆகிய இவை யாவையும் பார்க்கடலில் போட்டு மந்தரமலையை மத்தாகவும் வாஸுகியைக் கயிறாகவும் செய்துகொண்டு உதவி செய்யும் என்னுடன்கூடத் தேவர்களான நீங்கள் சோம்பலின்றிக் கடையுங்கள். அஸுரர்கள் கஷ்டத்தை யடைந்தவர்களாக ஆகப்போகின்றனர். நீங்களே பலனான அமிருதத்தைப் பெறப்போகின்றீர்கள். (22–23) ஹே தேவர்காள்! அஸுரர்கள் எதை விரும்புகின்றனரோ அதை நீங்கள் ஸம்மதியுங்கள். ஸாமமார்க்கத்தினால் எல்லாக் காரியங்களும் எவ்விதம் ஸித்திக்கின்றனவோ அவ்விதம் பரபரப்பினால் ஸித்திக்கமாட்டாது. (24) ஸமுத்திரத்திலிருந்துண்டான காலகூடவிஷத்திலிருந்து பயத்தை யடையவேண்டாம். ஸமுத்திரத்திலிருந்துண்டாகும் வஸ்துக்கள் விஷயத்தில் லோபமோ கோபமோ காமமோ உங்களால் ஒருபொழுதும் செய்யத்தக்கதன்று என்றார். (25)

श्रीशुक उवाच—इति देवान्समादिश्य भगवान्पुरुषोत्तमः। तेषाम-
न्तर्दधे राजन्स्वच्छन्दगतिरीश्वरः ॥ २६ ॥ अथ तस्मै भगवते नमस्कृत्य
पितामहः। भवश्च जग्मतुः स्वं स्वं धामोपेयुर्बलिं सुराः ॥ २७ ॥ दृष्ट्वा
रीनप्यसंयत्ताञ्जातक्षोभान्स्वनायकान्। न्यषेधद्दैत्यराट् श्लोक्यः सन्धिवि-
ग्रहकालवित् ॥ २८ ॥ ते वैरोचनिमासीनं गुप्तं चासुरयूथपैः। श्रिया पर-
मया जुष्टं जिताशेषमुपागमन् ॥ २९ ॥ महेन्द्रः श्लक्ष्णया वाचा सान्त्वयि-
त्वा महामतिः। अभ्यभाषत तत्सर्वं शिक्षितं पुरुषोत्तमात् ॥ ३० ॥ तद-
रोचत दैत्यस्य तत्रान्ये येऽसुराधिपाः। शम्बरोऽरिष्टनेमिश्च ये च त्रिपुर-
वासिनः ॥ ३१ ॥ ततो देवासुराः कृत्वा संविदं कृतसौहृदाः। उद्यमं

---

ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—ஹே ராஜன்! ஸ்வச்சந்தமான கதியை யுடையவரும் ஈஸ்வரனும் புருஷோத்தமனுமான பகவான் இவ்விதம் தேவர்களுக்குச் சொல்லிவிட்டு அவர்கள் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே மறைந்தார். (26) பிறகு ப்ரம்ஹதேவனும், பரமசிவனும் அந்தப் பகவானுக்கு நமஸ்கரித்து விட்டுத் தத் தமது ஸ்தானத்தை யடைந்தனர். தேவர்கள் பலிசக்கிரவர்த்தியினிடம் சென்றனர். (27) யுத்தமுயற்சி செய்யாதவர்களாயினுங் கூட சத்துருக்களான தேவர்களைப் பார்த்து கோபத்தையடைந்த தனது வேலைக்காரர்களை, ஸந்தி சண்டை இவற்றுக்குரிய காலத்தை யறிந்தவனும் கீர்த்திவாய்ந்தவனும் அஸுரராஜனுமான பலி சக்கிரவர்த்தி தடுத்தார். (28) அந்தத் தேவர்கள் அஸுரயூதபர்களினால் ரக்ஷிக்கப்பட்டு ஸிம்ஹாஸனத்திலிருப்பவனும் மேலான ஐஸ்வரியத்துடன் கூடினவனும் மூவ்வுலகையும் ஜயித்தவனும் விரோசனகுமாரனுமான பலியையடைந்தனர். (29) மஹாபுத்திமானான இந்திரன் மெதுவான வார்த்தையினால் ஸமாதானப்படுத்தி புருஷோத்தமனிடமிருந்து சிக்ஷிதமான அவை யாவையும் சொன்னான் (30) அந்த வார்த்தையானது அஸுரராஜனான பலிக்கும், மற்றுமுள்ள அஸுராதிபர்கள் எவர்களோ அவர்களுக்கும், சம்பரன் அரிஷ்டநேமி இவர்களுக்கும், திரிபுரவாஸிகள் எவர்களோ அவர்களுக்கும் பிடித்தமாக இருந்தது (31) பிறகு ஹே பரந்தப! தேவர்களும் அஸுரர்களும் ஒரு ஏற்பாட்டைச்

परमं चक्रुरमृतार्थे परंतप ॥ ३२ ॥ ततस्ते मन्दरगिरिमोजसोत्पाट्य दुर्मदाः । नदन्त उदधिं निन्युः शक्ताः परिघबाहवः ॥ ३३ ॥ दूरभारोद्वहश्रान्ताः शक्रवैरोचनादयः । अपारयन्तस्तं वोढुं विवशा विजहुः पथि ॥३४॥ निपतन्स गिरिस्तत्र बहूनमरदानवान् । चूर्णयामास महता भारेण कनकाचलः ॥ ३५ ॥ तांस्तथा भग्नमनसो भग्नबाहूरुकन्धरान् । विज्ञाय भगवांस्तत्र बभूव गरुडध्वजः ॥ ३६ ॥ गिरिपातविनिष्पिष्टान्विलोक्यामरदानवान् । ईक्षया जीवयामास निर्जरान्निर्व्रणान्यथा ॥ ३७ ॥ गिरिं चारोप्य गरुडे हस्तेनैकेन लीलया । आरुह्य प्रययावब्धिं सुरासुरगणैर्वृतः

---

செய்துகொண்டு ஸ்னேஹத்தை யடைந்தவர்களாய் அமிருதத்துக்கு வேண்டி மேலான முயற்சியைச் செய்தனர். (32) பிறகு கெட்ட மதங்கொண்டவர்களும், இரும்புலக்கைக்கொப்பான கைகளை யுடையவர்களுமான அவர்கள் மந்தரமலையைத் தங்களது சக்தியினால் பிடுங்கி ஸந்தோஷித்தவர்களாய் ஸமுத்திரத்தைக் குறித்துக் கொண்டுவந்தனர். (33) வெகுதூரம் சுமையைச் சுமந்தமைபற்றிக் களைத்தவர்களான இந்திரன் பலிமுதலிய அவர்கள் அம்மலையைச் சுமக்கமுடியாதவர்களாகவாகிப் பரவசப்பட்டவர்களாய் நடுவழியில் அம்மலையைக் கையிலிருந்து நழுவவிட்டனர். (34) கீழில் விழுகின்ற பொன்மலையான அந்தப் பர்வதமானது அதிகமான சுமையினால் அப்பொழுது அனேகம் தேவர்களையும் அஸுரர்களையும் பொடி செய்துவிட்டது. (35) அவ்விதம் அவர்கள் ஒடிந்த மனதுள்ளவர்களாகவும், முறிந்த கை துடை கழுத்து இவற்றை யுடையவர்களாகவும் ஆனதையறிந்து கருடக் கொடியோனான பகவான் அங்கு வந்து தோன்றினர். (36) தேவர்களும் அஸுரர்களும் மலைவிழுந்ததனால் பொடியாக்கப்பட்டதைக் கண்ணுற்று தனது கடாக்ஷத்தினால் முன்போல ஜரையற்றவர்களாகவும் புண்ணற்றவர்களாகவும் அவர்களைச் செய்தார். (37) மலையையும் ஒரே கையினால் விளையாட்டாக எடுத்து கருடன்மீது வைத்துக்கொண்டு தானுமேறிக்கொண்டு தேவாசுரகணங்களினால் சூழப்பட்டவராய் ஸமுத்திரத்தை யடைந்தார். (38) பக்ஷிராஜனான அந்தக் கரு

॥ ३८ ॥ अवरोप्य गिरिं स्कन्धात्सुपर्णः पततां वरः । ययौ जलान्त उ-
त्सृज्य हरिणा स विसर्जितः ॥ ३९ ॥

इति श्रीमद्भागवते महापुराणेऽष्टमस्कन्धे अमृतमथनाय मन्दराचलानयन
वर्णनं नाम षष्ठोऽध्यायः ॥ ६ ॥

—••❀••—

## अथ सप्तमोऽध्यायः ॥

श्रीशुक उवाच—ते नागराजमामन्त्र्य फलभागेन वासुकिम् । परि-
वीय गिरौ तस्मिन्नेत्रमब्धिं मुदान्विताः ॥ १ ॥ आरेभिरे सुसंयत्ता अमृ-

---

டன் மலையைத் தோளிலிருந்து இரக்கி ஜலத்தினருகில் விட்டுவிட்டு ஹரியினால் விடையளிக்கப்பட்டவனாய் (வைகுண்டம்) போய்ச் சேர்ந்தான். (39) (எ—று)

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண அஷ்டமஸ்கந்தத்தில்
அமிருதமதனத்துக்காக மந்தராசல ஆனயனவர்ணனமென்ற
ஆறுவது அத்தியாயம் முற்றிற்று.



## ஏழாவது அத்தியாயம்.

(அ—கை) सप्तमे मथनोद्भूतविषभीत्याऽखिलैर्जनैः ।
स्तुतः सन् कृपया रुद्रः पपौ विषमितीर्यते ॥ १॥

(க—ரை) கடைதல் மூலம் வெளிப்பட்ட விஷத்தினின்று முண்டான பயத்தினால் எல்லா ஜனங்களினாலும் ஸ்துதிக்கப்பட்டவராய்க் கொண்டு ஸ்ரீருத்ரன் விஷத்தைப் பானஞ்செய்தாரென இந்த ஏழாவது அத்தியாயத்திலுபதேசிக்கப்படுகிறது. (1) (எ—று)

ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—அவர்கள் "உனக்கும் அமிருதத்தில் பங்கு தருகிறோம்" எனச் சொல்லி நாகராஜனை வாஸுகியை ஸம்மதிக்கச் செய்து அந்த மலையில் அவனைக் கயிறாகச் சுற்றி ஸந்தோஷத்துடன் கூடினவர்களாய் தக்க முயர்ச்சியுடன் அமிருதத்துக்கு வேண்டி ஸமுத்திரத்தைக் கடையவாரம்பித்தனர்.

तार्थं कुरूद्वह । हरिः पुरस्ताज्जगृहे पूर्वं देवास्ततोऽभवन् ॥ २ ॥ तन्नैच्छन्दैत्यपतयो महापुरुषचेष्टितम् । न गृह्णीमो वयं पुच्छमहेरङ्गममङ्गलम् ॥ ३ ॥ स्वाध्यायश्रुतसंपन्नाः प्रख्याता जन्मकर्मभिः । इति तूष्णीं स्थितान्दैत्यान्विलोक्य पुरुषोत्तमः । स्मयमानो विसृज्याग्रं पुच्छं जग्राह सामरः ॥ ४ ॥ कृतस्थानविभागास्त एवं कश्यपनन्दनाः । ममन्थुः परमायत्ता अमृतार्थं पयोनिधिम् ॥ ५ ॥ मथ्यमानेऽर्णवे सोऽद्रिरनाधारो ह्यपोऽविशत् । ध्रियमाणोऽपि बलिभिर्गौरवात्पाण्डुनन्दन ॥ ६ ॥ ते सुनिर्विण्णमनसः परिम्लानमुखश्रियः । आसन्स्वपौरुषे नष्टे दैवेनातिबलीयसा ॥७॥ विलोक्य विघ्नेशविधिं तदेश्वरो दुरन्तवीर्योऽवितथाभिसन्धिः । कृत्वा

---

ஹே குரூத்வஹ ! ஹரியானவர் முதலில் வாசுகியின் முகத்தைப் பிடித்தார். பிறகு தேவர்களும் முகத்தையே பிடிக்கத் தொடங்கினர். (1–2) அஸுரபதிகள் மஹாபுருஷனை பகவானுடைய அந்த நடத்தையைப் பொருதவர்களாய், வேதசாஸ்திர க்ஞானத்துடன்கூடினவர்களும், பிறவி கர்மம் இவற்றால் ப்ரஸித்தர்களுமான நாங்கள் அமங்களமான பாம்பின் வாலைப் பிடிக்கமாட்டோம் எனச் சொல்லி அஸுரர்கள் மௌனமாக இருப்பதைப் புருஷோத்தமன் கண்டு சிரித்துக் கொண்டு தலையை விட்டுத் தேவர்களுடன் கூட வாலைப் பிடித்துக் கொண்டார். (3–4) இவ்விதம் தாரண விஷயத்தில் ஸ்தான விபாகத்தையுடையவர்களான அந்தக் கஶ்யப குமாரர்கள் தக்க முயற்சியுடன் கூடினவர்களாய் அமிருதத்துக்கு வேண்டி ஸமுத்திரத்தைக் கடைந்தனர். (5) ஹே பாண்டு நந்தன ! ஸமுத்திரமானது கடையப்படும்பொழுது, பலிஷ்டர்களான தேவாஸுரர்களினால் பிடிக்கப்பட்டிருந்தபோதிலுங்கூட ஆதாரமற்ற அந்த மலையானது அதிகம் கனமுள்ளதாக இருத்தல் காரணமாய் ஜலத்தில் முழுகிவிட்டது. (6) அதிகம் வலுவுள்ள தைவம் காரணமாய் தங்களுடைய பராக்கிரமமானது நாசமடைந்த பொழுது அவர்கள் மிக்க வைராக்கியத்தை யடைந்த மனமுள்ளவர்களாகவும் வாடின முகசோபையை யுடையவர்களாகவுமாகினர். (7) அப்பொழுது அழிவற்ற பராக்கிரமத்தை யுடையவரும், வீண்போகாத ஸங்கல்பத்தை யுடையவருமான ஈஶ்வரன் விக்னேசனுடைய

वपुः काच्छपमद्भुतं महत्प्रविश्य तोयं गिरिमुज्जहार ॥ ८ ॥ तमुत्थितं वीक्ष्य कुलाचलं पुनः समुत्थिता निर्मथितुं सुरासुराः । दधार पृष्ठेन स लक्षयोजनप्रस्तारिणा द्वीप इवापरो महान् ॥ ९ ॥ सुरासुरेन्द्रैर्भुजवीर्यवेपितं परिभ्रमन्तं गिरिमङ्ग पृष्ठतः । बिभ्रत्तदावर्तनमादिकच्छपो मेनेऽङ्गकण्डूयनमप्रमेयः ॥ १० ॥ तथाऽसुरानाविशदासुरेण रूपेण तेषां बलवीर्यमीरयन् । उद्दीपयन्देवगणांश्च विष्णुर्दैवेन नागेन्द्रमबोधरूपः ॥ ११ ॥

उपर्यगेन्द्रं गिरिराडिवान्य आक्रम्य हस्तेन सहस्रबाहुः । तस्थौ दिवि ब्रह्मभवेन्द्रमुख्यैरभिष्टुवद्भिः सुमनोऽभिवृष्टः ॥ १२ ॥ उपर्यधश्चात्मनि

---

வேலையை (அதாவது:—இடையூறை) கண்ணுற்று அத்புதமும் பெரிதுமான ஆமையின் சரீரத்தை எடுத்துக்கொண்டு ஜலத்தில் நுழைந்து மலையை உயரத்தூக்கினர். (8) அந்தக் குலாசலமானது மேல்வந்ததைக் கண்டு தேவர்களும் அஸுரர்களும் திரும்பவும் கடைவற்கு வேண்டி எழுந்தனர். பகவான் லக்ஷம் யோஜனம் விஸ்தாரமுள்ள முதுகினுல் அந்த மலையைச் சுமந்தார். அது பெரிய தீவு போலவிருந்தது. (9) ஹே அங்க! தேவாஸுரஸ்ரேஷ்டர்களினுல் தமது புஜவீர்யத்தினுலசைக்கப்பட்டதும் சுற்றிலும் சுழலுகின்றதுமான மந்தரமலையை முதுகில் சுமக்கின்ற அப்ரமேயரான ஆதிகச்சபர் அம்மலையின் சுற்றலை அங்கத்துக்குச் சொரிந்துகொடுத்தலாக எண்ணினர். (10) அவ்விதமே அவர்களுக்குப் பலம் வீரியம் இரண்டையும் விருத்திசெய்து உத்ஸாஹப்படுத்தவேண்டி விஷ்ணுவானவர் அசுரர்களிடம் ஆசுரமான ரூபத்துடனும், தேவர்களிடம் தைவமான ரூபத்துடனும், வாசுகியினிடம் அறியாமை என்ற ரூபத்தையுடையவராய்க்கொண்டும் ப்ரவேசித்தார். (11)

ஆயிரக்கணக்கான கைகளையுடைய பகவான் ஆகாசத்திலிருந்து ஸ்துதிக்கின்றவர்களான ப்ரம்ஹா மஹாதேவன் இந்திரன் முதலியவர்களினுல் புஷ்பங்களினுல் வர்ஷிக்கப்பட்டவராய்க்கொண்டு வேறு சிறந்த மலையானது போல மஹேந்திரமலையின் மேல் நின்று ஒரு கையினுல் அழுத்திக்கொண்டு இருந்தார். (12) மலையின் மேல் ஸஹஸ்ரபாஹு ரூபத்தினுலும் கீழில் ஆமை

गोत्रनेत्रयोः परेण ते प्राविशता समेधिताः। ममन्थुरब्धिं तरसा मदोत्कटा महाद्रिणा क्षोभितनक्रचक्रम् ॥ १३ ॥ अहीन्द्रसाहस्रकठोरदृङ्मुखश्वासाग्निधूमाहतवर्चसोऽसुराः। पौलोमकालेयबलील्वलादयो दवाग्निदग्धाः सरला इवाभवन् ॥ १४ ॥ देवांश्च तच्छ्वासशिखाहतप्रभान्धूम्राम्बरस्रग्वरकञ्चुकाननान्। समभ्यवर्षन्भगवद्वशा घना ववुः समुद्रोर्म्युपगूढवायवः ॥ १५ ॥ मथ्यमानात्तथा सिन्धोर्देवासुरवरूथपैः। यदा सुधा न जायेत निर्ममन्थाजितः स्वयम् ॥ १६ ॥ मेघश्यामः कनकपरिधिः

---

யின் ரூபத்திலும் தேவர்களிடத்தில் அவரவர்களது ரூபத்திலும், மலையினிடத்தில் தார்ட்யரூபத்திலும் வாசுகியினிடத்தில் நிலைத்த அக்ஞானரூபத்திலும் ப்ரவேசித்த பரனான பகவானால் நன்கு விருத்தி செய்யப்பட்டவர்களான அவர்கள் அதிகம் மதம் நிறைந்தவர்களாய்க் கொண்டு பெரிய மலையினால் கலங்கும்படி செய்யப்பட்ட முதலையின் ஸமூஹத்தை யுடையதான ஸமுத்திரத்தை வேகமாகக் கடைந்தனர். (13) பௌலோமன் காலேயன் பலி இல்வலன் இவர்களை ஆதியாகக்கொண்ட அஸுரர்கள், ஆயிரக்கணக்காகவும் கடோரங்களாகவுமான வாசுகியினுடைய கண்கள் முகங்கள் மூச்சுக்கள் இவற்றிலிருந்து வெளிவந்த நெருப்பு புகை இவற்றினால் கெடுக்கப்பட்ட காந்தியையுடையவர்களாகவாகி காட்டுத்தீயினால் பொசுக்கப்பட்ட ஸரளமென்ற மரங்கள் போலவாயினர். (14) அந்த வாசுகியினுடைய ப்ஶ்வாஸசிகைகளினால் கெடுக்கப்பட்ட காந்தியை யுடையவர்களும், புகையடைந்த வஸ்திரம் மாலை சிறந்த சட்டை முகம் இவற்றை யுடையவர்களுமான தேவர்கள் மீது ஸமுத்திரத்தின் அலைகளினால் ஆலிங்கனஞ் செய்து கொள்ளப்பட்ட காற்றுகள் வீசின. பகவத் அதீனங்களான மேகங்களும் நன்கு ஜலத்தை வர்ஷித்தன. (15) தேவாஸுர வீரர்களினால் அவ்விதம் கடையப்படுகின்ற ஸமுத்திரத்திலிருந்து எப்பொழுது அமிருதமானது உண்டாகவில்லையோ அப்பொழுது பகவான் தானே கடையவாரம்பித்தார். (16) மேகம் போலக் கருத்தவரும், பொன்னிறமுள்ள வஸ்திரமணிந்தவரும், இருகாதுகளிலும் ப்ரகாசிக்கின்ற குண்டலரூப

कर्णविद्योतविद्युन्मूर्ध्नि भ्राजद्विलुलितकचः स्रग्धरो रक्तनेत्रः। जैत्रैर्दोर्भिर्जगदभयदैर्दन्दशूकं गृहीत्वा मथ्नन्मथ्ना प्रतिगिरिरिवाशोभताथोद्धृताद्रिः॥

निर्मथ्यमानादुदधेरभूद्विषं महोल्बणं हालहलाह्वमग्रतः। संभ्रान्तमीनोन्मकराहिकच्छपात्तिमिद्विपग्राहतिमिङ्गिलाकुलात्॥१८॥ तदुग्रवेगं दिशिदिश्युपर्यधो विसर्पदुत्सर्पदसह्यमप्रति। भीताः प्रजा दुद्रुवुरङ्ग सेश्वरा अरक्ष्यमाणाः शरणं सदाशिवम्॥१९॥ विलोक्य तं देववरं त्रिलोक्या भवाय

மான மின்னலை யுடையவரும், தலையில் விளங்குகின்றனவும் அசைகின்றனவுமான மயிர் முடிச்சை யுடையவரும், மாலையைத் தரித்தவரும், சிவந்த நேத்திங்களை யுடையவரும், ஜகத்துக்கு அபயத்தைத் தருகின்றனவும் ஜயசீலங்களுமான கைளினால் பாம்பைப் பிடித்து மத்தினால் கடைகின்றவரும், ஆமையுருவத்தினால் மலையைச் சுமக்கின்றவருமான ஹரியானவர் வேறு மலையானது போல அப்பொழுது ப்ரகாசித்தார். (17)

கடையப்படுகின்றதும், நன்கு மயங்கின மீன்களையும் உயரக்கிளம்பின மகரம் பாம்பு ஆமை இவற்றையுமுடையதும், *திமி, நீர்யானை, முதலை, திமிங்கிலம் இவற்றால் கலங்கினதுமான ஸமுத்திரத்திலிருந்து மிகக் கொடூரமானதும், ஹாலாஹலம் என்ற பெயருள்ளதுமான விஷமானது முதலிலுண்டாயிற்று. (18) ஹே அங்க! உக்கிரமான வேகத்தை யுடையதும், ஆனதுபற்றியே எவராலும் பதில் செய்யவியலாததும், எல்லாத் திக்குகளிலும் பரவுகின்றதும், மேலும் கீழுமாக வியாபிக்கின்றதும், எவராலும் பொருக்க வியலாததுமான அந்த விஷத்தைக் கண்டு பயந்தவர்களும், தத்தமது ஈஸ்வரனுடன் கூடினவர்களுமான தேவாதி ப்ரஜைகள் எவராலும் ரக்ஷிக்கப்படாதவர்களாய் ஸதாசிவனைச் சரணமாக அடைந்தனர். (19) மூவ்வுலகங்களுடையவும் உத்பத்திக்குவேண்டித் தேவியாருடன் கூடக் கைலாஸத்திலிருப்பவரும், ஆயினும் முனிகளுக்குப் பிடித்தமானவரும், அவர்களுக்கே மோக்ஷம் ஸித்திக்க வேண்டித் தவத்தைச் செய்கின்றவரும், தேவதேவருமான

* இது ஒருவகை மீன்.

देव्याभिमतं मुनीनाम् । आसीनमद्रावपवर्गहेतोस्तपोजुषाणं स्तुतिभिः प्रणेमुः॥२०॥ प्रजापतय ऊचुः—देव देव महादेव भूतात्मन्भूतभावन। त्राहि नः शरणापन्नांस्त्रैलोक्यदहनाद्विषात् ॥ २१ ॥ त्वमेकः सर्वजगत ईश्वरो बन्धमोक्षयोः । तं त्वामर्चन्ति कुशलाः प्रपन्नार्तिहरं गुरुम् ॥ २२ ॥ गुणमय्या स्वशक्त्यास्य सर्गस्थित्यप्ययान्विभो । धत्से यदा स्वदृग्भूमन्ब्रह्मविष्णुशिवाभिधाम् ॥ २३ ॥ त्वं ब्रह्म परमं गुह्यं सदसद्भावभावनः । नानाशक्तिभिराभातस्त्वमात्मा जगदीश्वरः ॥ २४ ॥ त्वं शब्दयोनिर्जगदादिरात्मा प्राणेन्द्रियद्रव्यगुणस्वभावः । कालः क्रतुः सत्यमृतं च धर्मस्त्वय्य-

---

அந்த மஹாதேவனைக் கண்டு ஸ்தோத்திரங்களுடன் கூட நமஸ்கரித்தனர். (20) ப்ரஜாபதிகள் சொல்லலுற்றனர்—ஹே தேவ தேவ! ஹே மஹா தேவ! ஹே பூதாத்மன்! ஹே பூதபாவன! சரண் புகுந்தவர்களான எங்களை, மூவ்வுலகையும் பொசுக்குகின்ற விஷத்தினின்றும் காப்பீராக. (21) நீரொருவரே எல்லா ஜகத்தினுடையவும் பந்தம் மோக்ஷம் இவற்றுக்கு ஈஸ்வரராகிறீர். ஆகவே பக்தர்களின் துக்கத்தைப் போக்குகின்றவரும், குருவுமான அந்த உம்மை ஸமர்த்தர்கள் அர்ச்சிக்கின்றனர். (22) ஹே விபோ! குணமயமானதும் ஸ்வாதீனமாயுள்ளதுமான மாயையினால் இந்த ப்ரபஞ்சத்தின் ஸிருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களை எப்பொழுது செய்கின்றீரோ அப்பொழுது ஹே பூமன்! ஸ்வதஸ்ஸித்தமான ஞானத்தை யுடையவரான நீர் ப்ரம்ஹ விஷ்ணு சிவன் என்ற பெயர்களை அடைகின்றீர். (23) பரமும், குஹ்யமுமான ப்ரம்ஹம் நீரே. ஸத்தாயும் அஸத்தாயுமுள்ள தேவபசுவாதிகளை உண்டுபண்ணுகின்றவரும் காப்பவரும் அழிப்பவரும் நீரே. ஆத்மாவாகவே உள்ள நீர் பலதரப்பட்ட சக்திகள் மூலம் ஜகத்ரூபமாகத் தோற்றுகின்றீர். ஆனதுபற்றி ஈஸ்வருமாகிறீர். (24) வேதத்துக்குக் காரணமாகவானவரும் நீரே. ஜகத்துக்கு ஆதியான மஹத்தத்துவமும், ப்ராணன்கள் இந்திரியங்கள் ஆகாசாதியான பஞ்சபூதத்ரவ்யங்கள் இவற்றுக்குக் காரணங்களான ரஜஸ் ஸத்துவ தமோகுணங்களை ஸ்வபாவமாகவுடைய அஹந்தத்துவமும் நீரே. காலமும், ஸங்கல்பமும், ஸத்யமும், ருதமும், தர்மமும் நீரே.

क्षरं यत्त्रिवृदामनन्ति ॥ २५ ॥ अग्निर्मुखं तेऽखिलदेवतात्मा क्षितिं विदुर्लोकभवाङ्घ्रिपङ्कजम् । कालं गतिं तेऽखिलदेवतात्मनो दिशश्च कर्णौ रसनं जलेशम् ॥ २६ ॥

नाभिर्नभस्ते श्वसनं नभस्वान्सूर्यश्च चक्षूंषि जलं स्म रेतः । परावरात्माश्रयणं तवात्मा सोमो मनो द्यौर्भगवन् शिरस्ते ॥ २७ ॥ कुक्षिः समुद्रा गिरयोऽस्थिसङ्घा रोमाणि सर्वौषधिवीरुधस्ते । छन्दांसि साक्षात्तव सप्त धातवस्त्रयीमयात्मन्हृदयं सर्वधर्मः ॥ २८ ॥ मुखानि पञ्चोपनिषदस्तवेश यैस्त्रिंशदष्टोत्तरमन्त्रवर्गः। यत्तच्छिवाख्यं परमार्थतत्त्वं देव स्वयंज्योति-

---

மூன்று எழுத்துள்ள யாதொரு ப்ரணவமுண்டோ அதை உமது ஸ்வரூபப்ரகாசகமாகச் சொல்லுகின்றனர். (25) எல்லாத் தேவதைகளுக்கும் ஆத்மபூதனான அக்னி உமது முகமாகவாகிறான். ஹே லோகபவ! பூமியை உமது சரணாரவிந்தமாக எண்ணுகின்றனர். காலத்தை எல்லாத் தேவதைகளுக்கும் ஆத்மபூதரான உம்முடைய கதியாகவும், திக்குகளைக் காதுகளாகவும், வருணனை நாக்காகவும் எண்ணுகின்றனர். (26)

ஹே பகவன்! ஆகாசத்தை உம்முடைய நாபியாகவும், வாயுவை உமது ப்வாஸமாகவும், சூரியன் கண்களென்றும், ஜலமானது உமது ரேதஸ்ஸென்றும், பரர்களும் அவரர்களுமான ஜீவாத்மாக்களுக்கு ஆஶ்ரயமாகவான அஹங்காரமானது உமது ஆத்மாவென்றும், சந்திரன் மனஸ்ஸென்றும், த்யுலோகமானது உமது சிரஸ்ஸென்றும் எண்ணுகின்றனர். (27) ஹே வேதத்ரயமூர்த்தே! ஸமுத்திரங்கள் வயிறென்றும், மலைகள் எலும்புக்கூட்டங்களென்றும், எல்லாக் கொடிகளும் செடிகளும் உம்முடைய உரோமங்களென்றும், வேதங்கள் ஸாக்ஷாத்தாக உம்முடைய ஏழு தாதுக்களென்றும், எல்லாத் தர்மங்களும் உம்முடைய ஹிருதயமென்றும் எண்ணுகின்றனர். (28) ஹே ஈஶ! எந்த முகங்களினால் முப்பத்தெட்டு மந்திரங்களடங்கிய கூட்டமானது ஏற்படுகிறதோ அந்த ஐந்து உபநிஷத்துக்களும் (தத்புருஷ, அகோர, ஸத்யோஜாத, வாமதேவ, ஈசான என்ற ஐந்துகளும்) உம்முடைய முகங்களாகும். ஹே தேவ! ஸ்வயம் ப்ரகாசரூபமானதும் சிவ என்ற,

रवस्थितिस्ते ॥ २९ ॥ छायात्वधर्मोर्मिषु यैर्विसर्गो नेत्रत्रयं सत्त्वरजस्तमांसि । साङ्ख्यात्मनः शास्त्रकृतस्तवेक्षा छन्दोमयो देव ऋषिः पुराणः ॥ ३० ॥ न ते गिरित्राखिललोकपालविरिञ्चवैकुण्ठसुरेन्द्रगम्यम् । ज्योतिः परं यत्र रजस्तमश्च सत्त्वं न यद्ब्रह्म निरस्तभेदम् ॥ ३१ ॥ कामाध्वरत्रिपुरकालगराद्यनेकभूतद्रुहः क्षपयतः स्तुतये न तत्ते । यस्त्वन्तकाल इदमात्मकृतं स्वनेत्रवह्निस्फुलिङ्गशिखया भसितं न वेद ॥ ३२ ॥ ये त्वात्म-

---

பெயரையுடையதுமான யாதொரு பரமார்த்த தத்துவமுண்டோ அது உம்முடைய உபரதாவஸ்தை=ஓய்ந்த நிலை, யாகவாகும். (29) அதர்மத்தின் அலைகளான தம்பம் லோபம் முதலியவற்றிலும் உம்முடைய நிழலானது இருக்கிறது. ஸத்துவம் ரஜஸ் தமஸ் என்ற எவைகளினால் பலதறப்பட்ட ஸிருஷ்டியானது ஏற்படுகின்றதோ அந்த ஸத்துவம் ரஜஸ் தமஸ் என்ற மூன்றும் உம்முடைய மூன்று கண்களாகவாகும். ஹே தேவ! சந்தோமயமானதும், பழமையானதுமான ருஷி (வேத) மானது, ஞானஸ்வரூபரும், சாஸ்திரத்தை வெளியிட்டவருமான உம்முடைய சக்ஷுஸ்ஸாகவாகும். (30) ஹே கிரித்ர! எந்த ஸ்வரூபத்தில் ரஜோகுணமும், தமோகுணமும், ஸத்வகுணமும் கிடையாதோ, எது எவ்விதபேதமுமற்ற ப்ரம்ஹமோ அந்த உம்முடைய பரஞ்ஜோதிஸ்ஸானது எல்லாலோகபாலர்களினாலும் ப்ரம்ஹா விஷ்ணு இந்திரன் இவர்களினாலும் அறிந்துகொள்ளக்கூடியதன்று. (31) எந்த நீர் ப்ரளயகாலத்தில் தன்னால் செய்யப்பட்ட இந்த ப்ரபஞ்சமானது தனது நேத்திரத்திலிருந்து உண்டான நெருப்புப் பொறியின் ஜ்வாலையினால் சாம்பலாக்கப்பட்டதையும் கூட அறியாதவராகவே இருக்கின்றீரோ, மன்மதன், தக்ஷனுடைய யாகம், த்ரிபுரம், யமன், (*)காளகூட விஷம் முதலிய ப்ராணிஹிம்ஸாகரங்களான பலவற்றை நாசஞ்செய்கின்ற அந்த உம்முடைய அந்தக் கர்மமானது ஸ்துதியையும் பொருட்டு ஆகமாட்டாது. (அதாவது:—இவை உமக்கு அற்பமான காரியமேயாகும் என்றும்.) (32) ஆத்மாராமர்களான குருக்களினால் ஹிருத

---

(*) காளகூடவிஷத்தின் நாசமானது அவசியம் ஏற்படப்போவதையொட்டி நடந்துவிட்டதாகவே சொல்லப்பட்டது என்று கொள்ளவும்.

रामगुरुभिर्हृदि चिन्तिताङ्घ्रिद्वन्द्वं चरन्तमुमया तपसाभितप्तम्। कत्थन्त उग्रपरुषं निरतं श्मशाने ते नूनमूतिमविदंस्तव हातलज्जाः ॥ ३३ ॥ तत्तस्य ते सदसतोः परतः परस्य नाञ्जः स्वरूपगमने प्रभवन्ति भूम्नः। ब्रह्मादयः किमुत संस्तवने वयं तु तत्सर्गसर्गविषया अपि शक्तिमात्रम् ॥ ३४ ॥ एतत्परं प्रपश्यामो न परं ते महेश्वर। मृडनाय हि लोकस्य व्यक्तिस्तेऽव्यक्तकर्मणः ॥ ३५ ॥

---

யத்தில் தியானிக்கப்பட்ட இரண்டு சரணங்களையுடையவராயினும், தவத்திலீடுபட்டவராயினுங்கூட உம்மை எவர்கள் உமையவளுடன் ஸஞ்சரிப்பதுபற்றிக் காமிஎன்றும், சுடுகாட்டில் ஸஞ்சரிப்பதுபற்றி உக்ரரென்றும், குரூரரென்றும் உளருகின்றனரோ லஜ்ஜையற்றவர்களான அவர்கள் உம்முடைய ஸங்கல்பத்தை நிஸ்சிதமாக அறிந்தவர்களாகவாவரோ? ஒழுபொழுதுமாகமாட்டார்.[*] (33) ஆகவே காரியகாரணப் பொருள்களுக்கும் காரணமான ப்ரதானத்துக்கும் பரனும், எங்கும் நீக்கமற நிறைந்தவருமான அந்த உம்முடைய ஸ்வரூபத்தை உண்மையில் அறிந்துகொள்ளும் விஷயத்திலேயே ப்ரம்ஹாதியர் அசக்தர்களாக இருக்கும்பொழுது ஸ்துதிக்கும் விஷயத்தில் எங்ஙனம் சக்தர்களாகவாகப்போகின்றனர். இவ்விதமிருக்க அந்த ப்ரம்ஹதேவனுடைய ஸர்க்கமான மரீசி அவருடைய ஸர்க்கமான கஸ்யபர் அவருக்கு விஷயர்களான=அவரிடமிருந்து உண்டானவர்களான, நாங்கள் எவ்விதம் சக்தர்களாகவாவோம். ஆயினும் இந்த உமது ஸ்தோத்திரமானது எங்களுடைய சக்திக்கு எட்டியவளவு மட்டுமே செய்யப்படுகிறது. (34) ஹே மஹேஸ்வர! எளிதில் அறியமுடியாத லீலையையுடையவரான உம்முடைய இந்தத் தோற்றமானது உலகின் க்ஷேமத்தையும் பொருட்டே ஆகிறது என்ற இதை மட்டுமே நாங்கள் அறிகின்றோமே

---

[*] ஆத்மாராமர்களினுஸ் ஸேவிக்கப்பட்ட சரணங்களை யுடையவரான உமக்கு காமித்துவமானது எவ்விதம் ஸம்பவிக்கும். தவஞ்செய்கின்றவரும் சாந்தருமான உமக்கு உக்கிராராகவும், குரூராராகவும் இருத்தல் எவ்விதம் ஸம்பவிக்கும் என விசாரித்தறியாமல் அவர்கள் உளருவதே அதன் காரணமாகும் என்பது பொருள்.

श्रीशुक उवाच—तद्वीक्ष्य व्यसनं तासां कृपया भृशपीडितः । सर्वभूतसुहृद्देव इदमाह सतीं प्रियाम् ॥ ३६ ॥ शिव उवाच—अहो बत भवान्येतत्प्रजानां पश्य वैशसम् । क्षीरोदमथनोद्भूतात्कालकूटादुपस्थितम् ॥ ३७ ॥ आसां प्राणपरीप्सूनां विधेयमभयं हि मे । एतावान्हि प्रभोरर्थो यद्दीनपरिपालनम् ॥ ३८ ॥ प्राणैः स्वैः प्राणिनः पान्ति साधवः क्षणभङ्गुरैः। बद्धवैरेषु भूतेषु मोहितेष्वात्ममायया ॥ ३९ ॥ पुंसः कृपयतो भद्रे सर्वात्मा प्रीयते हरिः । प्रीते हरौ भगवति प्रीयेऽहंसचराचरः । तस्मादिदं गरं भुञ्जे प्रजानां स्वस्तिरस्तु मे ॥ ४० ॥ श्रीशुक उवाच—एवमामन्त्र्य

---

யல்லாது மேற்கொண்டு எதையுமறியாதவர்களாகவே இருக்கின்றோம் என்றனர். (35)

ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—அவர்களுக்கேற்பட்ட துக்கத்தைக் கண்டு கிருபையினால் மிக்க பீடிக்கப்பட்டவரும் ஸர்வபூத ஸுஹ்ருத்துமான மஹாதேவன் ப்ரியையான ஸதீதேவியைப் பார்த்துப் பின்வருமாறு சொல்லலுற்றார். (36) ஸ்ரீசிவன் சொல்லலுற்றார்—ஹே பவானி! பாற்கடலைக் கடையும்பொழுது உண்டான காளகூட விஷத்திலிருந்து ப்ரஜைகளுக்கு எற்பட்ட இந்த துக்கத்தைப் பாரு. அந்தோ! இது வெகு கஷ்டம். (37) ப்ராணனை காப்பாற்றிக்கொள்ள விரும்புகின்ற இவர்களுக்கு என்னால் அபயமானது கொடுக்கத் தகுந்ததன்றோ. துக்கிதர்களைக் காற்றல் என்பது யாதுண்டோ இவ்வளவே ப்ரபுக்கள் செய்யவேண்டிய காரியமாகும். (38) பரமாத்மாதீனமான மாயையினால் மோஹத்தை யடைந்த ப்ராணிகள் ஒன்றையொன்று கொல்லவிருப்பங்கொண்டனவாக விருப்பினும் ஸாதுக்கள் க்ஷணத்தில் அழியக் கூடியவைகளான தமது ப்ராணங்களைக் கொண்டு உயிர்களைக் காக்கின்றனர். (39) கிருபையுள்ள புருஷன் விஷயத்தில் ஸர்வாத்மாவான ஹரியானவர் ப்ரீதியை யடைகிறார். பகவானான ஹரியானவர் ப்ரீதியையடைந்த பொழுது ஸ்தாவரஜங்கமங்களுடன் கூடின நானும் ப்ரீதியுள்ளவனாகி வாகிறேன். ஆனதுபற்றி இந்த விஷத்தை நான் சாப்பிடுகிறேன். எனது ப்ரஜைகளுக்கு க்ஷேமமானது உண்டாகட்டும் என்றார். (40) ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—விஸ்வரக்ஷக

भगवान्भवानीं विश्वभावनः। तद्विषं जग्धुमारेभे प्रभावज्ञाऽन्वमोदत ॥४१॥ ततः करतलीकृत्य व्यापि हालाहलं विषम्। अभक्षयन्महादेवः कृपया भूतभावनः ॥ ४२ ॥ तस्यापि दर्शयामास स्ववीर्यं जलकल्मषः। यच्चकार गले नीलं तच्च साधोर्विभूषणम् ॥ ४३ ॥ तप्यन्ते लोकतापेन साधवः प्रायशो जनाः। परमाराधनं तद्धि पुरुषस्याखिलात्मनः ॥ ४४ ॥ निशम्य कर्म तच्छम्भोर्देवदेवस्य मीढुषः। प्रजा दाक्षायणी ब्रह्मा वैकुण्ठश्च शशंसिरे ॥ ४५ ॥ प्रस्कन्नं पिबतः पाणेर्यत्किंचिज्जगृहुः स्म तत्। वृश्चिकाहिविषौषध्यो दन्दशूकाश्च येऽपरे ॥ ४६ ॥

इति श्रीमद्भागवते महापुराणेऽष्टमस्कन्धेऽमृतमथने शिवकृतविषभक्षणवर्णनं नाम सप्तमोऽध्यायः ॥ ७ ॥



---

ரான பகவான் இவ்விதம் பவானியைக் கலந்தாலோசித்துக் கொண்டு அந்த விஷத்தைச் சாப்பிடுவதற்கு ஆரம்பித்தார். அவருடைய மஹிமையையறிந்தவளான பவானியும் அதற்கு ஸம்மதித்தாள். (41) பிறகு பூதங்களை விருத்தியடையச் செய்விப்பவரான மஹாதேவன் எங்கும் பரவின ஹாலாஹலவிஷத்தைக் கையிலொடுங்கும்படி செய்துகொண்டு கிருபையினால் பக்ஷித்தார். (42) ஜலத்தின் தோஷமான அந்த விஷமானது அவர் விஷயத்திலுங் கூடத் தனது வீரியத்தைக்காட்டிற்று. அதாவது:—கழுத்தில் கருப்பை யுண்டுபண்ணிற்று என்பது யாதுண்டோ அதுவேயாம். அதுவும்ஸாதுவான மஹாதேவனுக்கு ஆபரணமாகவே ஆகிவிட்டது. (43) பெரும்பாலும் ஸாதுக்களான ஜனங்கள் உலகத்துக்கேற்பட்ட தாபத்தைக்கண்டு தாங்களும் தாபத்தையடைகின்றனர். அதுவோ அகிலத்துக்கும் ஆத்மாவான புருஷனுடைய ஆராதனமாகவேயாகின்றது. (44) யாவர்க்கும் வேண்டுவனவற்றைக் கொடுப்பவரும் தேவதேவருமான சம்புவினது அந்தக் காரியத்தைக் கேட்டு, ப்ரஜைகளும், தாக்ஷாயணியும், ப்ரம்ஹதேவனும், வைகுண்டனென பகவானும் அவரைப் புகழ்ந்தனர். (45) பானஞ்செய்கின்ற அவருடைய கையிலிருந்து ஏதோ கொஞ்சம் நழுவின அந்த விஷத்தை

ततो रथो मातलिना हरिभिर्दशशतैर्वृत: । आनीतो द्विपमुत्सृज्य रथमारुरुहे विभु: ॥ १६ ॥ तस्य तत्पूजयन्कर्म यन्तुर्दानवसत्तम: । शूलेन ज्वलता तं तु स्मयमानोऽहनन्मृधे ॥ १७ ॥ सेहे रुजं सदुर्मर्षां सत्त्वमालम्ब्य मातलि: । इन्द्रो जम्भस्य सङ्क्रुद्धो वज्रेणापाहरच्छिर: ॥ १८ ॥ जम्भं श्रुत्वा हतं तस्य ज्ञातयो नारदादृषे: । नमुचिश्च बल: पाकस्तत्रापेतुस्त्वरान्विता:॥ १९ ॥ वचोभि: परुषैरिन्द्रं मर्दयन्तोऽस्य मर्मसु । शरैरवाकिरन्मेघा धाराभिरिव पर्वतम् ॥ २० ॥ हरीन्दशशतान्याजौ हर्यश्वस्य बल: शरै: । तावद्भिरर्दयामास युगपल्लघुहस्तवान् ॥ २१ ॥ शताभ्यां मातलिं पाको रथं सावयवं पृथक् । सकृत्सन्धानमोक्षेण तदद्भुतमभूद्रणे ॥ २२ ॥

---

பூட்டின தேரானது மாதலியினல் கொண்டு வரப்பட்டது. விபுவான இந்திரன் யானையை விட்டுத் தேரிலேறிக்கொண்டான். (16) அஸுரஸ்ரேஷ்டனை பலி அந்தத் தேர்ப்பாகனின் அக்காரியத்தைக் கொண்டாடிச் சிரித்துக்கொண்டு ஜ்வலிக்கின்ற சூலத்தினல் யுத்தத்தில் அவனை அடித்தான். (17) மாதலியோ தைரியத்தை பிடித்துக்கொண்டு பொருக்கவியலாத கஷ்டத்தைப் பொருத்துக் கொண்டான். இந்திரன் கோபங்கொண்டு வஜ்ராயுதத்தினல் ஜம்பனுடைய தலையை வெட்டினன். (18) அவனுடைய ஞாதிகளான நமுசி பலன் பாகன் இவர்கள் ஜம்பன் கொல்லப்பட்டதை நாரத மஹருஷியினிடமிருந்து கேட்டு வேகத்துடன் கூடினவர்களாய் அங்கு வந்து சேர்ந்தனர். (19) கொடூரங்களான வார்த்தைகளினல் இந்திரனைப் பீடிக்கின்றவர்களாய்க்கொண்டு மேகங்கள் தாரைகளினல் மலையைப்போல இந்திரனுடைய மர்மங்களில் பாணங்களினல் வர்ஷித்தனர். (20) போரில் கைலாகவமுள்ளவனை பலன் ஹர்யஸ்வனை இந்திரனுடைய ஆயிரம் குதிரைகளையும் அத்தனை பாணங்களினல் அடித்தான். (21) பாகன் என்பவன் போரில் இருநூறு பாணங்களை ஒரே தடவையில் வில்லில்பூட்டி விடுதல் மூலம் மாதலியையும், அவயவத்துடன்கூடின தேரையும் தனித்தனியாக அடித்தான். அது ஆச்சரியம்போல இருந்தது. (22)

நமுசி என்பவன் பொன்மயங்களான கணுக்களுள்ள பதினைந்து பெரிய பாணங்களினல் இந்திரனைப் போரில் அடித்து ஜல

नमुचिः पञ्चदशभिः स्वर्णपुङ्खैर्महेषुभिः । आहत्य व्यनदत्संख्ये सतोय इव तोयदः ॥ २३ ॥ सर्वतः शरकूटेन शक्रं सरथसारथिम् । छादयामासुरसुराः प्रावृट्सूर्यमिवाम्बुदाः ॥ २४ ॥ अलक्षयन्तस्तमतीव विह्वला विचुक्रुशुर्देवगणाः सहानुगाः । अनायकाः शत्रुबलेन निर्जिता वणिक्पथा भिन्ननवो यथार्णवे ॥ २५ ॥ ततस्तुराषाडिषुबद्धपञ्जराद्विनिर्गतः साश्वरथध्वजाग्रणीः । बभौ दिशः खं पृथिवीं च रोचयन्स्वतेजसा सूर्य इव क्षपात्यये ॥ २६ ॥ निरीक्ष्य पृतनां देवः परैरभ्यर्दितां रणे । उदयच्छद्रिपुं हन्तुं वज्रं वज्रधरो रुषा ॥ २७ ॥ स तेनैवाष्टधारेण शिरसी बलपाकयोः । ज्ञातीनां पश्यतां राजञ्जहार जनयन्भयम् ॥ २८ ॥ नमुचिस्तद्वधं दृष्ट्वा शोकामर्षरुषान्वितः । जिघांसुरिन्द्रं नृपते चकार परमोद्य-

---

த்துடன்கூடின மேகம்போலக் கர்ஜித்தான். (23) அஸுரர்கள், மழைக்காலத்திலுள்ள ஸூரியனை மேகங்கள்போல பாணவர்ஷத்தினால்தேர் ஸாரதி இவர்களுடன்கூடின இந்திரனைச் சுற்றிலும் மூடினர். (24) அந்த இந்திரனைக் காணாதவர்களும் ஆனதுபற்றியே அதிகம் கலங்கினவர்களும், நாயகன் அற்றிருப்பதுபற்றி சத்துரு ஸைன்னியத்தினால் ஜயிக்கப்பட்டவர்களுமான தேவக்கூட்டங்கள் தத்தமது பரிவாரங்களுடன் கூட, ஸமுத்திரத்தில் கப்பலுடைந்த வியாபாரிகள் போல வாய்விட்டுக் கதறினர். (25) பிறகு இந்திரன் குதிரை தேர் கொடிமரம் ஸாரதி இவர்களுடன்கூடப் பாணத்தினால்கட்டப்பட்ட கூட்டிலிருந்து வெளிப்பட்டவனாய் விடியற்காலத்திலுள்ள ஸூரியன்போலத் தனது தேஜஸ்ஸினால் திக்குகளையும், ஆகாசத்தையும். பூமியையும் ப்ரகாசப்படுத்திக் கொண்டு விளங்கினான். (26) வஜ்ரதரனான தேவன் போரில் ஸேனையானது சத்துருக்களினால் பீடிக்கப்பட்டிருப்பதைக் கண்டு சத்துருவைக் கொல்லவேண்டிக் கோபத்துடன் வஜ்ராயுதத்தைக் கையிலெடுத்தான். (27) ஹே ராஜன்! அந்த இந்திரன் பார்க்கின்றவர்களான ஞாதிகளுக்குப்பயத்தை யுண்டுபண்ணிக்கொண்டு எட்டுக்கூறுள்ள அந்த வஜ்ராயுதத்தினாலேயே பலன், பாகன் இவர்களின் தலைகளை வெட்டினான். (28) ஹே ந்ருபதே! நமுசியானவன் அவர்களின் வதத்தைக் கண்டு சோகம் பொறாமை கோபம் இவற்றுடன் கூடினவ

मम् ॥ २९ ॥ अश्मसारमयं शूलं घण्टावद्धेमभूषणम् । प्रगृह्याभ्यद्रवत्क्रुद्धो हतोऽसीति वितर्जयन् । प्राहिणोद्देवराजाय निनदन्मृगराडिव ॥३०॥ तदापतद्गगनतले महाजवं विचिच्छिदे हरिरिषुभिः सहस्रधा । तमाहनन्नृप कुलिशेन कन्धरे रुषान्वितस्त्रिदशपतिः शिरो हरन् ॥ ३१ ॥ न तस्य हि त्वचमपि वज्र ऊर्जितो बिभेद यः सुरपतिनौजसेरितः । तदद्भुतं परमतिवीर्यवृत्रभित्तिरस्कृतो नमुचिशिरोधरत्वचा ॥ ३२ ॥

तस्मादिन्द्रोऽबिभेच्छत्रोर्वज्रः प्रतिहतो यतः । किमिदं दैवयोगेन भूतं लोकविमोहनम् ॥ ३३ ॥ येन मे पूर्वमद्रीणां पक्षच्छेदः प्रजात्यये ।

---

ளுய் இந்திரனைக் கொல்ல வெண்ணங்கொண்டு மேலான முயற்சியைச் செய்தான். (29) கல்லுக்கொப்பான வலுவுள்ளதும், சதங்கைகளுள்ளதும் ஸ்வர்ணுலங்கார முள்ளதுமான சூலத்தைக் கையிலெடுத்துக் கொண்டு கொல்லப்பட்டாய் என அதட்டிக் கொண்டு கோபத்துடன் ஓடிவந்தான். சிங்கம் போலக் கர்ஜித்துக் கொண்டு தேவ ராஜனையும் பொருட்டு சூலத்தையும் ப்ரயோகித்தான். (30) மிக்க வேகமுள்ளதும், ஆகாசத்தில் வருகின்றதுமான அந்தச் சூலத்தை இந்திரன் பாணங்களினுல் ஆயிரக்கணக்காக வெட்டினுன். ஹே ந்ருப! தேவராஜனுன இந்திரன் கோபத்துடன் கூடினவனுய் அவனுடைய தலையை வெட்ட வேண்டி வஜ்ராயுதத்தினுல் கழுத்தில் அவனை வெட்டினுன். (31) தேவராஜனுல் வலுவுடன் ப்ரயோகிக்கப்பட்ட யாதொரு வஜ்ராயுதமுண்டோ அதிகம் வலுவுள்ள அது அந்த நமுசியினுடைய தோலைக் கூடப் பிளக்கவில்லை. அவ்விதம் நமுசியின் தோலைக்கூடப் பெயர்க்காததானது வெகு ஆஸ்சரியமாக இருந்தது. அதிகம் வீரியம் வாய்ந்த விருத்திரனைக் கூடக் கொன்ற அந்த வஜ்ரமானது நமுசியினுடைய கழுத்திலுள்ள தோலினுல் திரஸ்கரிக்கப்பட்டதாக வாயிற்று. (32)

எவனிடமிருந்து வஜ்ரமானது பயனற்றதாகத் திரும்பிற்றோ அந்தச் சத்துருவினிடமிருந்து இந்திரன் பயந்தான். தைவயோகத்தாலுண்டான இந்த லோகவிமோஹமானது யாது? என்றும் எண்ணினுன். (33) எந்த வஜ்ராயுதத்தினுல், அதிகம் சுமையுள்ள இரக்கைகளினுல் பரந்து பூமியிலிறங்கின மலைகளுடைய இரக்

कृतो निविशतां भारैः पतत्त्रैः पततां भुवि ॥ ३४ ॥ तपः सारमयं त्वाष्ट्रं वृत्रो येन विपाटितः । अन्ये चापि बलोपेताः सर्वास्त्रैरक्षतत्वचः ॥ ३५ ॥ सोऽयं प्रतिहतो वज्रो मया मुक्तोऽसुरेऽल्पके । नाहं तदाददे दण्डं ब्रह्मतेजोऽप्यकारणम् ॥ ३६ ॥ इति शक्रं विषीदन्तमाह वागशरीरिणी । नायं शुष्कैरथो नार्द्रैर्वधमर्हति दानवः ॥ ३७ ॥ मयास्मै यद्वरो दत्तो मृत्युर्नैवार्द्रशुष्कयोः । अतोऽन्यश्चिन्तनीयस्त उपायो मघवन्रिपोः ॥ ३८ ॥ तां दैवीं गिरमाकर्ण्य मघवान्सुसमाहितः । ध्यायन्फेनमथापश्यदुपायमुभयात्मकम् ॥३९॥ न शुष्केण न चार्द्रेण जहार नमुचेः शिरः । तं तुष्टुवुर्मुनि-

---

கைகளின் சேதமானது என்னால் முன்னர் ப்ரஜைகளுக்கு நாசம் நேர்ந்தகாலத்தில் செய்யப்பட்டதோ, எந்த வஜ்ஜிராயுதத்தினால், அதிகம் வீரியமுள்ளதும், த்வஷ்டாவினுடையதுமான தபோரூபமான விருத்திரன் கொல்லப்பட்டானோ, எல்லா அஸ்திரங்களாலும் கூடப் பெயர்க்கப்படாத தோலையுடையவர்களும் வலுவுடன் கூடினவர்களுமான மற்றவர்களும் கொல்லப்பட்டனரோ, அற்பனை அஸுரனிடத்தில் என்னால் விடப்பட்ட அந்த இந்த வஜ்ராயுதம் கூட வீணாகவிட்டது. ஆகவே வெரும் கழிக்கொப்பான வஜ்ராயுதத்தை நான் கையிலெடுக்கமாட்டேன். ப்ராம்ஹணரான ததீசி மஹருஷியின் ஸாமர்த்தியமும் வீணாகிவிட்டதே? (34–36) என துக்கத்தையடைகின்ற இந்திரனைப் பார்த்து "இந்த அஸுரன் சுஷ்கங்களாகவோ, ஈரமுள்ளனவாகவோ உள்ள பொருள்களால் கொல்லக்கூடியவனல்லன். ஈரமுள்ளவைகளினாலும் உலர்ந்தவைகளினாலும் மரணம் ஸம்பவிக்கவே மாட்டாது என இவன் பொருட்டு என்னால் வரன் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆகவே ஹே மகவன்! சத்துருவைக் கொல்லும் விஷயத்தில் உன்னால் வேறு உபாயமானது சிந்திக்கத் தக்கது" என அசரீரமான வாக்கானது சொல்லிற்று. (37–38) அந்தத் தைவவாக்கை இந்திரன் கேட்டு மனத்தை அசையாது நிருத்தி த்யானஞ்செய்து பிறகு ஆர்த்ரமாயும் சுஷ்கமாயுமிருக்கும் நுரையை அவனைக் கொல்லுவதற்குரிய உபாயமாகக் கண்டு கொண்டான். (39) சுஷ்கமாக இல்லாததும் ஈரமாக இல்லாததுமான நுரையினால் நமுசியின் தலையை இந்திரன்

गणा माल्यैश्चावाकिरन्विभुम् ॥ ४० ॥ गन्धर्वमुख्यौ जगदुर्विश्वावसुपरावसू । देवदुन्दुभयो नेदुर्नर्तक्यो ननृतुर्मुदा ॥ ४१ ॥ अन्येऽप्येवं प्रतिद्वन्द्वान्वाय्वग्निवरुणादयः । सूदयामासुरस्त्रौघैर्मृगान्केसरिणो यथा ॥ ४२ ॥ ब्रह्मणा प्रेषितो देवान्देवर्षिर्नारदो नृप । वारयामास विबुधान्दृष्ट्वा दानवसंक्षयम् ॥ ४३ ॥

नारद उवाच—भवद्भिरमृतं प्राप्तं नारायणभुजाश्रयैः । श्रिया समेधिताः सर्व उपारमत विग्रहात् ॥ ४४ ॥ श्रीशुक उवाच—संयम्य मन्युसंरम्भं मानयन्तो मुनेर्वचः । उपगीयमानानुचरैर्ययुः सर्वे त्रिविष्टपम् ॥ ४५ ॥ येऽवशिष्टा रणे तस्मिन्नारदानुमतेन ते । बलिं विपन्नमादाय अस्तं गिरिमुपागमन् ॥ ४६ ॥ तत्राविनष्टावयवान्विद्यमानशिरोधरान् ।

---

வெட்டினன். முனிக்கூட்டங்கள் விபுவான அந்த இந்திரனை ஸ்துதித்து பூமாலைகளையும் வாரிஇறைத்தனர். (40) கந்தர்வர்களுக்குள் முக்கியர்களான விஶ்வாவஸு பராவஸு இவர்கள் அவனைக் கொண்டாடினர். தேவதுந்துபிகள் முழங்கின. நர்த்தகிகள் ஸந்தோஷத்துடன் ஆடினர். (41) வாயு அக்னி வருணன் முதலிய மற்றவர்களும் மான்களை சிங்கங்கள் போலச் சத்துருக்களைப் பாண ஸமூஹங்களினால் இவ்விதமே நாசஞ்செய்தனர். (42) ஹே ந்ருப! அஸுரர்களின் நாசத்தைக் கண்டு தேவர்களைக் குறித்து ப்ரம்ஹதேவனால் அனுப்பட்ட தேவருஷியான நாரதர் தேவர்களைத் தடுத்தார். (43)

நாரதர் சொல்லலுற்றார்—நாராயணனுடைய புஜத்தை யாஶ்ரயித்தவர்களான உங்களால் அமிருதமானது அடையப்பட்டது. யாவரும் லக்ஷ்மியினாலும் நன்கு விருத்திசெய்விக்கப் பட்டீர்கள். ஆகவே சண்டையிலிருந்து ஒய்ந்து விடுங்கள் என்றார். (44) ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—யாவரும் நாரத மஹருஷியின் வார்த்தையைப் பூஜிக்கின்றவர்களாய் கோபப்பெருக்கை யடக்கிக் கொண்டு அருகிலிருந்து ஸ்துதிக்கின்ற பரிவாரங்களுடன்கூட தேவலோகம் போய்ச் சேர்ந்தனர். (45) அந்த யுத்தத்தில் எஞ்சினவர்களான மற்றவர்கள் எவர்களோ அவர்கள் நாரதரின் உத்திரவின் பேரில்

उशना जीवयामास सञ्जीविन्या स्वविद्यया ॥ ४७ ॥ बलिश्चोशनसा स्पृष्टः प्रत्यापन्नेन्द्रियस्मृतिः । पराजितोऽपि नाखिद्यल्लोकतत्त्वविचक्षणः ॥ ४८ ॥

इति श्रीमद्भागवते महापुराणेऽष्टमस्कन्धे देवासुरसङ्ग्रामवर्णनं नाम एकादशोऽध्यायः ॥ ११ ॥

—•••*•••—

---

ஆபத்தை யடைந்தபலியை எடுத்துக் கொண்டு அஸ்தமயபர்வ தத்தை யடைந்தனர். (46) அந்த யுத்தத்தில் அழியாத அவயவ முள்ளவர்களையும், இருக்கின்ற கழுத்தை யுடையவர்களையும் மிருத ஸஞ்ஜீவனீ என்ற தன்னிடமுள்ள வித்தையினால் சுக்கிராசாரியர் பிழைப்பித்தார். (47) சுக்கிராசாரியரால் தொடப்பட்ட பலி திருப்பப் பெறப்பட்ட இந்திரியம் நினைவு இவற்றை யுடையவனாய் சத்துருவினால் முறியடிக்கப்பட்டவனாயினுங்கூட லோகதத்துவத் தில் ஸமர்த்தனாக இருப்பதுபற்றி கஷ்டத்தை யடைந்தானில்லை.

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண அஷ்டமஸ்கந்தத்தில் தேவாஸுர ஸங்கிராமவர்ணனமென்ற பதினொன்றுவது அத்தியாயம் முற்றிற்று.



## பன்னிரண்டாவது அத்தியாயம்.

(அ-கை) द्वादशे मोहिनीरूपविभ्रमालोकनोत्सुकम् ।
भवं सम्मोहयामास हरिः पुनरसान्त्वयत् ॥ १ ॥

अमुह्यन्नसुरा विष्णुमायया न तदद्भुतम् ।
इति वक्तुं महादेवमोहोऽयमुपवर्ण्यते ॥ २ ॥

(க-ரை) மோஹினீரூபத்தின் விளையாட்டைப் பார்க்க ஆவல் கொண்ட மஹாதேவனை ஹரியானவர் மோஹிக்கச்செய்து திரும் பவும் அவரை ஸமாதானப்படுத்தினரென இந்தப் பன்னிரண்டா வது அத்தியாயத்தில் வர்ணிக்கப்படுகிறது. (1) விஷ்ணுமாயையி னால் அஸுரர்கள் மோஹித்தனர் என்ற அது ஆச்சரியமன்று எனச் சொல்லவேண்டி மஹாதேவனுக்கேற்பட்ட இந்த மோஹமா னது வர்ணிக்கப்படுகிறது. (2) (எ-று)

## अथ द्वादशोऽध्यायः ॥

श्रीबादरायणिरुवाच—वृषध्वजो निशम्येदं योषिद्रूपेण दानवान्। मोहयित्वासुरगणान्हरिः सोममपाययत् ॥ १ ॥ वृषमारुह्य गिरिशः सर्वभूतगणैर्वृतः। सह देव्या ययौ द्रष्टुं यत्रास्ते मधुसूदनः ॥ २ ॥ सभाजितो भगवता सादरं सोमया भवः। सूपविष्ट उवाचेदं प्रतिपूज्य स्मयन्हरिम् ॥ ३ ॥ श्रीमहादेव उवाच—देव देव जगद्व्यापिञ्जगदीश जगन्मय। सर्वेषामपि भावानां त्वमात्मा हेतुरीश्वरः ॥ ४ ॥ आद्यन्तावस्य यन्मध्यमिदमन्यदहं बहिः। यतोऽव्ययस्य नैतानि तत्सत्यं ब्रह्मचिद्भवान् ॥ ५ ॥

---

ஸ்ரீபாதராயணி சொல்லலுற்றார்—விருஷபத்வஜன், ஸ்திரீ ரூபத்தினால் அஸுரர்களை மோஹிக்கச்செய்து தேவக்கூட்டங்களுக்கு ஹரியானவர் அமுதத்தைப் பானஞ்செய்து வைத்தார் என்ற இதைக் கேட்டு கிரிசன் விருஷபத்திலேறிக்கொண்டு எல்லாப் பூத கணங்களினாலும் சூழப்பட்டவராய்ப் பார்வதியுடன்கூட எங்கு மதுஸூதனனிருக்கின்றாரோ அங்கு அவரைப் பார்க்கச்சென்றார். (1–2) உமையவளுடன் கூடின மஹாதேவன் பகவானால் ஆதரவுடன் கூடியிருக்கும்படி பூஜிக்கப்பட்டவராய் ஓராஸனத்திலுட்கார்ந்துகொண்டு ஹரியைப் பதிலுக்குத் தானும் பூஜித்துவிட்டுச் சிரித்துக்கொண்டு பின்வருமாறு சொல்லலுற்றார். (3) ஸ்ரீமஹாதேவன் சொல்லலுற்றார்—ஹே தேவதேவ! ஜகத்தில் நீக்கமற நிறைந்திருப்பவரே! ஹே ஜகதீச! ஹே ஜகன்மய! நீர் எல்லா ப்ராணிகளுக்கும் காரணரும், ஆனதுபற்றியே ஈஶ்வரரும், ஆத்மாவுமாகினீர். (4) இந்த ப்ரபஞ்சத்தினுடைய ஆதி அந்தம் இவைகளும் மத்யமும் (நடுவும்) எந்த ப்ரம்ஹத்தினிடமிருந்து ஏற்படுகின்றனவோ, அவ்யயமான எந்த ப்ரம்ஹத்துக்கு ஆதி அந்தம் நடு இவைகளில்லையோ, எந்த ப்ரம்ஹமானது இது என்று சொல்லப்படும் த்ருஶ்யவர்க்கமாகவும், அஹம் என்று சொல்லப்படும் த்ரஷ்ட்ருவர்க்கமாகவும், வெளியிலுள்ள போக்யவர்க்கமாகவும், போக்த்ருவர்க்கமாகவும் ப்ரகாசிக்கின்றதோ, ஸத்யமும்=முக்காலத்திலுமழிவற்றதும், சித்ரூபமானதுமான அந்த ப்ரம்ஹம் நீரேயாவீர். (5) எதிலும் காமனையற்றவர்களும், மோக்ஷத்தி

तवैव चरणाम्भोजं श्रेयस्कामा निराशिषः । विसृज्योभयतः सङ्गं मुनयः समुपासते ॥ ६ ॥ त्वं ब्रह्म पूर्णममृतं विगुणं विशोकमानन्दमात्रमविकारमनन्यदन्यत् । विश्वस्य हेतुरुदयस्थितिसंयमानामात्मेश्वरश्च तदपेक्षतयाऽनपेक्षः ॥ ७ ॥

एकस्त्वमेव सदसद्द्वयमद्वयं च स्वर्णं कृताकृतमिवेह न वस्तुभेदः । अज्ञानतस्त्वयि जनैर्विहितो विकल्पो यस्माद्गुणव्यतिकरो निरुपाधिकस्य

---

லாவலுள்ளவர்களுமான முனிகள் இம்மையிலும் மறுமையிலு முள்ள பற்றையொழித்து உம்முடைய சரணுரவிந்தத்தையே நன்கு உபாஸிக்கின்றனர். (6) *பூர்ணமும்=எங்கும் நீக்கமற நிறைவுபெற்றதும், அமிருதமும்=சுகரூபமும், விகுணமும்=குண ஸம்பந்தமற்றதும், ஆனதுபற்றியே விசோகமும்=சோகமற்றதும், ஆனதுபற்றியே அவிகாரமும்=நித்யமும், ஆனந்தமாத்திரமும், அனன்யத்தும்= தன்னைவிடப் பிறவொன்றற்றதும், அன்யத்தும்=காரணமாக இருப்பதுபற்றி எல்லாவற்றையும்விட வேறுபட்டதும், ஆன ப்ரம்ஹமாகவுள்ள நீர், ப்ரபஞ்சத்தினுடைய உத்பத்தி ஸ்திதி ப்ரளயங்களுக்குக் காரணமானவரும், அந்த ஆத்மாக்களால் பலதானத்துக்கு வேண்டி அபேக்ஷிக்கப்பட்டவராக இருத்தல்மூலம் ஸோபாதிகர்களான ஆத்மாக்களுக்கு=ஜீவர்களுக்கு, ஈச்வரனும்=பலன் தருபவரும், உண்மையில் எவ்வித அபேக்ஷையற்றவருமாகிறீர். (7)

(*)உலகில் ஒரே ஸ்வர்ணமானது கிருதம்=காரிமான குண்டலாதியாகவும், அகிருதம்=காரணமான ஸ்வர்ணமாகவும், எவ்விதம் காணப்படுகின்றதோ அவ்விதமே ஒருவரான நீரே காரியகாரணரூபமான த்வைதமாகவும் உண்மையில் அத்வயராகவும்=காரிய

---

* நான் ப்ரம்ஹமாக இருக்கும் பக்ஷத்தில் அஸங்கோதாஸீனனான என்னுடைய சரணோபாஸனையினால் அவர்களுக்கு யாது பயன் எனின்? ப்ரம்ஹமாயினுங்கூட நீர் முற்றிலும் உதாஸீனராக இல்லையெனச் சொல்லுகிறார். (*) ஒருவருக்கே அன்யமாக இருத்தலும் அவ்விதமில்லாதிருத்தலும் எவ்விதம் ஸம்பவிக்கும் எனின்? அதைத் திருஷ்டாந்தமூலம் விளக்குகிறார்.

॥ ८ ॥ त्वां ब्रह्म केचिदवयन्त्युत धर्ममेक एके परं सदसतोः पुरुषं परेशम् । अन्येऽवयन्ति नवशक्तियुतं परं त्वां केचिन्महापुरुषमव्ययमात्मतन्त्रम् ॥ ९ ॥ नाहं परायुर्ऋषयो न मरीचिमुख्या जानन्ति यद्विरचितं खलु सत्वसर्गाः । यन्मायया मुषितचेतस ईश दैत्यमर्त्यादयः किमुत शश्वदभद्रवृत्ताः ॥ १० ॥ स त्वं समीहितमदः स्थितिजन्मनाशं भूतेहितं च जगतो भवबन्धमोक्षौ । वायुर्यथा विशति खं च चराचराख्यं सर्वं

---

காரணத்தன்மை யற்றவராகவும், ஆகிறீர். ஆகவே இந்த உம்மிடத்தில் உண்மையில் பேதமே கிடையாது. எக்காரணம்பற்றி உபாதிஸம்பந்தமற்றவராகவே உள்ள உமக்குக் குணங்கள்மூலம் இந்தப் பேதம்=வேற்றுமை, ஏற்படுகிறதேயொழிய இயற்கையிலில்லையோ அக்காரணம்பற்றி இந்தப் பேதமானது அக்ஞானம் காரணமாய் ஜனங்களால் உம்மிடம் கல்பிக்கப்பட்டதேயாகும். (8) ‡வேதாந்திகள் அவ்யயரும் ஆத்மதந்திரருமான உம்மை ப்ரம்ஹமெனவறிகின்றனர். மீமாம்ஸகர்கள் உம்மையே தர்மமென எண்ணுகின்றனர். ஸாங்கியர்கள் காரியகாரணங்களுக்குப் பரனான புருஷனைநினைக்கின்றனர். வேறு சிலர்=பாஞ்சராத்ரிகள், விமலா, உத்கர்ஷணீ, ஞானா, க்ரியா, யோகா, ப்ரஹ்வீ, ஸத்யா, ஈசானா, அனுக்ரஹா என்ற ஒன்பது சக்தியுடன் கூடினவரும் பரனுமான பரமேஶ்வரனைச் சொல்லுகின்றனர். பாதஞ்ஜலர் மஹாபுருஷனைச் சொல்லுகின்றனர். (9) ஹே ஈச! நானும், மேலான ஆயுளையுடைய ப்ரம்ஹதேவனும், மரீசி முக்யர்களான ருஷிகளும் கேவலம் ஸத்வகுணத்தினால் ஸிருஷ்டிக்கப்பட்டவர்களாக இருந்தபோதிலுங்கூட எந்த உம்மால் ஸிருஷ்டிக்கப்பட்ட ப்ரபஞ்சத்தைக்கூட உண்மையாக அறிந்துகொள்ள முடியாதிருக்கின்றோமே? இவ்விதமிருக்க எந்த உம்முடைய மாயையினால் திருடப்பட்ட சித்தத்தையுடையவர்களும் அடிக்கடி ராஜஸமும் தாமஸமுமான விருத்தத்தை=உத்பத்தி தொழில் இவற்றை, உடையவர்களுமான அஸுரர் மனிதர் முதலியோர் அறியமாட்டார் என்பதைச் சொல்லவும் வே

---

‡ உம்மை உள்ளபடி அறிந்துகொள்ளாததுபற்றியேதான் பலர் பலவாறாக சொல்லுகின்றனர் என இரண்டு சுலோகங்களினால் சொல்லுகிறார்.

तदात्मकतयावगमोऽवरुन्त्से ॥ ११ ॥ अवतारा मया दृष्टा रममाणस्य ते गुणैः । सोऽहं तद्द्रष्टुमिच्छामि यत्ते योषिद्वपुर्धृतम् ॥ १२ ॥ येन सम्मोहिता दैत्याः पायिताश्चामृतं सुराः । तद्दिदृक्षव आयाताः परं कौतूहलं हि नः ॥ १३ ॥

श्रीशुक उवाच—एवमभ्यर्थितो विष्णुर्भगवान् शूलपाणिना । प्रहस्य भावगम्भीरं गिरिशं प्रत्यभाषत ॥ १४ ॥ श्रीभगवानुवाच—कौतूहलाय दैत्यानां योषिद्वेषो मया कृतः । पश्यता सुरकार्याणि गते पीयूषभाजने ॥ १५ ॥ तत्तेऽहं दर्शयिष्यामि दिदृक्षोः सुरसत्तम । कामिनां बहुमन्तव्यं

---

ண்டுவதில்லையோ, ஞானஸ்வரூபரான அந்த நீர், தன்னால் செய்யப் பட்டதையும், இந்த ஜகத்தினுடைய ஸ்திதி ஜன்மம் நாசம் இவற் றையும், ப்ராணிகளின் சேஷ்டையையும், ஜகத்தின் பந்தமோக்ஷங் களையும், வாயுவானது சராசராத்மகமான தேஹஸமூஹம் யாவை யும் ஆகாசத்தையும் பரவி இருப்பதுபோல அவை யாவற்றுக்கும் ஆத்மாவாக இருத்தல்மூலம் அறிந்தே இருக்கின்றீர். (10–11) குணங்கள்மூலம் ரமிக்கின்றவரான உம்முடைய அவதாரங்கள் என் னால் காணப்பட்டன. உம்மால் யாதொரு ஸ்திரீசரீரமானது தரிக் கப்பட்டதோ அதை அந்த நான் பார்க்கவிரும்புகின்றேன். (12) எந்த ஸ்திரீசரீரத்தினால் அஸுரர்கள் மோஹிக்கும்படி செய்யப் பட்டனரோ தேவர்கள் அமிருதத்தைப் பானஞ்செய்விக்கப்பட்ட னரோ அந்தச் சரீரத்தைப் பார்க்கவெண்ணமுள்ளவர்களாக இங்கு வந்தோம். அவ்விஷயத்தில் எங்களுக்கு மேலான ஆவலிருக் கின்றது என்றார். (13)

ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—இவ்விதம் சூலபாணியினால் ப்ரார்த் திக்கப்பட்ட பகவானான விஷ்ணுவானவர் ஆழ்ந்த கருத்துடன்கூடி யிருக்கும்படி சிரித்துக் கொண்டு கிரிசனைப்பார்த்துச் சொல்லவா ரம்பித்தார். (14) ஸ்ரீபகவான் சொல்லலுற்றார்—அமிருதகலச மானது அபஹரிக்கப்பட்டபொழுது தேவர்களின் காரியங்கள் ஸ்திரீவேஷத்தினால் நடக்கும் என வாலோசித்த என்னால் அஸு ரர்களுக்கு ஆவலை யுண்டுபண்ணவேண்டி ஸ்திரீவேஷமானது எடுக் கப்பட்டது. (15) ஹே ஸுரஸத்தம! காமிகளின் வெகுமானத்

सङ्कल्पप्रभवोदयम् ॥ १६ ॥ श्रीशुक उवाच—इति ब्रुवाणो भगवांस्तत्रैवान्तरधीयत । सर्वतश्चारयंश्चक्षुर्भव आस्ते सहोमया ॥ १७ ॥ ततो ददर्शोपवने वरस्त्रियं विचित्रपुष्पारुणपल्लवद्रुमे । विक्रीडतीं कन्दुकलीलया लसद्दुकूलपर्यस्तनितम्बमेखलाम् ॥ १८ ॥ आवर्तनोद्वर्तनकम्पितस्तनप्रकृष्टहारोरुभरैः पदे पदे । प्रभज्यमानामिव मध्यतश्चलत्पदप्रवालं नयतीं ततस्ततः ॥ १९ ॥ दिक्षु भ्रमत्कन्दुकचापलैर्भृशं प्रोद्विग्नतारायतलोललोचनाम् । स्वकर्णविभ्राजितकुण्डलोल्लसत्कपोलनीलालकमण्डिताननाम् ॥ २० ॥ श्लथद्दुकूलं कबरीं च विच्युतां सन्नह्यतीं वामकरेण वल्गुना ।

---

துக்கு யோக்கியமானதும், ஸங்கல்பமூலமுண்டாகும் மன்மதனை யுண்டாக்கக் கூடியதுமான அந்த ஸ்திரீரூபத்தைப் பார்க்க விரும்புகின்ற உமக்குக் காண்பிக்கப்போகின்றேன் என்றார். (16) ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—இவ்விதம் சொல்லிக் கொண்டு பகவான் அங்கேயே மறைந்தார். மஹாதேவன் பார்வதியுடன் கூட சுற்றிலும் கண்ணைச் செலுத்திக் கொண்டு இருந்தார். (17) பிறகு, விசித்திரங்களான புஷ்பங்களும் சிவந்த தளிர்களுமுள்ள மரங்களையுடைய உத்யான வனத்தில் பந்தினால் விளையாடுகின்றவளும், ப்ரகாசிக்கின்ற வெண்பட்டினால் சுத்தப்பட்ட இடையில் மேகலையை=ஒட்டியாணத்தை, உடையவளும், (உயரக்கிளம்புவதும் கீழில் வருவதுமான பந்தையொட்டி யேற்பட்ட) குனிதல் நிமிர்தல் இவற்றால் அசைகின்ற ஸ்தனங்கள் அவற்றிலுள்ள சிறந்த முக்தாஹாரங்கள் இவற்றின் அதிகமான பாரங்களினால் ஒவ்வொரு அடிவைப்புதோறும் இடையில் ஒடிந்து விழுபவள்போல இருப்பவளும், சலிக்கின்ற பதமாகிற தளிரை ஆங்காங்கு செலுத்துகின்றவளும், திக்குகளில் ஓடுகின்ற பந்தின் சாஞ்சல்யங்களினால் மிக்ககலங்கின கருவிழிகளையுடையதாயும், நீண்டதாயும் சலிக்கின்றதாயுமிருக்கின்ற கண்களை உடையவளும், தனது காதுகளினால் அதிகம் ப்ரகாசிக்கும்படி செய்யப்பட்ட குண்டலங்களினால் ப்ரகாசிக்கின்ற கன்னங்களினாலும், கருத்த சுருட்டை மயிர்களினாலும் அலங்கரிக்கப்பட்ட முகத்தை யுடையவளும், அவிழ்ந்த வெண்பட்டையும், அவிழ்ந்த தலைமுடிச்சையும் அழகான இடது கையினால் கட்டிக்

विनिघ्नतीमन्यकरेण कन्दुकं विमोहयन्तीं जगदात्ममायया ॥ २१ ॥ तां
वीक्ष्य देव इति कन्दुकलीलयेषद्व्रीडास्फुटस्मितविसृष्टकटाक्षमुष्टः । स्त्री-
प्रेक्षणप्रतिसमीक्षणविह्वलात्मानात्मानमन्तिक उमां स्वगणांश्च वेद ॥ २२ ॥

तस्याः कराग्रात्स तु कन्दुको यदा गतो विदूरं तमनुव्रजत्स्त्रियाः ।
वासः ससूत्रं लघु मारुतोऽहरद्भवस्य देवस्य किलानुपश्यतः ॥ २३ ॥
एवं तां रुचिरापाङ्गीं दर्शनीयां मनोरमाम् । दृष्ट्वा तस्यां मनश्चक्रे विषज्ज-
न्त्यां भवः किल ॥ २४ ॥ तयापहृतविज्ञानस्तत्कृतस्मरविह्वलः । भवान्या

---

கொள்ளுகின்றவளும், வலது கையினால் பந்தை யடிக்கின்றவளும், தனது மாயையினால் ஜகத்தை மோஹிக்கச் செய்கின்றவளுமான உத்தமஸ்திரீயைக் கண்டார். (18-21) அவளைக் கண்டு ஸ்ரீமஹாதேவன், இம்மாதிரியான பந்து விளையாட்டினாலேற்பட்ட அற்பம் வெட்கங்காரணமாய் வெளியில் தெளிவாகத் தெரியாத மந்தஹாஸத்துடன்கூட வெளியிடப்பட்ட கடாக்ஷத்தினால் வஞ்சிக்கப்பட்டவராகவும், அனதுபற்றியே, தான் அந்த ஸ்திரீயைப் பார்ப்பதும் அவள் திரும்பத் தன்னைப் பார்ப்பதுமான இவற்றால் கலங்கின மனத்தை யுடையவராகவுமாகித் தன்னையும், அருகிலிருக்கின்ற பார்வதியையும், தனது கணங்களையும் மறந்தார் (22)

அவளுடைய கையின் நுனியிலிருந்து அந்தப் பந்தானது எப்பொழுது வெகு தூரம் சென்றுவிட்டதோ அப்பொழுது அப்பந்தை அனுஸரித்து ஓடுபவளான ஸ்திரீயினுடைய, லேசானதும் ஒட்டியாணத்துடன் கூடினதுமான வஸ்திரத்தை மஹாதேவன் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே காற்றானது அபஹரித்துவிட்டது. (23) இவ்விதம் இனிப்பான கடைக்கண் பார்வையை யுடையவளும், பார்க்கத்தக்கவளும், மனத்தைக் கவருகின்றவளுமான அவளைக் கண்ணுற்று கோணலான கடைக்கண்பார்வைகளினால் தன்னை நோக்குகின்றவளான அவளிடத்தில் ஸ்ரீமஹாதேவன் மனத்தைச் செலுத்தினார். (24) அவளாலபஹரிக்கப்பட்ட பகுத்தறிவை யுடையவராகவும், அவளாலுண்டுபண்ணப்பட்ட காமத்தினால் கலங்கினவராகவுமாகி பவானி பார்த்துக்கொண்டிருப்பதையும் பொருட்படுத்தாது லஜ்ஜையற்றவராய் அவளுடைய அருகில்

अपि पश्यन्त्या गतह्रीस्तत्पदं ययौ ॥ २५ ॥ सा तमायान्तमालोक्य विवस्त्रा व्रीडिता भृशम् । निलीयमाना वृक्षेषु हसन्ती नान्वतिष्ठत ॥२६॥ तामन्वगच्छद्भगवान्भवः प्रमुषितेन्द्रियः । कामस्य च वशं नीतः करेणुमिव यूथपः ॥ २७ ॥ सोऽनुव्रज्यातिवेगेन गृहीत्वानिच्छतीं स्त्रियम् । केशबन्ध उपानीय बाहुभ्यां परिषस्वजे ॥ २८ ॥ सोपगूढा भगवता करिणा करिणी यथा । इतस्ततः प्रसर्पन्ती विप्रकीर्णशिरोरुहा ॥ २९ ॥ आत्मानं मोचयित्वाङ्ग सुरर्षभभुजान्तरात् । प्राद्रवत्सा पृथुश्रोणी माया देवविनिर्मिता ॥ ३० ॥ तस्यासौ पदवीं रुद्रो विष्णोरद्भुतकर्मणः । प्रत्यपद्यत कामेन वैरिणेव विनिर्जितः ॥ ३१ ॥ तस्यानुधावतो रेतश्चस्कन्दामोघरेतसः । शुष्मिणो यूथपस्येव वासितामनु धावतः ॥ ३२ ॥

---

சென்றார். (25) அவள் தனதருகில் வருகின்ற அவரைக் கண்டு இடையில் வஸ்திரமற்றவளாக இருப்பதுபற்றி மிக்க வெட்கத்தை யடைந்தவளாய் சிரித்துக்கொண்டு மரங்களில் மறைந்தவளாய் அவரது எதிரில் நிற்கவில்லை. (26) பகவானான மஹாதேவன் அபஹரிக்கப்பட்ட மனத்தை யுடையவராகவும், காமத்தின் வசத்தை யடைவிக்கப்பட்டவராகவுமாகி ஆண்யானை பெண்யானையைக் குறித்துப் போவதுபோல அவளைப் பின்தொடர்ந்துசென்றார்.(27) அவர் அதிகம் வேகமாகப் பின்தொடர்ந்து இஷ்டமில்லாதவளான ஸ்திரீயை தலைமுடிச்சில் பிடித்து அருகிலிழுத்துக் கைகளினால் ஆலிங்கனஞ் செய்துகொண்டார்.(28) ஹே அங்க! ஆண் யானையினால் பெண்யானையானது போல பகவானால் ஆலிங்கனஞ்செய்து கொள்ளப்பட்ட அவள் இங்குமங்குமோடி அவிழ்ந்த தலைமயிரை யுடையவளாய் தேவஸ்ரேஷ்டருடைய கைகளின் நடுவினின்றும் தன்னை விடுவித்துக் கொண்டு பெருத்த இடையையுடையவளும் தேவனால் நிர்மாணஞ் செய்யப்பட்டவளுமான அந்த மாயையானவள் ஓட்டம் பிடித்தாள். (29-30) இந்த ருத்திரன் வைரியான காமனால் ஜயிக்கப்பட்டவர் போல அத்புதமான கர்மத்தையுடைய அந்த விஷ்ணுவின் பதவியைப் பின்பற்றினார். (31) ருதுமதியான பசுவை விரட்டிக்கொண்டு ஓடுகின்ற மதங்கொண்ட காளைமாட்டுக்குப்

यत्र यत्रापतन्मह्यां रेतस्तस्य महात्मनः। तानि रूप्यस्य हेम्नश्च क्षेत्राण्यासन्महीपते ॥ ३३ ॥ सरित्सरस्सु शैलेषु वनेषूपवनेषु च। यत्र क चासन्नृषयस्तत्र संनिहितो हरः ॥ ३४ ॥ स्कन्ने रेतसि सोऽपश्यदात्मानं देवमायया। जडीकृतं नृपश्रेष्ठ संन्यवर्तत कश्मलात् ॥ ३५ ॥ अथावगतमाहात्म्य आत्मनो जगदात्मनः। अपरिज्ञेयवीर्यस्य न मेने तदुहाद्भुतम् ॥ ३६ ॥ तमविक्लवमव्रीडमालक्ष्य मधुसूदनः। उवाच परमप्रीतो बिभ्रत्स्वां पौरुषीं तनुम् ॥ ३७ ॥

श्रीभगवानुवाच—दिष्ट्या त्वं विबुधश्रेष्ठ स्वां निष्ठामात्मना स्थितः। यन्मे स्त्रीरूपया स्वैरं मोहितोऽप्यङ्ग मायया ॥ ३८ ॥ को नु मेऽतितरेन्मायां

---

போல வீண்போகாத வீரியத்தை யுடையவரும் அவளைப் பின்தொடர்ந்து ஓடுகின்றவருமான அவருடைய ரேதஸ்ஸானது நழுவிற்று.

ஹே மஹீபதே! மஹாத்மாவான மஹாதேவனுடைய வீரியமானது எந்த எந்தவிடத்தில் விழுந்ததோ அந்த அந்தவிடங்கள் வெள்ளியும் பொன்னும் விளையுமிடங்களாகவாயின. (33) நதிகளிலோ, ஸரஸ்ஸுகளிலோ, மலைகளிலோ, வனங்களிலோ, தோட்டங்களிலோ எந்த எந்த விடங்களில் ருஷிகளிருந்தனரோ அந்த அந்த விடங்களிலெல்லாம் அவளைப் பின்தொடர்ந்தோடுகின்ற மஹாதேவன் ஸன்னிஹிதராகவானார். (34) ஹே ந்ருபஶ்ரேஷ்ட! ரேதஸ்ஸானது நழுவினதும் அந்த மஹாதேவன் தேவமாயையினால் தன்னை ஜடமாகச் செய்யப்பட்டதாகக் கண்டு கொண்டு மயக்கத்தினின்றும் தெளிந்தார். (35) பிறகு அறியவியலாத வீரியத்தை யுடையவரும் ஜகதாத்மாவுமான பகவானுடைய மாஹாத்மியத்தை யறிந்தவராய்க் கொண்டு தேவமாயையினால் தனக்கேற்பட்ட அந்த ஜடீகரணத்தை ஆஶ்சரியமாகவே எண்ணவில்லை.(36) அவர் வெட்கமற்றவராகவும் ஸ்வஸ்தராகவுமிருப்பதை மதுஸூதனன் கண்டு மிக்க ப்ரீதியை யுடையவராகவாகி தனக்குச் சொந்தமான பௌருஷசரீரத்தைத் தரித்துக்கொண்டு சொல்லவாரம்பித்தார். (37)

ஸ்ரீபகவான் சொல்லலுற்றார்—ஹே விபுதஶ்ரேஷ்ட! ஹே அங்க! என்னுடைய ஸ்திரீரூபமான மாயையினால் மோஹிக்கச்

विषक्तस्त्वदृते पुमान्। तांस्तान्विसृजतीं भावान्दुस्तरामकृतात्मभिः ॥ ३९ ॥ सेयं गुणमयी माया न त्वामभिभविष्यति। मया समेता कालेन कालरूपेण भागशः ॥ ४० ॥ श्रीशुक उवाच—एवं भगवता राजन् श्रीवत्साङ्केन सत्कृतः। आमन्त्र्य तं परिक्रम्य सगणः स्वालयं ययौ ॥ ४१ ॥ आत्मांशभूतां तां मायां भवानीं भगवान्भवः। शंसतामृषिमुख्यानां प्रीत्याचष्टाथ भारत ॥४२॥ अपि व्यपश्यस्त्वमजस्य मायां परस्य पुंसः परदेवतायाः। अहं कलानामृषभो विमुह्ये यया वशोऽन्ये किमुतास्वतन्त्राः

---

செய்யப்பட்டவராக இருந்தபோதிலுங்கூட ஸ்வயமாகவே முந்தின நிலையை நீர் அடைந்தீரென்பது யாதுண்டோ இது தைவாதீனமாக ஏற்பட்டதேயாகும். (38) அந்த அந்த சேஷ்டாவிசேஷங்களையுண்டுபண்ணுகின்றதும், அசுத்தபுத்திகளினுல் ஜயிக்கமுடியாததுமான எனதுமாயையை உம்மைத்தவிர்த்து மோஹபாசத்தால்கட்டுண்டவனுன எந்தப் புருஷன்தான் கடக்கக்கூடியவனுக ஆவான். (39) ஸிருஷ்டியாதிகளுக்கு நிமித்தமான காலத்தினுல் காலரூபியான என்னுடன்கூட ரஜஸ் முதலிய அம்சத்துடன் கலந்தவளும் குணமயியுமான அந்த இந்த மாயையானது உம்மை (ஒருபொழுதும்) ஏமாற்றமாட்டாது என்றுர். (40) ஸ்ரீசுகர் சொல்லலுற்றுர்—ஹே ராஜன்! ஸ்ரீவத்ஸாங்கனுன பகவானுல் இவ்விதம் கௌரவிக்கப்பட்ட மஹாதேவன் அவரை வலம்வந்து விடைபெற்றுக்கொண்டு தனது கணங்களுடன்கூடத் தனது இருப்பிடம் போய்ச்சேர்ந்தார். (41) பிறகு ஹே பாரத! விஷ்ணுவின் அம்சபூதையான அந்த மாயையை ருஷிஸ்ரேஷ்டர்கள் ஸ்துதிக்கும்பொழுது, பகவானுன மஹாதேவன் ப்ரீதியுடன்கூட பவானியைப் பார்த்து "ஹே ப்ரியே! அஜனும் பரதேவதையுமான பரமபுருஷனுடைய மாயையை நீ நேரில் கண்டாயன்றோ? இந்த மாயையினுல் பகவத்விபூதிகளுக்குள் சிறந்தவனும், ஸர்வஸ்வதந்திரனுமான நான்கூட மிக்க மோஹத்தை யடைந்தேனே? இவ்விதமிருக்க மற்ற பாதந்திரர்கள் மோஹத்தையடைவர் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ? ஆயிரக்கணக்கான வருஷங்களின் முடிவில் ஸமாதியினின்றும் ஓய்ந்த என்னைப் பார்த்து "எவரை நீர் த்யானிக்கிறீர்" என

॥ ४३ ॥ यं मामपृच्छस्त्वमुपेत्य योगात्समासहस्रान्त उपारतं वै । स एष साक्षात्पुरुषः पुराणो न यत्र कालो विशते न वेदः ॥४४॥ श्रीशुक उवाच- इति तेऽभिहितस्तात विक्रमः शार्ङ्गधन्वनः । सिन्धोर्निर्मथने येन धृतः पृष्ठे महाचलः ॥ ४५ ॥ एतन्मुहुः कीर्तयतोऽनु शृण्वतो न रिष्यते जातु समुद्यमः क्वचित् । यदुत्तमश्लोकगुणानुवर्णनं समस्तसंसारपरिश्रमापहम् ॥ ४६ ॥ असदविषयमङ्घ्रिं भावगम्यं प्रपन्नानमृतममरवर्यानाशयत्सिन्धुमथ्यम् । कपटयुवतिवेषो मोहयन्यः सुरारींस्तमहमुपसृतानां कामपूरं नतोऽस्मि ॥ ४७ ॥

इति श्रीमद्भागवते महापुराणेऽष्टमस्कन्धे शङ्करमायामोहनवर्णनं नाम द्वादशोऽध्यायः ॥ १२ ॥



---

நீ கேட்டாயோ, பரிபூர்ணராக இருப்பதுபற்றி எவரிடத்தில் காலமானது ப்ரவேசிக்காதோ, விஷயமாகவாகாததுபற்றி வேதமானது எவரிடத்தில் ப்ரவேசிக்காதோ அந்தப் புராணபுருஷரேதான் இவர் எனவறிந்துகொள்'' என்றார். (42-44) ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—ஹே தாத! ஸமுத்திரத்தைக் கடையும்பொழுது எவரால் முதுகில் பெரிய மலையானது சுமக்கப்பட்டதோ அந்தச் சார்ங்கபாணியினுடைய பராக்கிரமமானது இவ்விதம் உனக்குச் சொல்லப்பட்டது. (45) இதை அடிக்கடி எவன் சொல்லுகின்றானோ எவன் ஶ்ரவணஞ்செய்கின்றானோ அவனுடைய முயற்சியானது ஒருபொழுதும் வீண்போகமாட்டாது. மேலும் உத்தமஶ்லோகனான பகவானுடைய குணானுவர்ணனம் என்பது யாதுண்டோ இது ஸம்ஸாரமூலமேற்படும் எல்லா ஶ்ரமத்தையும் போக்கிவிடும். (46) அஸாதுக்களுக்கு விஷயமாகவாகாததும், பக்தியினால் மட்டும் அறியக்கூடியதுமான சரணத்தில் ப்ரபன்னர்களான தேவஶ்ரேஷ்டர்களுக்கு, எவர் பொய்யான ஸ்திரீவேஷத்தை எடுத்துக்கொண்டு அசுரர்களை மோஹிக்கச்செய்து ஸமுத்திரமதனத்திலிருந்துண்டான அமிருதத்தைப் பானம்பண்ணி வைத்தாரோ, பக்

தர்களின் காமத்தைப் பூர்த்தி செய்துவைக்கின்ற அவரை நான் நமஸ்கரித்தவனாக இருக்கின்றேன் என்றார். (47) (எ—று)

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண அஷ்டமஸ்கந்தத்தில் சங்கரமாயாமோஹன வர்ணனமென்ற பன்னிரண்டாவது அத்தியாயம் முற்றிற்று.



## எட்டாவது ஸ்கந்தார்த்த சங்கிரஹம்.

### நாராயணீயம்.

(அ—கை) ஆபத்காலத்தில் ஸ்ரீஹரியினிடத்தில் மனத்தைச் செலுத்தலானது தர்மஸாரத்தின் அம்சமாகும் என்பதைக் கஜேந்திர திருஷ்டாந்தத்தினால் காண்பிக்கப் போகின்றவராய் முதலில் இந்தக் கஜேந்திரனுடைய முந்தின ஜன்மத்தின் கதையை இரண்டு சுலோகங்களினால் உபதேசிக்கிறார்—

इन्द्रद्युम्नः पाण्ड्यखण्डादिराज-
स्त्वद्भक्तात्मा चन्दनाद्रौ कदाचित् ।
त्वत्सेवायां मग्नधीरालुलोके
नैवागस्त्यं प्राप्तमातिथ्यकामम् ॥ १ ॥

(ப—ரை) पाण्ड्यखण्डादिराजः=பாண்டிய தேசத்தின் ஆதிராஜனும், त्वद्भक्तात्मा=உம்மிடம் பக்திவாய்ந்த மனதுள்ளவனும் चन्दनाद्रौ=சந்தனமலையில் அதாவது:—மலயபர்வதத்தில் त्वत्सेवायाम्=உமது ஸேவையில் मग्नधीः=ஈடுபட்ட மனதுள்ளவனுமான इन्द्रद्युम्नः=இந்திரத்யும்னன் என்பவன் कदाचित्=ஒருஸமயம், आतिथ्यकामम्=ஆதித்யத்தில் விருப்பமுள்ளவராய் प्राप्तम्=தனதருகில்வந்த अगस्त्यम्=அகஸ்த்யரை नैवालुलोके=பார்க்காதவனாகவே இருந்தான்.

कुम्भोद्भूतः संभृतक्रोधभारः
स्तब्धात्मा त्वं हस्तिभूयं भजेति ।
शप्त्वाऽथैनं प्रत्यगात्सोऽपि लेभे
हस्तीन्द्रत्वं त्वत्स्मृतिव्यक्तिधन्यम् ॥ २ ॥

(ப—ரை) कुम्भोद्भूत:=அகஸ்த்யர், संभृतक्रोधभार: = விருத்தி யடைந்த கோபாதிக்கியத்தை யுடையவராய் "स्तब्धात्मा = வினய மற்றமனத்தை யுடைய त्वम्=நீ हस्तिभूयम्=யானையாக இருத்தலை भज=அடையக்கடவாய்" इति=என एनम्=இந்த இந்திரத்யும்னனை शप्त्वा=சபித்துவிட்டு अथ=பிறகு प्रत्यगात् = திரும்பிப் போய்விட்டார். सोऽपि=அந்த இந்திரத்யும்னனும் त्वत्स्मृतिव्यक्तिधन्यम् = உமது நினைவின் ப்ரகாசத்தினால் தன்யமான=சிறந்ததான, हस्तीन्द्रत्वम्=சிறந்த யானையாக இருத்தலை लेभे=அடைந்தான். (2) (எ—று)

दुग्धाम्भोधेर्मध्यभाजि त्रिकूटे
क्रीडन् शैले यूथपोऽयं वशाभिः ।
सर्वान् जन्तूनत्यवर्तिष्ट शक्त्या
त्वद्भक्तानां कुत्र नोत्कर्षलाभः ॥ ३ ॥

(ப—ரை) अयम्=இந்த யானையானது दुग्धांभोधे := பாற்கடலினுடைய मध्यभाजि=நடுவையடைந்த त्रिकूटे=த்ரிகூடமென்ற शैले= மலையில் यूथप:=யானைக்கூட்டத் தலைவனாகவாகி वशाभि:=பெண்யானைகளுடன் கூட क्रीडन्=விளையாடிக்கொண்டு शक्त्या=தனது பலத்தினால் सर्वान्=ஸமஸ்தமான जन्तून्=ப்ராணிகளையும்விட अत्यवर्तिष्ट= மேன்மை பெற்று வலித்து வந்தது. त्वद्भक्तानाम्=உமது பக்தர்களுக்கு कुत्र=எந்த விடத்தில்தான் उत्कर्षलाभ:=மேன்மையின் லாபமானது न=ஏற்படமாட்டாது? எங்குமேற்படத்தான் செய்யும்.(3)

स्वेन स्थेम्ना दिव्यदेहत्वशक्त्या
सोऽयं खेदानप्रजानन् कदाचित् ।
शैलप्रान्ते घर्मतान्तः सरस्यां
यूथैः सार्धं त्वत्प्रणुन्नोऽभिरेमे ॥ ४ ॥

(ப—ரை) सोऽयम्=அந்த இந்த யானையானது स्वेन=தன்னிடத்தில் மட்டுமமைந்துள்ள स्थेम्ना=பலத்தினாலும், दिव्यदेहत्वशक्त्या= திவ்யதேஹம் பெற்றிருத்தலாலமைந்த சக்தியினாலும். खेदान्=அதிகம் வலுவுள்ள வேறு ப்ராணிகள்மூலமேற்படும் பீடைகளை अप्रजानन्=அறியாததாக விருந்துகொண்டு कदाचित्=ஒருஸமயம், घर्मता-

न्त:=வெய்யிலினால் களைத்து शैलप्रान्ते=ருதுமான் என்ற மலையின் அடிச்சாரலிலுள்ள सरस्याम्=குளத்தில் त्वत्प्रणुन्न:=தனது பதத்தை யடைவிக்கப்போகின்ற ஈஸ்வரரான உம்மால் ஏவப்பட்டதாய்க் கொண்டு यूथै: सार्धम्=தனது பரிவாரங்களுடன் கூட अभिरेमे= விளையாடிற்று. (4) (எ-று)

हूहूस्तावद्देवलस्यापि शापात्
ग्राहीभूतस्तज्जले वर्तमानः ।
जग्राहैनं हस्तिनं पाददेशे
शान्त्यर्थं हि श्रान्तिदोऽसि स्वकानाम् ॥ ५ ॥

(ப-ரை) तावत्=அதே காலத்தில் देवलस्य=தேவலர் என்ற மஹாருஷியின் शापात्=சாபத்தினால் ग्राहीभूत:=முதலையாகவாகி तज्जले=அந்தக் குளத்தின் ஜலத்தில் वर्तमान:=வஸிக்கின்ற हूहू:= ஹூஹூ என்ற கந்தர்வன் एनम्=இந்த हस्तिनम्=யானையை पाददेशे=கால்ப்ரதேசத்தில் जग्राह=பிடித்துக்கொண்டான். (त्वम्=நீர்) शान्त्यर्थम्=விஷயத்தில் வைராக்கியமுண்டாவதற்கு வேண்டி स्वकानाम्=பக்தர்களுக்கு श्रान्तिद:=கஷ்டத்தைத் தருகின்றவராக असि हि=இருக்கின்றீரன்றோ? (5) (எ-று)

त्वत्सेवाया वैभवाद्दुर्निरोधं
युद्ध्यन्तं तं वत्सराणां सहस्रम् ।
प्राप्ते काले त्वत्पदैकाग्र्यसिद्ध्यै
नक्राक्रान्तं हस्तिवीरं व्यधास्त्वम् ॥ ६ ॥

(ப-ரை) त्वत्सेवाया:=உமது ஸேவையின் वैभवात्=மஹிமையினால் वत्सराणां सहस्रम्=ஆயிரம் வருஷங்கள்முடிய दुर्निरोधम्=எவ்விதத் தடையுமின்றி युद्ध्यन्तम्=சண்டையிடுகின்ற तम्=அந்த हस्तिवीरम्=கஜஶ்ரேஷ்டனை काले=ப்ராரப்தகாலத்தின் முடிவுகாலமானது प्राप्ते=வந்தபொழுது त्वत्पदैकाग्र्यसिद्ध्यै=முந்தின பிறவியில் செய்த உமது சரணஸமாதியின் பலனான மோக்ஷத்தின் ஸித்தியேற்படவேண்டி त्वम्=நீர் नक्राक्रान्तम्=முதலையினால் ஜயிக்கப்பட்டவனாக व्यधा:=செய்தீர். (6) (எ-று)

आर्तिव्यक्तप्राक्तनज्ञानभक्तिः
शुण्डोत्क्षिप्तैः पुण्डरीकैस्समर्चन् ।
पूर्वाभ्यस्तं निर्विशेषात्मनिष्ठं
स्तोत्रश्रेष्ठं सोऽन्वगादीत्परात्मन् ॥ ७ ॥

(ப–ரை) परात्मन्!=ஹே பரமாத்மன்! आर्तिव्यक्तप्राक्तनज्ञान-भक्तिः-आर्ति=முதலை பிடித்ததன்மூலமேற்பட்ட பீடையினால் व्यक्त=ப்ரகாசத்தை யடைந்த प्राक्तन = முற்பிறவியிலேற்பட்ட ज्ञान-भक्तिः=ஞானம் பக்தி இவற்றை யுடையவனான सः=அந்தக் கஜேந்திரன் शुण्डोत्क्षिप्तैः=துதிக்கையினால் உயர எறியப்பட்ட पुण्डरीकैः=தமரஸபுஷ்பங்களால் समर्चन्=பூஜித்துக்கொண்டு पूर्वाभ्यस्तम्=முற்பிறவியிலப்யஸிக்கப்பட்டதும், निर्विशेषात्मनिष्ठम् = நிர்க்குணப்ரம்ஹத்தை விஷயமாகக் கொண்டதுமான स्तोत्रश्रेष्ठम्=சிறந்த ஸ்தோத்திரத்தை अन्वगादीत्=செய்தான். (7) (எ–று)

श्रुत्वा स्तोत्रं निर्गुणस्थं समस्तं
ब्रह्मेशाद्यैर्नाहमित्यप्रयाते ।
सर्वात्मा त्वं भूरिकारुण्यवेगात्
तार्क्ष्यारूढः प्रेक्षितोऽभूः पुरस्तात् ॥ ८ ॥

(ப–ரை) निर्गुणस्थम् = நிர்க்குணப்ரம்ஹத்தை விஷயமாகக் கொண்ட समस्तम्=முழு स्तोत्रम् = ஸ்தோத்திரத்தையும் श्रुत्वा=கேட்டு ब्रह्मेशाद्यैः=ப்ரம்ஹா சிவன் முதலியோர்களால் अहम्=நான் न=இந்த ஸ்தோத்திரத்துக்கு விஷயமன்று इति=என अप्रयाते=வராத பொழுது, सर्वात्मा=யாவற்றுக்கும் அந்தர்யாமியான त्वम्=நீர் भूरि-कारुण्यवेगात्=அதிகமான தயைமூலமேற்பட்ட வேகத்தினால் ता-र्क्ष्यारूढः=கருடன் மீதேறிக்கொண்டு पुरस्तात् = அவனுக்கெதிரில் प्रेक्षितः=பார்க்கப்பட்டவராக अभूः=ஆனீர். (8) (எ–று)

हस्तीन्द्रं तं हस्तपद्मेन धृत्वा
चक्रेण त्वं नक्रवर्यं व्यदारीः ।
गन्धर्वेऽस्मिन्मुक्तशापे स हस्ती
त्वत्सारूप्यं प्राप्य देदीप्यते स्म ॥ ९ ॥

(ப-ரை) त्वम्=நீர் तम्=அந்த हस्तीन्द्रम्=கஜேந்திரனை हस्तपद्मेन=பத்மம்போன்ற கையினால் धृत्वा=பிடித்து चक्रेण=சக்கிராயுதத்தினால் नक्रवर्यम्=சிறந்த முதலையை व्यदारीः=பிளந்தீர். अस्मिन्=இந்த முதலையானது मुक्तशापे=சாபத்தினின்றும் விடுபட்டு गन्धर्वे=முன்போல ஹூஹூ என்ற கந்தர்வனாக ஆனபொழுது सः=அந்த हस्ती=யானையானது, त्वत्सारूप्यम्=உமது ஸாரூப்யத்தை प्राप्य=அடைந்து देदीप्यते स्म=மிக ப்ரகாசித்துக் கொண்டிருந்தான். (9) (எ-று)

एतद्वृत्तं त्वां च माञ्च प्रगे यो
गायेत्सोऽयं भूयसे श्रेयसे स्यात् ।
इत्युक्त्वैनं तेन सार्धं गतस्त्वं
धिष्ण्यं विष्णो! पाहि वातलयेश! ॥ १० ॥

(ப-ரை) "एतत्=இந்த वृत्तम्=கஜேந்திர மோக்ஷணரூபமான சரித்திரத்தையும், त्वाञ्च=உன்னையும், माञ्च=என்னையும் यः=எவன் प्रगे=ப்ராதக்காலத்தில் गायेत्=சொல்லுவானோ सोऽयम्=அந்த இவன் भूयसे=அதிகமான श्रेयसे=ஶ்ரேயஸ்ஸையும் பொருட்டு स्यात्=ஆவான்" इति=என एनम्=இந்தக் கஜேந்திரனை उक्त्वा=சொல்லிவிட்டு तेन सार्धम्=அவனுடன் கூட यस्त्वम्=எந்த நீர் धिष्ण्यम्=வைகுண்டத்தை गतः=அடைந்தீரோ அந்த वातालयेश!=குருவாயூருக்கதிபதியான ஹே ஈச! विष्णो!=ஹே விஷ்ணோ! पाहि=என்னைக் காப்பீராக. (10) (எ-று)

இவ்விதம் நாராயணீயத்தில் கஜேந்திரமோக்ஷணவர்ணனமென்ற இருபத்தாறுவது தசகம் முற்றிற்று.

---

## இருபத்தேழாவது தசகம்.

(அ-கை) பிறகு ஸம்பத்தானது இருக்கும் பொழுது அந்த ஸம்பத்தை தனது ஆத்மாவுடன் கூட அர்த்திகளிடத்தில் அர்ப்பணஞ் செய்யவேண்டும் என்ற இந்த தர்மமானது ஸமுத்திர திருஷ்டாந்தத்தினால் ப்ரகாசப்படுத்தப்படுகிறது. அந்த ஸமுத்திர மோவெனில் அர்த்திகளான தேவாஸுரர்களையும் பொருட்டு தன்னைக் கடைதல்மூலம் எல்லா ஸம்பத்தையும் ஸமர்ப்பணஞ் செய்தி

ருக்கிறது. என்பதைச் சொல்லவேண்டி ஸமுத்திரமதனம், அதற்குபயோகமான பகவதவதாரசரிதம் இவற்றைச் சொல்லப்போகின்றவராய் தேவர்களுக்கு துர்வாஸஸ்ஸின் சாபத்தினால் நேர்ந்த ஐஶ்வரியநாசத்தை முதலிரண்டு சுலோகங்களினாலுபதேசிக்கிறார்—

दुर्वासाः सुरवनितासदिव्यमाल्यं
शक्राय स्वयमुपदाय तत्र भूयः ।
नागेन्द्रप्रतिमृदिते शशाप शक्रं
का शान्तिस्त्वदितरदेवतांशभाजाम् ॥ ११ ॥

(ப-ரை) दुर्वासाः=துர்வாஸஸ்ஸானவர், सुरवनितासदिव्यमाल्यम्=தேவஸ்திரீயின்மூலம் அடையப்பட்ட திவ்வியமான மாலையை शक्राय=இந்திரனையும் பொருட்டு स्वयम्=தானாகவே उपदाय=கொடுத்து तत्र=அந்த மலையானது भूयः=பிறகு नागेन्द्रप्रतिमृदिते=ஐராவதமென்ற யானையினால் கசக்கப்பட்டபொழுது शक्रम्=இந்திரனைப் பார்த்து 'நீ ஐஶ்வரியமற்றவனாக ஆகக்கடவாய் என' शशाप=சாபங்கொடுத்தார். त्वदितरदेवतांशभाजाम्=உம்மைக் காட்டிலும் வேறான தேவதையின் அம்சத்தை யடைந்தவர்களுக்கு शान्तिः=பொறுமையானது का=என்னமாக ஏற்படும். (11) (எ-று)

शापेन प्रथितजरेऽथ निर्जरेन्द्रे
देवेष्वप्यसुरजितेषु निष्प्रभेषु ।
शर्वाद्याः कमलजमेत्य सर्वदेवाः
निर्वाणप्रभव समं भवन्तमापुः ॥ १२ ॥

(ப-ரை) निर्वाणप्रभव!=மோக்ஷப்ராப்த்திக்கு ஸ்தானபூதரான ஹே பகவன்! अथ=பிறகு निर्जरेन्द्रे=தேவஶ்ரேஷ்டனான இந்திரன் शापेन=சாபத்தினால் प्रथितजरे=விருத்தியடைந்த ஜரையை=சக்தியின்மையை, யுடையவனாகவான பொழுதும், देवेष्वपि=தேவர்களும் असुरजितेषु=அஸுரர்களால் ஜயிக்கப்பட்டு निष्प्रभेषु=சோபையற்றவர்களாக ஆனபொழுதும், शर्वाद्याः=மஹாதேவனை ஆதியாகக் கொண்ட सर्वदेवाः=எல்லாத் தேவர்களும் कमलजम्=ப்ரம்ஹதேவனை एत्य=அடைந்து समम्=அவருடன் கூட भवन्तम्=உம்மை आपुः=அடைந்தனர் (12) (எ-று)

ब्रह्माद्यैर्नुतमहिमा चिरं तदानीं
प्रादुःष्यन् वरद पुरः परेण धाम्ना ।
हे देवाः दितिजकुलैर्विधाय सन्धिं
पीयूषं परिमथतेति पर्यशास्त्वम् ॥ १३ ॥

(ப-ரை) वरद!=ஹே வரத! तदानीम्=அப்பொழுது ब्रह्माद्यैः=ப்ரம்ஹா முதலியோரால் चिरम्=வெகுகாலம் नुतमहिमा=ஸ்துதிக்கப்பட்ட மஹிமையை யுடையவரான त्वम्=நீர் परेण धाम्ना=மேலான காந்தியுடன் पुरः=அவர்களுக்கெதிரில் प्रादुःष्यन्=தோற்றத்தை யடைந்தவராய் "हे देवाः!=ஹே தேவர்காள்! दितिजकुलैः=அஸுரகுலங்களுடன் सन्धिम्=ஸ்னேஹத்தை विधाय=செய்துகொண்டு पीयूषम्=அமிருதத்தை(அடையவேண்டி) परिमथत=கடையுங்கள்" इति=என்று पर्यशाः=கட்டளையிட்டீர். (13) (எ-று)

सन्धानं कृतवति दानवैः सुरौघे
मन्थानं नयति मदेन मन्दराद्रिम् ।
भ्रष्टेऽस्मिन् बदरमिवोद्वहन् खगेन्द्रे
सद्यस्त्वं विनिहितवान् पयःपयोधौ ॥ १४ ॥

(ப-ரை) सुरौघे=தேவக்கூட்டமானது, दानवैः=அஸுரர்களுடன் सन्धानम्=ஸ்னேஹத்தை कृतवति=செய்துகொண்டு मदेन=மதத்துடன் मन्थानम्=மத்தான मन्दराद्रिम्=மந்தரமலையை नयति=கொண்டுபோகும் பொழுது अस्मिन्=இந்த மலையானது भ्रष्टे=தேவாஸுரர்களின் கையிலிருந்து நழுவினதும், त्वम्=நீர், सद्यः=அப்பொழுதே (एनम्=இந்த மலையை) बदरमिव=இலந்தைப் பழத்தைப் போல खगेन्द्रे=கருடன்மீது उद्वहन्=எற்றி வைத்துக்கொண்டு पयःपयोधौ=பாற்கடலில் विनिहितवान्=ஸ்தாபித்தீர். (14) (எ-று)

आधाय द्रुतमथ वासुकिं वरत्रां
पाथोधौ विनिहितसर्वबीजजाले ।
प्रारब्धे मथनविधौ सुरासुरैस्तै-
र्व्याजात्त्वं भुजगमुखेऽकरोस्सुरारीन् ॥ १५ ॥

(ப-ரை) अथ=பிறகு वासुकिम्=வாஸுகி என்ற ஸர்ப்பத்தை वरत्राम्=கடையும் கயிறாக आधाय=செய்து विनिहितसर्वबीजजाले= போடப்பட்ட ஸமஸ்தமான செடி கொடி முதலியவற்றின் பீஜஸமூஹத்தையுடையதான पाथोधौ=பாற்கடலில் तैः=அந்த सुरासुरैः=தேவாஸுரர்களினால் मथनविधौ=கடைதல் என்ற காரியமானது द्रुतम्= சீக்கிரமாக प्रारब्धे=ஆரம்பிக்கப்பட்டபொழுது त्वम्=நீர், *व्याजात्= கபடமாக सुरारीन्=அஸுரர்களை भुजगमुखे=வாஸுகியின் வாயில் अकरोः=செய்தீர். (15) (எ-று)

क्षुब्धाद्रौ क्षुभितजलोदरे तदानीं
दुग्धाब्धौ गुरुतरभारतो निमग्ने ।
देवेषु व्यथिततमेषु तत्प्रियैषी
प्राणैषीः कमठतनुं कठोरपृष्ठाम् ॥ १६ ॥

(ப-ரை) तदानीम्=அப்பொழுது क्षुब्धाद्रौ=சுத்தம்படி செய்யப்பட்ட மலையானது क्षुभितजलोदरे=கலங்கும்படி செய்யப்பட்ட ஜலத்தின் உள்ப்ரதேசத்தையுடைய दुग्धाब्धौ=பாற்கடலில் गुरुतर-भारतः=அதிகமான சுமைகாரணமாக निमग्ने=முழுகிப் போனவுடனும், देवेषु=தேவர்கள் व्यथिततमेषु=மிகக் கஷ்டத்தை யடைந்தவர்களானதும் (त्वम्=நீர்) तत्प्रियैषी=அவர்களுக்கு ப்ரியத்தைச் செய்ய இச்சையுள்ளவராய் कठोरपृष्ठाम्=மிகக்கெட்டியான முதுகையுடைய कमठतनुम्=ஆமையின் சரீரத்தை प्राणैषीः=எடுத்துக்கொண்டீர்.(16)

वज्रातिस्थिरतरकर्परेण विष्णो !
विस्तारात् परिगतलक्षयोजनेन ।
अम्भोधेः कुहरगतेन वर्ष्मणा त्वं
निर्मग्नं क्षितिधरनाथमुन्निनेथ ॥ १७ ॥

---

* ஹரியானவர் தேவர்களுடன் கூட "பாம்பின் வால் அமங்களமானது" என உரத்துச் சொல்லிக் கொண்டு முதலில் பாம்பின் தலையைப் பிடித்தார். பிறகு அஸுரர்கள் நாங்கள் சிறந்தவர்களாதலால் பாம்பின் வாலைப் பிடிக்கமாட்டோமென மௌனமாக இருக்கும் பொழுது அவர்களை மிகப்புகழ்ந்து விஷமயமான நெருப்பைக் கக்குகின்ற பாம்பின் முகத்தைப் பிடிக்கச் செய்தார் என்பது கருத்து.

(ப-ரை) विष्णो!=ஹே விஷ்ணோ! वज्रातिस्थिरतरकर्परेण=வஜ்ரத்தைக் காட்டிலும் மிகக்கெட்டியான முதுகு ப்ரதேசத்தையுடையதும் विस्तारात्=விஸ்தாரத்தினால்=சுற்றளவினால், परिगतलक्षयोजनेन=அடையப்பட்ட லக்ஷம் யோஜன தூரத்தையுடையதும் अम्भोधेः=ஸமுத்திரத்தினுடைய कुहरगतेन=உள்ளேயடைந்ததுமான वर्ष्मणा=சரீரத்தினால் त्वम्=நீர் निर्मग्नम्=முழுகிப்போன क्षितिधरनाथम्=மந்தரமலையை उन्निनेथ=உயரத்தூக்கினீர். (17) (எ-று)

उन्मग्ने झटिति तदा धराधरेन्द्रे
निर्मेथुर्दृढमिह सम्मदेन सर्वे ।
आविश्य द्वितयगणेऽपि सर्पराजे
वैवश्यं परिशमयन्नवीवृधस्तान् ॥ १८ ॥

(ப-ரை) तदा=அப்பொழுது झटिति=சீக்கிரமாக इह=இந்த धराधरेन्द्रे=பர்வதஶ்ரேஷ்டமானது उन्मग्ने=வெளியில் வந்ததும் सर्वे=யாவரும், सम्मदेन=ஸந்தோஷத்துடன் दृढम्=கெட்டியாக निर्मेथुः=கடைந்தனர். द्वितयगणे=தேவக்கூட்டம் அஸுரக்கூட்டம் இரண்டிலும், सर्पराजेऽपि=வாஸுகியினிடத்திலும் आविश्य=அததற்கேற்றரூபத்துடன் ப்ரவேசித்து [तेषाम्=அவர்களுக்கேற்பட்ட] वैवश्यम्=பீடையை परिशमयन्=சாந்தமாக்கிக் கொண்டு तान्=அவர்களை अवीवृधः=பலம் வீர்யம் முதலியன நிறைந்தவர்களாகச் செய்தீர்.

उद्दामभ्रमणजवोन्नमद्गिरीन्द्र-
न्यस्तैकस्थिरतरहस्तपङ्कजं त्वाम् ।
अभ्रान्ते विधिगिरिशादयः प्रमोदा-
दुद्भ्रान्ता नुनुवुरुपात्तपुष्पवर्षाः ॥ १९ ॥

(ப-ரை) उद्दामभ्रमणजवोन्नमद्गिरीन्द्रन्यस्तैकस्थिरतरहस्तपङ्कजम्-उद्दाम=அதிகமான भ्रमणजव=சுற்றுதலின் வேகத்தினால் उन्नमत्=உயரக்கிளம்புகின்ற गिरीन्द्र=மந்தரமலையில் न्यस्त=வைக்கப்பட்டதும் एक=ஒன்றானதும் स्थिरतर=மிக்க அசைவற்றதுமான हस्तपङ्कजम्=காராவிந்தத்தையுடைய त्वाम्=உம்மை अभ्रान्ते=மேகமார்க்கத்திலிருந்துகொண்டு प्रमोदात्=அதிக ஸந்தோஷத்தினால்

उद्भ्रान्ताः=பரவசர்களான विधिगिरिशादयः=ப்ரம்ஹாசிவன் முதலியோர் उपात्तपुष्पवर्षाः=செய்யப்பட்ட புஷ்பவர்ஷத்தை யுடையவர்களாய் नुनुवुः=ஸ்தோத்திரஞ்செய்தனர். (19) (எ-று)

दैत्यौघे भुजगमुखानिलेन तप्ते
तेनैव त्रिदशकुलेऽपि किञ्चिदार्ते ।
कारुण्यात् तव किल देव वारिवाहाः
प्रावर्षन्नमरगणान् न दैत्यसङ्घान् ॥ २० ॥

(ப-ரை) देव !=ஹே தேவ ! दैत्यौघे = அஸுரக்கூட்டமானது भुजगमुखानिलेन=பாம்பின் வாயிலிருந்துண்டான காற்றினுல் तप्ते=தாபத்தை யடைந்தபொழுது तेनैव=அதே காற்றினுல் त्रिदशकुलेऽपि=தேவக்கூட்டமும் किञ्चिदार्ते=கொஞ்சம் பீடிக்கப்பட்டபொழுதும் तव=உம்முடைய कारुण्यात्=தயையினுல் वारिवाहाः किल=மேகங்கள் अमरगणान्=தேவக்கூட்டங்களிடம் प्रावर्षन्=வர்ஷித்தனவேயன்றி दैत्यसङ्घान् = அஸுரக்கூட்டங்களிடம் न प्रावर्षन्=வர்ஷிக்கவில்லை. (20) (எ-று)

उद्भ्राम्यद्बहुतिमिनक्रचक्रवाळे
तत्राब्धौ चिरमथितेऽपि निर्विकारे ।
एकस्त्वं करयुगकृष्टसर्पराजः
संराजन् पवनपुरेश पाहि रोगात् ॥ २१ ॥

(ப-ரை) उद्भ्राम्यद्बहुतिमिनक्रचक्रवाळे—उद्भ्राम्यत्=உயரக்கிளம்புகின்ற बहु=அதிகங்களான तिमि=பெரிய மீன்களுடையவும் नक्र=முதலைகளுடையவும் चक्रवाळे = கூட்டத்தையுடைய तत्र = அந்த अब्धौ=ஸமுத்திரமானது चिरमथितेऽपि=வெகுகாலம் கடை யப்பட்டபோதிலுங்கூட निर्विकारे=ஸ்வரூபத்தில் எவ்வித மாறுபாட்டையுமடையாததாக இருக்கும்பொழுது त्वम्=நீர் एकः=ஒருவராகவே करयुगकृष्टसर्पराजः= இரண்டு கைகளினுலுமிழுக்கப்பட்ட ஸர்ப்பராஜனை யுடையவராய் संराजन्=விளங்கிக்கொண்டிருந்தீர். ஆகவே पवनपुरेश !=குருவாயூருக்குப்பதியான ஹே கிருஷ்ண ! रोगात्=ரோகத்திலிருந்து (माम्=என்னை) पाहि=காப்பீராக. (21) (எ-று)

இவ்விதம் நாராயணீயத்தில் அமிருதமதனவிஷயத்தில்
தேவாஸுரர்களுக்குச் சக்தியில்லாதபொழுது
பகவானல் செய்யப்பட்ட அமிருதமதனவர்ணனமென்ற
இருபத்தேழாவது தசகம் முற்றிற்று.

## இருபத்தெட்டாவது தசகம்.

**गरळं तरळानलं पुरस्ताज्जलधेरुद्विजगाल कालकूटम् ।**
**अमरस्तुतिवादमोदनिघ्नो गिरिशस्तन्निपपौ भवत्प्रियार्थम् ॥**

(ப-ரை) पुरस्तात्=முதலில் तरळानलम्=அதிகமான நெருப்பையுடைய कालकूटम्=காலகூடமென்ற गरळम्=விஷத்தை जलधेः=ஸமுத்திரத்திலிருந்து उद्विजगाल=வெளிப்படுத்தினீர். अमरस्तुतिवादमोदनिघ्नः=தேவர்களின் ஸ்தோத்திரவாதத்தினுலுண்டான ஸந்தோஷத்திலீடுபட்ட गिरिशः=மஹாதேவன் भवत्प्रियार्थम् = உம்முடைய ப்ரீதியை யடையவேண்டி तत्=அந்த விஷத்தை निपपौ=முற்றிலும் பானஞ்செய்து விட்டார். (22) (எ-று)

**विमथत्सु सुरासुरेषु जाता**
**सुरभिस्तामृषिषु न्यधास्त्रिधामन् ।**
**हयरत्नमभूदथेभरत्नं**
**द्युतरुश्चाप्सरसः सुरेषु तानि ॥ २३ ॥**

(ப-ரை) त्रिधामन्!=ஹே த்ரிதாமன்! सुरासुरेषु=தேவாஸுரர்கள் विमथत्सु=கடையும்பொழுது सुरभिः=காமதேனுவானது जाता=உண்டாயிற்று. ताम्=அதை ऋषिषु=ருஷிகளிடத்தில் न्यधाः=ஒப்படைத்தீர். अथ=பிறகு हयरत्नम्=சிறந்த குதிரையான உச்சைஃஸ்ரவஸ்ஸானது अभूत्=உண்டாயிற்று. इभरत्नम्=யானைகளுள் சிறந்த ஐராவதமும், द्युतरुः=கல்பகவிருக்ஷமும், अप्सरसश्च=அப்ஸரஸ்ஸுகளும் (अभूवन्=உண்டாயின.) तानि=அவற்றை सुरेषु=தேவர்களிடத்தில் न्यधाः=ஒப்படைத்தீர். (23) (எ-று)

**जगदीश भवत्परा तदानीं कमनीया कमला बभूव देवी ।**
**अमलामवलोक्य यां विलोलस्सकलोऽपि स्पृहयांबभूव लोकः ॥**

(ப-ரை) जगदीश ! = ஹே ஜகதீச ! तदानीम् = அப்பொழுது भवत्परा=உம்மிடத்திலீடுபட்டவளும் कमनीया=அழகு வாய்ந்தவளு மான कमला=லக்ஷ்மியென்ற देवी=தேவியானவள் बभूव=வெளிப் பட்டாள். अमलाम्=நிர்த்துஷ்டையான याम्=இவளை अवलोक्य= கண்டு सकलः=ஸமஸ்தமான लोकोऽपि=உலகும் विलोलत्सन्=கலங் கினதாய்க் கொண்டு स्पृहयांबभूव=ஆசைகொண்டது. (24) (எ-று)

**त्वयि दत्तहृदे तदैव देव्यै त्रिदशेन्द्रो मणिपीठिकां व्यतारीत् ।**
**सकलोपहृताभिषेचनीयैर्ऋषयस्तां श्रुतिगीर्भिरभ्यषिञ्चन् ॥**

(ப-ரை) त्वयि=உம்மிடத்தில் दत्तहृदे=செலுத்தப்பட்ட மனத் தையுடையவளான देव्यै=லக்ஷ்மீதேவிக்கு त्रिदशेन्द्रः=தேவேந்திரன் तदैव=அப்பொழுதே मणिपीठिकाम्=மணிமயமான ஆஸனத்தை व्य- तारीत्=கொடுத்தான். सकलोपहृताभिषेचनीयैः=யாவராலும் கொண் டுவரப்பட்டனவும் அபிஷேகத்துக்கு ஸாதனங்களுமான ஒஷதி கும்பம் பவித்திரம் முதலியவற்றினால் श्रुतिगीर्भिः=வேதவார்த்தை களைச் சொல்லிக்கொண்டு ऋषयः=ருஷிகள் ताम्=அவளை अभ्यषिञ्च- न्=அபிஷேகம் செய்துவைத்தனர். (25) (எ-று)

**अभिषेकजलानुपातिमुग्धत्वदपाङ्गैरवभूषिताङ्गवल्लीम् ।**
**मणिकुण्डलपीतचेलहारप्रमुखैस्तामपरादयोऽन्वभूषन् ॥ २६ ॥**

(ப-ரை) अभिषेकजलानुपातिमुग्धत्वदपाङ्गैः=அபிஷேகஜலமா னது விழுந்ததற்குப் பிறகு விழும் ஸ்வபாவத்தையுடையவைகளும் அழகு வாய்ந்தவைகளுமான உமது கடைக்கண் பார்வைகளினால் अवभूषिताङ्गवल्लीम्=அலங்கரிக்கப்பட்ட கொடிபோன்ற அங்கத்தை யுடையவளான ताम्=அந்த லக்ஷ்மியை अमरादयः=தேவர் முதலி யோர், मणिकुण्डलपीतचेलहारप्रमुखैः=மணிமயமான குண்டலம் பீதாம்பரம் முக்தாஹாரம் முதலியவற்றினால் अन्वभूषन्=அலங்கரித் தனர். (26) (எ-று)

**वरणस्रजमात्तभृङ्गनादां दधती सा कुचकुम्भमन्दयाना ।**
**पदशिञ्जितमञ्जुनूपुरा त्वां कलितव्रीलविलासमाससाद ॥**

(ப-ரை) आत्तभृङ्गनादाम्=அடையப்பட்டவண்டுகளின் நாதத்தையுடையதான वरणस्रजम्=வரணமாலையை दधती=கையில் தரிக்கின்ற सा=அவள் कुचकुम्भमन्दयाना=கும்பங்கள் போன்ற ஸ்தனங்கள் நிமித்தமாக மெதுவாகவான நடையையுடையவளாகவும், पदशिञ्जितमञ्जुनूपुरा=கால்களில் சப்திக்கின்ற அழகிய பாதஸரங்களையுடையவளாகவும் ஆகி कलितव्रीलविलासम्=ஏற்பட்டதும் வெட்கத்துடன் கூடினதுமான விலாஸத்தை யுடைத்தாயிருக்கும்படி त्वाम्=உம்மை आससाद=அடைந்தாள். (27) (எ-று)

गिरिशद्रुहिणादिसर्वदेवान् गुणभाजोऽप्यविमुक्तदोषलेशान् ।
अवमृश्य सदैव सर्वरम्ये निहिता त्वय्यनयापि दिव्यमाला ॥

(ப-ரை) गिरिशद्रुहिणादिसर्वदेवान्=மஹாதேவன் ப்ரம்ஹா முதலிய எல்லாத் தேவர்களையும் गुणभाजः=ப்ராகிருதகுணமுள்ளவர்களாக இருப்பதுபற்றி अविमुक्तदोषलेशान्=காமக்குரோதாதி தோஷஸம்பந்த முள்ளவர்களாக अवमृश्य=விசாரித்தறிந்து கொண்டு सदैव=எப்பொழுதுமே सर्वरम्ये=எல்லாக் குணங்களினலும் ரமணீயரான त्वयि=உம்மிடத்தில் अनयापि=இந்தலக்ஷ்மீதேவியினலும் दिव्यमाला=திவ்யமான மாலையானது निहिता=போடப்பட்டது. (28)

उरसा तरसा ममानिथैनां भुवनानां जननीमनन्यभावाम् ।
त्वदुरोविलसत्तदीक्षणश्रीपरिवृष्ट्या परिपुष्टमास विश्वम् ॥

(ப-ரை) अनन्यभावाम्=வேறிடத்தில் புத்தியைச் செலுத்தாதவளும் भुवनानाम्=உலகங்களுக்கு जननीम्=தாயுமான एनाम्=இவளை तरसा=சீக்கிரமாக उरसा=மார்பினல் ममानिथ=பூஜித்தீர். (மார்பில் வஸிக்கும்படி செய்தீர்.) त्वदुरोविलसत्तदीक्षणश्रीपरिवृष्ट्या=உமது மார்பில் ப்ரகாசிக்கின்ற அவளுடைய அழகிய பார்வையின் வர்ஷத்தினல் विश्वम्=உலகமானது परिपुष्टम्=மிகப் புஷ்டியையுடையதாக आस=இருந்தது. (29) (எ-று)

अतिमोहनविभ्रमा तदानीं मदयन्ती खलु वारुणी निरागात् ।
तमसः पदवीमदास्त्वमेनामतिसम्माननया महासुरेभ्यः ॥ ३० ॥

(ப–ரை) तदानीम्=அப்பொழுது अतिमोहनविभ्रमा=மிக்க மோஹிக்கச்செய்தல் என்ற விளையாட்டை யுடையவளும், मदयन्ती=மதத்தைத் தருகின்றவளுமான वारुणी खलु=வாருணீ என்ற தேவியானவள் निरागात्=வெளிப்பட்டாள். तमसः=அக்ஞானத்துக்கு पदवीम्=ஹேதுபூதையான एनाम्=இவளை त्वम्=நீர் अतिसम्माननया=அதிகமான மாரியாதையுடன் கூட महासुरेभ्यः=பெரிய அஸுரர்களையும் பொருட்டு अदाः=கொடுத்தீர். (30) (எ–று)

**तरुणाम्बुदसुन्दरस्तदा त्वं ननु धन्वन्तरिरुत्थितोऽम्बुराशेः ।**
**अमृतं कलशे वहन् कराभ्यामखिलार्तिं हर मारुतालयेश ॥**

(ப–ரை) तदा=அப்பொழுது त्वम्=நீர் तरुणांबुदसुन्दरः=நீருண்ட மேகம் போல அழகு வாய்ந்தவரும் कलशे=குடத்திலுள்ள अमृतम्=அமிருதத்தை कराभ्याम्=இருகைகளினால் वहन्=வஹித்துக்கொண்டும் धन्वन्तरिः=தன்வந்திரியாக अम्बुराशेः=ஸமுத்திரத்திலிருந்து उत्थितो ननु=வெளிவந்தீரன்றோ. ஆகவே मारुतालयेश!=குருவாயூருக்கு ஈசனான ஹே கிருஷ்ண! என்னுடைய अखिलार्तिम्=எல்லாவிதமான கஷ்டத்தையும் हर=போக்குவீராக. (31) (எ–று)

இவ்விதம் நாராயணீயத்தில் அமிருதமதன வர்ணனமென்ற
இருபத்தெட்டாவது தசகம் முற்றிற்று.



## இருபத்தொன்பதாவது தசகம்.

**उद्गच्छतस्तव करादमृतं हरत्सु**
**दैत्येषु तानशरणाननुनीय देवान् ।**
**सद्यस्तिरोदधिथ देव भवत्प्रभावा-**
**दुद्यत्सयूथ्यकलहा दितिजा बभूवुः ॥ ३२ ॥**

(ப–ரை) देव!=ஹே தேவ! उद्गच्छतः=வெளிவருகின்ற तव=உம்முடைய करात्=கையிலிருந்து दैत्येषु=அஸுரர்கள் अमृतम्=அமிருதத்தை हरत्सु=அபஹரித்தபொழுது अशरणान्=ரக்ஷகனற்றவர்களான तान्=அந்த देवान्=தேவர்களை अनुनीय=ஸமாதானப்படுத்

திவிட்டு सद्यः=அப்பொழுதே तिरोदधिथ=நீர் மறைந்துவிட்டீர். दितिजाः=அஸுரர்கள் भवत्प्रभावात्=உம்முடைய ப்ரபாவத்தினல் उद्यत्सयूथ्यकलहाः=உண்டான ஸ்வகோஷ்டி கலஹத்தை யுடையவர்களாக बभूवुः=ஆயினர். (32) (எ—று)

श्यामां रुचापि वयसापि तनुं तदानीं
प्राप्तोऽसि तुङ्गकुचमण्डलभङ्गुरां त्वम् ।
पीयूषकुम्भकलहं परिमुच्य सर्वे
तृष्णाकुलाः प्रतिययुस्त्वदुरोजकुम्भे ॥ ३३ ॥

(ப—ரை) रुचापि=காந்தியினலும் श्यामाम्=கருத்ததும், वयसापि=வயதினலும் श्यामाम्=யௌவனத்தின் நடுவிலிருப்பதும், तुङ्गकुचमण्डलभङ्गुराम्=உன்னதமான ஸ்தனமண்டலத்தினல் வணங்கினதுமான तनुम्=சரீரத்தை त्वम्=நீர் तदानीम्=அப்பொழுது प्राप्तः=அடைந்தவராக असि=ஆனீர். सर्वे=அஸுரர்கள் யாவரும் पीयूषकुम्भकलहम्=அமிருதகலசவிஷயமான கலஹத்தை परिमुच्य=விடுத்து त्वदुरोजकुम्भे=உமது ஸ்தனகலசத்தில் तृष्णाकुलाः=ஏற்பட்ட ஆசையினல் கலங்கினவர்களாக प्रतिययुः=திரும்பினர். (33)

का त्वं मृगाक्षि विभजस्व सुधामिमामि-
त्यारूढरागविवशानभियाचतोऽमून् ।
विश्वस्यते मयि कथं कुलटास्मि दैत्या
इत्यालपन्नपि सुविश्वसितानतानीः ॥ ३४ ॥

(ப—ரை) मृगाक्षि!=மானினுடையது போன்றகண்களை யுடையவளே! त्वम्=நீ का?=யார்? इमाम्=இந்த सुधाम्=அமிருதத்தை विभजस्व=பங்கிடுவாயாக. इति=என்பதாய் आरूढरागविवशान्=அதிகமாக ஏற்பட்டராகத்தினல் பரவசப்பட்டவர்களாய் अभियाचतः=வேண்டிக் கொள்ளுகின்றவர்களான अमून्=இந்த அஸுரர்களை "हे दैत्याः!=ஹே அஸுரர்காள்! நான் कुलटा=மாறுன நடத்தையுள்ளவளாக अस्मि=இருக்கின்றேன். मयि=என்னிடத்தில் कथम्=ஏன் विश्वस्यते=உங்களால் நம்பிக்கை கொள்ளப்படுகிறது" इति=என आलपन्नपि=சொன்னபோதிலுங்கூட सुविश्वसितान्=உம்மிடத்தில் மிக்க நம்பிக்கையுள்ளவர்களாக अतानीः=செய்தீர். (34)

मोदात् सुधाकलशमेषु ददत्सु सा त्वं
दुश्चेष्टितं मम सहध्वमिति ब्रुवाणा ।
पङ्क्तिप्रभेदविनिवेशितदेवदैत्या
लीलाविलासगतिभिः समदाः सुधां ताम् ॥३५॥

(ப—ரை) एषु=இந்த அஸுரர்கள் मोदात्=ஸந்தோஷத்தினுல் सुधाकलशम् = அமிருதகலசத்தை ददत्सु=கொடுத்தபொழுது सा= அந்த மோஹினியான त्वम्=நீர் "मम=என்னுடைய दुश्चेष्टितम्= தவறுன காரியத்தை सहध्वम्=பொருக்கக் கடவீர்களாக" इति= என்று ब्रुवाणा=சொல்லிக்கொண்டும் पङ्क्तिप्रभेदविनिवेशितदेवदैत्या= தனித்தனி பங்க்தியாக அமைக்கப்பட்ட தேவாஸுரர்களை யுடையவளாய் लीलाविलासगतिभिः=அஸுரர்கள் விஷயமான லீலையினுலும், விலாஸத்தினுலும், அவர்களுடைய அருகில் ஸஞ்சரித்தலாலும் அஸுரர்களை வஞ்சித்து (सुरेभ्यः=தேவர்களையும் பொருட்டு) ताम्=ஜராமரணுதிகளைப் போக்கும் அந்த सुधाम्=அமிருதத்தை समदाः=நன்கு கொடுத்தீர். (35) (எ—று)

अस्मास्वियं प्रणयिनीत्यसुरेषु तेषु
जोषं स्थितेष्वथ समाप्य सुधां सुरेषु ।
त्वं भक्तलोकवशगो निजरूपमेत्य
स्वर्भानुमर्धपरिपीतसुधं व्यलावीः ॥ ३६ ॥

(ப—ரை) इयम्=இவள் असुरेषु=அஸுரர்களான अस्मासु=நம்மிடத்தில் अतिप्रणयिनी=அதிகம் விஸ்வாஸமுள்ளவள் इति=என்பதாய் तेषु=அவர்கள் जोषम्=மௌனமாக स्थितेषु=இருக்கும்பொழுது अथ=பிறகு सुरेषु=தேவர்கள் விஷயத்தில் सुधाम्=அமிருதத்தை समाप्य=கொடுத்து முடித்துவிட்டு भक्तवशगः=பக்தர்களுக்கு வசப்பட்டவரான त्वम्=நீர் निजरूपम्=சொந்தமான ரூபத்தை एत्य= அடைந்து अर्धपरिपीतसुधम्=பாதிபானஞ்செய்யப்பட்ட அமிருதத்தை யுடையவனுன स्वर्भानुम्=ராஹுவை व्यलावीः=சக்கிரத்தினுல் கழுத்தில் அருத்தீர். (36) (எ—று)

क्षजः ॥ ६१ ॥ तस्मादेतद्व्रतं भद्रे प्रयता श्रद्धया चर । भगवान्परितुष्टस्ते वरानाशु विधास्यति ॥ ६२ ॥

इति श्रीमद्भागवते महापुराणे अष्टमस्कन्धेऽदितये पयोव्रतवर्णनं नाम षोडशोऽध्यायः ॥ १६ ॥



## अथ सप्तदशोऽध्यायः ॥

श्रीशुक उवाच—इत्युक्ता साऽदिती राजन्स्वभर्त्रा कश्यपेन वै । अन्वतिष्ठद्व्रतमिदं द्वादशाहमतन्द्रिता ॥ १ ॥ चिन्तयन्त्येकया बुद्ध्या महा-

---

ஞும் அவையே. (61) ஆகவே ஹே பத்ரே! இந்த வ்ரதத்தைப் பரிசுத்தையாக இருந்துகொண்டு ஶ்ரத்தையுடன் அனுஷ்டிப்பாயாக. பகவான் பரிதுஷ்டராகவாகி உனக்கு வரன்களைச் சீக்கிரமாகக் கொடுக்கப்போகிறார் என்றார். (62) (எ—று)

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண அஷ்டமஸ்கந்தத்தில் அதிதிக்கு பயோவ்ரதவர்ணனமென்ற பதினாறுவது அத்தியாயம் முற்றிற்று.



## பதினேழாவது அத்தியாயம்.

(அ—கை) ततः सप्तदशेऽदित्या कृते तस्मिन्व्रते हरिः ।
तत्कामपूरणयादौ तत्पुत्रोऽभूदितीर्यते ॥ १ ॥

(க—ரை) அதிதியினால் அந்த வ்ரதமானது செய்யப்பட்டபொழுது ஹரியானவர் அவளுடைய இஷ்டத்தைப் பூர்த்திசெய்துவைக்கவேண்டி முதலில் அவளுக்குப் புத்திரனாகப் பிறந்தார் என இந்தப் பதினேழாவது அத்தியாயத்திலுபதேசிக்கப்படுகிறது. (1)

ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—ஹே ராஜன்! இவ்விதம் தனது பர்த்தாவான கஶ்யபரால் சொல்லப்பட்ட அந்த அதிதியானவள் சோம்பலின்றிப் பன்னிரண்டு தினங்கள்முடிய இந்த வ்ரதத்தை அனுஷ்டித்தாள். (1) ஸ்திரமான புத்தியினால் மஹாபுருஷனை ஈஶ்வரனைச் சிந்தித்துக் கொண்டும், இந்திரியங்களாகிற துஷ்டக்

पुरुषमीश्वरम् । प्रगृह्येन्द्रियदुष्टाश्वान्मनसा बुद्धिसारथिः ॥ २ ॥ मनश्चै-
काग्रया बुद्ध्या भगवत्यखिलात्मनि । वासुदेवे समाधाय चचार ह पयोव्र-
तम् ॥३॥ तस्याः प्रादुरभूत्तात भगवानादिपूरुषः । पीतवासाश्चतुर्बाहुः श-
ङ्खचक्रगदाधरः ॥ ४ ॥ तं नेत्रगोचरं वीक्ष्य सहसोत्थाय सादरम् । ननाम
भुवि कायेन दण्डवत्प्रीतिविह्वला ॥ ५ ॥ सोत्थाय बद्धाञ्जलिरीडितुं स्थिता
नोत्सेह आनन्दजलाकुलेक्षणा । बभूव तूष्णीं पुलकाकुलाकृतिस्तद्दर्शनात्यु-
त्सवगात्रवेपथुः ॥ ६ ॥ प्रीत्या शनैर्गद्गदया गिरा हरिं तुष्टाव सा देव्यदितिः
कुरूद्वह । उद्वीक्षती सा पिबतीव चक्षुषा रमापतिं यज्ञपतिं जगत्पतिम् ॥७॥

अदितिरुवाच—यज्ञेश यज्ञपुरुषाच्युत तीर्थपाद तीर्थश्रवः श्रवणम-
ङ्गलनामधेय । आपन्नलोकवृजिनोपशमोदयाऽऽद्य शं नः कृधीश भगवन्नसि

---

குதிரைகளை கடிவாளரூபமான மனத்தினால் வசப்படுத்திக்கொண்டும், புத்தியை ஸாரதியாகக்கொண்டும், ஏகாக்ரமான புத்தியினால் மனத்தை அகிலாத்மாவும் வாஸுதேவனுமான பகவானிடத்தில் ஒடுங்கும்படி செய்துகொண்டும் பயோவ்ரதத்தை யனுஷ்டித்தாள். (2–3) ஹே தாத! ஆதிபுருஷனான பகவான் பீதாம்பரதாரியாகவும், நான்கு கைகளுள்ளவராகவும், சங்கசக்கிரகதாதரராகவும் அவளுக்கு முன்னிலையில் தோன்றினார். (4) கண்ணுக்குப் புலப்படுகின்ற அவரைக் கண்டு ஆதரவுடன் விரைவாக எழுந்து ப்ரேமையினால் பரவசப்பட்டவளாய் தண்டம் போலச் சரீரத்தினால் பூமியில் விழுந்து வணங்கினாள். (5) பூமியிலிருந்து எழுந்த அவள் (ப்ரீதிபரவசையாக இருப்பதன் மூலம்) ஆனந்தஜலத்தினால் கலங்கின கண்களுள்ளவளாகவும், மயிர்கூச்சலடைந்த தேஹமுள்ளவளாகவும், அவருடைய தரிசனத்தினாலேற்பட்ட அதிகமான ஸந்தோஷத்தினால் சரீரத்தில் ஆட்டத்தை யடைந்தவளாகவுமாகி இருகைகளையும் கூப்பிக்கொண்டு நின்றாளேயன்றி ஸ்தோத்திரம் செய்யச் சக்தியற்றவளாய் மௌனமாக இருந்தாள். (6) ஹே குருத்வஹ! ப்ரஸித்தையான அந்த அதிதிதேவியானவள் யக்ஞபதியும், ஜகத்பதியும் ரமாபதியுமான ஹரியை கண்ணினால் குடிப்பவள்போல ஏறெடுத்துப் பார்க்கின்றவளாய் ப்ரீதியுடன் தழுதழுத்த வார்த்தையினால் மெள்ளமெள்ள ஸ்துதிக்கத் தொடங்கினாள். (7)

दीननाथः ॥८॥ विश्वाय विश्वभवनस्थितिसंयमाय स्वैरं गृहीतपुरुशक्तिगुणाय भूम्ने । स्वस्थाय शश्वदुपबृंहितपूर्णबोधव्यापादितात्मतमसे हरये नमस्ते ॥ ९ ॥ आयुः परं वपुरभीष्टमतुल्यलक्ष्मीर्द्यौर्भूरसाः सकलयोगगुणस्त्रिवर्गः । ज्ञानं च केवलमनन्त भवन्ति तुष्टात्त्वत्तो नृणां किमु सपत्नजयादिराशीः ॥ १० ॥ श्रीशुक उवाच—अदित्यैवं स्तुतो राजन्भगवान्पुष्करेक्षणः । क्षेत्रज्ञः सर्वभूतानामिति होवाच भारत ॥ ११ ॥

---

அதிதி சொல்லலுற்றாள்—ஹே யக்ஞேச! ஹே யக்ஞபுருஷ! ஹே அச்யுத! கங்காதிதீர்த்தத்தைப் பாதத்திலுடையவரே! பரிசுத்தமான கீர்த்தியை யுடையதும் ஸ்ரவணத்தாலேயே மங்களத்தைத் தரக்கூடியதுமான நாமதேயத்தை யுடையவரே! ஆபன்னர் (சரணகதர்)களின் பாபத்தைச் சமனமாக்கவேண்டி வெளிவருபவரே! ஹே ஆத்யரே! ஹே ஈச! ஹே பகவன்! எங்களுக்கு க்ஷேமத்தைச் செய்வீராக. தீனர்களுக்கு நாதனுகவன்றே இருக்கின்றீர். (8) விஸ்வரும், ப்ரபஞ்சத்தின் உத்பத்தி ஸ்திதி நாசத்துக்கு வேண்டி தனதிஷ்டப்படி க்ரஹித்துக்கொள்ளப்பட்ட அதிகம் சக்தியையுடைய மாயையின் குணங்களை யுடையவரும், ஆயினும் ஸ்வஸ்தரும்=நழுவாத ஸ்வரூபத்தை யுடையவரும், நித்யமும் நிலைத்ததுமான பூர்ணபோதத்தினுல் எப்பொழுதுமே போக்கப்பட்ட தன்னிடமுள்ள மாயாரூபமான தமஸ்ஸை யுடையவரும், ஆனதுபற்றியே மஹானும், ஹரியுமான உமக்கு நமஸ்காரம். (9) ஹே அனந்த! ஸந்தோஷத்தை யடைந்தவரான உம்மிடமிருந்து மனிதர்களுக்கு மேலான ஆயுளும்=ப்ரம்ஹாதியரின் ஆயுளும், பிடித்தமான சரீரமும், ஒப்பற்ற லக்ஷ்மியும், தேவலோகம், பூலோகம், பாதாளம் இவைகளும், ஸமஸ்தங்களான யோககுணங்களும்= அணிமாதி ஸித்திகளும், தர்மம் அர்த்தம் காமம் இவைகளும், கேவலமான ஞானமும் உண்டாகின்றன. இவ்விதமிருக்க சத்துரு ஜயாதிரூபமான காமனையானது உண்டாகும் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ? என்றாள். (10) ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—ஹே ராஜன்! பாரத! அதிதியினுல் இவ்விதம் ஸ்துதிக்கப்பட்டவரும், எல்லா ப்ராணிகளுக்கும் அந்தர்யாமியும், புண்டரீகாக்ஷருமான பகவான் பின்வருமாறு சொல்லலுற்றார். (11)

श्रीभगवानुवाच—देवमातर्भवत्या मे विज्ञातं चिरकाङ्क्षितम् । यत्सपत्नैर्हृतश्रीणां च्यावितानां स्वधामतः ॥ १२ ॥ तान्विनिर्जित्य समरे दुर्मदानसुरर्षभान् । प्रतिलब्धजयश्रीभिः पुत्रैरिच्छस्युपासितुम् ॥ १३ ॥ इन्द्रज्येष्ठैः स्वतनयैर्हतानां युधि विद्विषाम् । स्त्रियो रुदन्तीरासाद्य द्रष्टुमिच्छसि दुःखिताः ॥ १४ ॥ आत्मजान्सुसमृद्धांस्त्वं प्रत्याहृतयशःश्रियः । नाकपृष्ठमधिष्ठाय क्रीडतो द्रष्टुमिच्छसि ॥ १५ ॥ प्रायोऽधुना तेऽसुरयूथनाथा अपारणीया इति देवि मे मतिः । यत्तेऽनुकूलेश्वरविप्रगुप्ता न विक्रमस्तत्र सुखं ददाति ॥ १६ ॥ अथाप्युपायो मम देवि चिन्त्यः संतोषितस्य व्रतचर्यया ते । ममार्चनं नार्हति गन्तुमन्यथा श्रद्धानुरूपं फलहेतुक-

---

ஸ்ரீபகவான் சொல்லலுற்ருர்—ஹே தேவமாதாவே! சத்துருக்களிஞல் அபஹரிக்கப்பட்ட ஐஸ்வரியத்தை யுடையவர்களாய் தத்தமது ஸ்தானங்களிலிருந்து விரட்டப்பட்டவர்களான புத்திரர் விஷயமாக உன்ஞல் எது வெகு காலமாக விரும்பப்பட்டதோ அது என்ஞல் அறியப்பட்டதேயாகும். (12) கெட்ட மதமுள்ளவர்களான அந்த அஸுரஶ்ரேஷ்டர்களைப் போரில் ஜயித்துத் திருப்பிப் பெறப்பட்ட ஜயலக்ஷ்மியை யுடையவர்களான புத்திரர்களுடன்கூட ஒரு இடத்தில் இருப்பதற்கு நீ விரும்புகின்றனே. (13) இந்திரனை மூத்தவனுகவுடைய சொந்தப் புத்திரர்களிஞல் யுத்தத்தில் கொல்லப்பட்டவர்களான சத்துருக்களின் ஸ்திரீகளையடைந்து அவர்கள் துக்கிதர்களாகவாகி அழுவதைப் பார்க்கவிரும்புகின்றனே (14) புத்திரர்கள், திரும்பப்பெறப்பட்ட யசஸ்ஸு ஐஸ்வரியம் இவற்றை யுடையவர்களும், மிக்க ஸமிருத்தர்களுமாகவாகி ஸ்வர்க்கத்தையடைந்து விளையாடுவதை நீ பார்க்கவிரும்புகின்றனே. (15) ஹே தேவி! அந்த அஸுரயூதபதிகள் எக்காரணம்பற்றித் தங்களுக்கனுகூலமான காலமாகிற ஈஸ்வரனையுடைய சுக்கிராசாரியர் முதலிய விப்ரர்களிஞல் ரக்ஷிக்கப்பட்டிருக்கின்றனரோ அக்காரணம்பற்றி இப்பொழுது பெரும்பாலும் ஜயிக்கமுடியாதவர்கள் என்பது என்னுடைய எண்ணம். ஆகவே விக்கிரமமானது அவர்கள் விஷயத்தில் சுகத்தைத் தரமாட்டாது. (16) ஆயினும் ஹே தேவி! உன்னுடைய வ்ரதானுஷ்டா

त्वात् ॥ १७ ॥ त्वयार्चितश्चाहमपत्यगुप्तये पयोव्रतेनानुगुणं समीडितः । स्वांशेन पुत्रत्वमुपेत्य ते सुतान्गोप्तास्मि मारीचतपस्यधिष्ठितः ॥ १८ ॥ उपधाव पतिं भद्रे प्रजापतिमकल्मषम् । मां च भावयती पत्यावेवंरूपमवस्थितम् ॥ १९ ॥ नैतत्परस्मा आख्येयं पृष्टयापि कथंचन । सर्वं संपद्यते देवि देवगुह्यं सुसंवृतम् ॥ २० ॥

श्रीशुक उवाच—एतावदुक्त्वा भगवांस्तत्रैवान्तरधीयत । अदितिर्दुर्लभं लब्ध्वा हरेर्जन्मात्मनि प्रभोः ॥ २१ ॥ उपाधावत्पतिं भक्त्या परया कृतकृत्यवत् । स वै समाधियोगेन कश्यपस्तदबुध्यत ॥ २२ ॥

---

னத்தினால் ஸந்தோஷத்தையடைந்த என்னால் உபாயமானது சிந்திக்கவேண்டுவதாக விருக்கிறது. ப்ரதத்தைக்குத் தக்கபடி பலன் தருவதாக இருப்பதுபற்றி என்னுடைய அர்ச்சனமானது வீணுகப்போவது பொருந்தாது. (17) புத்திரர்களின் ரக்ஷணத்துக்கு வேண்டி பயோவ்ரதமூலம் உன்னால் நான் அர்ச்சிக்கப்பட்டேன். அதற்கு அனுகுணமாக ஸ்துதிக்கவும் பட்டேன். மாரீசருடைய தபஸ்ஸிலிருந்துகொண்டு சொந்த அம்சத்தினால் உனக்குப் புத்திரனுக இருக்கும் தன்மையையடைந்து உனது புத்திரர்களை ரக்ஷிக்கப் போகின்றேன். (18) ஹே பத்ரே! இம்மாதிரிரூபமுள்ளவனாய் எதிரிலிருக்கும் என்னைப் பர்த்தாவினிடத்தில் தியானித்துக்கொண்டு பதியும் குற்றமற்றவருமான கஶ்யபப்ரஜாபதியைப் பஜிப்பாயாக. (19) ஹே தேவி! கேட்கப்பட்டபோதிலுங்கூட இது பிறர்க்குச் சொல்லக்கூடியதன்று. தேவரஹஸ்யம் யாவும் நன்கு மறைக்கப்பட்டதாக இருந்தால்தான் பலன் தரக்கூடியதாகும் என்றார். (20)

ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—இவ்வளவு சொல்லிவிட்டு ஹரியானவர் அங்கேயே மறைந்துவிட்டார். அதிதியானவள் அடைதற்கரிதான ப்ரபுவான ஹரியின் பிறவியை தன்னிடத்தில் அடைந்து கிருதகிருத்யைபோல மேலான பக்தியுடன் பதியைப் பஜித்தாள். அந்தக் கஶ்யபரோ ஸமாதியோகத்தினாலேயே அதையறிந்து கொண்டார். (21-22) ஹே ராஜன்! வீண்போகாத ஞானக்கண்ணையுடைய அந்தக் கஶ்யபர், அசையாது நிருத்தப்பட்ட மனத்தை

प्रविष्टमात्मनि हरेरंशं ह्यवितथेक्षणः । सोऽदित्यां वीर्यमाधत्त तपसा चि-
रसंभृतम् । समाहितमना राजन्दारुण्यग्निं यथानिलः ॥ २३ ॥ अदितेर्धि-
ष्ठितं गर्भं भगवन्तं सनातनम् । हिरण्यगर्भो विज्ञाय समीडे गुह्यनामभिः
॥ २४ ॥ ब्रह्मोवाच—जयोरुगाय भगवन्नुरुक्रम नमोऽस्तु ते । नमो ब्रह्म-
ण्यदेवाय त्रिगुणाय नमो नमः ॥ २५ ॥ नमस्ते पृश्निगर्भाय वेदगर्भाय
वेधसे । त्रिनाभाय त्रिपृष्ठाय शिपिविष्टाय विष्णवे ॥ २६ ॥ त्वमादिरन्तो
भुवनस्य मध्यमनन्तशक्तिं पुरुषं यमाहुः । कालो भवानाक्षिपतीश विश्वं
स्रोतो यथाऽन्तः पतितं गभीरम् ॥ २७ ॥ त्वं वै प्रजानां स्थिरजङ्गमानां

---

யுடையவராய் தன்னிடத்தில் ப்ரவேசித்ததும், தபஸ்ஸினுல் வெகு காலமாக ரக்ஷிக்கப்பட்டதுமான ஹரியின் அம்சரூபமான வீரியத்தை, வாயுவானவன் கட்டையில் உரைதல்மூலம் காட்டைப் பொசுக்கக்கூடிய அக்னியைப்போல அதிதியினிடத்தில் செலுத்தினுர். (23) அதிதியினுடைய கர்ப்பத்தை யடைந்து ஸநாதனனை பகவான் வஸிப்பதை ஹிரண்யகர்ப்பர் அறிந்துகொண்டு ரஹஸ்யநாமங்களினுல் அவரை ஸ்துதித்தார். (24) ப்ரம்ஹா சொல்லலுற்றுர்—ஹே உருகாய! ஹே பகவன்! உமது பெருமையை வெளிப்படுத்துவீராக. ஹே உருக்ரம! உமக்கு நமஸ்காரமிருக்கட்டும். ப்ரம்ஹண்யதேவரான உமக்கு நமஸ்காரம். த்ரிகுணரான உமக்கு அடிக்கடி நமஸ்காரம். (25) முந்தின பிறவியில் ப்ருஶ்னி என்பவளுக்குப் புத்திரராக இருந்தவரும், வேதத்தைக் கர்ப்பத்திலுடையவரும், அல்லது வேதங்களில் ப்ரகாசிப்பவரும், ஸர்வத்தையும் ஸிருஷ்டிப்பவரும், மூவ்வுலகையும் வயிற்றிலுடையவரும், மூவ்வுலகங்களுக்கும் மேம்பட்டவரும், சிபிவிஷ்டரும்=சிபிகளான ஜீவர்களுக்கு அந்தர்யாமியும், விஷ்ணுவுமான உமக்கு நமஸ்காரம். (26) பெரிய ப்ரவாஹமானது தன்னுள் விழுந்தவற்றை எவ்விதமிழுக்கின்றதோ இவ்விதமே ஹே ஈச! காலரூபியான நீர் விஶ்வத்தை இழுக்கின்றீர். நீர் உலகுக்கு ஆதியும் அந்தமும் நடுவுமாகிறீர். இந்த உம்மையே அனந்த சக்தியுள்ள புருஷனுகச் சாஸ்திரங்கள் சொல்லுகின்றன. (27) ஹே தேவ! ஸ்தாவரஜங்கம ரூபங்களான ப்ரஜைகளுக்கும், ப்ரஜாபதிகளுக்கும் நீரே உத்பாதகராக

प्रजापतीनामसि संभविष्णुः । दिवौकसां देव दिवश्च्युतानां परायणं नौरिव मज्जतोऽप्सु ॥ २८ ॥

इति श्रीमद्भागवते महापुराणेऽष्टमस्कन्धे अदितिवरदाननिरूपणं नाम सप्तदशोऽध्यायः ॥ १७ ॥



## अथ अष्टादशोऽध्यायः ॥

श्रीशुक उवाच—इत्थं विरिञ्चस्तुतकर्मवीर्यः प्रादुर्बभूवामृतभूरदित्याम् । चतुर्भुजः शङ्खगदाब्जचक्रः पिशङ्गवासा नलिनायतेक्षणः ॥ १ ॥ श्यामावदातो झषराजकुण्डलत्विषोल्लसच्छ्रीवदनाम्बुजः पुमान् । श्रीवत्स-

---

இருக்கின்றீர். ஜலத்தில் முழுகினவனுக்கு ஓடமானதுபோல ஸ்வர்க்கத்திலிருந்து நழுவினவர்களான தேவர்களுக்கு நீரே மேலான ஆஶ்ரயமாகவாகிறீர் என்றார். (28) (எ-று)

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண அஷ்டமஸ்கந்தத்தில் அதிதிவரதான நிரூபணமென்ற பதினேழாவது அத்தியாயம் முற்றிற்று.



## பதினெட்டாவது அத்தியாயம்.

(அ-கை) ततस्त्वष्टादशे भूत्वा वामनः सत्कृतोऽखिलैः ।
यज्ञं गतस्ततस्तेन सत्कृत्योक्तो वरान् वृणु ॥ १ ॥

(க-ரை) பிறகு பகவான் வாமனனுக ஆகி யாவராலும் கொண்டாடப்பட்டவராய் பலியின் யாகத்தை யடைந்தார். பிறகு அந்தப் பலியினுல் புகழப்பெற்று வரன்களைக் கேட்டுக்கொள் என்று சொல்லப்பட்டாரென இந்தப் பதினெட்டாவது அத்தியாயத்திலுபதேசிக்கப்படுகிறது. (1) (எ-று)

ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—இவ்விதம் ப்ரம்ஹதேவனுல் ஸ்துதிக்கப்பட்ட தேவகார்யரூபமான கர்மத்தையும் வீரிய (ப்ரபாவ) த்தையுமுடையவரும், ஜனனமரணமற்றவருமான புமானுன ஹரி

वक्षा वलयाङ्गदोल्लसत्किरीटकाञ्चीगुणचारुनूपुरः ॥ २ ॥ मधुव्रतव्रातवि-
घुष्टया स्वया विराजितः श्रीवनमालया हरिः । प्रजापतेर्वेश्मतमः स्वरो-
चिषा विनाशयन्कण्ठनिविष्टकौस्तुभः॥ ३ ॥ दिशः प्रसेदुः सलिलाशया-
स्तदा प्रजाः प्रहृष्टा ऋतवो गुणान्विताः । द्यौरन्तरिक्षं क्षितिरग्निजिह्वा
गावो द्विजाः संजहृषुर्नगाश्च ॥ ४ ॥ श्रोणायां श्रवणद्वादश्यां मुहूर्तेऽभि-
जिति प्रभुः । सर्वे नक्षत्रताराद्याश्चक्रुस्तज्जन्म दक्षिणम् ॥ ५ ॥ द्वादश्यां

---

யானவர் நான்கு கைகளை யுடையவராகவும், சங்கம் கதை தமாரஸ புஷ்பம் சக்கிரம் இவற்றையுடையவராகவும், பொன்னிறமான வஸ்திரமுள்ளவராகவும், தாமரஸபுஷ்பம் போன்றனவும் நீண்டனவுமான கண்களை யுடையவராகவும், கருத்த நிறமுள்ளவற்றுள் சிறந்தவராகவும், மகராகாரங்களான குண்டலங்களின் காந்தியினுல் ப்ரகாசிக்கின்ற சோபையை முகாரவிந்தத்திலுடையவராகவும், ஸ்ரீவத்ஸமென்ற மருவை மார்பிலுடையவராகவும், கைவளைகளுடனும் தோள்வளைகளுடனும்கூட ப்ரகாசிக்கின்ற கிரீடம் ஒட்டியாணக் கயிறு (பெல்ட்) அழகிய பாதஸரம் இவற்றை யுடையவராகவும், வண்டுகளின் கூட்டங்களினுல் சப்திக்கப்பட்டதும் தன்னிடம் மட்டுமுள்ளதுமான வனமாலையினுல் விளங்கும்படி செய்யப்பட்டவராகவும், கச்யபப்ரஜாபதியின் வீட்டிலுள்ள இருளைத் தனது காந்தியினுல் போக்குகின்றவராகவும், கழுத்திலணியப்பட்ட கௌஸ்துபமணியை யுடையவராகவும் அதிதியினிடத்தில் தோன்றினர். (1-3) அப்பொழுது திக்குகளும், குளங்களும் தெளிந்தன. ப்ரஜைகள் ஸந்தோஷமுற்றனர். ருதுக்கள் தமக்குற்ற குணங்களுடன் கூடின. ஆகாசமும், அந்தரிக்ஷலோகமும், பூமியும், தேவர்களும், பசுக்களும், ப்ராம்ஹணர்களும், மலைகளும் ஸந்தோஷித்தன. (4) ப்ரபுவானவர் பாத்ரபதமாதத்திய சுக்லபக்ஷ த்வாதசியில் சந்திரன் திருவோண நக்ஷத்திரத்திலிருக்கும்பொழுது அதிலும் திருவோணத்தின் முதலாவது அம்சமான அபிஜித் என்ற நக்ஷத்திரத்தில் நல்ல ஸமயத்தில் ஆவிர்ப்பவித்தார். அசுவினீ முதலிய நக்ஷத்திரங்கள், குரு சுக்கிரன் முதலிய தாராகிரஹங்கள் இவற்றை யாதியாகவுடைய சூரியாதிகள்

सवितातिष्ठन्मध्यंदिनगतो नृप । विजया नाम सा प्रोक्ता यस्यां जन्म विदुर्हरेः ॥ ६ ॥

शङ्खदुन्दुभयो नेदुर्मृदङ्गपणवानकाः । चित्रवादित्रतूर्याणां निर्घोषस्तुमुलोऽभवत् ॥ ७ ॥ प्रीताश्चाप्सरसोऽनृत्यन्गन्धर्वप्रवरा जगुः । तुष्टुवुर्मुनयो देवा मनवः पितरोऽग्नयः ॥ ८ ॥ सिद्धविद्याधरगणाः सकिंपुरुषकिन्नराः । चारणा यक्षरक्षांसि सुपर्णा भुजगोत्तमाः ॥ ९ ॥ गायन्तोऽतिप्रशंसन्तो नृत्यन्तो विबुधानुगाः । अदित्या आश्रमपदं कुसुमैः समवाकिरन् ॥ १० ॥ दृष्ट्वाऽदितिस्तं निजगर्भसंभवं परं पुमांसं मुदमाप विस्मिता । गृहीतदेहं निजयोगमायया प्रजापतिश्चाह जयेति विस्मितः ॥ ११ ॥

---

யாவும் அவருடைய பிறவியை சிறப்புடைபதாகச் செய்தன. (ஜன்மமுஹூர்த்தத்தில் வெகு குணங்களுடன் கூடினவர்களாகயிருந்தனர்.) (5) ஹே ந்ருப! எந்த த்வாதசியில் ஹரியின் ஜன்மமேற்பட்டதோ அதுவும் துவாதசியில் பகலிலேயே எனப் பெரியாரெண்ணுகின்றனர். ஆகவே சூரியன் அப்பொழுது நடுப்பகலிலிருந்தான். அந்த த்வாதசி விஜயா என்று சொல்லப்பட்டது. (6)

சங்கம் துந்துபி இவைகளும், மிருதங்கம் பணவம் ஆனகம் இவைகளும் முழங்கின. விசித்திரமான வாதித்ரம் தூர்யம் இவற்றின் சப்தமானது நெருக்கமாகவுண்டாயிற்று. (7) அப்ஸரஸ்ஸுகள் ப்ரீதர்களாய் ஆடினர். கந்தர்வஶ்ரேஷ்டர்கள் பாடினர். முனிகளும், தேவர்களும், மனுக்களும், பிதிருக்களும், அக்னிகளும் ஸ்துதித்தனர். (8) ஸித்தர் வித்யாதரர் இவர்களின் கணங்களும், கிம்புருஷர் கின்னரர் இவர்களுடன்கூடின சாரணர்களும், யக்ஷர் ராக்ஷஸர் இவர்களும், கருடர்களும், நாகஶ்ரேஷ்டர்களும், தேவர்களின் வேலைக்காரர்களும் பாடிக்கொண்டும், மிகப் புகழ்ந்துகொண்டும் ஆடிக்கொண்டும் அதிதியின் ஆஶ்ரமபதத்தைப் புஷ்பங்களினால் வர்ஷித்தனர். (9–10) அதிதியானவள் தனது கர்ப்பத்திலிருந்து வெளிவந்த அந்தப் பரமபுருஷனைக்கண்டு ஆஶ்சரியத்தை யடைந்தவளாய் ஸந்தோஷத்தை யடைந்தாள். கஶ்யபப்ரஜாபதியும் ஆஶ்சரியத்தை யடைந்தவராய் தனது யோகமாயையினால் எடுத்துக்கொ

यत्तद्वपुर्भातिविभूषणायुधैरव्यक्तचिद्व्यक्तमधारयद्धरिः । बभूव तेनैव स
वामनो वटुः संपश्यतोर्दिव्यगतिर्यथा नटः ॥ १२ ॥ तं वटुं वामनं दृष्ट्वा
मोदमाना महर्षयः । कर्माणि कारयामसुः पुरस्कृत्य प्रजापतिम् ॥ १३ ॥
तस्योपनीयमानस्य सावित्रीं सविताब्रवीत् । बृहस्पतिर्ब्रह्मसूत्रं मेखलां क-
श्यपोऽददात् ॥ १४ ॥ ददौ कृष्णाजिनं भूमिर्दण्डं सोमो वनस्पतिः । कौ-
पीनाच्छादनं माता द्यौश्छत्रं जगतः पतेः ॥ १५ ॥ कमण्डलुं वेदगर्भः कु-
शान्सप्तर्षयो ददुः । अक्षमालां महाराज सरस्वत्यव्ययात्मनः ॥ १६ ॥
तस्मा इत्युपनीताय यक्षराट् पात्रिकामदात् । भिक्षां भगवती साक्षादुमा-

---

ள்ளப்பட்ட தேஹத்தையுடைய பரமபுருஷனைப் பார்த்து ஜய=மே ன்மையுடன் விளங்குவீராக, என்று சொன்னூர். (11) அவ்யக்த சித்ரூபரான ஹரியானவர், भाति=காந்தி, முதலியவற்றினுலும் விபூஷணங்களினுலும் ஆயுதங்களினுலும் வ்யக்தமாக=யாவர்க்கும் புலப்படக்கூடியதாக, இருக்கும்படி ப்ரவிசுத்தமான எந்தச் சரீரத்தை எடுத்தாரோ அந்தச் சரீரத்தினுலேயே தாய் தந்தையர் பார்த்துக் கொண்டிருக்கும்பொழுதே திவ்யமான கதியையுடைய நடன்போல அவர் வாமனனுன வடுவாக ஆகிவிட்டார். (12) அந்த வாமனப்ரம்ஹசாரியைக்கண்டு ஸந்தோஷித்த மஹருஷிகள் கஶ்யபரை முன்னிட்டுக்கொண்டு ஜாதகர்மா திகாரியங்களை நடத்திவைத்தனர்.(13) உபனயனம் செய்விக்கப்படுகின்ற அவருக்குச் சூரியன் காயத்ரியை யுபதேசித்தார். ப்ருஹஸ்பதி ப்ரம்ஹஸூத்திரத்தையும், கஶ்யபர் மேகலையையும் (முஞ்ஜிக்கயிறையும்) கொடுத்தனர். (14) பூமி கிருஷ்ணஜினத்தையும், வனங்களுக்குப் பதியான சந்திரன் தண்டத்தையும், தாயான அதிதி கௌபீன = ஆண்குறியை, மறைக்கும் துணியையும், த்யுலோகமானது குடையையும் ஜகத்பதிக்குக் கொடுத்தனர். (15) வேதத்தைக் கர்ப்பத்திலுடைய ப்ரம்ஹதேவன் கமண்டலுவையும் (ஜலபாத்திரத்தையும்) ஸப்தருஷிகள் குசங்களையும் கொடுத்தனர். ஹே மஹாராஜ! குறைவற்ற ஸ்வரூபத்தை யுடையவரான அவருக்கு ஸரஸ்வதியானவள் அக்ஷமாலையைக் கொடுத்தாள். (16) இவ்விதம் உபனயனஞ்செய்விக்கப்பட்டவரான அவருக்குக் குபேரன் பிக்ஷாபாத்திரத்தைக் கொடு

दादम्बिका सती ॥ १७ ॥ स ब्रह्मवर्चसेनैवं सभां संभावितो बटुः । ब्रह्मर्षिगणसंजुष्टामत्यरोचत मारिष: ॥ १८ ॥ समिद्धमाहितं वह्निं कृत्वा परिसमूहनम् । परिस्तीर्य समभ्यर्च्य समिद्भिरजुहोद्द्विजः ॥ १९ ॥

श्रुत्वाश्वमेधैर्यजमानमूर्जितं बलिं भृगूणामुपकल्पितैस्ततः । जगाम तत्राखिलसारसंभृतो भारेण गां सन्नमयन्पदे पदे ॥ २० ॥ तं नर्मदायास्तट उत्तरे बलेर्य ऋत्विजस्ते भृगुकच्छसंज्ञके । प्रवर्तयन्तो भृगवः क्रतूत्तमं व्यचक्षतारादुदितं यथा रविम् ॥ २१ ॥ त ऋत्विजो यजमानः सदस्या हतत्विषो वामनतेजसा नृप । सूर्यः किलायात्युत वा विभावसुः सनत्कु-

---

த்தான். பகவதியும், பதிவ்ரதையுமான உமாம்பிகையானவள் நேரில் வந்து பிக்ஷையைக் கொடுத்தாள். (17) இவ்விதம் மரியாதை செய்யப்பட்டவரும், மாரிஷரும்=ஶ்ரேஷ்டரும், ஆன அந்த வடுவானவர் ப்ரம்ஹதேஜஸ்ஸினால் ப்ரம்ஹருஷிகணங்களால் ஸேவிக்கப்பட்ட ஸபையை அதிக்ரமித்து ப்ரகாசித்தார். (18) குசங்களினால் பரிஸமூஹனத்தை=நான்கு பக்கங்களிலும் சுத்தியை, செய்து ஸ்தாபிக்கபட்டதும் நன்கு ஜ்வாலையுள்ளதாக்கப்பட்டதுமான அக்னியைச் சுற்றிலும் குசங்களினால் பரிஸ்தரணம் போட்டுப் பூஜைசெய்து ஸமித்துக்களினால் வடுவானவர் ஹோமஞ் செய்தார். (19)

பிறகு பலிஷ்டனான பலி ப்ருகுக்களினால் நடத்திவைக்கப்பட்ட அஶ்வமேதகங்ளினால் யாகஞ்செய்வதைக் கேட்டு எல்லாவிதமான பலத்தினாலும் பூர்ணரான பகவான் பாரத்தினால் ஒவ்வொரு அடிவைப்பு தோறும் பூமியை வணங்கும்படி செய்துகொண்டு அவ்விடம் சென்றார். (20) ப்ருகுகச்சம் என்ற பெயருள்ள நர்மதையின் வடகரையில் யாகங்களுள் சிறந்த அஶ்வமேதத்தை நடத்திவைக்கின்ற ருத்விக்குகளான யாதொரு ப்ருகுக்களுண்டோ அவர்கள், ஸமீபத்திலேயே உதயமான ஸூரியனைப் போன்ற அவரைக் கண்டனர். (21) ஹே ந்ருப! அந்த ருத்விக்குகளும், யஜமானனும், ஸபையிலுள்ளவர்களும் வாமனருடைய தேஜஸ்ஸினால் போக்கப்பட்ட தமது தேஜஸ்ஸை யுடையவர்களாய்க் கொண்டு

मारोऽथ दिदृक्षया क्रतोः॥ २२ ॥ इत्थं सशिष्येषु भृगुष्वनेकधा वितर्क्य-
माणो भगवान्स वामनः। छत्रं सदण्डं सजलं कमण्डलुं विवेश बिभ्रद्ध-
यमेधवाटम् ॥ २३ ॥ मौञ्ज्या मेखलया वीतमुपवीताजिनोत्तरम्। जटिलं
वामनं विप्रं मायामाणवकं हरिम् ॥ २४ ॥ प्रविष्टं वीक्ष्य भृगवः सशिष्या-
स्ते सहाग्निभिः। प्रत्यगृह्णन्समुत्थाय संक्षिप्तास्तस्य तेजसा ॥ २५ ॥ यज-
मानः प्रमुदितो दर्शनीयं मनोरमम्। रूपानुरूपावयवं तस्मा आसनमाह-
रत् ॥ २६ ॥ स्वागतेनाभिनन्द्याथ पादौ भगवतो बलिः। अवनिज्यार्चया-
मास मुक्तसङ्गं मनोरमम् ॥ २७ ॥ तत्पादशौचं जनकल्मषापहं स धर्मवि-

---

யாகத்தைப் பார்க்கவேண்டுமென்ற எண்ணத்துடன் சூரியனே வருகின்ருனு? அல்லது அக்னியே வருகின்ருனு? அல்லது ஸனத்குமாரர் வருகின்ருரா? என ஊஹிக்கலாயினர். (22) இவ்விதம் சிஷ்யர்களுடன் கூடின ப்ருகுக்களினுல் பலவிதமாக ஊஹிக்கப்படுகின்றவரும் பகவானுமான அந்த வாமனர் தண்டத்துடன்கூடின குடையையும், ஜலத்துடன் கூடின கமண்டலுவையும் தரித்துக்கொண்டு அஸ்வமேத மண்டபத்தில் நுழைந்தார். (23) முஞ்சிப்புல்லினுல் செய்யப்பட்ட மேகலையினுல் சுத்தப்பட்டவரும், பூநூல்போல தரிக்கப்பட்ட மான்தோலையே உத்தரீயமாக வுடையவரும், ஜடையுள்ளவரும், மாயையினுல் ப்ராம்ஹண மாணவகராகவானவருமான வாமனரான ஹரியானவர் நுழைந்ததைக் கண்டு சிஷ்யர்களுடன்கூடின ப்ருகுக்கள் அவருடைய தேஜஸ்வினுல் திரஸ்கரிக்கப்பட்டவர்களாய்க் கொண்டு அக்னிகளுடன்கூட எழுந்து வரவேற்றனர். (24–25) ரூபத்துக்கொத்த அவயவங்களை யுடையவரும், மனத்தைக் கவரத்தக்கவரும், பார்க்கத் தக்கவருமான அவரைக் கண்டு யஜமானனுன பலி மிக்க ஸந்தோஷத்தை யடைந்தவனுய் அவருக்கு ஆஸனத்தைக் கொடுத்தான். (26) பிறகு பலி நல்வரவு கூறி ஸந்தோஷப்படுத்திப் பகவானுடைய பாதங்களை அலம்பி ஸங்கத்தை யொழித்தவரும் மனத்தை ரமிக்கச் செய்கின்றவருமான அவரை அர்ச்சித்தான். (27) தர்மத்தை யறிந்தவனுன அவன், எந்தத் தீர்த்தத்தை தேவதேவரும் சந்திரமெளளியுமான மஹாதேவன் மேலான பக்தியுடன் தலையினுல் தரித்தாரோ

न्मूर्ध्न्यदधात्सुमङ्गलम्। यद्देवदेवो गिरिशश्चन्द्रमौलिर्दधार मूर्ध्ना परया च भक्त्या ॥ २८ ॥

बलिरुवाच—स्वागतं ते नमस्तुभ्यं ब्रह्मन्किं करवाम ते। ब्रह्मर्षीणां तपः साक्षान्मन्ये त्वार्य वपुर्धरम् ॥ २९ ॥ अद्य नः पितरस्तृप्ता अद्य नः पावितं कुलम्। अद्य स्विष्टः क्रतुरयं यद्भवानागतो गृहान् ॥ ३० ॥ अद्याग्नयो मे सुहुता यथाविधि द्विजात्मज त्वच्चरणावनेजनैः। हतांहसो वार्भिरियं च भूरहो तथा पुनीता तनुभिः पदैस्तव ॥३१॥ यद्यद्वटो वाञ्छसि तत्प्रतीच्छ मे त्वामर्थिनं विप्रसुतानुतर्कये। गां काञ्चनं गुणवद्धाम मृष्टं

---

ஜனங்களின் பாபத்தைப் போக்கக்கூடியதும் மிக்க மங்களமுமான அவருடைய காலலம்பின தீர்த்தத்தைத் தலையில் ப்ரோக்ஷித்துக் கொண்டான். (28)

பலி சொல்லலுற்றான்—ஹே ப்ரம்ஹன்! உமக்கு நல்வரவா? உமக்கு நமஸ்காரம். உமக்கு யாது செய்யவேண்டும். ஹே ஆர்ய! உம்மைச் சரீரமெடுத்த ப்ரம்ஹருஷிகளின் ஸாக்ஷாத் தபஸ்ஸென்றே எண்ணுகிறேன். (29) தாங்கள் எனது கிருஹத்துக்கு வந்தபடியால் இப்பொழுது எனது பிதிருக்கள் திருப்தியடைந்தவர்களாகவாயினர். இப்பொழுது என்னுடைய வம்சம் பரிசுத்தமாக்கப்பட்டது. இப்பொழுது இந்த அஶ்வமேதம் நன்கு அனுஷ்டிக்கப் பட்டதாகவாயிற்று. (30) ஹே த்விஜாத்மஜ! உமது சரணங்களை அலம்பின தீர்த்தங்களினால் போக்கப்பட்ட பாபங்களை யுடையவனான என்னுடைய அக்னிகள் இப்பொழுது விதிதவறாது நன்கு ஹோமஞ் செய்யப்பட்டனவாகவாயின. கோமளங்களான உம்முடைய அடிவைப்புகளினால் பூமியும் அவ்விதமே பரிசுத்தமாக்கப்பட்டிருக்கிறது. (31) ஹே அர்ஹத்தம! ஹே விப்ரஸுத! ஹே வடோ! உம்மை யாசிக்கவந்தவராக எண்ணுகிறேன். எதை எதை விரும்புகின்றீரோ அதை அதை என்னிடமிருந்து பெற்றுக்கொள்ளும். அதாவது:—பூமியையோ, பொன்னையோ, வீட்டையோ, அவ்விதமே குணம் நிறைந்ததும், பரிசுத்தமானதுமான அன்னபானத்தையோ, அல்லது ஹே விப்ர! கன்னிகையையோ, நிறைவு

तथाग्रपेयमुत वा विप्र कन्याम् । ग्रामान्समृद्धांस्तुरगान्गजान्वा रथांस्तथार्हत्तम संप्रतीच्छ ॥ ३२ ॥

इति श्रीमद्भागवते महापुराणेऽष्टमस्कन्धे बलिवामनसंवादकथनं
नामाऽष्टादशोऽध्यायः ॥ १८ ॥

—•:*:•—

## अथ एकोनविंशोऽध्यायः ॥

श्रीशुक उवाच—इति वैरोचनेर्वाक्यं धर्मयुक्तं स सूनृतम् । निशम्य भगवान्प्रीतः प्रतिनन्द्येदमब्रवीत् ॥ १ ॥ श्रीभगवानुवाच—वचस्तवैतज्ज-

---

பெற்ற க்ராமங்களையோ, குதிரைகளையோ, யானைகளையோ, அது போலத் தேர்களையோ பெற்றுக்கொள்ளும் என்றான். (32) (எ—று)

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண அஷ்டமஸ்கந்தத்தில்
பலிவாமனஸம்வாத கதனமென்ற பதினெட்டாவது
அத்தியாயம் முற்றிற்று.



## பத்தொன்பதாவது அத்தியாயம்.

(அ—கை) ऊनविंशे तु हरिणा याचिते च पदत्रये ।
प्रतिश्रुते च बलिना जानन् भृगुरवारयत् ॥ १ ॥

(க—ரை) ஹரியினால் மூன்றடி யாசிக்கப்பட்டதும் பலியினால் தருவதாக ப்ரதிக்ஞை செய்யப்படவே அதையறிந்த சுக்கிராசாரியர் தடுத்தாரென இந்தப் பத்தொன்பதாவது அத்தியாயத்திலுபதேசிக்கப்படுகிறது. (1) (எ—று)

ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—இவ்விதம் தர்மத்துடன்கூடினதும், ஸத்தியமும் ப்ரியமுமான பலியினுடைய வார்த்தையைக் கேட்டு ஸந்தோஷித்த அந்தப் பகவான் அவனைப் புகழ்ந்து இதைச் சொல்

नदेव सूनृतं कुलोचितं धर्मयुतं यशस्करम्। यस्य प्रमाणं भृगवः सांपराये पितामहः कुलवृद्धः प्रशान्तः॥२॥ न ह्येतस्मिन्कुले कश्चिन्निःसत्त्वः कृपणः पुमान्। प्रत्याख्याता प्रतिश्रुत्य यो वाऽदाता द्विजातये॥३॥ न सन्ति तीर्थे युधि चार्थिनार्थिताः पराङ्मुखा ये त्वमनस्विनो नृपाः। युष्मत्कुले यद्यशसामलेन प्रह्लाद उद्भाति यथोडुपः खे॥४॥ यतो जातो हिरण्याक्षश्चरन्नेक इमां महीम्। प्रतिवीरं दिग्विजये नाविन्दत गदायुधः॥५॥ यं

---

லலுற்றூர். (1) ஸ்ரீபகவான் சொல்லலுற்றூர்—*ஹே ஜனதேவ! பரலோகத்துக்குபயோகப்படக்கூடிய தர்மவிஷயத்தில் எந்த உனக்கு ப்ருகுக்களும் உனது பாட்டனும் குலவிருத்தனும், ப்ரசாந்தனுமான ப்ரஹ்லாதரும் ப்ரமாணமோ அந்த உன்னுடைய இந்த வார்த்தையானது குலோசிதமாயும், மிக்க வுண்மைவாய்ந்ததாயும், தர்மத்துடன் கூடினதாயும், யசஸ்ஸைத் தரக்கூடியதாயுமிருக்கிறது. (2) இந்தக் குலத்தில், யாசகனுன ப்ராம்ஹணனுக்குக் கொடுக்க மாட்டேன் என்று சொல்லுபவனுகிற ஸத்துவமில்லாதவனும், முதலில்தருகிறேன் என்று ப்ரதிக்ஞை செய்துவிட்டுப் பிறகு எவன் கொடுப்பதில்லையோ அத்தகைய கிருபணனுமான புருஷன் ஒருவனுமில்லை என்பது உலகப்ரஸித்தமாகவன்ரே இருக்கின்றது. (3) எந்தக் குலத்தில் ஆகாசத்தில் சந்திரன்போல ப்ரஹ்லாதன் நிர்த்துஷ்டமான யசஸ்ஸுடன் ப்ரகாசிக்கின்ருரோ, அந்த உங்கள் குலத்தில், தானஞ்செய்யவேண்டிய ஸமயத்திலோ, யுத்தத்திலோ யாசகனுல் யாசிக்கப்பட்டு எவர்கள் முகத்தைத திருப்பிக்கொள்ளுவரோ அந்த நல்ல மனமற்ற அரசர்கள் இல்லையன்ரே? (4) எந்தக் குலத்தில் பிறந்த ஹிரண்யாக்ஷன் கதையை ஆயுதமாகக்கொண்டு ஒருவனுகவே இந்தப் பூமிமுழுதும் ஸஞ்சரித்து திக்விஜயஞ் செய்யும் ஸமயத்தில் தன்னை எதிர்க்கும் வீரனையடையவில்லையோ (5) பூமியை எடுத்துச் செல்லும்பொழுது வந்தவனுன எவனை

---

* दातुः स्तुतिः स्वयं तुष्टिरित्यादि प्रस्तुतोचितम्। वक्तव्यमिति भिक्षूंस्तु शिक्षयन्नाह वामनः॥१॥ வாமனன், கொடுப்பவனை ஸ்துதித்தல், கிடைத்தது போதுமென்று தான் எண்ணுதல் என்றதாதியான, ப்ரகிருதோபயுக்தமானதைப் பேசவேண்டுமென்பதை யாசகர்களுக்கு இதுமுதல் 16 சுலோகங்களினுலுபதேசிக்கிறவராய்ச் சொல்லுகிருர்.

विनिर्जित्य कृच्छ्रेण विष्णुः क्ष्मोद्धार आगतम् । नात्मानं जयिनं मेने तद्वीर्यं भूर्यनुस्मरन् ॥ ६ ॥ निशम्य तद्वधं भ्राता हिरण्यकशिपुः पुरा । हन्तुं भ्रातृहणं क्रुद्धो जगाम निलयं हरेः ॥ ७ ॥ तमायान्तं समालोक्य शूलपाणिं कृतान्तवत् । चिन्तयामास कालज्ञो विष्णुर्मायाविनां वरः ॥ ८ ॥ यतो यतोऽहं तत्रासौ मृत्युः प्राणभृतामिव । अतोऽहमस्य हृदयं प्रवेक्ष्यामि पराग्दृशः ॥ ९ ॥ एवं स निश्चित्य रिपोः शरीरमाधावतो निर्विविशेऽसुरेन्द्र । श्वासानिलान्तर्हितसूक्ष्मदेहस्तत्प्राणरन्ध्रेण विविग्नचेताः ॥

स तन्निकेतं परिमृश्य शून्यमपश्यमानः कुपितो ननाद । क्ष्मां द्यां दिशः खं विवरान्समुद्रान्विष्णुं विचिन्वन्न ददर्श वीरः ॥ ११ ॥ अपश्य-

---

விஷ்ணுவானவர் வெகு ஶ்ரமத்துடன் ஜயித்தபோதிலும் அதிகமான அவனுடைய வீரியத்தை அடிக்கடி மனத்தில் நினைத்துக்கொண்டு தன்னை ஜயசாலியாக எண்ணவில்லையோ, (6) அவனுடைய வதத்தை ப்ராதாவான ஹிரண்யகசிபு கேள்விப்பட்டு கோபங்கொண்டு முன்னர் ப்ராதாவைக்கொன்றவனைக் கொல்லவேண்டி ஹரியின் இருப்பிடமான வைகுண்டத்தை யடைந்தான். (7) யமனைப் போலச் சூலத்தைக் கையிலெடுத்துக்கொண்டு வருகின்ற அந்த ஹிரண்யகசிபுவைக் கண்டு மாயாவிகளுக்குள் சிறந்தவரும் காலத்தை யறிந்தவருமான விஷ்ணுவானவர் ஆலோசித்தார். (8) நான் எங்கு எங்கு சென்றாலும் அங்கு அங்கெல்லாம் ஜீவர்களுக்கு யமன்போல இவன் வருகின்றான். ஆனதுபற்றி நான் வெளியில் பார்வையை யுடையவனான இவனுடைய மனத்தில் ப்ரவேசிக்கப் போகிறேன் என நிஶ்சயித்துக்கொண்டு ஹே அசுரேந்திர ! மிக்க நடுக்கமுற்ற சித்தத்தை யுடையவரான அவர் மூச்சுக்காற்றில் மறைந்த ஸூக்ஷ்மதேஹத்தை யுடையவராய் அவனுடைய ப்ராணன் வரும் ஓட்டை வழியாக எதிரில் வருகின்ற சத்துருவினுடைய சரீரத்தில் ப்ரவேசித்தார். (9-10)

அந்த ஹிரண்யகசிபு சூன்யமான அவருடைய வீடுமுழுதும் தேடிக் காணாதவனாய்க் கோபங்கொண்டு கர்ஜித்தான். வீரனான அவன் பூமியையும், தேவலோகத்தையும், திக்குகளையும், ஆகாசத்

न्निति होवाच मयान्विष्टमिदं जगत् । भ्रातृहा मे गतो नूनं यतो नावर्तते
पुमान् ॥ १२ ॥ वैरानुबन्ध एतावानामृत्योरिह देहिनाम् । अज्ञानप्रभवो
मन्युरहम्मानोपबृंहितः ॥ १३ ॥ पिता प्रह्लादपुत्रस्ते तद्विद्वान्द्विजवत्सलः ।
स्वमायुर्द्विजलिङ्गेभ्यो देवेभ्योऽदात्स याचितः ॥ १४ ॥ भवानाचरितान्ध-
र्मानास्थितो गृहमेधिभिः । ब्राह्मणैः पूर्वजैः शूरैरन्यैश्चोद्दामकीर्तिभिः
॥ १५ ॥ तस्मात्त्वत्तो महीमीषद्वृणेऽहं वरदर्षभात् । पदानि त्रीणि दैत्येन्द्र

---

தையும், மற்றுமுள்ள இடைவெளிகளையும், ஸமுத்திரங்களையும் தேடினவனுய் விஷ்ணுவைக் கண்டானில்லை. (11) தேடிக்காணு தவனுன அவன், "இந்த ஜகத்தானது என்னுல் தேடப்பட்டுவிட்டது. புருஷன் எங்கிருந்து திரும்புவதில்லையோ அங்கு என் ப்ராதாவைக் கொன்றவன் சென்றுவிட்டான். நிஶ்சயமிது" என்று சொன்னுன். (12) தேஹத்தில் வேரூன்றின அபிமானமுள்ள சூரர்களுக்கு மரணம் வரும்வரை வைரானுபந்தமானது இவ்வளவு தூரம் ஏற்படத்தான் செய்கிறது. அவ்விதமே அக்ஞானத்தாலுண்டானதும் நான் என்ற அபிமானத்தினுல் விருத்தி செய்யப்பட்டதுமான கோபமும் உண்டாகத்தான் செய்யும்.(*) (13) ப்ரஹ்லாத புத்திரனும் ப்ராம்ஹண வாத்ஸல்யமுள்ளவனுமான உனது பிதாவானவன், இவர்கள் ப்ராம்ஹண வேஷந்தரித்த தனது சத்துருக்களான தேவர்களேயொழிய உண்மையான ப்ராம்ஹணர்களன்று என்றதை அறிந்திருந்துங்கூட யாசிக்கப்பட்ட அவன் ப்ராம்ஹணவேஷம் தரித்த தேவர்களையும் பொருட்டு தனது ஆயுளைக் கொடுத்தான். (14) நீயும், கிருஹஸ்தர்களான ப்ராம்ஹணர்களினுலும், முன் பிறந்தவர்களும், சூரர்களும், அதிகமான கீர்த்தியுள்ளவர்களுமான மற்றவர்களாலும் அனுஷ்டிக்கப்பட்ட தர்மங்களை அனுஷ்டித்திருக்கின்றனே. (15) ஆனதுபற்றி ஹே தைத்யேந்திர! வரன் தருபவருள் சிறந்தவனுன உன்னிடமிருந்து எனது காலினுல் அளக்கப்பட்ட மூன்றடிகளையுடைய ஸ்வல்பம் பூமியை யாசிக்கின்றேன். (16) ஹே ராஜன்! கொடையாளியும் ஜகதீஶ்

---

(*) அக்ஞானநிவிருத்திக்கு முந்தி வைரத்தை விடுவதென்பது முட்டாள் தனமேயாகும் என்பது பொருள்.

सम्मितानि पदा मम ॥ १६ ॥ नान्यत्ते कामये राजन्वदान्याज्जगदीश्वरात् । नैनः प्राप्नोति वै विद्वान्यावदर्थप्रतिग्रहः ॥ १७ ॥

बलिरुवाच—अहो ब्राह्मणदायाद वाचस्ते वृद्धसम्मताः । त्वं बालो बालिशमतिः स्वार्थं प्रत्यबुधो यथा ॥ १८ ॥ मां वचोभिः समाराध्य लोकानामेकमीश्वरम् । पदत्रयं वृणीते योऽबुद्धिमान्द्वीपदाशुषम् ॥ १९ ॥ न पुमान्मामुपव्रज्य भूयो याचितुमर्हति । तस्माद्वृत्तिकरीं भूमिं वटो कामं प्रतीच्छ मे ॥ २० ॥

श्रीभगवानुवाच—यावन्तो विषयाः प्रेष्ठास्त्रिलोक्यामजितेन्द्रियम् । न शक्नुवन्ति ते सर्वे प्रतिपूरयितुं नृप ॥ २१ ॥ त्रिभिः क्रमैरसन्तुष्टो द्वी-

---

வரனுமான உன்னிடமிருந்து பிறவற்றை நான் விரும்பவில்லை. வேண்டியவளவு மட்டும் பொருளைப் பெருகின்ற வித்துவான் பாபத்தை யடையமாட்டான் என்ருர். (17)

பலி சொல்லலுற்ருன்—அந்தோ ஹே ப்ராம்ஹணகுமார! உன்னுடைய வாக்குகள் பெரியோர்க்குப் பிடித்தமானவை. நீயோ பாலனும், அக்ஞர்களுக்கொப்பான புத்தியுள்ளவனுமாக இருக்கின்றனை. ஆகவே சொந்த லாபத்தைக் குறித்து உள்ளபடி மூடனாகவே இருக்கின்றனை. (18) உலகங்களுக்கு ஒரே ஈஶ்வரனை என்னை வார்த்தைகளினல் திருப்திசெய்வித்து தீவையே கொடுக்கும் புருஷனிடம் மூன்றடிகளை எவன் வேண்டுகிருனே அவன் புத்தியற்றவனே ஆகிருன். (19) ஹே வடோ! புருஷன் என்னை வந்து ஆஶ்ரயித்து விட்டுத் திரும்பவும் யாசிப்பதற்கு அருஹனல்லன். ஆனதுபற்றி ஜீவனத்தைத் தரக்கூடிய பூமியை இஷ்டப்படி என்னிடமிருந்து பெற்றுக்கொள் என்ருன். (20)

ஸ்ரீபகவான் சொல்லலுற்ருர்—ஹே ந்ருப! மூவ்வுலகிலும் மிக்க ஆசைப்படத்தக்க விஷயங்கள் எத்துணையுண்டோ, அவை யாவும் மனோஜயமற்ற புருஷனைப் பூர்த்திசெய்து வைப்பதற்கு முடியாதனவாக விருக்கின்றன. (21) மூன்றடிகளினல் திருப்தியை யடையாதவன் ஒன்பது வருஷங்களுடன் கூடின த்வீபத்தினுலும், ஏழு சிறந்த த்வீபங்களின் இச்சைகாரணமாய் பூர்த்திசெய்

पेनापि न पूर्यते । नववर्षसमेतेन सप्तद्वीपवरेच्छया ॥ २२ ॥ सप्तद्वीपाधिपतयो नृपा वैन्यगयादयः । अर्थैः कामैर्गता नान्तं तृष्णाया इति नः श्रुतम् ॥ २३ ॥ यदृच्छयोपपन्नेन सन्तुष्टो वर्तते सुखम् । नासन्तुष्टस्त्रिभिर्लोकैरजितात्मोपसादितैः ॥ २४ ॥ पुंसोऽयं संसृतेर्हेतुरसन्तोषोऽर्थकामयोः । यदृच्छयोपपन्नेन सन्तोषो मुक्तये स्मृतः ॥ २५ ॥ यदृच्छालाभतुष्टस्य तेजो विप्रस्य वर्धते । तत्प्रशाम्यत्यसन्तोषादम्भसेवाशुशुक्षणिः ॥ २६ ॥ तस्मात्त्रीणि पदान्येव वृणे त्वद्वरदर्षभात् । एतावतैव सिद्धोऽहं वित्तं यावत्प्रयोजनम् ॥ २७ ॥

श्रीशुक उवाच—इत्युक्तः स हसन्नाह वाञ्छातः प्रतिगृह्यताम् । वामनाय महीं दातुं जग्राह जलभाजनम् ॥ २८ ॥ विष्णवे क्ष्मां प्रदास्य-

---

விக்கப்படமாட்டான். (22) ஏழு தீவுகளுக்கு அதிபதிகளான ப்ருது, கயன் முதலிய அரசர்கள் அர்த்தங்களினாலும் காமங்களினாலும் ஆசையின் முடிவை யடையவில்லை என எங்களால் கேட்கப்பட்டிருக்கிறது. (23) எதிருச்சையாகக் கிடைத்தவற்றினால் ஸந்துஷ்டனான மனிதன் சுகமாக இருக்கிறான். மனோஜயமற்ற அஸந்துஷ்டனோவெனில் கிடைத்த மூவ்வுலகங்களினாலுங் கூடச் சுகமாக இருப்பதில்லை. (24) அர்த்தகாமங்களிலுள்ள இந்த அஸந்தோஷமானது புருஷனுடைய ஸம்ஸாரத்துக்கு (துக்கானுபவத்துக்கு) காரணமாக வாகிறது. எதிருச்சையாகக் கிடைத்தவற்றினால் ஸந்தோஷத்தை யடைகின்றவன் மோக்ஷத்துக்கு யோக்கியன் என எண்ணப்பட்டிருக்கிறான். (25) எதிருச்சா லாபத்தினால் ஸந்துஷ்டனான ப்ராம்ஹணனுக்கு ப்ரம்ஹதேஜஸ்ஸானது விருத்தியை யடைகிறது. ஜலத்தினால் அக்னியானது போல அஸந்தோஷத்தினால் அந்தத் தேஜஸ்ஸானது நசித்துவிடுகிறது. (26) ஆகவே வரனைக் கொடுப்பவர்களுக்குள் சிறந்தவனான உன்னிடமிருந்து மூன்றே அடிகளை நான் யாசிக்கிறேன். இவ்வளவினாலேயே நான் கிருதார்த்தனாகவாகிவிடுவேன். பணமோ தேவைக்கேற்றவரையில் தான் சுகத்தைத் தரும். (அதிகம் கிடைக்குமானாலோ துக்கத்துக்குக் காரணமாகவே யாகும்) என்றார். (27)

न्तमुशना असुरेश्वरम् । जानंश्चिकीर्षितं विष्णोः शिष्यं प्राह विदांवरः ॥ २९ ॥ शुक्र उवाच—एष वैरोचने साक्षाद्भगवान्विष्णुरव्ययः । कश्यपाददितेर्जातो देवानां कार्यसाधकः ॥ ३० ॥ प्रतिश्रुतं त्वयैतस्मै यदनर्थमजानता । न साधु मन्ये दैत्यानां महानुपगतोऽनयः॥ ३१ ॥ एष ते स्थानमैश्वर्यं श्रियं तेजो यशः श्रुतम् । दास्यत्याच्छिद्य शक्राय मायामाणवको हरिः ॥ ३२ ॥ त्रिभिः क्रमैरिमाँल्लोकान्विश्वकायः क्रमिष्यति । सर्वस्वं विष्णवे दत्त्वा मूढ वर्तिष्यसे कथम् ॥ ३३ ॥ क्रमतो गां पदैकेन द्वितीयेन दिवं विभोः । खं च कायेन महता तार्तीयस्य कुतो गतिः॥ ३४ ॥ निष्ठां

---

ஸ்ரீசுகர் சொல்லலுற்ருர்—இவ்விதம் சொல்லப்பட்ட அந்தப் பலி சிரித்துக் கொண்டு "வேண்டியவளவு பெற்றுக்கொள்ளும்" என்று சொன்னன். வாமனனுக்குப் பூமியைக் கொடுக்க வேண்டி ஜலபாத்திரத்தைக் கையிலெடுத்தான். (28) விஷ்ணு செய்யவிரும்பியதை யறிந்தவரும் ஞானிகளுக்குள் சிறந்தவருமான சுக்கிராசாரியர், விஷ்ணுவுக்குப் பூமியைக் கொடுக்கப்போகின்ற சிஷ்யனை அஸுரேச்வரனைக்குறித்துச் சொல்லத்தொடங்கினர். (29) சுக்கிராசாரியர் சொல்லலுற்ருர்—ஹே விரோசனகுமார! இந்த வாமனன் அவ்யயனும் பகவானுமான ஸாக்ஷாத் விஷ்ணுவாகவும் தேவர்களின் காரியங்களை ஸாதிக்கவேண்டி கச்யபருக்கு அதிதியினிடம் உண்டானவராகவுமாவார். (30) அனர்த்தத்தை யறியாதவனை உன்னல் இவரையும் பொருட்டு ப்ரதிக்ஞை செய்யப்பட்டதென்பது யாதுண்டோ இதை நல்லதென நான் எண்ணவில்லை. இது அஸுரர்களுக்கு மஹத்தான அன்னியாயமாகவே நேர்ந்திருக்கிறது. (31) மாயாமாணவகரான இந்தஹரியானவர் உன்னுடைய ஸ்தானம், ஐச்வரியம், ஸ்ரீ, தேஜஸ், யசஸ், சாஸ்திரக்ஞானம் யாவையும் பிடுங்கி இந்திரனையும் பொருட்டுக் கொடுக்கப் போகிருர். (32) ப்ரபஞ்சத்தைச் சரீரமாகவுடைய இவர் மூன்று அடிகளினல் இவ்வுலகங்கள் யாவையும் அளந்துவிடப் போகிருர். ஹே மூட! எல்லாச் சொத்தையும் விஷ்ணுவுக்குக் கொடுத்துவிட்டு எப்படி ஜீவிக்கப் போகின்றனை? (33) ஒரு அடியினல் பூமியையும் இரண்டாவது அடியினல் ஸ்வர்க்கத்தையும், மஹத்தான சரீரத்தினல்

ते नरके मन्ये ह्यप्रदातुः प्रतिश्रुतम् । प्रतिश्रुतस्य योऽनीशः प्रतिपादयितुं भवान् ॥ ३५ ॥ न तद्दानं प्रशंसन्ति येन वृत्तिर्विपद्यते । दानं यज्ञस्तपः कर्म लोके वृत्तिमतो यतः ॥ ३६ ॥ धर्माय यशसेऽर्थाय कामाय स्वजनाय च । पञ्चधा विभजन्वित्तमिहामुत्र च मोदते ॥ ३७ ॥

अत्रापि बह्वृचैर्गीतं शृणु मेऽसुरसत्तम । सत्यमोमिति यत्प्रोक्तं यन्नेत्याहानृतं हि तत् ॥ ३८ ॥ सत्यं पुष्पफलं विद्यादात्मवृक्षस्य गीयते ।

---

ஆகாசத்தையும் விபுவான இவர் அளந்து விடும்பொழுது ப்ரதிக்ஞை செய்யப்பட்ட மூன்றாவது அடிக்கு இடம் எங்கே? (34) ப்ரதிக்ஞை செய்யப்பட்டதைக் கொடாத உனக்கு நரகத்தில்தான் வாஸமேற்படுமென நான் எண்ணுகின்றேன். இந்த நீ ப்ரதிக்ஞை செய்யப்பட்டதைக் கொடுக்க முடியாத வனாகவன்றோ இருக்கின்றனை. (35) எந்தத் தானத்தினால் விருத்தியானது=ஜீவனமானது, கெடுக்கப்படுமோ அந்தத் தானத்தை (பெரியார்) புகழமாட்டார். விருத்தியுள்ள வனுக்கன்றோ உலகில் தானமும், யக்ஞமும், தவமும்=சித்தைகாக்ரியமும், பூர்த்தம் முதலிய கர்மமுமேற்படும். (36) தர்மத்தையும் பொருட்டும், யசஸ்ஸையும் பொருட்டும், அர்த்தத்தையும் (கோசவிருத்தியையும்) பொருட்டும், காமத்தையும் பொருட்டும், சொந்த ஜனத்தையும் பொருட்டுமாக ஐந்துவிதமாகத் தனத்தைப் பங்கிடுபவன் இம்மையிலும் மருமையிலும் ஸந்தோஷத்தை யடைகிறான். (37)

(முதலில் தருவதாக ப்ரதிக்ஞை செய்துவிட்டுப் பிறகு இல்லை என்று எவ்விதம் பொய் சொல்லக்கூடும் என்பாயேல் சொல்லுகிறேன் கேளு.) ஹே அஸுரோத்தம! இவ்விஷயத்தில்=ஸத்யம் அந்ருதம் இவற்றின் வ்யவஸ்தா விஷயத்தில், ருக்வேதிகளினால் சொல்லப்பட்டதைக் கேளு. முதலில் "ஆம்" என அங்கீகரித்து எது சொல்லப்பட்டதோ அது ஸத்யமாகவும், "இல்லை" என்று எது சொல்லப்பட்டதோ அது அந்ருதமாகவும்=பொய்யாகவும், அன்றோ ஆகும். (38) ஸத்யத்தைச் சரீரமாகிற விருக்ஷத்துக்குப் புஷ்பமாகவும் பழமாகவும் அறிந்து கொள்ளவேண்டும் எனச் சொல்லப்படுகிறது. விருக்ஷமானது=தேஹமானது, ஜீவிக்காவிடில்

वृक्षेऽजीवति तन्न स्यादनृतं मूलमात्मनः ॥ ३९ ॥ तद्यथा वृक्ष उन्मूलः शुष्यत्युद्वर्ततेऽचिरात् । एवं नष्टानृतः सद्य आत्मा शुष्येन्न संशयः ॥४०॥ पराग्रिक्तमपूर्णं वा अक्षरं यत्तदोमिति । यत्किञ्चिदोमिति ब्रूयात्तेन रिच्येत

---

அந்தப் புஷ்பமும் பழமும் இருக்கமாட்டா. தேஹமாகிற மரத்துக்கு அம்ருதமானது=பொய்யானது, வேராகவாகும். (39) மரமானது வேருடன் பிடுங்கப்படுமாயின் பட்டுவிடுவதுடன் அப்பொழுதே கீழில் விழுந்தும் விடுகிறது என்பது எப்படியோ இப்படியே நஷ்டமான அம்ருதத்தை யுடைய சரீரமானது அப்பொழுதே பட்டுப் போய்விடும். இதில் ஸந்தேஹமில்லை. (40) * "ஆம்"

---

* ஸர்வவிதத்தாலும் சொல்லப்படும் ஸத்யவசனத்தினால் தேஹமானது நிர்வஹிக்க-நிலைத்திருக்கக்கூடியதாக, ஆகமாட்டாது என்பதைத் தெளிவுபடுத்தவேண்டி ஸத்யவிஷயமான தோஷங்களையும், அம்ருதவிஷமான குணங்களையும் இதுமுதல் இரண்டு சுலோகங்களினால் சொல்லுகிறார். ஸத்யாம்ருதவிஷயமாக ருக்வேதசுருதியில் சொல்லியிருப்பது பின்வருமாறு—

"ओमिति सत्यं नेत्यनृतं तदेतत्पुष्पं फलं वाचो यत्सत्यम्। सहीश्वरो यशस्वी कल्याणकीर्तिर्भविता, पुष्पं हि फलं वाचः सत्यं वदति। अथैतन्मूलं वाचो यदनृतम्। तद्यथा—वृक्ष आविर्मूलः शुष्यति स उद्वर्तते। एवमेवानृतं वदन्नाविर्मूलमात्मानं करोति स शुष्यति स उद्वर्तते। तस्मादनृतं न वदेत् दयेत त्वेतेन" ஓம்=தருகிறேம், என அங்கீகரித்தல் ஸத்யமாகும். பிறகு இல்லை என்பது பொய்யாகும். ஸத்யமென்பது யாதுண்டோ இது வாக்கினது புஷ்பமும் பழமுமாகும். ஸத்தியஞ் சொல்லும் மனுஷ்யன் ஈசுவரனும், யசஸ்வியும், நல்ல கீர்த்தியுள்ளவனுமாவான். வாக்கின் புஷ்பமும் பழமுமான ஸத்தியத்தையன்றோ சொல்லுகிறான். பிறகு பொய்யென்பது யாதுண்டோ இது வாக்கின் வேராகவாகிறது. அது எவ்விதமெனின் கூறுவாம். வெளியிலெடுக்கப்பட்ட வேரையுடைய மரமானது உலர்ந்து விடுகிறது. அந்த விருக்ஷம் கீழிலும் விழுந்து விடுகிறது என்பது எவ்விதமோ இவ்விதமே பொய் சொல்லுகின்றவன் தனது ஆத்மாவை—தேஹத்தை, வேரற்றதாகச் செய்து விடுகிறான். அது உலர்ந்தும் விடுகிறது. அது கீழிலும் விழுந்துவிடுகிறது. ஆனதுபற்றிப் பொய்யைச் சொல்லலாகாது. ஆனாலோ இந்த அம்ருதத்தினால் दयेत=ஸங்கடம் வந்தகாலத்தில் சரீரத்தை ரக்ஷித்துக்

वै पुमान् । भिक्षवे सर्वमोङ्कुर्वन्नालं कामेन चात्मने ॥ ४१ ॥ अथैतत्पूर्ण-
मभ्यात्मं यच्च नेत्यनृतं वचः । सर्वं नेत्यनृतं ब्रूयात्स दुष्कीर्तिः श्वसन्मृतः

தருகிறேன், என்பதான யாதொரு அக்ஷரமுண்டோ அது பராக்காக=சொல்லுகின்றவனுடைய பணத்தைக் கிரஹித்துக்கொண்டு வெகுதூரத்தில் போகிவிடுகிறதாக, ஆவதுபற்றி ரிக்தமாக=பூர்த்தியைத் தராததாக, ஆகிவிடுகிறது. ஆகவே எந்தப்புருஷன் யாசகனையும் பொருட்டு யாதேனுமொன்றைத் தருகிறேன் என்று சொல்லுகின்றானோ அவன் அந்தப் பொருளினால் ரிக்தனாக=குறைவையடைந்தவனாக, ஆகிவிடுகிறான். (41) இவ்விதமிருக்க ஸர்வத்தையும் யாசகனுக்குத் தருவதாகச் சொல்லுகின்றவன் தன்னையும் பொருட்டுள்ள காமத்தினால் பூர்ணனாகவாகமாட்டான். அதாவது:—அவனுக்குப் போகமானது ஸித்திக்கமாட்டாது என்றும். பிறகு "இல்லை" என்ற யாதொரு அந்ருதவசனமுண்டோ இது பொருளுக்கு நாசமில்லாமைபற்றி பூர்ணமாகவும், தனக்கு எதிரில் பிறரது பணத்தைக் கொண்டுவந்து சேர்ப்பதுபற்றி அப்யாத்மமாகவும் ஆகிறது. (எவன் எப்பொழுதும் எனக்கு ஒன்றுமேயில்லை. கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கிறேன் எனச் சொல்லுகின்றானோ அவனன்றோ அந்த அந்ருதத்தினால் பிறருடைய அர்த்தங்களை ஆகர்ஷித்து விடுகிறான் என்பது உலகப்ரஸித்தம். அங்ஙனமாயின் இந்தப் பொய்யையே எப்பொழுதுமே ஸேவிப்போமென்றாலோ) எவனொருவன் ஸர்வமும் இல்லை என்று பொய் சொல்லுகின்றானோ

கொள்ளலாம் என்றும். இந்தச் சுருதியிலிருந்து அந்ருதம் சொல்லுவதே கூடாதென்றும், அந்ருதஞ்சொன்னால் அல்லாது சரீரத்துக்கு வரும் ஸங்கடம் தீராது என்ற ஸமயத்தில் மட்டும் சரீரஜீவனத்திலுள்ள தயைகாரணமாய் அந்ருதம் ஸம்மதிக்கப்படுகிறது என்றும் வெளியாகிறது. இவ்விதமிருப்பினும் சுக்கிராசாரியர் வாக்குக்குப் பதிலாகச் சரீரத்தைச் சொல்லி இந்தச் சரீரமாகிற மரத்துக்கு ஸத்யமானது புஷ்பமும் பழமுமாகும் என்றும் அந்ருதமானது வேராகவாகுமென்றும் கூறி வேரில்லாவிடில் மரம் பட்டுவிடுவதைத் திருஷ்டாந்தமாகக் காட்டி அந்ருதத்தால்தான் சரீரம் ஜீவிக்கும் எனத் திருத்திப் பொருள் கூறி முடிவில் எட்டுவிதமான ஸங்கடம் நேர்ந்த காலத்தில் பொய் சொல்லுவது தவறாகாது என்றும் சொன்னாரென்று ஏற்படுகிறது.

॥ ४२ ॥ स्त्रीषु नर्मविवाहे च वृत्त्यर्थे प्राणसङ्कटे । गोब्राह्मणार्थे हिंसायां नानृतं स्याज्जुगुप्सितम् ॥ ४३ ॥

इति श्रीमद्भागवते महापुराणेऽष्टमस्कन्धे वामनचरित्रनिरूपणं नाम एकोनविंशोऽध्यायः ॥ १९ ॥



## अथ विंशोऽध्यायः ॥

श्रीशुक उवाच—बलिरेवं गृहपतिः कुलाचार्येण भाषितः । तूष्णीं भूत्वा क्षणं राजन्नुवाचावहितो गुरुम् ॥ १ ॥ बलिरुवाच—सत्यं भगवता

---

அவன் கெட்ட கீர்த்தியை யுடையவனுய் மூச்சுவிடும் பிணமேயாவான். (42) ஆகவே ஸ்திரீகளிடத்திலும்=ப்ரோத்ஸாஹனஞ் செய்தல்மூலம் அவர்களை வசப்படுத்தும் விஷயத்திலும், பரிஹாஸ ஸமயத்திலும், விவாஹவிஷயத்திலும்=வரன் கன்னிகை இவர்களை ஸ்துதிக்கும் விஷயத்திலும், ஜீவனவிஷயத்திலும், ப்ராணனுக்கு ஸங்கடம் நேரும்பொழுதும், பசுக்களுக்கும் ப்ராம்ஹணர்களுக்கும் ஹிதம் செய்யும் விஷயத்திலும், ஒருவனுக்கு ஹிம்ஸையானது ப்ராப்தமானபொழுதும் சொல்லும் பொய்யானது வெறுக்கத்தக்கதாக வாகமாட்டாது. (43) (எ-று)

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண அஷ்டமஸ்கந்தத்தில் வாமன சரித்திர நிரூபணமென்ற பத்தோன்பதாவது அத்தியாயம் முற்றிற்று.

—•••*•••—

## இருபதாவது அத்தியாயம்.

(அ-கை) विंशे त्वनृतभीतोऽसौ ज्ञात्वापि कपटं हरेः ।
ददावेव ततो विष्णुस्सहसाऽवर्धताद्भुतम् ॥ १ ॥

(க-ரை) பொய் பேசுவதில் பயந்தவனுன இந்தப் பலி ஹரியின் கபடத்தை யறிந்திருந்தபோதிலுங்கூட அவர் கேட்டதைக் கொடுக்கவே செய்தான். தானத்தைப் பெற்ற பின்னர் விஷ்ணு

प्रोक्तं धर्मोऽयं गृहमेधिनाम् । अर्थं कामं यशो वृत्तिं यो न बाधेत कर्हि-
चित् ॥ २ ॥ स चाहं वित्तलोभेन प्रत्याचक्षे कथं द्विजम् । प्रतिश्रुत्य ददा-
मीति प्राह्लादिः कितवो यथा ॥ ३ ॥ नह्यसत्यात्परोऽधर्म इति होवाच
भूरियम् । सर्वं सोढुमलं मन्ये ऋतेऽलीकपरं नरम् ॥ ४ ॥ नाहं बिभेमि
निरयान्नाधन्यादसुखार्णवात् । न स्थानच्यवनान्मृत्योर्यथा विप्रप्रलम्भनात्
॥ ५ ॥ यद्यद्धास्यति लोकेऽस्मिन्संपरेतं धनादिकम् । तस्य त्यागे निमित्तं

---

வானவர் ஆஸ்சரியமாக இருக்கும்படி சீக்கிரமாக வளர்ந்தார் என இந்த இருபதாவது அத்தியாயத்திலுபதேசிக்கப்படுகிறது. (1)

ஸ்ரீசுகர் சொல்லலுற்ருர்—ஹே ராஜன்! குலாசாரியராலிவ் விதம் சொல்லப்பட்ட கிருஹபதியான பலி க்ஷணகாலம் மௌன மாகவிருந்து வினயத்துடன் குருவைப் பார்த்துச் சொல்லலுற் ருன். (1) பலி சொல்லலுற்ருன்—எதானது அர்த்தத்தையும், கா மத்தையும், யசஸ்ஸையும், ஜீவிகையையும் ஒருபொழுதும் பாதிக் கமாட்டாதோ இதன்ருே கிரஹஸ்தர்களின் தர்மமாகும் என்று பகவானுன உம்மால் எது சொல்லப்பட்டதோ அது உண்மையே. (2) ப்ரஹ்லாதகுலத்தில் பிறந்த அந்தநான் அயோக்கியன்போலத் தருகிறேன் என முதலில் ப்ரதிக்ஞை செய்துவிட்டு பணத்திலுள்ள ஆசையினுல் ப்ராம்ஹணனே எவ்விதம் மறுத்துக் கூறுவேன். (3) அஸத்யத்தைக் காட்டிலும் மேலான அதர்மமில்லை என்றல்லவோ இந்தப் பூமியானது சொல்லுகிறது. பொய் பேசும் மனிதனைத் தவிர்த்து யாவையும் நான் சுமக்கலாமென வெண்ணுகிறேன். (4) ப்ராம்ஹணனே ஏமாற்றுவதிலிருந்து எவ்விதம் நான் பயப்படுகின் றேனே இவ்விதம் நரகத்தினின்றுமில்லை, தாரித்யத்தினின்றுமில்லை, துக்கஸமுத்திரத்தினின்றுமில்லை, ஸ்தானச்யுதியினின்றும், மர ணத்தினின்றுமில்லை. (5) இவ்வுலகில் தனத்தையாதியாகவுடைய எந்த எந்தப் பொருளுண்டோ அவை யாவும் மிருதனுன புருஷனை விடவே போகிறது. அந்தப் பொருளை உயிருடனிருக்கும்பொழு தே ஏன் கொடுக்கக்கூடாது. (ஆயினும் ஜீவனத்துக்கேற்படும் ஸங்கடத்தைப் பரிஹரிக்கவேண்டி பாதி கொடு என்பீரேல்?) கொடுக்கப்பட்டபோதிலுங்கூட அந்த அர்த்தத்தினுல் ப்ராம்ஹ

किं विप्रस्तुष्येन्न तेन चेत् ॥ ६ ॥ श्रेयः कुर्वन्ति भूतानां साधवो दुस्त्यजासुभिः । दध्यङ्शिबिप्रभृतयः को विकल्पो धरादिषु ॥ ७ ॥ यैरियं बुभुजे ब्रह्मन्दैत्येन्द्रैरनिवर्तिभिः । तेषां कालोऽग्रसील्लोकान्न यशोऽधिगतं भुवि ॥ ८ ॥

सुलभा युधि विप्रर्षे ह्यनिवृत्तास्तनुत्यजः । न तथा तीर्थ आयाते श्रद्धया ये धनत्यजः ॥ ९ ॥ मनस्विनः कारुणिकस्य शोभनं यदर्थिकामोपनयेन दुर्गतिः । कुतः पुनर्ब्रह्मविदां भवादृशां ततो वटोरस्य ददामि

---

ணன் ஸந்தோஷிக்க இடமில்லாமல் போகுமானுல் அப்பாதிப் பொருளின் தியாகத்தில் காரணமென்ன இருக்கின்றது? ஒன்றுமே இல்லை. யாசித்ததைவிட அற்பப்பொருளைக் கொடுத்தல்மூலம் ப்ராம்ஹணனுக்கு ஸந்தோஷமேற்படாமைபற்றித் தானமானது வீணேயாகும். (ஆகவே அவன் கேட்டது யாவையுமேதான் கொடுக்கவேண்டும்.) (6) ததீசி, சிபி முதலிய ஸாதுக்கள் விடமுடியாத ப்ராணன்களைக் கொண்டே ப்ராணிகளுக்கு நன்மையைச் செய்திருக்கின்றனர். இவ்விதமிருக்கப் பூமி முதலியவற்றில் விசாரத்துக்கிடமேது? (7) ஹே ப்ரம்ஹன்! யுத்தத்தில் புறமுதுகு காட்டாதவர்களான எந்த அஸுரஸ்ரேஷ்டர்களினுல் இந்தப் பூமியானது அனுபவிக்கப்பட்டதோ அவர்களின் இஹலோக பரலோகங்களைக் காலமானது விழுங்கிவிட்டது. ஆயினும் பூமியிலடையப்பட்ட யசஸ்ஸை மட்டும் அழிக்கவில்லை. (8)

ஹே விப்ரர்ஷே! யுத்தத்தில் முன்வைத்த காலைப் பின்வைக்காது சரீரத்தை விடுகின்றவர்கள் எளிதில் கிடைப்பர். நல்ல பாத்திரமானது வந்தபொழுது ஶ்ரத்தையுடன் எவர்கள் தனத்தைக் கொடுப்பரோ அத்தகையவர் அவ்விதம் எளிதில் கிடைக்கமாட்டார். (ஆகவே செய்தற்கரிதான தனத்யாகமேதான் என்னுல் செய்யத்தக்கது.) (9) நல்ல மனதுள்ளவனும், கருணை நிறைந்தவனுமானவனுக்குப் பொதுவாக யாசகர்களின் இஷ்டத்தைப் பூர்த்திசெய்து வைத்தல்மூலம் வரும் யாதொரு ஏழ்மையுண்டோ அது சோபனமேயாகும். இவ்விதமிருக்க உம்போன்ற ப்ரம்ஹவித்துக்களின் காமபூர்த்தி செய்தலினுல் வரும் தாரித்ரியம் மங்கள

वाञ्छितम् ॥ १० ॥ यजन्ति यज्ञक्रतुभिर्यमादृता भवन्त आम्नायविधानकोविदाः । स एव विष्णुर्वरदोऽस्तु वा परो दास्याम्यमुष्मै क्षितिमीप्सितां मुने ॥ ११ ॥ यद्यप्यसावधर्मेण मां बध्नीयादनागसम् । तथाप्येनं न हिंसिष्ये भीतं ब्रह्मतनुं रिपुम् ॥ १२ ॥ एष वा उत्तमश्लोको न जिहासति यद्यशः । हत्वा मैनां हरेद्युद्धे शयीत निहतो मया ॥ १३ ॥

श्रीशुक उवाच—एवमश्रद्धितं शिष्यमनादेशकरं गुरुः । शशाप दैवप्रहितः सत्यसन्धं मनस्विनम् ॥ १४ ॥ दृढं पण्डितमान्यज्ञः स्तब्धोऽ-

---

கரமானது என்பதைச் சொல்லவும் வேண்டுமோ? ஆகவே இந்த ப்ரம்ஹசாரியினுடைய இஷ்டத்தைக் கொடுக்கிறேன். (10) *சுருதியில் கூறியுள்ள யாகானுஷ்டான விஷயத்தில் ஸமர்த்தர்களான நீங்கள் ஆதரவுடன் கூடினவர்களாய் யக்ஞங்களாலும் க்ரதுக்களாலும் எவரை ஆராதிக்கின்றீர்களோ வரதரான அதே விஷ்ணுவாகவோ, அல்லது சத்துருவாகவோ(இவர்)இருக்கட்டும். ஹே முனே! இவரையும் பொருட்டு விருப்பப்பட்ட பூமியைக் கொடுக்கப்போகின்றேன். (11) இவர் நிரபராதியான என்னை அதர்மமாக கட்டுவார்: ஆயினுங்கூடப் பயந்தவனும், ஆனதுபற்றியே ப்ராம்ஹணசரீரமெடுத்தவனுமான இந்தச் சத்துருவை நான் ஹிம்ஸிக்கப்போவதில்லை. (12) இந்த உத்தமஸ்லோகனான விஷ்ணு யஸஸ்ஸை விட்டுவிட விரும்பானாயின் போரில் என்னைக் கொன்று இந்தப் பூமியைக் கொண்டுபோவான். அல்லது என்னால் கொல்லப்பட்டு படுக்கவாவது செய்வான் என்றான். (13)

ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—இவ்விதம் தனது வார்த்தையில் ஸ்ரத்தை கொள்ளாதவனும், தனது உத்தரவுப்படி நடவாதவனும், ஸத்யஸந்தனும், மனஸ்வியுமான சிஷ்யனை தைவத்தினலேவப்பட்டவரான குருவான சுக்கிராசாரியர் சபித்தார். (14) அதிகமாகத் தன்னைப் பண்டிதனாக வெண்ணிக்கொண்டவனும், உண்மையில் அக்ஞனும், நம்மை யுபேக்ஷித்ததன்மூலம் வணக்கமற்றவனுமாக

---

* இவன் வடுவென்று. உனது சத்துருவான விஷ்ணுவென்று சொன்னேனே எனின்? அப்படியாயின் நிச்சயமாய்க் கொடுக்கவே செய்வேன் என்று சொல்லுகிறான்.

स्यस्मदुपेक्षया । मच्छासनातिगो यस्त्वमचिराद्भ्रश्यसे श्रियः ॥ १५ ॥ एवं शप्तः स्वगुरुणा सत्यान्न चलितो महान् । वामनाय ददावेनामर्चित्वोदकपूर्वकम् ॥ १६ ॥ विन्ध्यावलिस्तदागत्य पत्नी जालकमालिनी । आनिन्ये कलशं हैममवनेजन्यपां भृतम् ॥ १७ ॥ यजमानः स्वयं तस्य श्रीमत्पादयुगं मुदा । अवनिज्यावहन्मूर्ध्नि तदपो विश्वपावनीः ॥ १८ ॥ तदाऽसुरेन्द्रं दिवि देवतागणा गन्धर्वविद्याधरसिद्धचारणाः। तत्कर्म सर्वेऽपि गृणन्त आर्जवं प्रसूनवर्षैर्ववृषुर्मुदान्विताः ॥ १९ ॥ नेदुर्मुहुर्दुन्दुभयः सहस्रशो गन्धर्वकिंपूरुषकिन्नरा जगुः । मनस्विनानेन कृतं सुदुष्करं विद्वानदाद्यद्रिपवे जगत्त्रयम् ॥ २० ॥ तद्वामनं रूपमवर्धताद्भुतं हरेरनन्त-

---

இருக்கின்றனை. எந்த நீ என்னுடைய கட்டளையை மீறினையோ அந்த நீ சீக்கிரமாய் ராஜ்யஸ்ரீயிலிருந்து நழுவிவிடப் போகின்றனை என்றார். (15) இவ்விதம் தனது குருவினால் சபிக்கப்பட்டபோதிலுங்கூட மஹானான அவன் ஸத்தியத்தினின்றும் சலிக்காதவனாய் பூஜித்து ஜலபூர்வகமாக வாமனனையும்பொருட்டு இந்தப் பூமியைக் கொடுத்தே விட்டான். (16) முத்துக்களால் செய்யப்பட்ட மாலாவிசேஷத்தை யணிந்தவளான விந்த்யாவளி என்ற அவனது பத்னியானவள் அப்பொழுதுவந்து அலம்புவதற்குவேண்டிய ஜலங்கள் நிறைந்ததும் பொன்மயமானதுமான கலசத்தை அருகில் கொண்டுவந்தாள். (17) யஜமானனான பலி தானே ஸந்தோஷத்துடன் காந்தியுள்ள அவருடைய இருகால்களையும் அலம்பி உலகத்தைப் பரிசுத்தஞ்செய்கின்ற அந்த ஜலத்தைத் தலையில் வஹித்தான். (18) அப்பொழுது ஆகாசத்திலுள்ள தேவதாகணங்களும் கந்தர்வர், வித்யாதரர், ஸித்தர், சாரணர் இவர்களுமான யாவரும் ஸந்தோஷத்துடன்கூட அவனுடைய காரியத்தையும், ருஜுவான ஸ்வபாவத்தையும் புகழ்ந்துகொண்டு புஷ்பவர்ஷங்களினால் அஸுரேந்திரனைக் குறித்து வர்ஷித்தனர். (19) துந்துபிவாத்தியங்கள் அடிக்கடி முழங்கின. ஆயிரக்கணக்கான கந்தர்வர், கிம்புருஷர், கின்னரர் இவர்கள் அறிந்திருந்துங்கூட, சத்துருவையும் பொருட்டு மூவ்வுலகையும் எக்காரணம்பற்றிக் கொடுத்தானோ அக்காரணம்பற்றி மனஸ்வியான இவனால் செய்யப்பட்ட செய்தற்கரிதான காரியத்தைக் கொண்டாடினர். (20) பூமி ஆகாசம் திக்குகள் தேவலோகம்

स्य गुणत्रयात्मकम् । भूः खं दिशो द्यौर्विवराः पयोधयस्तिर्यङ्नृदेवा ऋषयो यदासत ॥ २१ ॥

काये बलिस्तस्य महाविभूतेः सहर्त्विगाचार्यसदस्य एतत् । ददर्श विश्वं त्रिगुणं गुणात्मके भूतेन्द्रियार्थाशयजीवयुक्तम् ॥ २२ ॥ रसामचष्टाङ्घ्रितलेऽथ पादयोर्महीं महीध्रान्पुरुषस्य जङ्घयोः । पतत्त्रिणो जानुनि विश्वमूर्तेरूर्वोर्गणं मारुतमिन्द्रसेनः ॥ २३ ॥ सन्ध्यां विभोर्वाससि गुह्य ऐक्षत्प्रजापतीञ्जघने आत्ममुख्यान् । नाभ्यां नभः कुक्षिषु सप्तसिन्धूनुरुक्रमस्योरसि चर्क्षमालाम् ॥ २४ ॥ हृद्यङ्ग धर्मं स्तनयोर्मुरारेर्ऋतं च सत्यं च मनस्यथेन्दुम् । श्रियं च वक्षस्यरविन्दहस्तां कण्ठे च सामानि सम-

---

விவரங்கள் ஸமுத்திரங்கள் பசு பக்ஷிகள் மனிதர் தேவர் ருஷிகள் ஆகிய யாவும் எந்த ரூபத்தில் இருந்தனவோ குணத்ரயாத்மகமானதும், அனந்தனான ஹரியினுடையதுமான அந்த வாமனரூபமானது ஆஶ்சரியமாக இருக்கும்படி வளர்ந்தது. (21)

ருத்விக் ஆசாரியர் ஸதஸ்யர் இவர்களுடன்கூடின பலியானவன் மஹாவிபூதியையுடைய அந்தப் பகவானுடைய குணாத்மகமான தேஹத்தில் மஹாபூதங்கள் இந்திரியங்கள் சப்தாதிவிஷயங்கள் சித்தங்கள் ஜீவன்கள் இவற்றுடன் கூடினதும் த்ரிகுணாத்மகமுமான இந்த விஶ்வத்தைப் பார்த்தான். (22) பிறகு இந்திரஸேனனான பலி விஶ்வமூர்த்தியான பகவானுடைய பாததலத்தில் ரஸாதலத்தையும், பாதங்களில் பூமியையும், புருஷனுடைய ஜங்கைகளில் மலைகளையும், முழங்கால் முட்டுகளில் பக்ஷிகளையும், துடைகளில் வாயுக்கூட்டத்தையும் கண்டான். (23) விபுவின் வஸ்திரம் தரிக்குமிடத்தில் ஸந்தியையும், குஹ்யத்தில் ப்ரஜாபதிகளையும், பின்தட்டில் தன்னை முக்யமாகக்கொண்ட அஸுரர்களையும், நாபியில் ஆகாசத்தையும், வயிற்றில் ஏழுஸமுத்திரங்களையும், உருக்கிரமனுடைய வக்ஷஸ்ஸில் நக்ஷத்திரமாலைகளையும் கண்டான். (24) ஹே அங்க! ஹிருதயத்தில் தர்மத்தையும், முராரியின் ஸ்தனங்களில் ருதத்தையும்=ப்ரியமான வார்த்தையையும், ஸத்யத்தையும்=ஸமதரிசனத்தையும், பிறகு மனத்தில் சந்திரனையும், மார்பில் தாமரஸ புஷ்பத்தைக் கையிலுடைய லக்ஷ்மியையும், கண்டத்தில் எல்லா

स्तरेफान् ॥ २५ ॥ इन्द्रप्रधानानमरान्भुजेषु तत्कर्णयोः ककुभो द्यौश्च मूर्ध्नि । केशेषु मेघान् श्वसनं नासिकायामक्ष्णोश्च सूर्यं वदने च वह्निम् ॥ २६ ॥ वाण्यां च छन्दांसि रसे जलेशं भ्रुवोर्निषेधं च विधिं च पक्ष्मसु । अहश्च रात्रिं च परस्य पुंसो मन्युं ललाटेऽधर एव लोभम् ॥ २७ ॥ स्पर्शे च कामं नृप रेतसोऽम्भः पृष्ठे त्वधर्मं क्रमणेषु यज्ञम् । छायासु मृत्युं हसिते च मायां तनूरुहेष्वोषधिजातयश्च ॥ २८ ॥ नदीश्च नाडीषु शिला नखेषु बुद्धावजं देवगणानृषींश्च । प्राणेषु गात्रे स्थिरजङ्गमानि सर्वाणि भूतानि ददर्श वीरः ॥ २९ ॥

सर्वात्मनीदं भुवनं निरीक्ष्य सर्वेऽसुराः कश्मलमापुरङ्ग । सुदर्शनं चक्रमसह्यतेजो धनुश्च शार्ङ्गं स्तनयित्नुघोषम् ॥ ३० ॥ पर्जन्यघोषो जलजः

---

ஸாமங்களையும், எல்லாச் சப்தங்களையும் கண்டான். (25) தோள்களில் இந்திரனை ப்ரதானனாகவுடைய தேவர்களையும், அவருடைய காதுகளில் திக்குகளையும், தலையில் தேவலோகத்தையும், கேசங்களில் மேகங்களையும், நாஸிகையில் வாயுவையும், கண்களில் ஸூரியனையும், வாயில் அக்னியையும் கண்டான். (26) வாக்கில் வேதங்களையும், நாக்கில் வருணனையும், புருவங்களில் நிஷேதத்தையும், இமைமயிர்களில் விதியையும், பரமபுருஷனுடைய நெற்றியில் பகலையும் ராத்திரியையும் கோபத்தையும், கீழுதட்டில் லோபத்தையும் கண்டான். (27) ஹே ந்ருப! ஸ்பர்சத்தில் காமத்தையும், ரேதஸ்ஸில் ஜலத்தையும், பிருஷ்டத்தில் அதர்மத்தையும், நடைகளில் யக்ஞத்தையும், நிழல்களில் மிருத்யுவையும், சிரிப்பில் மாயையையும், உடம்பில் முளைத்த உரோமங்களில் கொடி வகைகளையும் கண்டான். (28) நாடிகளில் நதிகளையும், நகங்களில் கற்பாறைகளையும், புத்தியில் ப்ரம்ஹதேவனையும், ப்ராணன்களில் தேவகணங்களையும், ருஷிகளையும், சரீரத்தில் ஸ்தாவரஜங்கமங்களான எல்லா ப்ராணிகளையும் வீரனான பலி கண்டான். (29)

ஹே அங்க! ஸர்வாத்மாவான பகவானிடத்தில் இந்த விஸ்வத்தைக் கண்டு எல்லா அஸுரர்களும் மயக்கத்தை யடைந்தனர். பொறுக்கவியலாத தேஜஸ்ஸையுடைய ஸுதர்சனமென்ற சக்கிர

अमाद्यदिन्द्रः सोमेन दक्षिणाभिर्द्विजातयः। मरुतः परिवेष्टारो विश्वेदेवाः सभासदः ॥ २८ ॥

मरुत्तस्य दमः पुत्रस्तस्यासीद्राज्यवर्धनः। सुधृतिस्तत्सुतो जज्ञे सौधृतेयो नरः सुतः ॥ २९ ॥ तत्सुतः केवलस्तस्माद्बन्धुमान्वेगवांस्ततः। बन्धुस्तस्याभवद्यस्य तृणबिन्दुर्महीपतिः ॥ ३० ॥ तं भेजेऽलम्बुषा देवी भजनीयगुणालयम्। वराप्सरा यतः पुत्राः कन्या चेडविडाभवत् ॥ ३१ ॥ तस्यामुत्पादयामास विश्रवा धनदं सुतम्। प्रादाय विद्यां परमामृषिर्योगेश्वरात्पितुः ॥ ३२ ॥ विशालः शून्यबन्धुश्च धूम्रकेतुश्च तत्सुताः। विशालो वंशकृद्राजा वैशालीं निर्ममे पुरीम् ॥ ३३ ॥ हेमचन्द्रः सुतस्तस्य

---

கள் ஸந்தோஷத்தை யடைந்தனர். தேவர்கள் பரிமாறுகின்றவர்களாகவும் விஸ்வேதேவர்கள் ஸபைத்தலைவர்களாகவுமிருந்தனர்.

மருத்தனுக்கு தமன் புத்திரன். அவனுக்கு ராஜ்யவர்த்தனன் உண்டானன். ஸுதிருதி என்பவன் அவனுக்குப் புத்திரனுகப் பிறந்தான். நரன் என்பவன் ஸுதிருதியினுடைய புத்திரனுவான். (29) அவனுடைய புத்திரன் கேவலன். அவனிடமிருந்து பந்துமான் என்பவன் பிறந்தான். அவனிடமிருந்து வேகவான் என்பவன் பிறந்தான். அவனுக்குப் பந்து என்பவன் பிறந்தான். இவனுக்குத் திருணபிந்து என்ற அரசன் பிறந்தான். (30) பஜிக்கத்தக்க குணங்களுக்கிருப்பிடமான அந்தத் திருணபிந்துவைச் சிறந்த அப்ஸரஸ்திரீயான அலம்புஷா என்ற தேவியானவள் ஆஸ்ரயித்தாள். இவளிடமிருந்து திருணபிந்துவுக்குப் புத்திரர்களும், இடபிடா என்ற பெண்ணும் பிறந்தனர். (31) விஸ்ரவஸ் என்பவர் யோகேஸ்வரரும் தனது பிதாவுமான புலஸ்த்யரிடமிருந்து பரமமான=ஐஹிகாமுஷ்மிகபலனைத் தரக்கூடிதான, வித்தையையடைந்து அந்த இடபிடையினிடத்தில் குபேரன் என்ற புத்திரனை யுண்டுபண்ணினர். (32) விசாலனும், சூன்யபந்துவும், தூம்ரகேதுவும் முன்னர் சொன்ன திருணபிந்து என்ற அரசனின் புத்திரர்களாவர். அவர்களுள் வம்சவிருத்தியைச் செய்கின்ற விசாலன் என்ற அரசன் வைசாலீ என்ற பட்டினத்தை நிர்மாணஞ் செய்

धूम्राक्षस्तस्य चात्मजः । तत्पुत्रात्संयमादासीत्कृशाश्वः सहदेवजः ॥२४॥ कृशाश्वात्सोमदत्तोऽभूद्योऽश्वमेधैरिडस्पतिम् । इष्ट्वा पुरुषमापाग्र्यां गतिं योगेश्वराश्रितः ॥ ३५ ॥ सौमदत्तिस्तु सुमतिस्तत्सुतो जनमेजयः । एते वैशालभूपालास्तृणबिन्दोर्यशोधराः ॥ ३६ ॥

इति श्रीमद्भागवते महापुराणे नवमस्कन्धे करूषकादिपञ्चमनुपुत्रान्वयवर्णनं नाम द्वितीयोऽध्यायः ॥ २ ॥

—•••❖•••—

---

தான். (33) அந்த விசாலனுடைய புத்திரன் ஹேமசந்திரன். அவனுக்குத் தூம்ராக்ஷன் என்ற புத்திரன் பிறந்தான். அவனுடைய புத்திரனான ஸம்யமனிடமிருந்து தேவஜன் என்பவனுடன் கூட கிருசாஸ்வன் என்பவன் பிறந்தான். (34) கிருசாஸ்வனிடமிருந்து ஸோமதத்தன் பிறந்தான். இவன் அஸ்வமேதங்களினால் அன்னபதியான புருஷனை யாராதித்து யோகேஸ்வரர்களான நாரதாதிகளை யாஸ்ரயித்தவனாய் மேலான கதியை=மோக்ஷத்தை, யடைந்தான். (35) ஸோமதத்தனின் புத்திரன் ஸுமதி. அவனுடைய புத்திரன் ஜனமேஜயன். இவர்கள் திருணபிந்துவின் யசஸ்ஸை நிலைநாட்டுகின்றவர்களும் விசாலனுடைய வம்சத்தில் பிறந்தவர்களுமாவர் என்றார். (36) (எ-று)

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண நவமஸ்கந்தத்தில் கரூஷகர் முதலிய ஐந்து மனுபுத்திரர்களின் வம்சவர்ணனமென்ற இரண்டாவது அத்தியாயம் முற்றிற்று.



## மூன்றாவது அத்தியாயம்.

(அ-கை) तृतीये मनुपुत्रस्य शर्यातेः कीर्त्यतेऽन्वयः ।
यत्र सौकन्यमाख्यानं रैवतं च महाद्भुतम् ॥ १ ॥

(க-ரை) இந்த மூன்றாவது அத்தியாயத்தில் மனுவின் புத்திரரான சர்யாதி என்பவருடைய வம்சமானது சொல்லப்படுகிறது. இந்த வம்சத்தில் மிக்க வத்புதமான ஸுகன்யோபாக்கியானமும் ரைவதோபாக்கியானமும் சொல்லப்படுகிறது. (1) (எ-று)

## अथ तृतीयोऽध्यायः ॥

श्रीशुक उवाच—शर्यातिर्मानवो राजा ब्रह्मिष्ठः स बभूव ह। यो वा अङ्गिरसां सत्रे द्वितीयमह ऊचिवान् ॥ १ ॥ सुकन्या नाम तस्यासीत्कन्या कमललोचना। तया सार्धं वनगतो ह्यगमच्च्यवनाश्रमम् ॥ २॥ सा सखीभिः परिवृता विचिन्वत्यङ्घ्रिपान्वने। वल्मीकरन्ध्रे ददृशे खद्योते इव ज्योतिषी ॥ ३ ॥ ते दैवचोदिता बाला ज्योतिषी कण्टकेन वै। अविध्यन्मुग्धभावेन सुस्रावासृक् ततो बहु ॥ ४ ॥ शकृन्मूत्रनिरोधोऽभूत्सैनिकानां च तत्क्षणात्। राजर्षिस्तमुपालक्ष्य पुरुषान्विस्मितोऽब्रवीत् ॥ ५ ॥ अप्यभद्रं न युष्माभिर्भार्गवस्य विचेष्टितम्। व्यक्तं केनापि नस्तस्य कृतमाश्रमदूष-

---

ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—எவர் அங்கிரஸ்ஸுகள் செய்யும் ஸத்ரயாகத்தில் இரண்டாவது நாள் செய்யவேண்டிய கர்மாவை யுபதேசித்தாரோ மனுபுத்திரரான அந்த சர்யாதி என்ற அரசன் ப்ரம்ஹிஷ்டராக=வேதார்த்த தத்துவமறிந்தவராக ஆனார். (1) அவருக்கு ஸுகன்யா என்ற பெயரை யுடையவளும், கமலம்போன்ற கண்களை யுடையவளுமான கன்னிகை உண்டானாள். அவளுடன் காட்டையடைந்த அவர் ச்யவனருடைய ஆஶ்ரமத்தை யடைந்தார். (2) அவள் தோழிகளினால் சூழப்பட்டவளாய்க் கொண்டு வனத்திலுள்ள மரங்களைத் தேடுகின்றவளாய் கரையான் புற்றினோட்டையில் மினுமினுப் பூச்சிகள்போன்ற ஜ்யோதிஸ்ஸுகளைக் கண்டாள். (3) தைவத்தினால்=ஊழ்வினையினால், தூண்டப்பட்ட பாலையானவள் சிறுப்ராயங்காரணமாய் அந்த ஜ்யோதிஸ்ஸுகளை முள்ளினால் குத்தினாள். அதிலிருந்து ஏராளமான ரக்தம் பெருகிற்று. (4) அதேக்ஷணத்தில் ஸேனையிலுள்ளவர்களுக்கு மலமூத்திரங்களுக்கு தடையானது ஏற்பட்டது. ராஜருஷியானவர் அதையறிந்து ஆஶ்சரியத்தை அடைந்தவராய் வேலைக்காரர்களைக் கேட்டார். (5) உங்களால் பார்க்கவரான ச்யவனருக்கு அபராதஞ் செய்யப்படவில்லையா? நம்முள் யாரோவொருவரால் அவருடைய ஆஶ்ரமத்துக்குத் தூஷணஞ் செய்யப்பட்டிருக்கிறது. இது நிஶ்சிதம் என்றார். (6) ஸுகன்னியையானவள் பயந்து பிதாவைப் பார்

णम् ॥ ६ ॥ सुकन्या प्राह पितरं भीता किंचित्कृतं मया । द्वे ज्योतिषी
अजानन्त्या निर्भिन्ने कण्टकेन वै ॥ ७ ॥ दुहितुस्तद्वचः श्रुत्वा शर्यातिर्जा-
तसाध्वसः । मुनिं प्रसादयामास वल्मीकान्तर्हितं शनैः ॥ ८ ॥ तदभिप्रा-
यमाज्ञाय प्रादाद्दुहितरं मुनेः । कृच्छ्रान्मुक्तस्तमामन्त्र्य पुरं प्रायात्समाहि-
तः ॥ ९ ॥ सुकन्या च्यवनं प्राप्य पतिं परमकोपनम् । प्रीणयामास चित्त-
ज्ञा अप्रमत्तानुवृत्तिभिः ॥ १० ॥

कस्यचित्त्वथ कालस्य नासत्यावाश्रमागतौ । तौ पूजयित्वा प्रोवाच
वयो मे दत्तमीश्वरौ ॥ ११ ॥ ग्रहं ग्रहीष्ये सोमस्य यज्ञे वामप्यसोमपोः ।
क्रियतां मे वयो रूपं प्रमदानां यदीप्सितम् ॥ १२ ॥ बाढमित्यूचतुर्विप्रम-

---

த்து அறியாதவளான என்னால் ஒன்று செய்யப்பட்டது. அதா
வது:—இரண்டு ஜ்யோதிஸ்ஸுகள் முள்ளினால் குத்தப்பட்டன என்
றாள். (7) பெண்ணின் அந்த வார்த்தையைக் கேட்டு சர்யாதியா
னவன் பயத்தையடைந்தவனாய் புற்றினுள்ளிலிருக்கின்ற முனியை
அருள்புரியும்படி மெதுவாக வேண்டினான். (8) "இவளுக்கு விவா
ஹஞ் செய்யப்பட்டு எத்துணை வருஷங்களாயின" என்று கேட்ட
திலிருந்து அவருடைய அபிப்பிராயத்தை யறிந்துகொண்டு அந்த
ச்யவனமுனிக்குப் பெண்ணைக்கொடுத்து அந்தக் கஷ்ட த்திலிருந்து
விடுபட்டவனாய் மனச்சாந்தியுடன் அவரிடம் விடைபெற்றுக்கொ
ண்டு பட்டினத்தை யடைந்தான். (9) ஸுகன்னியையானவள்
மிகக்கோபமுள்ளவரான ச்யவனரைப் பர்த்தாவாகவடைந்து அவரு
டைய சித்தத்தை யறிந்தவளாயும் தவறில்லாதவளாயுமிருந்துகொ
ண்டு கைங்கரியங்களினால் அவரை ப்ரீதியடையும்படி செய்தாள்.

கொஞ்சகாலம் சென்றதும், அஶ்வினீதேவர்கள் அவருடைய
ஆஶ்ரமத்துக்கு வர அவர்களை அவர் பூஜித்து ஹே சிறந்த வைத்
யர்காள்! நீங்கள் எனக்கு நல்ல யௌவனத்தை யுண்டுபண்ணுங்
கள். யாகத்தில் ஸோமபானமில்லாதவர்களான உங்களுக்குங்கூட
ஸோமபூர்ணமான பாத்திரத்தைக் கொடுக்கிறேன். அதாவது:—
உங்களை ஸோமத்தினால் யஜிக்கின்றேன். ஸ்திரீகளுக்குப் பிடித்
தமானரூபம் யாதுண்டோ அத்தகைய ரூபமுள்ள யௌவனத்தை
எனக்குச் செய்யுங்கள் என்றார். (11-12) வைத்ய ஶ்ரேஷ்டர்

भिनन्ध भिषक्तमौ। निमज्जतां भवानस्मिन्ह्रदे सिद्धविनिर्मिते ॥ १३ ॥ इत्युक्त्वा जरया ग्रस्तदेहो धमनिसन्ततः। ह्रदं प्रवेशितोऽश्विभ्यां वलीपलितविप्रियः ॥ १४ ॥ पुरुषास्त्रय उत्तस्थुरपीच्या वनिताप्रियाः। पद्मस्रजः कुण्डलिनस्तुल्यरूपाः सुवाससः ॥ १५ ॥ तान्निरीक्ष्य वरारोहा सरूपान्सूर्यवर्चसः। अजानती पतिं साध्वी अश्विनौ शरणं ययौ ॥ १६ ॥ दर्शयित्वा पतिं तस्यै पातिव्रत्येन तोषितौ। ऋषिमामन्त्र्य ययतुर्विमानेन त्रिविष्टपम् ॥ १७ ॥ यक्ष्यमाणोऽथ शर्यातिश्च्यवनस्याश्रमं गतः। ददर्श दुहितुः पार्श्वे पुरुषं सूर्यवर्चसम् ॥ १८ ॥ राजा दुहितरं प्राह कृतपादा-

---

களான அவர்கள் ஸந்தோஷித்து அப்படியே செய்கிறோமென ப்ராம்ஹணரைப் பார்த்துச் சொல்லிவிட்டு ஸித்தர்களினால் நிர்மாணஞ் செய்யப்பட்ட இந்த மடுவில் நீர் முழுகும் என்றனர். (13) என்று சொல்லி ஜரையினால் சூழப்பட்ட தேஹத்தையுடையவரும், நரம்புகளடர்ந்தவரும், சுருண்ட சதையினாலும் நரைத்த மயிர்களினாலும் மிக்க வெறுப்பைத் தருகின்றவருமான அவர் அஸ்வினீதேவர்களினால் மடுவில் ப்ரவேசிக்கும்படி செய்விக்கப்பட்டார். (14) அம்மடுவிலிருந்து அழகு வாய்ந்தவர்களும், ஸ்திரீகளுக்குப் பிடித்தமானவர்களும், பத்மமாலையை யணிந்தவர்களும், காதில் குண்டலமணிந்தவர்களும், துல்யமான ரூபமுள்ளவர்களும், அழகிய வஸ்திரமணிந்தவர்களுமான மூன்று புருஷர்கள் வெளிவந்தனர். (15) அழகிய தொடையை யுடையவளும் பதிவ்ரதையுமான அந்த ஸுகன்னியையானவள், ஒரே ரூபமுள்ளவர்களும் சூரியனுக்கொப்பான காந்தியுள்ளவர்களுமான அவர்களைக் கண்டு அவர்களுக்குள் தனது பதி இன்னாரென்பதை யறியாதவளாய் அஸ்வினீதேவர்களைச் சரணமடைந்தாள். அதாவது:—நீங்கள் தனியாக நின்று எனது பதியைக் காண்பிக்கவேண்டுமென அவர்களை ப்ரார்த்தித்தாள். (16) அவளுடைய பாதிவ்ரத்யத்தினால் ஸந்தோஷித்த அஸ்வினீதேவர்கள் அவளையும் பொருட்டு பர்த்தாவைக் காண்பித்துவிட்டு ருஷியினிடம் விடைபெற்றுக்கொண்டு விமானத்தினால் ஸ்வர்க்கலோகம் போய்ச் சேர்ந்தனர். (17) பிறகு யாகஞ் செய்ய வெண்ணங்கொண்டவனாய் ச்யவனருடைய ஆஸ்ரமத்தை

भिवन्दनाम् । आशिषश्चाप्रयुञ्जानो नातिप्रीतमना इव ॥ १९ ॥ चिकीर्षितं ते किमिदं पतिस्त्वया प्रलम्भितो लोकनमस्कृतो मुनिः । यत्त्वं जराग्रस्तमसत्यसंमतं विहाय जारं भजसेऽमुमध्वगम् ॥ २० ॥ कथं मतिस्तेऽवगताऽन्यथा सतां कुलप्रसूते कुलदूषणं त्विदम् । बिभर्षि जारं यदपत्रपा कुलं पितुश्च भर्तुश्च नयस्यधस्तमः ॥ २१ ॥

एवं ब्रुवाणं पितरं स्मयमाना शुचिस्मिता । उवाच तात जामाता तवैष भृगुनन्दनः ॥ २२ ॥ शशंस पित्रे तत्सर्वं वयोरूपाभिलम्भनम् । विस्मितः परमप्रीतस्तनयां परिषस्वजे ॥ २३ ॥ सोमेन याजयन्वीरं ग्रहं

---

யடைந்த சர்யாதியானவன் பெண்ணின் பக்கத்தில் சூரியனுக்கொப்பான காந்தியுள்ள புருஷனைக் கண்டான். (18) அரசன் தனது காலில் வணங்கினவளான பெண்ணைப் பார்த்து ஆசீர்வாதத்தைச் செய்யாதவனாய் மிக்க ப்ரீதியற்ற மனமுள்ளவன் போலச் சொல்ல வாரம்பித்தான். (19) ஹே அஸதி! உன்னால் இந்தக் காரியமானது என் செய்யவிரும்பப்பட்டது? நீ ஜரையினால் ஆக்ரமிக்கப் பட்டவரும், பிடித்தமில்லாதவருமான இவரை விலக்கிவிட்டு வழிப் போக்கனான இந்த ஜாரபுருஷனை எக்காரணம்பற்றி ஸேவிக்கின்றனையோ அக்காரணம்பற்றி லோகங்களினால் நமஸ்கரிக்கப்பட்டவரும் முனியுமான பதியானவர் உன்னால் மோசஞ் செய்யப்பட்டார். (20) ஹே ஸாதுக்களின் குலத்தில் பிறந்தவளே! எக்காரணம்பற்றி உன்னுடைய புத்தியானது இவ்விதம் கெட்டுப்போயிற்று? இது குலத்துக்குத் தூஷணத்தை யுண்டாக்கக்கூடிய காரியமாயிற்றே? நீ எக்காரணம்பற்றி ஜாரபுருஷனை அணைக்கின்றனையோ அக்காரணம்பற்றி பர்த்தாவின் குலத்தையும், பிதாவின் குலத்தையும் கீழிலுள்ள நரகத்தில் தள்ளுகின்றனையே? என்றார். (21)

இயற்கையில் சுத்தமான சிரிப்பையுடைய ஸுகன்னியை சிரித்துக்கொண்டு இவ்விதம் சொல்லுகின்ற பிதாவைப் பார்த்து ஹே தாத! இவர் உமது மாப்பிள்ளையான ச்யவனரே. (22) என்று சொல்லி அவருக்கு யௌவனமும் அழகும் கிடைத்ததற்குரிய காரணம் யாவையும் பிதாவுக்குச் சொன்னாள். அதுகேட்ட பிதா மிக்க வாஶ்சரியத்தை யடைந்தவராயும் மேலான ப்ரீதியை

सोमस्य चाग्रहीत् । असोमपोरप्यश्विनोश्च्यवनः स्वेन तेजसा ॥ २४ ॥ हन्तुं तमाददे वज्रं सद्योमन्युरमर्षितः। सवज्रं स्तम्भयामास भुजमिन्द्रस्य भार्गवः ॥ २५ ॥ अन्वजानंस्ततः सर्वे ग्रहं सोमस्य चाश्विनोः । भिषजाविति यत्पूर्वं सोमाहुत्या बहिष्कृतौ ॥ २६ ॥ उत्तानबर्हिरानर्तो भूरिषेण इति त्रयः । शर्यातेरभवन्पुत्रा आनर्ताद्रेवतोऽभवत् ॥ २७ ॥ सोन्तःसमुद्रे नगरीं विनिर्माय कुशस्थलीम् । आस्थितोऽभुङ्क्त विषयानानर्तादीनरिन्दम ॥ २८ ॥ तस्य पुत्रशतं जज्ञे ककुद्मिज्येष्ठमुत्तमम् । ककुद्मी रेवतीं कन्यां स्वामादाय विभुं गतः ॥ २९ ॥ कन्यावरं परिप्रष्टुं ब्रह्मलोकमपा-

---

யடைந்தவராயுமாகி பெண்ணைத் தழுவிக்கொண்டார். (23) வீரனை சர்யாதிக்கு ஸோமயாகத்தைச் செய்விக்கத் தொடங்கின ச்யவனர் தனது தபோமஹிமையினால் ஸோமஸம்பந்தமற்றவர்களான அஸ்வினீ தேவர்களுக்கும் கூட ஸோமக்ரஹத்தைக் கல்பித்தார். (24) அப்பொழுதே கோபங்கொண்டவனும், பொறுமைக்காரனுமான இந்திரன் அவரைக் கொல்லவேண்டி வஜ்ராயுதத்தைக் கையிலெடுத்தான். ச்யவனர் இந்திரனுடைய கையை வஜ்ராயுதத்துடன்கூட அசைவற்றதாகச் செய்துவிட்டார். (25) வைத்தியர் என்றகாரணம்பற்றி எவர்கள் முன்னர் ஸோமாஹுதியின்றி நீக்கப்பட்டனரோ அந்த அஸ்வினீ தேவர்களுக்கும்கூட ஸோமக்ரஹத்தை யாவரும் பிறகு ஸம்மதித்தனர். (26) சர்யாதிக்கு உத்தானபர்ஹிஸ், ஆனர்த்தர், பூரிஷேணர் என்ற மூன்று புத்திரர்கள் பிறந்தனர். அவர்களுள் ஆனர்த்தரிடமிருந்து ரேவதர் பிறந்தார். (27) ஹே அரிந்தம! அவர் ஸமுத்திரத்தின் நடுவில் குசஸ்தலீ என்ற நகரத்தை நிர்மாணஞ்செய்து அதில் வஸித்துக்கொண்டு ஆனர்த்தம் முதலிய தேசங்களை ஆண்டுவந்தார். (28) அவருக்கு ககுத்மி என்பவனை மூத்தவனாகக்கொண்ட சிறந்த நூறு புத்திரர்கள் பிறந்தனர். ககுத்மியானவர் ரேவதி என்ற பெண்ணை யழைத்துக்கொண்டு கன்னிகையின் வரனை ப்ரம்ஹதேவனைக் கேட்டுத் தெரிந்துகொள்ளவேண்டி ப்ரகாசபகுளமான ப்ரம்ஹலோகத்தை யடைந்தவராய் அங்கு பாட்டுக்கச்சேரி நடந்துகொண்டிருக்கும் பொழுது தனது விருப்பத்தைக் கேட்க அவகாசம் கிடைக்காத

वृतम् । आवर्तमाने गान्धर्वे स्थितोऽलब्धक्षण: क्षणम् ॥ ३० ॥ तदन्त आद्यमानस्य स्वाभिप्रायं न्यवेदयत् । तच्छ्रुत्वा भगवान्ब्रह्मा प्रहस्य तमुवाच ह ॥ ३१ ॥

अहो राजन्निरुद्धास्ते कालेन हृदि ये कृता: । तत्पुत्रपौत्रनप्तॄणां गोत्राणि च न शृण्महे ॥ ३२ ॥ कालोऽभियातस्त्रिणवचतुर्युगविकल्पित: । तद्गच्छ देवदेवांशो बलदेवो महाबल: ॥ ३३ ॥ कन्यारत्नमिदं राजन्नररत्नाय देहि भो । भुवो भारावताराय भगवान्भूतभावन: ॥ ३४ ॥ अवतीर्णो निजांशेन पुण्यश्रवणकीर्तन: । इत्यादिष्टोऽभिवन्द्याजं नृप: स्वपुरमागत: । त्यक्तं पुण्यजनत्रासाद्भ्रातृभिर्दिक्ष्ववस्थितै: ॥ ३५ ॥ सुतां दत्त्वानवद्याङ्गीं बलाय बलशालिने । बदर्याख्यं गतो राजा तप्तुं नारायणाश्रमम् ॥ ३६ ॥

इति श्रीमद्भागवते महापुराणे नवमस्कन्धे सुकन्योपख्यान रेवती बलरामविवाहयोर्वर्णनं नाम तृतीयोऽध्याय: ॥ ३ ॥



---

வராய் க்ஷணகாலம் தாமதித்தார். (29–30) அதன் முடிவில் ஆத்யரான அவரை நமஸ்கரித்துத் தனது அபிப்பிராயத்தைத் தெரிவித்துக் கொண்டார். அதைக் கேட்டு பகவானான ப்ரம்ஹதேவன் சிரித்துக் கொண்டு அவரைப் பார்த்துச் சொல்லலுற்றார். (31)

ஹே ராஜன்! எவர்கள் உனது பெண்ணின் பர்த்தாவாக மனத்திலெண்ணப்பட்டனரோ அவர்கள் காலத்தினால் மறைக்கப்பட்டுப் போயினர். அவர்களின் புத்திரன் பௌத்திரன் அவரின் புத்திரன் இவர்களின் வம்சத்தைக்கூட நாம் கேட்கின்றோமில்லை. (32) நீ இங்குவந்த பிறகு இருபத்தேழு சதுர்யுகங்களினால் பிரிக்கப்பட்ட காலமானது சென்றுவிட்டது. ஒய்! ஆனதுபற்றி நீர் ஊர்போய்ச்சேரும். தேவதேவனுடைய அம்சமானவரும் மஹாபலமுள்ளவருமான யாதொரு பலராமருண்டோ அந்த நரரத்தினத்துக்கு இந்தக் கன்னிகாரத்தினத்தைக் கொடும். பூதபாவனரும் புண்யமான ஶ்ரவணம் கீர்த்தனம் இவற்றையுடையவருமான பகவான் பூமியின் சுமையை இரக்கவேண்டி தனதுஅம்சத்துடன் அவதரித்திருக்கின்றார் என்றார். இவ்விதம் உத்தரவிடப்பட்ட அரசன்

अथ चतुर्थोऽध्यायः ॥

श्रीशुक उवाच—नाभागो नभागापत्यं यतन्तं भ्रातरः कविम्। यविष्ठं व्यभजन्दायं ब्रह्मचारिणमागतम् ॥ १ ॥ भ्रातरोऽभाङ्क्त किं मह्यं भजाम

---

ப்ரம்ஹதேவனை நமஸ்கரித்துவிட்டு அஸுரர்களிடமிருந்துண்டான பயத்தினால் திக்குகளில் வஸிக்கின்ற ப்ராதாக்களினால் விடப்பட்ட தனது பட்டினம் வந்து சேர்ந்தார். (33-35) குற்றமற்ற அங்கங்களையுடையவளான பெண்ணை பலசாலியான பலராமனுக்குக் கொடுத்துவிட்டு அரசன் தவஞ்செய்யவேண்டி பதரி என்ற பெயரையுடைய நாராயணாச்ரமத்தை யடைந்தார் என்றார். (36) (எ-று)

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண நவமஸ்கந்தத்தில்
ஸுகன்னியோபாக்கியானம் ரேவதீ பலராம விவாஹம்
இவற்றை வர்ணித்தலென்ற மூன்றாவது
அத்தியாயம் முற்றிற்று.



## நான்காவது அத்தியாயம்.

(அ-கை) चतुर्थे मनुपुत्रस्य नभगस्य कथोच्यते ।
तत्सूनोश्चांबरीषस्य कृत्या प्रतिहता यतः ॥ १ ॥

(ப-ரை) இந்த நான்காவது அத்தியாயத்தில் மனுபுத்திரரான நபகருடைய கதை சொல்லப்படுகிறது. அத்துடன் அந்த நபகரின் புத்திரரான நாபாகருடைய கதையும், அந்த நாபாகபுத்திரரும், எவரிடமிருந்து துர்வாஸஸ்ஸினால் ப்ரயோகஞ்செய்யப்பட்ட கிருத்யை என்ற பூதமானது திருப்பிவிடப்பட்டதோ அப்பேர்ப்பட்டவருமான அம்பரீஷருடைய கதையும் சொல்லப்படுகின்றன.

ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—ப்ரம்ஹசாரியும்=வெகு காலம் வரை குருகுலத்திலேயே வஸித்தவரும், (ஆனதுபற்றியே இவர் நைஷ்டிகப்ரம்ஹசாரி என வெண்ணிக்கொண்டு பாகம் பிரித்துக் கொள்ளும்பொழுது அவருக்குப் பாகத்தை யேற்படுத்தாமலே ப்ராதாக்கள் எல்லாச் சொத்தையும் பங்கிட்டுக்கொண்டபிறகு) குருகுலத்திலிருந்து வந்தவரும், பாகத்திலாவல்கொண்டவரும்,

पितरं तव। त्वां ममार्यास्तताभांक्षुर्मा पुत्रक तदादृथाः ॥ २ ॥ इमे अङ्गिरसः सत्रमासतेऽद्य सुमेधसः। षष्ठं षष्ठमुपेत्याहः कवे मुह्यन्ति कर्मणि ॥ ३ ॥ तांस्त्वं शंसय सूक्ते द्वे वैश्वदेवे महात्मनः। ते स्वर्यन्तो धनं सत्र-

---

கவியும்=வித்வானும், ஆன எவரைப் பார்த்துப் பிதாவையே உனது பாகமாகக் கல்பித்திருக்கிறோம் என்றனரோ அப்பேர்ப்பட்டவருமான நாபாகர் நபகர் என்பவரின் புத்திரராவார். (1) *நாபாகர் தனது ப்ராதாக்களை நோக்கி "ஹே ப்ராதாக்களே! எனக்கு வேண்டி நீங்கள் என்ன பாகத்தை ஏற்படுத்தினீர்கள்?" என்றார். அதுகேட்ட ப்ராதாக்கள், அப்பொழுது நாங்கள் மறந்துபோய்விட்டோம். இப்பொழுது பிதாவை உனது பங்காகத் தருகிறோம். (ஆகவே பிதாவை நீ பெற்றுக்கொள் என்றனர்.) அந்த நாபாகர், பிதாவினிடம் வந்து "ஹே தாத! ஆர்யர்களான=ஶ்ரேஷ்டர்களான, எனது ப்ராதாக்கள் உம்மை எனது பங்காக ஏற்படுத்தியிருக்கின்றனர். ஆகவே நீர் என்னுடைய பங்காக வாகிறீர்" என்றார். அதுகேட்ட பிதா "ஹே புத்திரக! அவர்கள் சொன்ன வார்த்தையை நம்பாதே அவர்கள் உன்னை ஏமாற்றிவிட்டனர். நான் தாயப்பொருள்போலப் போகஸாதனமாக வாகமாட்டேனன்றோ" என்றார். (2) (ஆயினும அவர்களால் பாகமாகக் கொடுக்கப்பட்ட நான் உனக்கு ஜீவனோபாயத்தை யுபதேசிக்கிறேன் கேளு. அதாவது:—) ஹே கவே!=ஹே வித்வன்!, இந்த அங்கிரஸ்ஸுகள் ஸத்ரமென்ற யாகத்தை அனுஷ்டிக்கின்றனர். "அபிப்லவம் என்ற யாகமானது ஆறுதினங்களில் செய்து முடிக்கத்தக்கது" இவ்விதமே "ப்ருஷ்ட்யம் என்ற யாகமும் ஆறுதினங்களில் செய்து முடிக்கத்தக்கது" என்ற ஶ்ருதிகளினால் விதிக்கப்பட்ட யாகங்களுள் ஒவ்வொன்றிலும் ஆறுவது நாள்வந்ததும் அன்று அக்கர்மத்தை உள்ளபடி அனுஷ்டிக்கும் விஷயத்தில் அந்த அங்கிரஸ்ஸுகள் நல்ல மேதாவிகளாக இருந்தபோதிலுங்கூட அதற்குரிய சூக்தவிசேஷத்தை அறியாமைபற்றி மயங்கி நிற்கின்றனர். (3) நீ மஹாத்மாக்களாயிற்றே என வெண்ணாது அவர்களை யடைந்து "இதமித்தாரௌத்ரம்" என்ற தாதியும், "யே யக்ஞே ஸதக்ஷி

---

* இதையே ப்ரச்னப்ரதிவசனங்களினால் விளக்குகிறார்.

परिशेषितमात्मनः ॥ ४ ॥ दास्यन्त्यथ ततो गच्छ तथा स कृतवान्यथा। तस्मै दत्त्वा ययुः स्वर्गं ते सत्रपरिशेषितम् ॥ ५ ॥

तं कश्चित्स्वीकरिष्यन्तं पुरुषः कृष्णदर्शनः। उवाचोत्तरतोऽभ्येत्य ममेदं वास्तुकं वसु ॥ ६ ॥ ममेदमृषिभिर्दत्तमिति तर्हि स्म मानवः। स्यान्नौ ते पितरि प्रश्नः पृष्टवान्पितरं तथा ॥ ७ ॥ यज्ञवास्तुगतं सर्वमुच्छिष्टमृषयः क्वचित्। चक्रुर्विभागं रुद्राय स देवः सर्वमर्हति ॥ ८ ॥

---

ணயா" என்ற தாதியுமான இந்த இரண்டு வைச்வதேவஸூக்தங்களை அவர்களுக்குச் சொல்லிக்கொடு. (அதிலிருந்து அந்தக்கர்மமானது முடிவுபெற்றதும்) ஸ்வர்க்கத்தைக் குறித்துச் செல்லுகின்ற அவர்கள் ஸத்ரத்தில் செலவானதுபோக எஞ்ஜிய தம்முடைய தனத்தை உனக்குக் கொடுப்பர். ஆனதுபற்றி அவர்களிடம் போ என்றார். அந்த நாபாகனும் அவ்விதமே செய்தான். அவர்களும் ஸத்ரத்தில் எஞ்ஜிய தனத்தை அவனுக்குக் கொடுத்துவிட்டு ஸ்வர்க்கத்தை யடைந்தனர். (4–5)

கருத்த சரீரத்தையுடைய புருஷனொருவன் (ஸ்ரீருத்ரன்) வடக்குதிக்கிலிருந்து வந்து அந்தத் தனத்தை எடுக்கப்போகின்ற நாபாகனைப் பார்த்து யாகபூமியிலுள்ள இந்த எஞ்ஜிய பொருள் என்னுடையது என்றார். (6) அப்பொழுதே மானவனான நாபாகன் இது ருஷிகளினால் கொடுக்கப்பட்டதுபற்றி என்னுடையதே என்றான். அதுகேட்ட ஸ்ரீருத்ரன் நம்மிருவருக்கும் நேர்ந்துள்ள இந்த விவாதவிஷயமாக உன்னுடைய பிதாவான நபகரிடம் கேட்கவேண்டுவது அவசியமாகிறது என்றார். நாபாகரும் அவ்விதமே பிதாவான நபகரைக் கேட்டார். (7) இவ்விதம் கேட்ட புத்திரனைப் பார்த்து நபகர் "யக்ஞபூமியிலுள்ள எஞ்ஜிய பொருள் யாவையும் ஒருஸமயம் (தக்ஷயாககாலத்தில்) ஸ்ரீருத்திரனையும் பொருட்டு ருஷிகள் விபாகஞ் செய்திருக்கின்றனர். மேலும் அவர் தேவதேவனுகையால் எல்லாவற்றையுமே அடைய அருஹராகவாகும்பொழுது யாகத்தில் மிகுந்ததைப்பற்றிச் சொல்லவேண்டுவது என்ன இருக்கிறது" என்றார். புத்திரன் அவரை வணங்கி விட்டுத் திரும்பிவந்து ஹே ஈச! ஹே ப்ரம்ஹன்! என்னுடைய பிதா

नभगस्तं प्रणम्याह तवेश किल वास्तुकम् । इत्याह मे पिता ब्रह्मन् शिरसा त्वां प्रसादये ॥ ९ ॥ यत्ते पितावदद्धर्मं त्वं तु सत्यं प्रभाषसे । ददामि ते मन्त्रदृशो ज्ञानं ब्रह्म सनातनम् ॥ १० ॥ गृहाण द्रविणं दत्तं मत्सत्रे परिशेषितम् । इत्युक्त्वाऽन्तर्हितो रुद्रो भगवान्सत्यवत्सलः ॥ ११ ॥ य एतत्संस्मरेत्प्रातः सायं च सुसमाहितः । कविर्भवति मन्त्रज्ञो गतिं चैव तथात्मनः ॥ १२ ॥

नाभागादम्बरीषोऽभून्महाभागवतः कृती। नास्पृशद्ब्रह्मशापोऽपि यं न प्रतिहतः क्वचित् ॥ १३ ॥ राजोवाच—भगवन् श्रोतुमिच्छामि राजर्षेस्तस्य

---

வான நபகர் யாகபூமியிலுள்ளது உம்முடையதே என்கிறார். ஆகவே தலையினுலும்மை வணங்கி ப்ரார்த்திக்கிறேன் என்று நாபாகர் சொன்னார். (8–9) அதைக் கேட்டு ஸத்யத்தில் ப்ரியமுள்ளவரும் பகவானுமான ஸ்ரீருத்திரன் நாபாகனைப் பார்த்து எக்காரணம்பற்றி உனது பிதா தர்மத்தைச் சொன்னாரோ, நீயும் ஸத்யத்தையே சொல்லுகின்றாயோ அக்காரணம்பற்றி வைஶ்வதேவ ஸூக்தங்களை யறிந்தவரான உமக்கு ப்ரம்ஹமும்=மஹத்தானதும், பழமையானதுமான ஞானத்தை யுபதேசிக்கிறேன். மேலும், யாகத்தில் எஞ்ஜியதும் ருஷிகளினுல் கொடுக்கப்பட்டதுமான தனத்தை என்னிடமிருந்து பெற்றுக்கொள்ளு என்று சொல்லிவிட்டு மறைந்துபோனார். (10–11) எவன் மனத்தை யசையாது நிறுத்தி ஶ்ருதிப்ரஸித்தமான இந்த ஆக்யானத்தைக் காலையிலும் மாலையிலும் ஶ்ரவணஞ்செய்வானோ அவன் கவியாகவும் மந்த்ரக்ஞனாகவுமாகி ஆத்மஞானத்தையுமடைகிறான். (12)

நாபாகனிடமிருந்து அம்பரீஷர் பிறந்தார். ஒருவிடத்திலும் தடைபெறாத ப்ராம்ஹணசாபமும்=ப்ராம்ஹணரான துர்வாஸஸ்ஸினுல் ஏவப்பட்ட கிருத்யானலமும், எவரை எக்காரணம்பற்றி அணுகவில்லையோ அக்காரணம்பற்றி அவர் மஹாபாகவதரும் கிருதியும்=புண்யவானுமே, யாகிறார். (13) அரசர் சொல்லலுற்றார்—ஹே பகவன்! எவரிடத்தில் ப்ரயோகிக்கப்பட்டதும் மாற்றவியாலததுமான ப்ரம்ஹதண்டமானது = கிருத்யானலமானது, பயனற்றதாகவாயிற்றோ புத்திமானான அந்த ராஜருஷியின் சரித்

धीमतः । न प्राभूद्यत्र निर्मुक्तो ब्रह्मदण्डो दुरत्ययः ॥ १४ ॥ श्रीशुक उवाच—अम्बरीषो महाभागः सप्तद्वीपवतीं महीम् । अव्ययां च श्रियं लब्ध्वा विभवं चातुलं भुवि ॥ १५ ॥ मेनेऽतिदुर्लभं पुंसां सर्वं तत्स्वप्नसंस्तुतम् । विद्वान्विभवनिर्वाणं तमो विशति यत्पुमान् ॥ १६ ॥ वासुदेवे भगवति तद्भक्तेषु च साधुषु । प्राप्तो भावं परं विश्वं येनेदं लोष्टवत्स्मृतम् ॥ १७ ॥ स वै मनः कृष्णपदारविन्दयोर्वचांसि वैकुण्ठगुणानुवर्णने । करौ हरेर्मन्दिरमार्जनादिषु श्रुतिं चकाराच्युतसत्कथोदये ॥ १८ ॥ मुकुन्दलिङ्गालयदर्शने दृशौ तद्भृत्यगात्रस्पर्शेऽङ्गसङ्गमम् । घ्राणं च तत्पादसरोजसौरभे श्रीमत्तुलस्या रसनां तदर्पिते ॥ १९ ॥ पादौ हरेः क्षेत्रपदानुसर्पणे शिरो

---

திரத்தைக் கேட்க நான் விரும்புகின்றேன் என்றார். (14) ஸ்ரீ சுகர் சொல்லலுற்றார்—மஹாபாகரான அம்பரீஷர் ஏழு தீவுகளுடன்கூடின பூமியையும், அழிவற்ற ஸம்பத்தையும், பூமியிலொப்பற்ற ஐஶ்வரியத்தையும் அடைந்தபோதிலுங்கூட, விபவத்துக்கு வரும் நாசத்தையும், அந்த விபவநாசத்தினுல் மனிதன் மயக்கத்தையடைவதையும் அறிந்தவராக இருப்பதுபற்றிப் புருஷர்களுக்கு அதிதுர்லபமான அவை யாவையும் ஸ்வப்பினத்துக்கொப்பாகவே எண்ணினர். (15-16) எந்தப்பக்தியினுல் இந்த உலகமானது ஓட்டின் சல்லிக்கொப்பாக எண்ணப்பட்டதோ அந்தமேலான பக்தியைப் பகவானுன வாஸுதேவனிடத்திலும், அவருடைய பக்தர்களான ஸாதுக்களிடத்திலும் அடைந்தார். (17) அந்த அரசனே, மனத்தை ஸ்ரீகிருஷ்ணனுடைய பாதாரவிந்தங்களிலும், வார்த்தைகளை வைகுண்டனுன பகவானுடைய குணுனுவர்ணனவிஷயத்திலும், கைகளை ஹரியின் ஆலயத்தைச்சுத்தஞ்செய்தல் முதலிய காரியங்களிலும், ஶ்ரோத்ரேந்திரியத்தை அச்யுதனுடைய ஸத்கதைகளின் ஶ்ரவணவிஷயத்திலும், நேத்திரங்களை முகுந்தனுடைய அர்ச்சாமூர்த்தியுள்ள ஆலயதரிசன விஷயத்திலும், சரீரஸம்பந்தத்தை அவருடைய பக்தர்களின் அங்கங்களைத்தொடும் விஷயத்திலும், கிராணேந்திரியத்தை ஸ்ரீமதியான துளஸியுடன்கூடின அவருடைய சரணுரவிந்தங்களிலுள்ள மணம்விஷயத்திலும், நாக்கை அவருக்கு நிவேதனஞ்செய்யப்பட்ட அன்னவிஷயத்திலும், பாதங்களை ஹரி

हृषीकेशपदाभिवन्दने। कामं च दास्ये न तु कामकाम्यया यथोत्तमश्लोक-जनाश्रया रतिः ॥ २० ॥

एवं सदा कर्मकलापमात्मनः परेऽधियज्ञे भगवत्यधोक्षजे। सर्वात्म-भावं विदधन्महीमिमां तन्निष्ठविप्राभिहितः शशास ह ॥ २१ ॥ ईजेऽश्वमे-धैरधियज्ञमीश्वरं महाविभूत्योपचिताङ्गदक्षिणैः। ततैर्वसिष्ठासितगौत-मादिभिर्धन्वन्यभिस्रोतमसौ सरस्वतीम् ॥ २२ ॥ यस्य क्रतुषु गीर्वाणैः सदस्या ऋत्विजो जनाः। तुल्यरूपाश्चानिमिषा व्यदृश्यन्त सुवाससः

---

யினுடைய க்ஷேத்திரமுள்ள விடங்களில் ஸஞ்சரிக்கும் விஷயத்தி லும், தலையை ஹ்ருஷீகேசனுடைய சரணங்களை நமஸ்கரிக்கும் விஷயத்திலும் செலுத்தினர். காமத்தை=மாலை சந்தனம் முதலி யவற்றின் ஸேவையை, பகவத்தாஸ்யநிமித்தமாய்ச் செய்தாரேய ன்றி விஷயங்களிலாசைகொண்டு செய்யவில்லை. அதாவது:—எவ் விதஞ்செய்தால் உத்தமஸ்லோகனுன பகவானுடைய பக்தர்களை யாஸ்ரயித்துள்ள ப்ரீதியானது ஏற்படுமோ அதற்குத் தக்கவாரே செய்தார் என்றும் (18–20)

இவ்விதம் எல்லாவிடத்திலுமாத்மாவிருக்கிறார் என்ற பாவத் தையுடையவராய் தன்னுடைய கர்மஸமூஹத்தை, பரனும், யக்ஞ பலதாதாவும், அதோக்ஷஜனுமான பகவானிடத்தில் ஸமர்ப்பணஞ் செய்து கொண்டும், பகவானிடத்திலீடுபட்டவர்களான ப்ராம்ஹ ணர்களினுல் சிக்ஷிக்கப்பட்டவராய்க் கொண்டும் இந்தப் பூமியை யாண்டுவந்தார். (21) மஹாவிபூதியினுல் விருத்திசெய்யப்பட்ட அங்கங்களையும் தக்ஷிணைகளையுமுடையனவும், வஸிஷ்டர் அஸிதர் கௌதமர் முதலியோர்மூலமாக விஸ்தரிக்கப்பட்டனவுமான அஸ்வ மேதங்களினுல் ஸரஸ்வதி நதிக்கு எதிரிலுள்ள ஜலமற்ற ப்ரதேசத் தில் யக்ஞாதிஷ்டாதாவான ஈஸ்வரனை ஆராதித்தார். (22) எவரு டைய யாகங்களில் ஸபையிலுள்ள ஜனங்களும் ருத்விக்குகளும் அதிகமான ஆஸ்சரியத்தைக் காண்பதன்மூலம் கண்ணிமையைக் கொட்டாதவர்களாகவும், அழகிய வஸ்திரத்தையணிந்தவர்களாகவு மிருப்பதுபற்றி தேவர்களுடன் துல்லியமான ரூபமுள்ளவர்களாகக் காணப்பட்டனரோ, உத்தமஸ்லோகனுன பகவானுடையலீலையை

॥ २३ ॥ स्वर्गो न प्रार्थितो यस्य मनुजैरमरप्रियः । शृण्वद्भिरुपगायद्भिरुत्तमश्लोकचेष्टितम् ॥ २४ ॥ समर्धयन्ति तान्कामाः स्वाराज्यपरिभाविताः । दुर्लभा नापि सिद्धानां मुकुन्दं हृदि पश्यतः ॥ २५ ॥ स इत्थं भक्तियोगेन तपोयुक्तेन पार्थिवः । स्वधर्मेण हरिं प्रीणन्सङ्गान्सर्वान् शनैर्जहौ ॥ २६ ॥ गृहेषु दारेषु सुतेषु बन्धुषु द्विपोत्तमस्यन्दनवाजिपत्तिषु । अक्षय्यरत्नाभरणायुधादिष्वनन्तकोशेष्वकरोदसन्मतिम् ॥ २७ ॥ तस्मा अदाद्धरिश्चक्रं प्रत्यनीकभयावहम् । एकान्तभक्तिभावेन प्रीतो भृत्याभिरक्षणम् ॥ २८ ॥ आरिराधयिषुः कृष्णं महिष्या तुल्यशीलया । युक्तः सांवत्सरं वीरो दधार द्वादशीव्रतम् ॥ २९ ॥

---

ஶ்ரவணஞ் செய்கின்றவர்களும், கானஞ் செய்கின்றவர்களுமான எவருடைய ஜனங்களால் தேவர்களுக்கு ப்ரியமான ஸ்வர்க்கமானது விரும்பப்பட்டதில்லையோ, முகுந்தனை ஹிருதயத்தில் பார்க்கின்றவர்களான அந்த ஜனங்களை ஸ்வாராஜ்யத்தினல்=ஸ்வரூபசுகத்தினல், அதிசயிக்கும்படி செய்யப்பட்டனவும், ஆனதுபற்றியே ஸித்தர்களுக்குங்கூட கிடைத்தற்கரிதானவைகளுமான காமங்கள்=விஷயங்கள், ஸந்தோஷிக்கும்படி செய்யவில்லையோ, அந்த அரசன் தவத்துடன்கூடின பக்தியோகத்தினுலும் ஸ்வதர்மத்தினுலும் ஹரியை ப்ரீதியுள்ளவராகச் செய்துகொண்டு மெதுவாக எல்லா ஸங்கங்களையும் விலக்கிவிட்டார். (23–26) வீட்டிலும், பத்னியினிடத்திலும், புத்திரர்களிடத்திலும், பந்துக்களிடத்திலும், சிறந்த யானைகள் தேர் குதிரைகள் காலாட்கள் இவர்களிடத்திலும், குறைவற்ற ரத்தினம் ஆபரணம் ஆயுதம் முதலியவற்றிலும், வற்றாத பொக்கிஷங்களிலும் அஸத்புத்தியைச் செய்தார். (இவை நிலைத்தனவன்று என வெண்ணினர்.) (27) ஹரியானவர் நிலைத்த பக்திபாவத்தினல் ப்ரீதராக இருந்துகொண்டு பக்தனைக் காப்பாற்றுகின்றதும், சத்துருஸேனைக்குப் பயத்தைத் தருகின்றதுமான சக்கிராயுதத்தை அவருக்குக் கொடுத்தார். (28) அந்த வீரன் தனக்கொப்பான சீலமுள்ளவளான பத்னியுடன் கூடினவராய் விஷ்ணுவை ஆராதிக்க வெண்ணங்கொண்டு ஒரு வருஷம் முடிய துவாதசீ வ்ரதத்தை யனுஷ்டித்தார். (29)

व्रतान्ते कार्तिके मासि त्रिरात्रं समुपोषितः । स्नातः कदाचित्कालिन्द्यां हरिं मधुवनेऽर्चयत् ॥ ३० ॥ महाभिषेकविधिना सर्वोपस्करसम्पदा । अभिषिच्याम्बराकल्पैर्गन्धमाल्यार्हणादिभिः ॥ ३१ ॥ तद्गतान्तरभावेन पूजयामास केशवम् । ब्राह्मणांश्च महाभागान्सिद्धार्थानपि भक्तितः ॥३२॥ गवां रुक्मविषाणीनां रूप्याङ्घ्रीणां सुवाससाम् । पयःशीलवयोरूपवत्सोपस्करसम्पदाम् ॥ ३३ ॥ प्राहिणोत्साधु विप्रेभ्यो गृहेषु न्यर्बुदानि षट् । भोजयित्वा द्विजानग्रे स्वाद्वन्नं गुणवत्तमम् ॥ ३४ ॥ लब्धकामैरनुज्ञातः पारणायोपचक्रमे । तस्य तर्ह्यतिथिः साक्षाद्दुर्वासा भगवानभूत् ॥ ३५ ॥ तमानर्चातिथिं भूपः प्रत्युत्थानासनार्हणैः । ययाचेऽभ्यवहाराय पादमूल-

---

ஒருஸமயம் விரதத்தின் முடிவில் கார்த்திகமாஸத்தில் மூன்று நாள் முழுதும் சுத்தோபவாஸமிருந்து யமுனையில் ஸ்னானஞ்செய்து மதுவனத்தில் ஸாம்ராஜ்யாபிஷேகவிதி ப்ரகாரமாக எல்லாவிதமான அபிஷேகஸாமக்ரீநிறைவுடன்கூட ஹரியை அபிஷேகஞ்செய்துவைத்து வஸ்திரம் ஆபரணம் இவற்றினலும், சந்தனம் மாலை பூஜை முதலியவற்றினலும் அவரை அர்ச்சித்தார். (30–31) அவரிடமீடுபட்ட மனத்துடன்கூடக் கேசவனையும், பூஜையில் விருப்பமற்றவர்களாயினுங்கூட மஹாபாகர்களாக இருக்கும் ப்ராம்ஹணர்களையும் பக்தியுடன்கூடப் பூஜித்தார். (32) பொன்னின லலங்கரிக்கப்பட்ட கொம்புகளுள்ளனவும், வெள்ளியின லலங்கரிக்கப்பட்ட கால்களை யுடையனவும், சிறந்த வஸ்திரங்களணியப் பெற்றனவும், பால் சுவபாவம் யௌவனம் ரூபம் கன்று மற்றுமுள்ள கழுத்தில் கட்டும்மணி கரக்கும் பாத்திரம் இவற்றின் நிறைவையுடையனவுமான அறுபது கோடிப்பசுக்களை வீட்டிலுள்ள ஸாது ப்ராம்ஹணர்களையும் பொருட்டு அனுப்பினன். அறுசுவையுடன் கூடினதும், ருசியுள்ளதுமான அன்னத்தை ப்ராம்ஹணர்களுக்கு முதலில் போஜனஞ்செய்வித்து இஷ்ட பூர்த்தியையடைந்தவர்களான அவர்களால் அனுமதிக்கப்பட்டவனைப் பாரணஞ்செய்யத் தொடங்கினர். அப்பொழுது பகவானன துர்வாஸஸ்ஸானவர் அதிதியாக அவனுக்கெதிரில் தோன்றினர். (33–35) அரசன், எழுந்திருத்தல் ஆஸனம் கொடுத்தல் பூஜித்தல் இவற்றி

मुपागतः ॥ ३६ ॥ प्रतिनन्द्य स तद्याच्ञां कर्तुमावश्यकं गतः । निममज्ज बृहद्ध्यायन्कालिन्दीसलिले शुभे ॥ ३७ ॥ मुहूर्तार्धावशिष्टायां द्वादश्यां पारणं प्रति । चिन्तयामास धर्मज्ञो द्विजैस्तद्धर्मसङ्कटे ॥ ३८ ॥ ब्राह्मणातिक्रमे दोषो द्वादश्यां यदपारणे । यत्कृत्वा साधु मे भूयादधर्मो वा न मां स्पृशेत् ॥ ३९ ॥ अम्भसा केवलेनाथ करिष्ये व्रतपारणम् । प्राहुरब्भक्षणं विप्रा ह्यशितं नाशितं च तत् ॥ ४० ॥ इत्यपः प्राश्य राजर्षिश्चिन्तयन्मनसाच्युतम् । प्रत्याचष्ट कुरुश्रेष्ठ द्विजागमनमेव सः ॥ ४१ ॥

दुर्वासा यमुनाकूलात्कृतावश्यक आगतः । राज्ञाभिनन्दितस्तस्य बुबुधे चेष्टितं धिया ॥ ४२ ॥ मन्युना प्रचलद्गात्रो भ्रुकुटीकुटिलाननः । बुभु-

---

ளுல் அந்த அதிதியைப் பூஜித்தார். பிறகு அவருடைய காலில் விழுந்து நமஸ்கரித்து சாப்பிடவேண்டுமென யாசித்தார். (36) அந்தத் தூர்வாஸஸ் அவருடைய வேண்டுகோளைப் புகழ்ந்துவிட்டு நியமமாகச் செய்யவேண்டிய மாத்யான்ஹிக கர்மத்தைச்செய்யச் சென்றார். சுபமான யமுனையின் ஜலத்தில் ப்ருஹத்தை=அகமர்ஷண ஸூக்தத்தை, ஜபித்துக்கொண்டு ஸ்நானஞ்செய்தார். (37) அரை முஹூர்த்தமே பாக்கியிருக்கும் துவாதசியில் பாரணம் செய்யவேண்டுவதை யுத்தேசித்து தர்மவிஷயமான ஸங்கடம் நேர்ந்தகாலத்தில் தர்மக்ஞனன அரசன் எக்காரணம்பற்றி ப்ராம்ஹணாதிக்ரமணத்திலும் துவாதசியில் பாரணஞ் செய்யாமையிலும் தோஷம்வருமோ அக்காரணம்பற்றி எதுசெய்யப்படுமாயின் எனக்கு நன்மைவரும், அல்லது அதர்மமாவது நேராமலிருக்கும் என ப்ராம்ஹணர்களுடன்கூட வாலோசிக்கலானன். (38-39) இவ்வித மாலோசித்த பிறகு விப்ரர்கள் ஜலம் குடிப்பதை ஆஹாரமாயும் ஆஹாரமின்மையாயும் சொல்லுகின்றனர். ஆதலின் தனித்த ஜலத்தினல் வ்ரதபாரணத்தை=வ்ரதபூர்த்தியை, செய்யப்போகிறேன். (40) ஹே குருஸ்ரேஷ்ட! எனத் தீர்மானித்துக்கொண்டு அந்த ராஜருஷி அச்யுதனை மனத்தினல் தியானித்துக் கொண்டு ஜலத்தைக் குடித்துவிட்டு ப்ராம்ஹணரான தூர்வாஸஸ்ஸின் வரவை யெதிர்பார்த்துக் கொண்டிருந்தார். (41)

क्षितश्च सुतरां कृताञ्जलिमभाषत ॥ ४३ ॥ अहो अस्य नृशंसस्य श्रियोन्मत्तस्य पश्यत । धर्मव्यतिक्रमं विष्णोरभक्तस्येशमानिनः ॥ ४४ ॥ यो मामतिथिमायातमातिथ्येन निमन्त्र्य च । अदत्त्वा भुक्तवांस्तस्य सद्यस्ते दर्शये फलम् ॥ ४५ ॥ एवं ब्रुवाण उत्कृत्य जटां रोषविदीपितः । तया स निर्ममे तस्मै कृत्यां कालानलोपमाम् ॥ ४६ ॥ तामापतन्तीं ज्वलतीमसिहस्तां पदा भुवम् । वेपयन्तीं समुद्वीक्ष्य न चचाल पदान्नृपः ॥ ४७ ॥ प्राग्दिष्टं भृत्यरक्षायां पुरुषेण महात्मना । ददाह कृत्यां तां चक्रं क्रुद्धाहिमिव पावकः ॥ ४८ ॥ तदभिद्रवदुद्वीक्ष्य स्वप्रयासं च निष्फलम् । दुर्वासा

---

நித்யநைமித்திக கர்மங்களைச் செய்துமுடித்துக் கொண்டு யமுனைக் கரையிலிருந்து வந்த தூர்வாஸஸ்ஸு அரசனால் கொண்டாடப்பட்டவராய் அவனுடைய நடத்தையை புத்தியினால் அறிந்து கொண்டார். (42) கோபத்தினால் ஆடுகின்ற சரீரத்தை யுடையவராகவும், புருவங்களினால் கோணலான முகத்தையுடையவராகவும், மிக்கப் பசியுள்ளவராகவுமிருக்கும் அவர், இருகைகளையும் கூப்பிக்கொண்டு நிற்கும் அரசனைப் பார்த்துச் சொல்லலுற்றார். (43) குரூரனும், ஐஸ்வரியத்தினால் மதங்கொண்டவனும், விஷ்ணுவின் பக்தியற்றவனும், அரசன் என்ற அஹங்காரமுள்ளவனுமான இவனுடைய தர்மவ்யதிக்ரமத்தைப் பாருங்கள். இது வெகு கஷ்டம். (44) தன்வீட்டுக்கு வந்த அதிதியான என்னை எந்த நீ, ஆதித்யத்தினால் வரவேற்றுப்பிறகு எனக்குமுதலில் அன்னத்தைக் கொடாமல் புஜித்தாயோ அந்த உனக்கு அதன்பலனை இப்பொழுதே காண்பிக்கிறேன். (45) எனச் சொல்லிக்கொண்டு கோபத்தினால் ப்ரகாசிக்கின்றவரான அவர் ஜடையைப் பிடுங்கி அதன் மூலம் அந்த அரசனையும் பொருட்டு ப்ரளயகாலாக்னிக் கொப்பான கிருத்யை என்ற பூதத்தை நிர்மாணஞ்செய்தார். (46) கத்தியைக் கையில்தாங்கிக் கொண்டு ஓடிவருகின்றதும், ப்ரகாசிக்கின்றதும், அடிவைப்பினால் பூமியை ஆடும்படி செய்கின்றதுமான அந்தப் பூதத்தைக் கண்டு அரசன் இருப்பிடம்விட்டு அசையவில்லை. (47) மஹாத்மாவான புருஷனால் (விஷ்ணுவினால்) ப்ருத்யாரக்ஷாவிஷயமாக முன்னரே கொடுக்கப்பட்ட சக்கிராயுதமானது

दुद्रुवे भीतो दिक्षु प्राणपरीप्सया ॥ ४९ ॥ तमन्वधावद्भगवद्रथाङ्गं दावाग्निरुद्धूतशिखो यथाहिम् । तथानुषक्तं मुनिरीक्षमाणो गुहां विविक्षुः प्रससार मेरोः ॥ ५० ॥ दिशो नभः क्ष्मां विवरान्समुद्राँल्लोकान्सपालांस्त्रिदिवं गतः सः । यतो यतो धावति तत्र तत्र सुदर्शनं दुष्प्रसहं ददर्श ॥ ५१ ॥ अलब्धनाथः स यदा कुतश्चित्सन्त्रस्तचित्तोऽरणमेषमाणः । देवं विरिञ्चं समगाद्विधातस्त्राह्यात्मयोनेऽजिततेजसो माम् ॥ ५२ ॥

ब्रह्मोवाच—स्थानं मदीयं सहविश्वमेतत्क्रीडावसाने द्विपरार्धसंज्ञे । भ्रूभङ्गमात्रेण हि सन्दिधक्षोः कालात्मनो यस्य तिरो भविष्यति ॥ ५३ ॥

---

கோபங்கொண்ட பாம்பைக் காட்டுத் தீயானது போல அந்த க்ருத்யையை எரித்துவிட்டது. (48) தன்னை நோக்கி அந்தச் சக்கிரமோடிவருவதையும் அதைத் தடுக்கும் விஷயத்தில் தனது முயற்சி வீணானதையும் கண்டு தூர்வாஸமஹருஷி பயந்து ப்ராணனைக் காப்பாற்றிக் கொள்ளவேண்டுமென்ற விருப்பத்துடன் திக்குகளிலோடினார். (49) கொழுந்துவிட்டெரியும் காட்டுத்தீயானது பாம்பைப்போலப் பகவானுடைய சக்கிராயுதமானது அந்தத் தூர்வாஸஸ்ஸைப் பின்தொடர்ந்தோடிற்று. அவ்விதம் சக்கிராயுதம் பின்தொடர்ந்து வருவதை தூர்வாஸஸ் கண்டு மேருவின் குஹையில் பிரவேசிக்க வெண்ணங்கொண்டு ஓடினார். (50) அவர், திக்குகளையும், ஆகாசத்தையும், பூமியையும், சந்துகளையும், ஸமுத்திரங்களையும், பாலகர்களுடன்கூடின லோகங்களையும், தேவலோகத்தையும் அடைந்தவராய் எங்கு எங்கு ஓடினாரோ அங்கு அங்கு பொருக்கவியலாத ஸுதர்சனத்தைக் கண்டார். (51) அந்தத்தூர்வாஸஸ் எங்கிருந்தும் தனக்கு ரக்ஷகனை யடையாதவராக எப்பொழுது ஆனாரோ அப்பொழுது நன்கு பயந்த சித்தமுள்ளவராகவும் ஆகவே ரக்ஷணத்தை எதிர்பார்க்கின்றவராகவுமாகி ப்ரம்ஹதேவனையடைந்து, ஹே ஆத்மயோனே! ஹே விதாத:! ஹரியின் சக்கிரத்திலிருந்து என்னைக் காப்பீராக என்றார். (52)

ப்ரம்ஹா சொல்லலுற்றார்—விச்வத்துடன்கூட இந்த என்னுடைய ஸ்தானமானது, க்ரீடையின் முடிவில் அதாவது:—த்விபரார்

अहं भवो दक्षभृगुप्रधानाः प्रजेशभूतेशसुरेशमुख्याः । सर्वे वयं यन्नियमं प्रपन्ना मूर्ध्न्यर्पितं लोकहितं वहामः॥ ५४ ॥ प्रत्याख्यातो विरिञ्चेन विष्णुचक्रोपतापितः । दुर्वासाः शरणं यातः शर्वं कैलासवासिनम् ॥ ५५ ॥ श्रीरुद्र उवाच—वयं न तात प्रभवाम भूम्नि यस्मिन्परेऽन्येऽप्यजजीवकोशाः। भवन्ति काले न भवन्ति हीदृशाः सहस्रशो यत्र वयं भ्रमामः॥५६॥ अहं सनत्कुमारश्च नारदो भगवानजः । कपिलोऽपान्तरतमो देवलो धर्म आसुरिः ॥ ५७ ॥ मरीचिप्रमुखाश्चान्ये सिद्धेशाः पारदर्शिनः । विदाम न वयं सर्वे यन्मायां माययावृताः ॥ ५८ ॥ तस्य विश्वेश्वरस्येदं शस्त्रं

---

த்தமெனப் பெயரிய காலத்தின்முடிவில் பொசுக்கவெண்ணங்கொண்டவரும், காலஸ்வரூபியுமான எவருடைய புருவநெரிச்சல்மாத்திரத்திலேயே மறைந்துவிடுகின்றதோ, (53) நானும், மஹாதேவனும், தக்ஷர் ப்ருகு முதலியோரும், ப்ரஜேசர் பூதேசர் ஸுரேசர் முதலியோரும் ஆகிய நாங்கள் யாவரும் இடப்பட்ட எவருடைய ஆக்ஞையைத் தலையில் வஹித்துக்கொண்டு லோகத்துக்கு ஹிதத்தைச் செய்கின்றோமோ (அவரது பக்தருக்கு த்ரோஹஞ்செய்தவரான உம்மை ரக்ஷிப்பதற்கு நான் சமர்த்தனல்லேன் என்றார்).(54) ப்ரம்ஹதேவனால் நிராகரிக்கப்பட்டவரும் விஷ்ணுசக்கிரத்தினால் பீடிக்கப்பட்டவருமான துர்வாஸஸ் கைலாஸவாஸியான சிவனைச் சரணமடைந்தார். (55) ஸ்ரீருத்ரன் சொல்லலுற்றார்--ஹே தாத! நாங்கள் எந்த ப்ரம்ஹாண்டங்களில் லோகேசர்கள் என்ற அபிமானமுள்ளவர்களாகச் சுற்றுகின்றோமோ அத்தகையவைகளும், இம்மாதிரியானவைகளும்=நேரில் காணப்படுகின்ற ப்ரம்ஹாண்ட ப்ரமாணங்களும், ஆயிரக்கணக்கானவைகளுமான மற்றுமுள்ள ப்ரம்ஹதேவர்களாகிற ஜீவர்களின் கோசங்கள்=உபாதிபூதங்களான ப்ரம்ஹாண்டங்களாகிற சரீரங்கள், மஹானான எந்தப் பரமேஸ்வரனிடத்தில் அந்தந்தக் காலத்திலிருக்கவோ இல்லாமல்போகவோ செய்கின்றனவோ அவர் விஷயத்தில் நாங்கள் ப்ரபுக்களாக மாட்டோமன்றோ. (56) நானும், ஸனத்குமாரரும், நாரதரும், பகவானான ப்ரம்ஹதேவரும், கபிலரும், அபாந்தரதமரும்=வ்யாஸரும், தேவலரும், தர்மராஜனும், ஆஸுரியும், மரீசி முதலிய மற்றுமுள்ளவர்க

दुर्विषहं हि नः। तमेव शरणं याहि हरिस्ते शं विधास्यति ॥ ५९ ॥ ततो निराशो दुर्वासाः पदं भगवतो ययौ। वैकुण्ठाख्यं यदध्यास्ते श्रीनिवासः श्रिया सह ॥ ६० ॥ सन्दह्यमानोऽजितशस्त्रवह्निना तत्पादमूले पतितः सवेपथुः। आहाच्युतानन्त सदीप्सित प्रभो कृतागसं मामव विश्वभावन ॥ ६१ ॥ अजानता ते परमानुभावं कृतं मयाऽघं भवतः प्रियाणाम्। विधेहि तस्यापचितिं विधातर्मुच्येत यन्नाम्न्युदिते नारकोऽपि ॥ ६२ ॥

श्रीभगवानुवाच—अहं भक्तपराधीनो ह्यस्वतन्त्र इव द्विज। साधुभिर्ग्रस्तहृदयो भक्तैर्भक்தजनप्रियः ॥ ६३ ॥ नाहमात्मानमाशासे मद्भक्तैः

---

ளும், ஸர்வக்ஞர்களான ஸித்தேசர்களும் ஆகிய நாங்கள்யாவரும் மாயையினுல் சூழப்பட்டவர்களாக இருப்பதுபற்றி எவருடைய மாயையை யறியமாட்டோமே அந்த விஸ்வேஸ்வரனுடைய இந்தச் சஸ்திரமானது எங்களால் தடுக்கக்கூடியதாக வாகாதன்ருே? ஆகவே அவரையே சரணமடை. அவர் உனக்கு க்ஷேமத்தைச் செய்வார் என்ருர். (57–59) துர்வாஸர் ஆசையொழிந்தவராய், எந்தவிடத்தில் லக்ஷ்மீதேவியுடன்கூட ஸ்ரீனிவாஸன் வஸிக்கின்ருரோ பகவல்லோகமான அந்த வைகுண்டலோகத்துக்கு அங்கிருந்து சென்ருர். (60) பகவத்சஸ்திரமான சக்கிராயுதத்தின் நெருப்பினுல் நன்கு பொசுக்கப்படுகின்றவராய் நடுக்கத்துடன்கூட அவருடைய பாதமூலத்தில் விழுந்து ஹே அச்யுத! ஹே அனந்த! ஸாதுக்களுக்குப் பிடித்தமானவரே! ஹே ப்ரபோ! ஹே விஸ்வபாவன! அபராதஞ்செய்த என்னைக் காப்பீராக என்ருர். (61) உம்முடைய மேலான மஹிமையை யறியாதவனுன என்னுல் உம்முடைய பக்தர்களுக்குத் துக்கமானது உண்டாக்கப்பட்டது. அந்த அபராதத்துக்கு ப்ராயஶ்சித்தத்தை விதிப்பீராக. எந்த உம்முடைய நாமாவைச் சொன்னதும் நரகத்திலிருப்பவன்கூட முக்தியை யடைவானே அந்த உம்மால் முடியாதது ஒன்றுமில்லையன்ருே என்ருர்.

ஸ்ரீபகவான் சொல்லலுற்ருர்—ஹே த்விஜ! பக்தஜனங்களுக்கு ப்ரியனுன நான் ஸாதுக்களான பக்தர்களினுல் தங்கள் வசமாக்கப்பட்ட சித்தமுள்ளவனுக இருப்பதுபற்றி அஸ்வதந்திரன் போல பக்தபராதீனனுகவன்ருே இருக்கின்றேன். (63) ஹே

साधुभिर्विना । श्रियं चात्यन्तिकीं ब्रह्मन्येषां गतिरहं परा ॥ ६४ ॥ ये दारागारपुत्राप्तान्प्राणान्वित्तमिमं परम् । हित्वा मां शरणं याताः कथं तांस्त्यक्तुमुत्सहे ॥ ६५ ॥ मयि निर्बद्धहृदयाः साधवः समदर्शनाः । वशीकुर्वन्ति मां भक्त्या सत्स्त्रियः सत्पतिं यथा ॥ ६६ ॥ मत्सेवया प्रतीतं च सालोक्यादिचतुष्टयम् । नेच्छन्ति सेवया पूर्णाः कुतोऽन्यत्कालविद्रुतम् ॥ ६७ ॥ साधवो हृदयं मह्यं साधूनां हृदयं त्वहम् । मदन्यत्ते न जानन्ति नाहं तेभ्यो मनागपि ॥ ६८ ॥ उपायं कथयिष्यामि तव विप्र शृणुष्व तत् । अयं ह्यात्माभिचारस्ते यतस्तं यातु वै भवान् । साधुषु प्रहितं तेजः प्रहर्तुः कुरुतेऽशिवम् ॥ ६९ ॥ तपो विद्या च विप्राणां निःश्रेयसकरे उभे । त

---

ப்ரம்ஹன்! நான் ஸாதுக்களான எனது பக்தர்களைவிட்டு எனது ஆத்மாவையும், நிலைத்த லக்ஷ்மீதேவியையுங்கூட ஆசைப்படுவதில்லை. அவர்களுக்கு நான் மேலான கதியாக விருக்கின்றேன். (64) எவர்கள் பத்னி வீடு புத்திரன் ஆப்தர் இவர்களையும், ப்ராணன்களையும், இஹலோக பரலோகங்களையும் அலக்ஷியஞ்செய்துவிட்டு என்னைச் சரணமடைந்தனரோ அவர்களை விடுவதற்கு நான் எவ்விதம் ப்ரியப்படுவேன். (65) என்னிடம் நன்கு செலுத்தப்பட்ட மனத்தை யுடையவர்களும், ஸமதிருஷ்டி யுள்ளவர்களுமான ஸாதுக்கள், நல்ல ஸ்திரீகள் நல்ல பதியைப் போலப் பக்தியினால் என்னைத் தமது வசமாக்கிக் கொள்ளுகின்றனர். (66) ஸேவையினால் பூர்ணர்களான ஸாதுக்கள் எனது ஸேவைமூலம் ப்ராப்தமான ஸாலோக்யம் முதலிய நான்கையும் விரும்புவதில்லை. இவ்விதமிருக்கக் காலத்தினால் அழிக்கப்பட்ட பிறவற்றை எங்ஙனம் விரும்புவர். ஒருபொழுதும் விரும்பார். (67) ஸாதுக்களோ என்னுடைய ஹிருதயமாவர். நானே ஸாதுக்களின் ஹிருதயமாவேன். அவர்கள் என்னைவிடப் பிறவற்றை யறியமாட்டார். நானும் அவர்களைவிடப் பிறவொன்றையும் அற்பமும் அறியமாட்டேன். (68) ஹே விப்ர! உமக்கு உபாயத்தைச் சொல்லுகிறேன் கேளும். எவரிடமிருந்து உமக்கு இந்த ஹிம்ஸையானது ஏற்பட்டிருக்கிறதோ அவரையே நீர் அடையும். ஸாதுக்களிடம் செலுத்தப்பட்ட தேஜஸ்ஸானது ப்ரயோகிப்பவனுக்கே அனர்த்தத்தைச் செய்கிறது.

एव दुर्विनीतस्य कल्पेते कर्तुरन्यथा ॥ ७० ॥ ब्रह्मंस्तद्गच्छ भद्रं ते नाभागतनयं नृपम् । क्षमापय महाभागं ततः शान्तिर्भविष्यति ॥ ७१ ॥

इति श्रीमद्भागवते महापुराणे नवमस्कन्धेऽम्बरीषोपाख्यानवर्णनं नाम चतुर्थोऽध्यायः ॥ ४ ॥



## अथ पञ्चमोऽध्यायः ॥

श्रीशुक उवाच—एवं भगवतादिष्टो दुर्वासाश्चक्रतापितः । अम्बरीषमुपावृत्य तत्पादौ दुःखितोऽग्रहीत् ॥ १ ॥ तस्य सोद्यमनं वीक्ष्य पादस्प-

---

(69) தவம் வித்யை என்று இவ்விரண்டும் விப்ரர்களுக்கு க்ஷேமத்தைத் தரக்கூடியன. அவ்விரண்டுமே வினயமற்றவனான கர்த்தாவுக்கு தீங்கைத் தருகின்றன. (70) ஆகவே ஹே ப்ரம்ஹன்! உமக்கு க்ஷேமமுண்டாகட்டும். நாபாகனின் புத்திரனும் அரசனுமான அம்பரீஷனிடம் போம். மஹாபாகனான அவனைச் சாந்தப்படுத்தும். அதிலிருந்து க்ஷேமமானது உண்டாகப்போகிறது என்றார். (71) (எ-று)

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண நவமஸ்கந்தத்தில்
அம்பரீஷோபாக்கியான வர்ணனமென்ற
நான்காவது அத்தியாயம் முற்றிற்று.



## ஐந்தாவது அத்தியாயம்.

(அ-கை) पञ्चमे विष्णुचक्रन्तु प्रसाद्य प्राणसङ्कटात् ।
दुर्वासा रक्षितस्तेन यथा तद्वृत्तमीर्यते ॥ १ ॥

(க-ரை) அந்த அம்பரீஷனால் விஷ்ணுசக்கிரத்தை வேண்டிக்கொண்டு ப்ராணாபத்திலிருந்து தூர்வாஸஸ்ஸானவர் எவ்விதம் ரக்ஷிக்கப்பட்டாரோ அத்தகைய அவருடைய சரித்திரமானது இந்த ஐந்தாவது அத்தியாயத்திலுபதேசிக்கப்படுகிறது. (1)

ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—இவ்விதம் பகவானாலுபதேசிக்கப்பட்டவரும் சக்கிராயுதத்தினால் தாபமடைவிக்கப்பட்டவருமான

र्शविलज्जित: । अस्तावीत्तद्धरेरस्त्रं कृपया पीडितो भृशम् ॥ २ ॥ अम्ब-रीष उवाच—त्वमग्निर्भगवान्सूर्यस्त्वं सोमो ज्योतिषां पति: । त्वमापस्त्वं क्षितिर्व्योम वायुर्मात्रेन्द्रियाणि च ॥ ३ ॥ सुदर्शन नमस्तुभ्यं सहस्राराच्युतप्रिय । सर्वास्त्रघातिन्विप्राय स्वस्ति भूया इडस्पते ॥ ४ ॥ त्वं धर्मस्त्वमृतं सत्यं त्वं यज्ञोऽखिलयज्ञभुक् । त्वं लोकपाल: सर्वात्मा त्वं तेज: पौरुषं परम् ॥ ५ ॥ नम: सुनाभाखिलधर्मसेतवे ह्यधर्मशीलासुरधूमकेतवे । त्रैलोक्यगोपाय विशुद्धवर्चसे मनोजवायाद्भुतकर्मणे गृणे ॥ ६ ॥ त्व-

---

தூர்வாஸர் துக்கிதராய் அம்பரீஷரிடம் திரும்பிவந்து அவருடைய கால்களைப் பிடித்துக்கொண்டார். (1) அந்த அம்பரீஷர் கால்களைப் பிடித்துக்கொண்டதிலிருந்து லஜ்ஜையை யடைந்தவராயும் அவருடைய முயற்சியைக்கண்டு கிருபையினால் மிகப் பீடிக்கப்பட்டவராயும் கொண்டு ஹரியின் அஸ்திரமான சக்கிராயுதத்தை ஸ்துதிக்க வாரம்பித்தார். (2) அம்பரீஷர் சொல்லலுற்றார்—அக்னியும் நீரே, பகவானான சூரியனும் நீரே, நக்ஷத்திரங்களுக்குப் பதியான சந்திரனும் நீரே, ஜலங்களும் நீரே, பூமியும் நீரே, ஆகாசமும் நீரே, வாயுவும் நீரே, விஷயங்களையறிகின்ற இந்திரியங்களும் நீரே. (உமது சக்தியினாலேயே அக்னியாதிகள் தத்தமது காரியத்தைச் செய்கின்றன.) (3) ஸஹஸ்ரார!=ஆயிரம் கூர்களையுடையவரே!, ஹே அச்யுதப்ரிய! ஹே இடஸ்பதே = பிருதிவீபதியே!, எல்லா அஸ்திரங்களையும் நாசஞ் செய்பவரே! ஹே ஸுதர்சன! உமக்கு நமஸ்காரம். ப்ராம்ஹணருக்கு க்ஷேமத்தைத்தருபவராக ஆவீராக. (4) தர்மமும் நீரே, ருதமும் நீரே, ஸத்யமும்நீரே, யக்ஞமும்நீரே, எல்லா யக்ஞங்களையு மனுபவிப்பவரும் நீரே, லோகபாலனும் நீரே, ஸர்வாத்மாவான பகவானும் நீரே, புருஷனான ஈஸ்வரனுடைய மேலான தேஜஸ்ஸும்=ஸாமர்த்தியமும், நீரே. (5) ஹே ஸுநாப! எல்லா தர்மங்களுக்கும் ஸேதுவும்=மரியாதாபாலகரும், அதர்மசீலர்களான அஸுரர்களுக்குத் தூமகேதுவாக=நாசகராக, உள்ளவரும், மூவ்வுலகங்களையும் ரக்ஷிப்பவரும், மிக ப்ரகாசமான தேஜஸ்ஸை யுடையவரும், மனத்துக் கொப்பான வேகமுள்ளவரும், அத்புதமான கர்மாவை யுடையவருமான உம்மையும் பொரு

त्तेजसा धर्ममयेन संहृतं तमः प्रकाशश्च धृतो महात्मनाम्। दुरत्ययस्ते महिमा गिरां पते त्वद्रूपमेतत्सदसत्परावरम् ॥ ७ ॥ यदा विसृष्टस्त्वमनञ्जनेन वै बलं प्रविष्टोऽजित दैत्यदानवम्। बाहूदरोर्वङ्घ्रिशिरोधराणि वृक्णन्नजस्रं प्रधने विराजसे ॥ ८ ॥ स त्वं जगत्त्राण खलप्रहाणये निरूपितः सर्वसहो गदाभृता। विप्रस्य चास्मत्कुलदैवहेतवे विधेहि भद्रं तदनुग्रहो हि नः ॥ ९ ॥ यद्यस्ति दत्तमिष्टं वा स्वधर्मो वा स्वनुष्ठितः। कुलं नो

---

ட்டு நமஸ்காரத்தைச் சொல்லுகிறேன். (6) தர்மமயமான உம்முடைய தேஜஸ்ஸினுல் இருளானது போக்கப்படுகிறது. மஹாத்மாக்களான ஸூரியாதிகளின் ப்ரகாசமும் உம்மாலேயே ஏற்படுத்தப் படுகிறது. வேதலக்ஷணமான வாக்குகளுக்குப் பதியாக இருப்பவரே! உம்முடைய மஹிமையானது எவராலும் அழிக்கமுடியாததாகவுள்ளது. ஸ்தூலஸூக்ஷ்மமும் காரணகாரியமுமான இந்த ப்ரபஞ்சமானது உம்மாலேயே ரூபமுள்ளதாக்கப்படுகிறது. (7) ஹே அஜித! அனஞ்ஜனரான ஹரியினுல் எப்பொழுது நீர் ப்ரயோகிக்கப்பட்டீரோ அப்பொழுதே தைத்யர் தானவர் இவர்களின் ஸேனையில் ப்ரவேசித்தவராய்க் கொண்டு அவர்களின் தோள் வயிறு துடை கால் கழுத்து இவற்றை ஓயாது வெட்டிக்கொண்டு போரில் ப்ரகாசிக்கிறீர். (8) ஹே ஜகத்தை ரக்ஷிப்பவரே! அத்தகைய மஹிமைவாய்ந்தவரும், ஸர்வத்தையும் ஸஹிப்பவருமான நீர் துஷ்டர்களின் நாசத்துக்குவேண்டியே பகவானுல் ஏவப்பட்டீர். ஆகவே எங்கள் குலத்துக்கு பாக்கியலாபமேற்படவேண்டி இந்த ப்ராம்ஹணருக்கு க்ஷேமத்தைச் செய்யும். அதுவேயன்றோ எங்களுக்கு மேலான அனுக்கிரஹமாகவாகும். (9) *தானமோ, யாகமோ, நன்கு அனுஷ்டிக்கப்பட்ட தர்மமோ இருக்குமேயாகுலும், எங்கள் குலமானது ப்ராம்ஹணரைத் தைவமாக எண்ணுவது வாஸ்தவமாகுலும்இந்த ப்ராம்ஹணர் தாபமற்றவராகவாகட்டும். (10) ஸர்வ குணங்களுக்குமிருப்பிடமான பகவான் ஒருவரே எல்லா ப்ராணிக

---

* தன்னிடமுள்ள எல்லா ஸுக்ருதத்தையும் அர்ப்பணஞ்செய்யும் வாயிலாக ப்ராம்ஹண ரக்ஷணத்தை இதுமுதல் இரண்டு சுலோகங்களினுல் வேண்டுகிறார்.

विप्रदैवं चेद्विजो भवतु विज्वरः ॥ १० ॥ यदि नो भगवान्प्रीत एकः सर्वगुणाश्रयः । सर्वभूतात्मभावेन द्विजो भवतु विज्वरः ॥ ११ ॥

श्रीशुक उवाच—इति संस्तुवतो राज्ञो विष्णुचक्रं सुदर्शनम् । अशाम्यत्सर्वतो विप्रं प्रदहद्राजयाच्ञया ॥ १२ ॥ स मुक्तोऽस्त्राग्नितापेन दुर्वासाः स्वस्तिमांस्ततः । प्रशशंस तमुर्वीशं युञ्जानः परमाशिषः ॥ १३ ॥ दुर्वासा उवाच—अहो अनन्तदासानां महत्त्वं दृष्टमद्य मे । कृतागसोऽपि यद्राजन्मङ्गलानि समीहसे ॥ १४ ॥ दुष्करः को नु साधूनां दुस्त्यजो वा महात्मनाम् । यैः सङ्गृहीतो भगवान्सात्वतामृषभो हरिः ॥ १५ ॥ यन्नामश्रुतिमात्रेण पुमान्भवति निर्मलः । तस्य तीर्थपदः किं वा दासानाम-

---

ளிலும் பகவத்திருஷ்டியுடன் ஆராதிக்கப்பட்டதன்மூலம் எங்கள் விஷயத்தில் ப்ரீதராக இருப்பாரேயானல் ப்ராம்ஹணர் தாபமற்றவராகவாகட்டும் என்ருர். (11)

ஸ்ரீசுகர் சொல்லலுற்ருர்—இவ்விதம் அரசன் ஸ்துதிக்குங்கால் ப்ராம்ஹணனை நாலாபக்கத்திலும் பொசுக்குகின்ற சுதர்சனமென்ற விஷ்ணுசக்கிரமானது அரசருடைய யாசனையையொட்டிச் சாந்தமாகவாகிவிட்டது. (12) அஸ்திரத்தினது அக்னிதாபத்திஞல் விடுபட்ட அந்தத் தூர்வாஸஸ் பிறகு க்ஷேமத்தையடைந்தவராயும் மேலான ஆசீர்வாதங்களைச் செய்கின்றவாராயும் கொண்டு அந்த அரசனைப் புகழ்ந்தார். (13) தூர்வாஸஸ் சொல்லலுற்ருர்—ஹே ராஜன்! எக்காரணம்பற்றி அபராதஞ் செய்தவனுக்குக்கூட க்ஷேமங்களைப்ப்ரார்த்திக்கின்றீரோ அக்காரணம்பற்றி அனந்தனுன பகவானுடைய பக்தர்களின் மஹத்துவமானது இப்பொழுது என்னல் நேரில் காணப்பட்டதாகவாயிற்று. (14) எவர்களால் ஸத்வகுண ஸம்பன்னர்களுக்குள் சிறந்தவரும் பகவானுமான ஹரியானவர் வசப்படுத்தப்பட்டாரோ மஹாத்மாக்களான அந்த ஸாதுக்களுக்கு செய்யமுடியாததோ, விடமுடியாததோ என்ன இருக்கிறது. ஒன்றுமேயில்லை. (15) எவருடைய நாமத்தை ஶ்ரவணஞ்செய்தமாத்திரத்திஞலேயே புருஷன் பாபமற்றவஞக வாகின்ருனே, கங்காதி தீர்த்தத்தைச் சரணத்திலுடைய அவருடைய தாஸர்களுக்கு

वशिष्यते ॥ १६ ॥ राजन्ननुगृहीतोऽहं त्वयातिकरुणात्मना । मदघं पृष्ठतः कृत्वा प्राणा यन्मेऽभिरक्षिताः ॥ १७ ॥ राजा तमकृताहारः प्रत्यागमनकाङ्क्षया । चरणावुपसङ्गृह्य प्रसाद्य समभोजयत् ॥ १८ ॥ सोऽशित्वाहृतमानीतमातिथ्यं सार्वकामिकम् । तृप्तात्मा नृपतिं प्राह भुज्यतामिति सादरम् ॥ १९ ॥ प्रीतोऽस्म्यनुगृहीतोऽस्मि तव भागवतस्य वै । दर्शनस्पर्शनालापैरातिथ्येनात्ममेधसा ॥ २० ॥ कर्मावदातमेतत्ते गायन्ति स्वःस्त्रियो मुहुः । कीर्तिं परमपुण्यां च कीर्तयिष्यति भूरियम् ॥ २१ ॥ श्रीशुक उवाच—एवं सङ्कीर्त्य राजानं दुर्वासाः परितोषितः । ययौ विहाय-

---

அடையவேண்டுவது என்ன எஞ்ஜியிருக்கப்போகிறது. (16) ஹே ராஜன்! என்னுடைய அபசாரத்தைப் பின்னால் தள்ளிவிட்டு என்னுடைய ப்ராணன்கள் ரக்ஷிக்கப்பட்டமைபற்றி அதிகம் கருணை நிறைந்த மனமுள்ளவரான உம்மால் நான் அனுக்கிரஹிக்கப்பட்டவனாகின்றேன் என்றார். (17) திரும்பி வருவர் என்ற விருப்பத்தினால் ஆஹாரம் செய்யாதிருந்த அரசன் சரணங்களைப் பிடித்து வேண்டிக்கொண்டு அவரைப் போஜனஞ் செய்யும்படி செய்தார். (18) அந்த துர்வாஸர் ஆதரவுடன் கூடியிருக்கும்படி கொண்டுவரப்பட்டதும் வேண்டுவன யாவும் நிறைந்ததுமான ஆதித்யத்தை (விருந்தை)உண்டு திருப்தமான மனத்தையுடையவராய் நீரும் சாப்பிடும் என ப்ரீதியுடன் அரசனைப் பார்த்துச் சொன்னார். (19) பாகவதரான உம்முடைய தரிசனம் தொடுகை பேச்சு இவற்றினாலும் விருந்தினாலும் ஸந்துஷ்டனாகவானேன். ஆத்மாவினிடத்தில் புத்தியைச் செலுத்தின உம்மால் அனுக்கிரஹிக்கப்பட்டவனாகவுமானேன். (20) பரிசுத்தமான உம்முடைய இந்தக்கீர்த்தியைத் தேவலோகத்திலுள்ள ஸ்திரீகள் அடிக்கடி கானஞ் செய்கின்றனர். பரமபுண்ணியமான கீர்த்தியை இந்தப் பூதேவியும் கானஞ்செய்யப் போகின்றாள் என்றார். (21) ஸ்ரீசுர் சொல்லலுற்றார்— துர்வாஸர் இவ்விதம் அரசனைச் சொல்லிவிட்டு மிக்க ஸந்தோஷததை யடைந்தவராய் அரசனிடம் விடைபெற்றுக்கொண்டு ஆகாசமார்க்கமாக அஹைறதுகமான=கர்மத்தினாலடையமுடியாத, ப்ரம்ஹலோகத்தை யடைந்தார். (22) வெளியிற் சென்ற முனி

सामन्त्र्य ब्रह्मलोकमहैतुकम् ॥ २२ ॥ संवत्सरोऽत्यगात्तावद्यावता नागतो गतः। मुनिस्तद्दर्शनाकाङ्क्षो राजाब्भक्षो बभूव ह ॥२३॥ गते च दुर्वाससि सोऽम्बरीषो द्विजोपयोगातिपवित्रमाहरत्। ऋषेर्विमोक्षं व्यसनं च बुद्ध्वा मेने स्ववीर्यं च परानुभावम् ॥ २४ ॥ एवंविधानेकगुणः स राजा परात्मनि ब्रह्मणि वासुदेवे। क्रियाकलापैः समुवाह भक्तिं ययाऽऽविरिञ्चान्निरयांश्चकार ॥ २५ ॥ अथाम्बरीषस्तनयेषु राज्यं समानशीलेषु विसृज्य धीरः। वनं विवेशात्मनि वासुदेवे मनो दधद्ध्वस्तगुणप्रवाहः ॥ २६ ॥ इत्येतत्पुण्यमाख्यानमम्बरीषस्य भूपतेः। सङ्कीर्तयन्ननुध्यायन्भक्तो भगवतो भवेत् ॥

इति श्रीमद्भागवते महापुराणे नवमस्कन्धेऽम्बरीषोपाख्यानवर्णनं नाम पञ्चमोऽध्यायः ॥ ५ ॥



---

யானவர் எவ்வளவுவரை வரவில்லையோ அதற்குள் ஒருவருஷம் சென்றுவிட்டது. அரசன் அதுவரை ஜலத்தையே குடித்துக் கொண்டு அவருடைய வரவை எதிர்பாத்தவண்ணமாக இருந்தார். (23) தூர்வாஸர் போனபிறகு அந்த அம்பரீஷர் ப்ராம்ஹணருடைய போஜனத்தினுல் அதிகம் பவித்திரமான ஆஹாரத்தைச் சாப்பிட்டார். ருஷியினுடைய வ்யஸனத்தையும் பிறகு அது நீங்கினதையும், அக்காலம் தனக்கேற்பட்ட தைரியாதிரூபமான வீரியத்தையும் எண்ணிப் பார்த்து யாவையும் பகவானுடைய ப்ரபாவமாகவே எண்ணினுர். (24) இம்மாதிரியான அனேக குணங்களை யுடையவரான அந்த அரசன் கிரியாஸமூஹங்களினுல் பரமாத்மாவும் வாஸுதேவனுமான ப்ரம்ஹத்தினிடத்தில் பக்தியை யடைந்தார். இந்தப் பக்தியினுல் ப்ரம்ஹபதம் வரையுள்ள எல்லாப்போகங்களையும் நரகப்ராயங்களாகவே எண்ணினுர். (25) பிறகு அம்பரீஷர், தனக்குஸமமான ஸ்வபாவமுள்ள பிள்ளைகளிடத்தில் ராஜ்யத்தைக் கொடுத்து மனதைத் தன்வசமாக்கினவராயும், பரமாத்மாவான வாஸுதேவனிடத்தில் மனதைச் செலுத்தினவராயும், குணப்ரவாஹத்தின்=காமாதிகளின், நாசத்தையடைந்தவராயும் கொண்டு காட்டில் ப்ரவேசித்தார். (26) என்ற அம்ப

ரீஷ ராஜனுடைய இந்தப் புண்ணியமான கதையைச் சொல்லுபவனும் தியானிப்பவனும் பகவத்பக்தனுகவாகிவிடுவான் என்றார்.

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண நவமஸ்கந்தத்தில்
அம்பரீஷோபக்கியான வர்ணனமென்ற
ஐந்தாவது அத்தியாயம் முற்றிற்று.



ஒன்பதாவது ஸ்கந்தார்த்த ஸங்கிரஹருமான

## நாராயணீயம்.

(அ-கை) वर्णिते रामचरिते किमन्यैश्चरितैर्भुवि ।
तत्प्रधानेशानुकथा लक्ष्यते नवमोदिता ॥

ஸ்ரீராமசரித்திரமானது வர்ணிக்கப்படுமாயின் பூலோகத்தில் ஏனைய கதைகள் எதற்கு எனக் கருதி ஒன்பதாவது ஸ்கந்தத்தில் சொல்லப்பட்ட ஸ்ரீராமசரித்திரத்தை ப்ரதானமாகக் கொண்ட ஈசானுகதையானது சுருக்கி உபதேசிக்கப்படுகிறது—

वैवस्वताख्यमनुपुत्रनभागजात
नाभागनामकनरेन्द्रसुतोऽम्बरीषः ।
सप्तार्णवावृतमहीदयितोऽपि रेमे
त्वत्सङ्गिषु त्वयि च मग्नमनाः सदैव ॥ १ ॥

(ப-ரை) वैवस्वताख्यमनुपुत्रनभागजातनाभागनामकनरेन्द्रसुतः= வைவஸ்வதரெனப்பெயரிய மனுவின் புத்திரரான நபகரிடமிருந்துண்டான நாபாகரெனப் பெயரிய அரசனுடைய புத்திரரான अम्बरीषः= அம்பரீஷர் सप्तार्णवावृतमहीदयितोऽपि = ஏழுஸமுத்திரங்களினால் சூழப்பட்ட பூமிக்குப் பதியாக இருந்தபோதிலுங்கூட त्वत्सङ्गिषु=உம்மிடமீடுபடும் ஸாதுக்களிடத்திலும் त्वयि च=உம்மிடத்திலும் सदैव=எப்பொழுதுமே मग्नमनाः=முழுகின மனதுள்ளவராக இருந்துகொண்டு रेमे=ரமித்து வந்தார். (1) (எ-று)

त्वत्प्रीतये सकलमेव वितन्वतोऽस्य
भक्त्यैव देव न चिरादभृथाः प्रसादम् ।

येनास्य याचनमृतेऽप्यभिरक्षणार्थं
चक्रं भवान् प्रविततार सहस्रधारम् ॥ २ ॥

(ப-ரை) देव !=ஹே தேவ! त्वत्प्रीतये=உம்முடைய ப்ரீதியையும் பொருட்டு सकलमेव=லௌகிகமும் வைதிகமுமான எல்லாக் கர்மத்தையுமே वितन्वतः=செய்கின்றவரான अस्य=இந்த அம்பரீஷருடைய भक्त्यैव=பக்தியினாலேயே नचिरात्=சீக்கிரமாக प्रसादम्=ப்ரஸாதத்தை अभृथाः=செய்தீர். येन=இந்த ப்ரஸாதம் காரணமாக अस्य=இந்த அம்பரீஷருடைய याचनमृतेऽपि=வேண்டுகோளில்லாத போதிலுங்கூட अभिरक्षणार्थम्=ரக்ஷணத்துக்கு வேண்டி भवान्=நீர் सहस्रधारम्=ஆயிரம் கூறையுடைய चक्रम्=சக்கிராயுதத்தை प्रवित-तार=கொடுத்தீர். (2) (எ-று)

स द्वादशीव्रतमथो भवदर्चनार्थं
वर्षं दधौ मधुवने यमुनोपकण्ठे ।
पत्न्या समं सुमनसा महतीं वितन्वन्
पूजां द्विजेषु विसृजन् पशुषष्टिकोटिम् ॥ ३ ॥

(ப-ரை) अथो=பிறகு सः=அந்த அரசன் सुमनसा=நல்ல மனதுள்ள पत्न्या समम्=மனையாளுடன்கூட महतीम्=பெரிதான पूजाम्=பூஜையை वितन्वन्=செய்துகொண்டும் पशुषष्टिकोटिम्=அறுபது கோடி பசுக்களை द्विजेषु=ப்ராம்ஹணர்களிடம் विसृजन्=தானஞ் செய்துகொண்டும் भवदर्चनार्थम्=உம்முடைய ஆராதனத்துக்குவேண்டி यमुनोपकण्ठे=யமுனையினருகிலிருக்கின்ற मधुवने=மதுவனத்தில் द्वादशीव्रतम्=துவாதசீவ்ரதத்தை वर्षम्=ஒருவருஷம்முடிய दधौ=அனுஷ்டித்து வந்தார். (3) (எ-று)

तत्राथ पारणदिने भवदर्चनान्ते
दुर्वाससाऽस्य मुनिना भवनं प्रपेदे ।
भोक्तुं वृतश्च स नृपेण परार्तिशीलो-
मन्दं जगाम यमुनां नियमान् विधास्यन् ॥ ४ ॥

(ப-ரை) अथ=பிறகு तत्र=அந்த மதுவனத்தில் भवदर्चनान्ते=உம்முடைய அர்ச்சனத்தின் முடிவிலுள்ள पारणदिने=பாரணதினத்

தில் दुर्वाससा=தூர்வாஸரென்ற मुनिना=முனியினால் अस्य = இந்த அரசனுடைய भवनम्=வீடானது प्रपेदे=அடையப்பட்டது. அதாவது:—தூர்வாஸர் இவருடைய வீட்டுக்கு வந்தாரென்றும், नृपेण= அரசனால் भोक्तुम् = சாப்பிடவேண்டி वृतः=வரிக்கப்பட்டவரும், परार्तिशीलः=பிறர்க்குப் பீடையைத் தருவதையே ஸ்வபாகமாக வுடையவருமான सः=அந்த முனி नियमान्=கர்மங்களை विधास्यन्= செய்யப் போகின்றவராய் मन्दम्=மெதுவாக यमुनाम्=யமுனையைக் குறித்து जगाम=போனார். (4) (எ—று)

राज्ञाथ पारणमुहूर्तसमाप्तिखेदात्
वार्यैव पारणमकारि भवत्परेण ।
प्राप्तो मुनिस्तदथ दिव्यदृशा विजानन्
क्षिप्यन् क्रुधोद्धूतजटो विततान कृत्याम् ॥ ५ ॥

(ப—ரை) अथ=பிறகு भवत्परेण=உமது பக்தனான राज्ञा=அரசனால் पारणमुहूर्तसमाप्तिखेदात्=முனியின் வரவை எதிர்பார்த்திருந்தால் பாரணஞ் செய்யவேண்டிய முஹூர்த்தத்தின் முடிவும், எதிர்பாராவிடில் முனியின் கோபமும் வரும் என கஷ்டத்தினால் वार्यैव= ஜலத்தினாலேயே पारणम्=பாரணமானது अकारि=செய்யப்பட்டது. अथ=பாரணஞ் செய்தபின்னர் प्राप्तः=வந்தவரான मुनिः=முனியானவர் तत्=அவன பாரணஞ்செய்ததை दिव्यदृशा = திவ்யதிருஷ்டியினால் विजानन्=அறிந்தவராயும் क्षिप्यन्=பலவாறு அரசனை நிந்திக்கின்றவராயும் கொண்டு क्रोधात्=கோபத்தினால் उद्धूतजटः=ஜடையைப் பிடுங்கியெடுத்துக்கொண்டு कृत्याम्=பூதத்தை विततान=ஸிருஷ்டித்தார். (5) (எ—று)

कृत्याञ्च तामसिधरां भुवनं दहन्ती-
मग्रेऽभिवीक्ष्य नृपतिर्न पदाच्चकम्पे ।
त्वद्भक्तबाधमभिवीक्ष्य सुदर्शनं ते
कृत्यानलं शलभयन्मुनिमन्वधावीत् ॥ ६ ॥

(ப—ரை) नृपतिः=அரசன் असिधराम्=கத்தியைக் கையில் தாங்கி இருப்பதும் भुवनम्=உலகை दहन्तीम्=பொசுக்குகின்றதுமான

ताम्=அந்த कृत्याम्=பூதத்தை अग्रे=எதிரில் अभिवीक्ष्य=பார்த்துங்கூட पदात्=தன திருப்பிடத்திலிருந்து न चकम्पे=அசையவில்லை. ते=உம்முடைய सुदर्शनम्=சக்கிரமானது त्वद्भक्तबाधम्=உமது பக்தனுக்கேற்பட்ட பீடையை अभिवीक्ष्य=கண்ணுற்று कृत्यानलम्=பூதமாகிற அக்கினியை शलभयन्=தீயணைக்கும் பூச்சிக்கொப்பாகச் செய்துகொண்டு मुनिम्=ஓடுகின்ற தூர்வாஸரை अन्वधावीत्=பின்தொடர்ந்து ஓடிற்று. (6) (எ-று)

घावन्नशेषभुवनेषु भिया स पश्यन्
विश्वत्र चक्रमपि ते गतवान् विरिञ्चम् ।
कः कालचक्रमतिलङ्घयतीत्यपास्तः
शर्वं ययौ स च भवन्तमवन्दतैव ॥ ७ ॥

(ப-ரை) सः=அந்த தூர்வாஸர் भिया=பயத்தினால் अशेषभुवनेषु=எல்லா வுலகங்களிலும் धावन्=ஓடினவராயும் विश्वत्र=எல்லாவிடத்திலும் ते=உம்முடைய चक्रमपि=சக்கிராயுதத்தையும் पश्यन्=பார்க்கின்றவராயும் கொண்டு विरिञ्चम्=ப்ரம்ஹதேவனை गतवान्=அடைந்தார். कालचक्रम्=காலசக்கிரத்தை कः=எவன்தான் अतिलङ्घयति=கடக்கப்போகிறான் इति=என்ற அவருடைய வார்த்தையினால் अपास्तः=மறுக்கப்பட்டவராய் शर्वम्=மஹாதேவனை ययौ=அடைந்தார். सच=அந்த மஹாதேவனும் இந்த சக்கிரமானது எவருடையதோ அவரையே சரணமடை என்ற அபிப்பிராயத்துடன் भवन्तमेव=உம்மையே अवन्दत=நமஸ்கரித்தார். (7) (எ-று)

भूयो भवन्निलयमेत्य मुनिं नमन्तं
प्रोचे भवानहमृषे ननु भक्तदासः ।
ज्ञानं तपश्च विनयान्वितमेव मान्यं
याह्यम्बरीषपदमेव भजेति भूमन् ॥ ८ ॥

(ப-ரை) भूमन्=ஹே பூமன்! भूयः=பிறகு भवन्निलयम्=உமது ஸ்தானத்தை एत्य=அடைந்து नमन्तम्=நமஸ்கரிக்கின்ற मुनिम्=முனியைப் பார்த்து ऋषे!=ஹே ருஷே! अहम्=நான் भक्तदासो ननु=பக்தர்களுக்குத் தாஸனன்றோ. ज्ञानम्=ஞானமும் तपश्च=

தவமும் विनयान्वितमेव=வணக்கத்துடன் கூடினதாக இருக்குமேயா ஞல்தான் मान्यम्=பூஜிக்கத்தக்கதாகும். याहि=போம். अम्बरीष-पदमेव=அம்பரீஷனுடைய பதத்தையே भज=ஸேவியும் इति=என்று भवान्=நீர் ऊचे=சொன்னீர். (8) (எ-று)

तावत्समेत्य मुनिना स गृहीतपादो
राजापसृत्य भवदस्त्रमसावनावीत् ।
चक्रे गते मुनिरदादखिलाशिषोऽस्मै
त्वद्भक्तिमागसि कृतेऽपि कृपाञ्च शंसन् ॥ ९ ॥

(ப-ரை) तावत्=அப்பொழுது समेत्य=திரும்பிவந்து मुनिना= முனியினுல் गृहीतपादः=பிடிக்கப்பட்ட கால்களை யுடையவரான सोऽसौ=அந்த இந்த राजा=அம்பரீஷர் अपसृत्य=வேறிடம் சென்று அதாவது:-துர்வாஸரிடமிருந்து விலகிநின்று भवदस्त्रम्=உமது அஸ் திரத்தை अनावीत्=ஸ்துதித்தார். चक्रे=ஸ்துதிக்கப்பெற்ற சக்கிரா யுதமானது गते=போனபொழுது मुनिः=துர்வாஸர் त्वद्भक्तिम्=உம் மிடமுள்ள பக்தியையும், आगसि=அபராதமானது कृतेऽपि=செய் யப்பட்டபோதிலுங்கூட कृपाञ्च=கிருபையையும் शंसन्=புகழ்ந்து கொண்டு अस्मै=இந்த அரசனுக்கு अखिलाशिषः=எல்லாவிதமான ஆசீர்வாதங்களையும் अदात्=செய்தார். (9) (எ-று)

राजा प्रतीक्ष्य मुनिमेकसमामनाश्वान्
सम्भोज्य साधु तमृषिं विसृजन्प्रसन्नम् ।
भुक्त्वा स्वयं त्वयि ततोऽपि दृढं रतोऽभूत्
सायुज्यमाप च स मां पवनेश पायाः ॥ १० ॥

(ப-ரை) राजा=அரசன் मुनिम्=முனியை प्रतीक्ष्य=எதிர்பார்த்து एकसमाम्=ஒரு வருஷம்முடிய अनाश्वान्=ஆஹாரத்தை யுட் கொள்ளாதவராயிருந்து तम्=அந்த ऋषिम्=ருஷியை साधु=நன்ருக सम्भोज्य=போஜனஞ்செய்வித்து प्रसन्नम्=தெளிந்தவரான அவரை विसृजन्=அனுப்பினவராய்க்கொண்டு स्वयम्=தானும் भुक्त्वा=பிறகு போஜனம் செய்து त्वयि=உம்மிடத்தில் ततोऽपि=முன்னிருந்ததைக் காட்டிலும்கூட दृढम्=அசையாத रतः=பற்றுள்ளவராக अभूत्=

## अथ षष्ठोऽध्यायः ॥

श्रीशुक उवाच—विरूपः केतुमान् शम्भुरम्बरीषसुतास्त्रयः। विरूपात्पृषदश्वोऽभूत्तत्पुत्रस्तु रथीतरः ॥ १ ॥ रथीतरस्याप्रजस्य भार्यायां तन्तवेऽर्थितः। अङ्गिरा जनयामास ब्रह्मवर्चस्विनः सुतान् ॥ २ ॥ एते

---

ஆனர். सायुज्यं च=உம்முடன் ஸாயுஜ்யத்தையுங்கூட आप=அடைந்தார். पवनेश !=குருவாயூருக்கீசரான ஹே கிருஷ்ண ! सः=அத்தகைய நீர் माम्=என்னை पाया:=காப்பீராக. (10) (எ-று)

இவ்விதம் நாராயணீயத்தில் அம்பரீஷோபாக்கியான வர்ணனமேன்ற முப்பத்து மூன்ருவது தசகம் முற்றிற்று.



### ஆருவது அத்தியாயம்.

(அ-கை) षष्ठारम्भेऽम्बरीषस्य वंशमुक्त्वा ततः परम् ।
षष्ठाद्यष्टभिरध्यायै रिक्ष्वाकोर्वंश उच्यते ॥ १ ॥
तत्र षष्ठे शशादादिर्मान्धात्रन्तो निरूप्यते ।
प्रसङ्गात्सौभरेराख्या मान्धातृतनयापतेः ॥ २ ॥

(க-ரை) ஆருவது அத்தியாயத்திஞரம்பத்தில் அம்பரீஷனுடைய வம்சத்தைச்சொல்லி அதற்குப்பிறகு ஆறுமுதலுள்ள எட்டு அத்தியாயங்களிஞல் இக்ஷ்வாகுவின் வம்சமானது சொல்லப்படுகிறது. (1) அவற்றுள் இந்த ஆருவது அத்தியாயத்தில் சசாதனை ஆதியாகவும் மாந்தாதாவை அந்தமாகவும் கொண்ட வம்சமானது சொல்லப்படுகிறது. இக்கதையைச் சொல்லும்பொழுது மனத்தில் தோன்றினதை மறைக்கமுடியாதவராய் மாந்தாதாவின் பெண்ணின் பதியான ஸௌபரி என்பவரின் கதையானது சொல்லப்படுகிறது. (2) (எ-று)

ஸ்ரீசுகர் சொல்லலுற்ருர்—விரூபன், கேதுமான், சம்பு என அம்பரீஷருக்கு மூன்று புத்திரர்கள் பிறந்தனர். விரூபனிடமிருந்து ப்ருஷதச்வன் பிறந்தான். அவனுடைய புத்திரன் ரதீதரன். (1) புத்திரனற்ற ரதீதரனுடைய பாரியையினிடத்தில் புத்திரனையும் பொருட்டு ப்ரார்த்திக்கப்பட்ட அங்கிரஸ்ஸானனவர் ப்ரம்ஹவர்ச்

क्षेत्रे प्रसूता वै पुनस्त्वाङ्गिरसाः स्मृताः । रथीतराणां प्रवराः क्षत्रोपेता द्विजातयः ॥ ३ ॥ क्षुवतस्तु मनोर्जज्ञे इक्ष्वाकुर्घ्राणतः सुतः । तस्य पुत्रशतज्येष्ठा विकुक्षिनिमिदण्डकाः ॥ ४ ॥ तेषां पुरस्तादभवन्नार्यावर्ते नृपा नृप । पञ्चविंशतिः पश्चाच्च त्रयो मध्ये परेऽन्यतः ॥ ५ ॥ स एकदाष्टकाश्राद्ध इक्ष्वाकुः सुतमादिशत् । मांसमानीयतां मेध्यं विकुक्षे गच्छ मा

---

சஸ்ஸுள்ளவர்களான புத்திரர்களை யுண்டுபண்ணினர். (2) எவர்கள் அங்கிரஸ்ஸினு லுண்டுபண்ணப்பட்டனரோ இவர்கள் ரதீதரனுடைய க்ஷேத்திர (பத்தினியினிட)த்தில் உண்டானவர்களானதுபற்றி ரதீதரகோத்திரர்களாக இருந்துகொண்டு அங்கிரஸ்ஸின் வீரியத்திலுண்டானமைபற்றி ஆங்கிரஸர்களாகவும் எண்ணப்பட்டனர். எக்காரணம்பற்றி க்ஷத்திரஜாதியுடன் கலந்த ப்ராம்ஹணர்களாக இருந்தனரோ அக்காரணம்பற்றி அந்தக் கோத்திரத்திற் பிறந்த மற்ற ரதீதரர்களுக்குள் முக்கியர்களாகவுமாயினர். (3) *மனுவானவர் தும்பும்பொழுது அவருடைய மூக்கிலிருந்து இக்ஷ்வாகு என்ற புத்திரன் பிறந்தான். அந்த இக்ஷ்வாகுவின் நூறு புத்திரர்களுக்குள் விகுக்ஷி, நிமி, தண்டகன் இவர்கள் சிறந்தவர்களாவர். (4) ஹே ந்ருப! அவர்களுக்குள் இருபத்தைந்து பேர்கள், விந்தியமலை ஹிமாலயம் இவற்றின் நடுவிலுள்ள ஆர்யாவர்த்தமென்ற புண்ணியபூமியில் கிழக்கு திக்கிலுள்ள ஸமுத்திரம்வறை தனித்தனி மண்டலேஶ்வரர்களாகவாயினர். அவ்விதமே மற்றும் இருபத்தைந்து பேர்கள் மேற்கு திக்கிலுள்ள ஸமுத்திரம்வறை தனித்தனி மண்டலேஶ்வரர்களாகவாயினர். ஜ்யேஷ்டர்களான மூன்றுபேர்கள் நடுவில் தனித்தனி மண்டலேஶ்வரர்களாகவாயினர். மற்றுமுள்ள நாற்பத்தேழு பேர்கள் தெற்கிலும் வடக்கிலுமுள்ள ஸமுத்திரம்வறை தனித்தனி மண்டலேஶ்வரர்களாகவாயினர். (5) ஒருஸமயம் அந்த இக்ஷ்வாகு "ஹே விகுக்ஷே! அஷ்டகாஶ்ராத்

---

* ஆகவே இவ்விதம் மனுவின் பத்து புத்திரர்களுக்குள் ப்ருஷத்ரன், கவி இருவரும் வம்சப்ரவர்த்தகர்களாகவாகவில்லை. கரூஷர் முதலிய ஏழுபேர்களுடைய வம்சங்கள் உயர்வுதாழ்வுடன் கூடினவைகளாகவுபதேசிக்கப்பட்டன. இதுபோழ்து வெகு விரிவான இக்ஷ்வாகுவின் வம்சத்தைச் சொல்லத்தொடங்குகிறுர்.

चिरम् ॥ ६ ॥ तथेति स वनं गत्वा मृगान्हत्वा क्रियार्हणान्। श्रान्तो बुभुक्षितो वीरः शशं चाददपस्मृतिः ॥ ७ ॥ शेषं निवेदयामास पित्रे तेन च तद्गुरुः। चोदितः प्रोक्षणायाह दुष्टमेतदकर्मकम् ॥ ८ ॥

ज्ञात्वा पुत्रस्य तत्कर्म गुरुणाऽभिहितं नृपः। देशान्निःसारयामास सुतं त्यक्तविधिं रुषा ॥ ९ ॥ स तु विप्रेण संवादं जापकेन समाचरन्। त्यक्त्वा कलेवरं योगी स तेनावाप यत्परम् ॥ १० ॥ पितर्युपरतेऽभ्येत्य विकुक्षिः पृथिवीमिमाम्। शासदीजे हरिं यज्ञैः शशाद इति विश्रुतः ॥ ११ ॥ पुरञ्जयस्तस्य सुत इन्द्रवाह इतीरितः। ककुत्स्थ इति चाप्युक्तः शृणु

---

தத்துக்காக பரிசுத்தான மாம்ஸத்தைக் கொண்டுவா. சீக்கிரம் போ. தாமதிக்காதே” எனப் புத்திரனுக்குக் கட்டளையிட்டார். (6) அந்த வீரன் அப்படியே யாகட்டுமெனச் சொல்லிவிட்டுக் காட்டையடைந்து ஸ்ராத்தார்ஹங்களான மிருகங்களைக் கொன்று களைத்துப் பசிமேலிட்டவனாய் நினைவுதவறி முயலைத் தின்றுவிட்டான். (7) எஞ்ஜியுள்ளதைப் பிதாவினிடம் கொடுத்தான். அவரால் ப்ரோக்ஷணத்தையும் பொருட்டு ஏவப்பட்ட அவருடைய குருவான வஸிஷ்டர் இது துஷ்டமானது. ஆனதுபற்றிக் கர்மத்துக்கு அர்ஹமாகவாகாது என்றார். (8)

குருவினால் சொல்லப்பட்ட புத்திரனுடைய அந்தக் காரியத்தை அரசன் அறிந்துகொண்டு விதியை விட்டவனான புத்திரனைக் கோபத்தினால் தேசத்திலிருந்து வெளிக்கடத்தினார். (9) அந்த இக்ஷ்வாகுவோ ஜாபகரான வஸிஷ்டருடன் ஸம்வாதத்தை=ப்ரம்ஹ விசாரத்தை, செய்துகொண்டு ராஜ்யபோகத்தில் விரக்தனாகி யோகியாக இருந்துகொண்டு அந்த யோகத்தினால் சரீரத்தைவிட்டு யாதொரு பரதத்துவமுண்டோ அதை அவர் அடைந்தார். (10) பிதா காலஞ்சென்ற பிறகு விகுக்ஷியானவர் திரும்பிவந்து இந்தப் பூமியை யாண்டு யாகங்களினால் ஹரியையும் ஆராதித்தார். சசாதர் என்றும் ப்ரஸித்தி பெற்றார். (11) அந்தச் சசாதருடைய புத்திரன் புரஞ்ஜயன். அவன் இந்திரவாஹன் என்றும் சொல்லப்பட்டான். ககுத்ஸ்தன் என்றும் சொல்லப்பட்டான். கர்மங்கள் மூலமேற்பட்ட நாமாக்களை என்னிடமிருந்து கேட்

नामानि कर्मभिः ॥ १२ ॥ कृतान्त आसीत्समरो देवानां सह दानवैः। पार्ष्णिग्राहो वृतो वीरो देवैर्दैत्यपराजितैः॥ १३ ॥ वचनाद्देवदेवस्य विष्णोर्विश्वात्मनः प्रभोः। वाहनत्वे वृतस्तस्य बभूवेन्द्रो महावृषः ॥ १४ ॥ स सन्नद्धो धनुर्दिव्यमादाय विशिखाञ्छितान्। स्तूयमानः समारुह्य युयुत्सुः ककुदि स्थितः ॥ १५ ॥ तेजसाप्यायितो विष्णोः पुरुषस्य परात्मनः। प्रतीच्यां दिशि दैत्यानां न्यरुणत्त्रिदशैः पुरम् ॥ १६ ॥ तैस्तस्य चाभूत्प्रधनं तुमुलं लोमहर्षणम्। यमाय भल्लैरनयद्दैत்யान्येऽभिययुर्मृधे ॥ १७ ॥

---

டுத் தெரிந்து கொள்ளும். (12) தேவர்களுக்கு அஸுரர்களுடன்கூட உலகை யழிக்கக்கூடிய சண்டையானது ஏற்பட்டது. அஸுரர்களினால் ஜயிக்கப்பட்ட தேவர்களினால் வீரனான அவன் பக்கபலமாக வரிக்கப்பட்டான். (13) (*) வாஹனவிஷயத்தில் வரிக்கப்பட்ட இந்திரன், தேவதேவனும், விஶ்வாத்மாவும், ப்ரபுவுமான விஷ்ணுவின் வார்த்தையை யொட்டி அந்தச் சசாதனுக்குப் பெரிய விருஷபரூப வாஹனமாகவானான். (14) அவன் கவசம் பூண்டவனாயும், திவ்யமான வில்லையும் கூர்மையான பாணங்களையும் எடுத்தவனாயும், (தேவர்களினாலும் வேலைக்காரர்களினாலும்) ஸ்துதிக்கப்படுகின்றவனாயும் யுத்தம் செய்ய விருப்பமுள்ளவனாயும், விருஷபத்திலேறிக்கொண்டு அதன் கொண்டையிலுட்கார்ந்தவனாயும், பரமாத்மாவும் புருஷனுமான விஷ்ணுவின் தேஜஸ்ஸினால் விருத்தி செய்விக்கப்பட்டவனாயும் கொண்டு தேவர்களுடன்கூட மேற்கு திக்கிலிருக்கின்ற அஸுரர்களின் பட்டினத்தை முற்றுகையிட்டான். (15-16) அவனுக்கு அந்த அஸுரர்களுடன்கூட மயிர்க்கூச்சலைத் தரக்கூடியதும் நெருக்கமுமான யுத்தமானது உண்டாயிற்று. எவர்கள் போரில் எதிர்த்துவந்தனரோ அந்த அசுரர்களைப்பல்லமென்ற பாணங்களினால் அடித்து(தேஹத்துடன்

---

(*) இந்திரன் எனக்கு வாஹனமாக ஆவானானால் நான் அஸுரர்களைக் கொல்லுகிறேன் என அவனால் வாஹனமாக வரிக்கப்பட்டவனாய்க்கொண்டு லஜ்ஜையினால் இந்திரன் அதை அங்கீகாரஞ்செய்ய மறுக்கவே விஷ்ணுவின் வார்த்தையை யொட்டி அவனுக்கு வாஹனமாகவேண்டி இந்திரன் பெரிய விருஷபமாகவானான் என்பது பொருள்.

तस्येषुपाताभिमुखं युगान्ताग्निमिवोल्बणम् । विसृज्य दुद्रुवुर्दैत्या हन्यमानाः स्वमालयम् ॥ १८ ॥ जित्वा पुरं धनं सर्वं सश्रीकं वज्रपाणये । प्रत्ययच्छत्स राजर्षिरिति नामभिराहृतः ॥ १९ ॥ पुरञ्जयस्य पुत्रोऽभूदनेनास्तत्सुतः पृथुः । विश्वरन्धिस्ततश्चन्द्रो युवनाश्वश्च तत्सुतः ॥ २० ॥

शाबस्तस्तत्सुतो येन शाबस्ती निर्ममे पुरी । बृहदश्वस्तु शाबस्तिस्ततः कुवलयाश्वकः ॥ २१ ॥ यः प्रियार्थमुतङ्कस्य धुन्धुनामासुरं बली । सुतानामेकविंशत्या सहस्रैरहनद्वृतः ॥२२॥ धुन्धुमार इति ख्यातस्तत्सुतास्ते च जज्वलुः। धुन्धोर्मुखाग्निना सर्वे त्रय एवावशेषिताः ॥२३॥ दृढाश्वः

---

கூடவே) யமனைப் பார்ப்பதற்காக அனுப்பினான். (17) அடிக்கப்படுகின்றவர்களான அஸுரர்கள் ப்ரளயகாலத்திய அக்னியைப்போல மிக்க பயங்கரமான அவனுடைய பாணங்கள் விழுமிடமான எதிர்ப்ரதேசத்தை விட்டுத் தமது இருப்பிடமான பாதாளத்தைக் குறித்து ஓடினர். (18) ஸ்ரீயுடன்கூடின பட்டினத்தை ஜயித்து அங்குகிடைத்த எல்லா தனத்தையும் இந்திரனுக்குக் கொடுத்தான். இக்காரணம்பற்றி அந்த ராஜருஷியானவன் புரஞ்ஜயன் என்றும், இந்திரவாஹன் என்றும், ககுத்ஸ்தன் என்றுமான நாமங்களினால் சொல்லப்பட்டான். (19) புரஞ்ஜயனுக்கு அனேனஸ் என்ற புத்திரன் பிறந்தான். அவனுடைய புத்திரன் ப்ருது. அந்த ப்ருதுவினிடமிருந்து விஸ்வரந்தி பிறந்தான். அவனிடமிருந்து சந்திரன் பிறந்தான். சந்திரனுடைய புத்திரன் யுவனாஸ்வன். (20)

யுவனாஸ்வனுடைய புத்திரன் சாபஸ்தன். இவனால் சாபஸ்தீ என்ற பட்டினம் நிர்மாணஞ் செய்யப்பட்டது. சாபஸ்தனுடைய புத்திரன் ப்ருஹதஸ்வன். அவனிடமிருந்து குவலயாஸ்வன் பிறந்தான். (21) இவன் தனது இருபத்தோராயிரம் புத்திரர்களினால் சூழப்பட்டவனாய் உதங்கருக்கு ப்ரியத்தைச் செய்யவேண்டி துந்து என்ற பெயருள்ள அஸுரனைக் கொன்றான். (22) ஆனதுபற்றித் துந்துமாரன் என்றும் ப்ரஸித்திபெற்றான். அவனுடைய அந்த இருபத்தோராயிரம் புத்திரர்கள் யாவரும் துந்துவின் முகாக்னியினால் எரிந்துபோயினர். அவர்களுள் மூவரே மீதமிருந்த

कपिलाश्वश्च भद्राश्व इति भारत । दृढाश्वपुत्रो हर्यश्वो निकुम्भस्तत्सुतः स्मृतः ॥ २४ ॥ बर्हणाश्वो निकुम्भस्य कृशाश्वोऽथास्य सेनजित् । युवनाश्वोऽभवत्तस्य सोऽनपत्यो वनं गतः ॥ २५ ॥ भार्याशतेन निर्विण्ण ऋषयोऽस्य कृपालवः । इष्टिं स्म वर्तयांचक्रुरैन्द्रीं ते सुसमाहिताः ॥ २६ ॥ राजा तद्यज्ञसदनं प्रविष्टो निशि तर्षितः । दृष्ट्वा शयानान्विप्रांस्तान्पपौ मन्त्रजलं स्वयम् ॥ २७ ॥ उत्थितास्ते निशाम्याथ व्युदकं कलशं प्रभो । पप्रच्छुः कस्य कर्मेदं पीतं पुंसवनं जलम् ॥ २८ ॥ राज्ञा पीतं विदित्वाथ ईश्वरप्रहितेन ते । ईश्वराय नमश्चक्रुरहो दैवबलं बलम् ॥ २९ ॥ ततः काल उपावृत्ते कुक्षिं निर्भिद्य दक्षिणम् । युवनाश्वस्य तनयश्चक्रवर्ती जजान ह

---

னர். (23) ஹே பாரத! அவர்கள் த்ருடாஸ்வன் கபிலாஸ்வன், பத்ராஸ்வன் எனப்படுவர். த்ருடாஸ்வபுத்திரன் ஹர்யஸ்வன். அவனுடைய புத்திரன் நிகும்பன். (24) நிகும்பனுடைய புத்திரன் பர்ஹணாஸ்வன். அந்த நிகும்பனிடமிருந்தே கிருசாஸ்வன் என்ற புத்திரனுண்டானன். இந்தக் கிருசாஸ்வனுக்கு ஸேனஜித் பிறந்தான். அந்த ஸேனஜித்துக்கு யுவனாஸ்வன் பிறந்தான். அந்த யுவனாஸ்வன் புத்திரனில்லாதவனாய் வெறுப்புற்று நூறு பத்னிகளுடன்கூடக் காட்டுக்குப் போனான். கிருபாளுக்களான அந்த ருஷிகள் அசையாது ஒரேவிடத்தில் நிறுத்தின மனத்தை யுடையவர்களாய் இவனுக்குப் புத்திரனுண்டாகவேண்டி இந்திரனைத் தேவதையாகக் கொண்ட ஆஸ்சரியமான இஷ்டியைச் செய்யத் தொடங்கினர். (25–26) அரசன் இரவில் தாஹம் மேலிட்டு அந்த யக்ஞசாலையில் நுழைந்து ப்ராம்ஹணர்கள் தூங்குவதை யறிந்து மந்திரஜலத்தைத் தானே எடுத்துக் குடித்தான். (27) ஹே ப்ரபோ! பிறகு அவர்கள் எழுந்து கலசம் ஜலமற்றிருப்பதைக் கண்டு இந்தக் காரியம் யாருடையது? பும்ஸவனஜலமானது குடிக்கப்பட்டிருக்கிறதே என்றனர். (28) பிறகு அவர்கள் ஈஸ்வரனால்தூண்டப்பட்ட அரசனால் குடிக்கப்பட்டதென்பதை யறிந்துகொண்டு "அந்தோ! தைவபலமே முக்கியமானது. மனுஷ்ய பலம் பயனற்றது" என்று சொல்லிக்கொண்டு ஈஸ்வரனையும் பொருட்டு நமஸ்கரித்தனர். (29) பிறகு காலமானது சென்றதும் யுவ

॥ ३० ॥ कं धास्यति कुमारोऽयं स्तन्यं रोरूयते भृशम् । मां धाता वत्स मारोदीरितीन्द्रो देशिनीमदात् ॥ ३१ ॥ न ममार पिता तस्य विप्रदेवप्रसादतः । युवनाश्वोऽथ तत्रैव तपसा सिद्धिमन्वगात् ॥ ३२ ॥ त्रसद्दस्युरितीन्द्रोऽङ्ग विदधे नाम तस्य वै । यस्मात्त्रसन्ति ह्युद्विग्ना दस्यवो रावणादयः ॥ ३३ ॥ यौवनाश्वोऽथ मान्धाता चक्रवर्त्यवनीं प्रभुः । सप्तद्वीपवतीमेकः शशासाच्युततेजसा ॥ ३४ ॥ ईजे च यज्ञं क्रतुभिरात्मविद्भूरिदक्षिणैः । सर्वदेवमयं देवं सर्वात्मकमतीन्द्रियम् ॥ ३५ ॥ द्रव्यं मन्त्रो विधिर्यज्ञो यजमानस्तथर्त्विजः । धर्मो देशश्च कालश्च सर्वमेतद्यदात्मकम्

---

ஞஸ்வனுடைய வலதுபக்கத்துவயிற்றைப் பிளந்துகொண்டு சக்கிரவர்த்தியாகவாகக்கூடிய புத்திரன் ஜனித்தான். (30) "இந்தக் குழந்தை ஸ்தன்யத்தைக் குறித்து மிகவும் அழுகிறதே, எதைப் பானஞ் செய்யப்போகிறது" என ப்ராம்ஹணர்களினுல் சொல்லப்பட்டபொழுது அந்த இஷ்டியினுலாராதிக்கப்பட்ட இந்திரன் என்னைப் பானஞ்செய்யப் போகிறது. ஹே வத்ஸ! அழாதே என்று சொல்லிக் கொண்டு ஆள்காட்டிவிரலைக் கொடுத்தான். (31) அந்தக் குழந்தையின் பிதாவான யுவனுஸ்வன் ப்ராம்ஹணர்களுடையவும் தேவர்களுடையவும் ப்ரஸாதத்தினுல் மரணத்தை யடையவில்லை. பிறகு அந்த யுவனுஸ்வன் அங்கேயே தபஸ்ஸினுல் முக்தியை யடைந்தான். (32) ஹே அங்க! இந்திரன் அக்குழந்தைக்கு த்ரஸத்தஸ்யு எனப்பெயரிட்டான். இவனிடமிருந்து ராவணுதிகளான திருடர்கள் பயந்து நடுக்கத்தை யடைந்தனர். (33) பிறகு ப்ரபுவும் யுவனுஸ்வனுடைய குமாரனுமான மாந்தாதாவானவன் சக்கிரவர்த்தியாகவாகி அச்யுதனுடைய தேஜஸ்ஸினுல் ஒருவனுகவே ஏழு தீவுகளுடன்கூடின பூமியை ஆண்டுவந்தான். (34) ஆத்மவித்தான மாந்தாதா அதிகம் தக்ஷிணைகளையுடைய யாகங்களினுல் த்ரவ்யம் மந்திரம் விதி யக்ஞம் யஜமானன் அதுபோல ருத்விக்குகள் தர்மம் தேசம் காலம் ஆகிய இவை யாவும் எவருடைய ஸ்வரூபமோ அப்பேர்ப்பட்டவரும், ஸர்வதேவமயரும், ஸர்வாத்மகரும், இந்திரியங்களுக்குப் புலப்படாதவரும், யக்ஞருமான தேவனை ஆராதித்தான். (35–36) சூரியன் எவ்வளவுவரை உதயமாகின்

॥ ३६ ॥ यावत्सूर्य उदेति स्म यावच्च प्रतितिष्ठति । सर्वं तद्यौवनाश्वस्य मान्धातुः क्षेत्रमुच्यते ॥ ३७ ॥

शशबिन्दोर्दुहितरि बिन्दुमत्यामधान्नृपः । पुरुकुत्समम्बरीषं मुचुकुन्दं च योगिनम् ॥ ३८ ॥ तेषां स्वसारः पञ्चाशत्सौभरिं वव्रिरे पतिम् । यमुनान्तर्जले मग्नस्तप्यमानः परन्तपः ॥ ३९ ॥ निर्वृतिं मीनराजस्य वीक्ष्य मैथुनधर्मिणः । जातस्पृहो नृपं विप्रः कन्यामेकामयाचत ॥ ४० ॥ सोऽप्याह गृह्यतां ब्रह्मन्कामं कन्या स्वयंवरे । स विचिन்त्याप्रियं स्त्रीणां जरठोऽयमसम्मतः । वलीपलित एजत्क इत्यहं प्रत्युदाहृतः ॥ ४१ ॥ साध-

---

ரூனே எவ்வளவுவரை அஸ்தமனத்தை யடைகின்றானோ அந்த க்ஷேத்திரம் யாவும் யுவனாஸ்வனின் குமாரனான மாந்தாதாவினுடையதாகச் சொல்லப்படுகிறது. (37)

அரசனான மாந்தாதா சசபிந்துவின் பெண்ணான பிந்துமதியினிடத்தில் புருகுத்ஸனையும், அம்பரீஷனையும், யோகியான முசுகுந்தனையும் உண்டுபண்ணினான். (38) அவர்களின் ஸஹோதரிகள் ஐம்பதுபேர்களும் ஸௌபரி என்ற மஹருஷியைப் பதியாக வரித்தனர். யமுனையின் ஜலத்துக்குள் முழுகி மேலான தவத்தைச் செய்கின்ற ப்ராப்ஹணரான ஸௌபரி ஆணும் பெண்ணுமாகச் சேர்ந்திருக்கின்ற மீனராஜனுக்கேற்பட்டுள்ள சுகத்தைக் கண்ணுற்று அந்தச் சுகத்திலாசை கொண்டவராய் மாந்தாதாவென்ற அரசனிடம் ஒருபெண்ணை யாசித்தார். (39–40) அந்த அரசனும் ஹே ப்ரம்ஹன்! கன்னிகை உம்மைத் தானாக வரித்தால் இஷ்டப்படி பெண்ணைப் பெற்றுக்கொள்ளும் என்றான். அதுகேட்ட அந்த ப்ராம்ஹணன், "இவர் கிழவர், ஸ்திரீகளுக்குப் பிடிக்காதவர், மடிந்த சதையும் நிறைத்த மயிருமுடையவர், ஆடுகின்ற தலையையுடையவர், ஆகவே ஸ்திரீகளுக்கு அப்ரியமானவர் என என்னை எண்ணிக்கொண்டன்றோ இவரால் நான் மறுக்கப்பட்டேன். ஆகவே என்னுடைய சரீரத்தை தேவஸ்திரீகளுக்கும் பிடித்தமாயாகும்படி செய்துகொள்ளப் போகிறேன். அவ்விதம் செய்துகொள்ளும்பொழுது மனுஜேந்திரர்களின் யாதொரு ஸ்திரீகளுண்டோ அவர்களும் ப்ரியப்படுவர் என்பதில் ஸந்தேஹமுண்டோ" என

यिष्ये तथात्मानं सुरस्त्रीणामपीप्सितम्। किं पुनर्मनुजेन्द्राणामिति व्यवसितः प्रभुः ॥ ४२ ॥ मुनिः प्रवेशितः क्षत्त्रा कन्यान्तःपुरमृद्धिमत्। वृतश्च राजकन्याभिरेकः पञ्चाशता वरः॥ ४३ ॥ तासां कलिरभूद्भूयांस्तदर्थेऽपोह्य सौहृदम्। ममानुरूपो नायं व इति तद्गतचेतसाम्॥ ४४ ॥ स बह्वृचस्ताभिरपारणीयतपःश्रियानर्घ्यपरिच्छदेषु। गृहेषु नानोपवनामलाम्भःसरस्सु सौगन्धिककाननेषु ॥ ४५ ॥ महार्हशय्यासनवस्त्रभूषणस्नानानुलेपाभ्यवहारमाल्यकैः। स्वलङ्कृतस्त्रीपुरुषेषु नित्यदा रेमेऽनुगायद्द्विजभृङ्गवन्दिषु ॥ ४६ ॥ यद्गार्हस्थ्यं तु संवीक्ष्य सप्तद्वीपवतीपतिः। विस्मितः स्तम्भमजहात्सार्वभौमश्रियान्वितः ॥ ४७ ॥

---

நிஶ்சயித்துக் கொண்டவரும் ப்ரபுவுமான முனியானவர் வாயிற்காப்போனுல் எல்லா ஐஸ்வரியமும் நிறைந்த கன்னியாந்தப் புரத்தில் ப்ரவேசிக்கும்படி செய்யப்பட்டவராய் ஐம்பதுகன்னிகைகளினுலும் இவர் ஒருவரே வரனுக வரிக்கப்பட்டார். (41-43) அவரிடமீடுபட்ட சித்தமுள்ள அக்கன்னிகைகளுக்குள் ஒருவருக்கொருவரிடமுள்ள ஸ்னேஹத்தைவிட்டு 'இவர் எனக்குத்தான் தகுதியுள்ள வரன், உங்களுக்கில்லை' என அவர் நிமித்தமாக பெரியகலஹமானது உண்டாகிவிட்டது. (44) பஹ்வ்ருசாசாரியரான (மந்த்ர ஸாமர்த்தியமுள்ளவரான) அவர், அழியாத தவத்தின் நிறைவினுல் விலைமதிப்பற்ற போகஸாமக்ரீகளை யுடையனவும், பலதறப்பட்ட உத்யான (பூந்தோட்ட)ங்களையும் சுத்தமான ஜலத்தையுடைய ஸரஸ்ஸுகளையும் உடையனவும், செங்கழுனீர் புஷ்பங்களின் ஸமூஹங்களை யுடையனவும், மிக்கவிலையுயர்ந்த படுக்கை ஆஸனம் வஸ்திரம் ஆபரணம் ஸ்னனம் மேல்பூச்சு ஆஹாரம் மாலைகள் இவற்றுடன் கூடினவும், எப்பொழுதுமே அலங்கரிக்கப்பட்ட ஸ்திரீபுருஷர்களை யுடையனவும், பின்தொடர்ந்து பாடுகின்ற பறவைகள் வண்டுகள் இவைகளாகிற ஸ்துதிபாடகர்களையுடையனவுமான வீடுகளில் எந்தக் கார்ஹஸ்த்யத்தைக் கண்டு ஏழு தீவுகளுக்குப் பதியும் சக்கிரவர்த்திக்குரிய ஸம்பத்துடன் கூடினவனுமான அரசன் ஆஶ்சரியமடைந்தவனுய் தனது கர்வத்தை விட்டானே அத்தகைய கார்ஹஸ்த்யத்தை அந்த ஸ்திரீகளுடன் யனுபவித்து வந்தார். (45-47)

एवं गृहेष्वभिरतो विषयान्विविधैः सुखैः । सेवमानो न चातुष्य-
दाज्यस्तोकैरिवानलः ॥ ४८ ॥ स कदाचिदुपासीन आत्मापह्नवमात्मनः ।
ददर्श बह्वृचाचार्यो मीनसङ्गसमुत्थितम् ॥ ४९ ॥ अहो इमं पश्यत मे वि-
नाशं तपस्विनः सच्चरितव्रतस्य । अन्तर्जले वारिचरप्रसङ्गात्प्रच्यावितं
ब्रह्म चिरं धृतं यत् ॥ ५० ॥ सङ्गं त्यजेत मिथुनव्रतिनां मुमुक्षुः सर्वात्मना
न विसृजेद्बहिरिन्द्रियाणि । एकश्चरन्रहसि चित्तमनन्त ईशे युञ्जीत तद्व्रतिषु
साधुषु चेत्प्रसङ्गः ॥ ५१ ॥ एकस्तपस्व्यहमथाम्भसि मत्स्यसङ्गात्पञ्चा-
शतासमुत पञ्चसहस्रसर्गः । नान्तं व्रजाम्युभयकृत्यमनोरथानां मायागुणै-

---

இவ்விதம் பத்னிகளிடத்தில் மிகப் பற்றுக்கொண்டவராய் பலவிதங்களான சுகங்களுடன்கூட விஷயங்களை ஸேவிக்கின்றவரான அவர் நெய்த்துளிகளினால் நெருப்பானது போலத் திருப்தியை யடைந்தாரில்லை. (48) இவ்விதம் விஷயானுபவம் செய்கின்ற அந்த பஹ்வ்ருசாசாரியர் ஒருஸமயம் மனது காரணமாய் மீனின் சேர்க்கை மூலமுண்டான தபோநாசத்தைக் கண்டு கொண்டார். (49) ஜலத்தினுள்ளிலேற்பட்ட மீனின் சேர்க்கையினால் வெகு காலமாக ஸம்பாதிக்கப்பட்ட தவமானது நாசமாக்கப்பட்டமை பற்றித் தபஸ்வியும் ஸாதுவும் வ்ரதங்களை யனுஷ்டித்தவனுமான எனக்கேற்பட்டுள்ள இந்த விநாசத்தைப் பாருங்கள். அந்தோ! இது வெகு கஷ்டமானது. (50) முமுக்ஷுவாகவுள்ளவன் தாம்பத்ய தர்மமுள்ளவர்களின் சேர்க்கையை எல்லா விதத்தாலும் விலக்கவேண்டும். இந்திரியங்களை வெளியிலுள்ள விஷயங்களில் செலுத்தவும்கூடாது. தனித்து ஒருவனாக ஸஞ்சரித்துக்கொண்டு சித்தத்தை அனந்தனான ஈசனிடத்தில் செலுத்தவேண்டும். ஸங்கம் வேண்டுமாயின் பகவத்தர்ம பரர்களான ஸாதுக்களிடம் சேரவேண்டும். (51) ஒருவனும் தபஸ்வியுமாக இருந்த நான் பிறகு ஜலத்தில் முழுகி அங்குள்ள மீன்களின் சேர்க்கையினால் ஐம்பது ஸ்திரீகளுடன் ஏற்பட்ட ஸம்பந்தத்தால் ஐம்பது சரீரமுள்ளவனாகவானேன். பிறகு ஒவ்வொருவரிடமும் நூறுநூறு புத்திரர்கள்வீதம் ஐந்தாயிரம் புத்திரர்களாகப் பிறவியையடைந்தவனாகவும் ஆனேன். ஐஹிகாமுஷ்மிக கர்மங்கள்விஷயமான மனோரதமுள்ளவர்களின்

हृतमतिर्विषयेऽर्थभावः ॥ ५२ ॥ एवं वसन्गृहे कालं विरक्तो न्यासमास्थितः । वनं जगामानुययुस्तत्पत्न्यः पतिदेवताः ॥ ५३ ॥ तत्र तप्त्वा तपस्तीक्ष्णमात्मकर्षणमात्मवान् । सहैवाग्निभिरात्मानं युयोज परमात्मनि ॥ ५४ ॥ ताः स्वपत्युर्महाराज निरीक्ष्याध्यात्मिकीं गतिम् । अन्वीयुस्तत्प्रभावेण अग्निं शान्तमिवार्चिषः ॥ ५५ ॥

इति श्रीमद्भागवते महापुराणे नवमस्कन्धे मान्धातृसौभर्याख्यानवर्णनं नाम षष्ठोऽध्यायः ॥ ६ ॥

---

மாயாகுணங்களினல் அபஹரிக்கப்பட்ட புத்தியையுடையவனுகவும், விஷயத்திலேயே புருஷார்த்த புத்தியை யுடையவனுகவுமாகி அவற்றின் முடிவைக்கண்டேனில்லை. (52) எனச் சொல்லிக்கொண்டு இத்துணை காலம்வரை கிருஹத்தில் வஸித்த அவர் விரக்தராகி ஸங்கத்தை யொழித்தவராய் (வானப்ரஸ்ததர்மத்தை யடைந்தவராய்) காட்டை யடைந்தார். பதியைத் தேவதையாகக்கொண்ட அவருடைய பத்னிகளும் அவரைப் பின்தொடர்ந்தனர். (53) மனுதைரியமுள்ள அவர் சரீரசோஷணத்தைத் தருகின்ற தீவ்ரமான தவத்தை அவ்விடத்தில் செய்து அக்னிகளுடன்கூடவே ஆத்மாவைப் பரமாத்மாவினிடத்தில் சேர்த்தார். (54) ஹே மஹாராஜ! அந்த ஸ்திரீகளும், தங்கள் பர்த்தா ப்ரம்ஹத்தினிடத்தில் லயமடைந்ததைக் கண்டு அர்ச்சிஸ்ஸுகள் சாந்தமான அக்கினியிலொடுங்குவதுபோல அவருடைய மஹிமையினல் ப்ரம்ஹத்தினிடத்தில் லயத்தை யடைந்தனர். (55) (எ-று)

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண நவமஸ்கந்தத்தில் மாந்தாதா ஸௌபரி இவர்களின் சரித்திரவர்ணன மென்ற ஆறுவது அத்தியாயம் முற்றிற்று.



## ஏழாவது அத்தியாயம்.

(அ-கை) मान्धातुरन्वयः प्रोक्तः सप्तमे यत्र गीयते ।
पुरुकुत्सस्य चाख्यानं हरिश्चन्द्रस्य चोत्तमम् ॥ १ ॥

## अथ सप्तमोऽध्यायः ॥

श्रीशुक उवाच—मान्धातुः पुत्रप्रवरो योऽम्बरीषः प्रकीर्तितः। पितामहेन प्रवृतो यौवनाश्वश्च तत्सुतः। हारीतस्तस्य पुत्रोऽभून्मान्धातृप्रवरा इमे ॥ १ ॥ नर्मदा भ्रातृभिर्दत्ता पुरुकुत्साय योरगैः। तया रसातलं नीतो भुजगेन्द्रप्रयुक्तया ॥२॥ गन्धर्वानवधीत्तत्र वध्यान्वै विष्णुशक्तिधृक्। नागाल्लब्धवरः सर्पादभयं स्मरतामिदम् ॥ ३ ॥ त्रसद्दस्युः पौरुकुत्सो योऽनरण्यस्य देहकृत्। हर्यश्वस्तत्सुतस्तस्मादरुणोऽथ निबन्धनः ॥ ४ ॥

---

(க–ரை) எந்த மாந்தாதாவின் வம்சத்தில் புருகுத்ஸனுடைய கதையும் உத்தமமான ஹரிச்சந்திரனுடைய கதையும் சொல்லப் படுகிறதோ அந்த மாந்தாத்ரு வம்சமானது இந்த ஏழாவது அத்தி யாயத்தில் சொல்லப்படுகிறது. (1) (எ–று)

ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—மாந்தாதாவின் புத்திரர்களுக்குள் ஸ்ரேஷ்டனாக யாதொரு அம்பரீஷன் சொல்லப்பட்டானோ அவன் பிதாமஹனான யுவனாச்வனால் புத்திரனாக ஸ்வீகரிக்கப்பட்டான். அம்பரீஷனுடைய புத்திரன் யௌவனாச்வன் எனப்படுவான். யௌவனாச்வனுடைய புத்திரன் ஹாரீதன். இந்த அம்பரீஷன் யௌவனாச்வன் ஹாரீதன் இவர்கள் மாந்தாதாவின் கோத்திரப்ரவ ர்த்தகர்களாக=அவாந்தரவிசேஷ ப்ரவர்த்தகர்களாக, ஆகின்றனர். (1) ப்ராதாக்களான நாகர்களினால் நர்மதை என்ற எவள் புருகு த்ஸனையும் பொருட்டு கொடுக்கப்பட்டாளோ ஆதிசேஷனாலேவப் பட்ட அவளால் அந்தப் புருகுத்ஸன் பாதாளலோகங் கொண்டு போகபப்ட்டான். (2) அந்தப் புருகுத்ஸன் விஷ்ணுவின் சக்தி யைத் தரித்தவனாய் அந்தப் பாதாளலோகத்தில் கொல்லத்தக்கவர் களான கந்தர்வர்களைக் கொன்று "தான் நர்மதையினால் பாதாள லோகங் கொண்டுபோகப்பட்டதை நினைப்பவர்களுக்கு ஸர்ப்பத்தி லிருந்து பயமுண்டாகாதிருக்கவேண்டும்" என்ற வரனை நாகரா ஜனிடமிருந்து அடைந்தான். (3) புருகுத்ஸனுடைய புத்திரன் த்ர ஸத்தஸ்யு. இவன் அனரண்யனுடைய பிதா. அனரண்யனுடைய புத் திரன் ஹர்யச்வன். அவனிடமிருந்து அருணனுண்டானான். அவ னிடமிருந்து நிபந்தனன் பிறந்தான். (4) அவனுக்கு ஸத்யவ்ரதன்

तस्य सत्यव्रतः पुत्रस्त्रिशङ्कुरिति विश्रुतः । प्राप्तश्चाण्डालतां शापाद्गुरोः कौशिकतेजसा ॥ ५ ॥ सशरीरो गतः स्वर्गमद्यापि दिवि दृश्यते । पातितोऽवाक्शिरा देवैस्तेनैव स्तम्भितो बलात् ॥ ६ ॥ त्रैशङ्कवो हरिश्चन्द्रो विश्वामित्रवसिष्ठयोः। यन्निमित्तमभूद्युद्धं पक्षिणोर्बहुवार्षिकम् ॥ ७ ॥ सोऽनपत्यो विषण्णात्मा नारदस्योपदेशतः । वरुणं शरणं यातः पुत्रो मे जायतां प्रभो ॥ ८ ॥

यदि वीरो महाराज तेनैव त्वां यजे इति । तथेति वरुणेनास्य पुत्रो जातस्तु रोहितः ॥ ९ ॥ जातः सुतो ह्यनेनाङ्ग मां यजस्वेति सोऽब्रवीत् ।

---

புத்திரன். இவன்* த்ரிசங்கு என்று ப்ரஸித்தி பெற்றான். அவன் குருவின் சாபத்தினால் சண்டாளத்தன்மையை யடைந்தவனையும் விஸ்வாமித்ரருடைய ப்ரபாவத்தினால் சரீரத்துடன்கூட ஸ்வர்க்கத்தை யடைந்தவனையும்கொண்டு இப்பொழுதுங்கூட தேவலோகத்தில் காணப்படுகிறான். தேவர்களினால் தலைகீழாகத் தள்ளப்பட்ட இவன் அதே விஸ்வாமித்திரரால் தனது தபோபலத்தினால் அப்படியே நடுவில் நிறுத்தப்பட்டான். (5-6) த்ரிசங்குவின் புத்திரன் ஹரிஸ்சந்திரன். இவன் நிமித்தமாக (ஒருவருக்கொருவர் சபித்துக் கொண்டதால்) பக்ஷிரூபமடைந்த விஸ்வாமித்திரர் வஸிஷ்டர் இவர்களுக்கு வெகு வருஷங்கள் முடிய சண்டையானது ஏற்பட்டது. (7) அந்த ஹரிஸ்சந்திரன் புத்திரனையடையாது துக்கிதமான மனதுள்ளவனைப் நாரதருடைய உபதேசத்தையொட்டி "ஹே ப்ரபோ! எனக்குப் புத்திரன் பிறக்கவேண்டும்" எனச் சொல்லிக் கொண்டு வருணனைச் சரணமாகவடைந்தான். (8)

ஹே மஹாராஜ! வீரனான புத்திரன் எனக்குப் பிறப்பானாயின் அப்பொழுது அந்தப் புருஷபசுவினாலேயே உம்மை யஜிக்கிறேன் என்ற ஒப்பந்தஞ் செய்துகொண்டான். அப்படியேயாகட்டுமென அங்கீகரித்த வருணன்மூலம் இவனுக்கு ரோஹிதன் என்ற

---

* त्रिशंकुः=त्रयः शंकव इव दुःखहेतवो दोषाः यस्येति முளைகள் போன்று துக்கஹேதுக்களான மூன்று தோஷங்களுள்ளவர் என்பது அதன் பொருள். पितुश्चापरितोषेण गुरोर्दोग्ध्रीवधेन च। अप्रोक्षितोपयोगाच्च त्रिविधस्ते व्यतिक्रमः॥ என்ற ஹரிவம்சவசனமானது அம்மூன்று தோஷங்களையும் விளக்கியிருக்கிறது.

यदा पशुर्निर्दशः स्यादथ मेध्यो भवेदिति ॥ १० ॥ निर्दशे च स आगत्य यजस्वेत्याह सोऽब्रवीत् । दन्ताः पशोर्यज्जायेरन्नथ मेध्यो भवेदिति ॥११॥ जाता दन्ता यजस्वेति स प्रत्याहाथ सोऽब्रवीत् । यदा पतन्त्यस्य दन्ता अथ मेध्यो भवेदिति ॥ १२ ॥ पशोर्निपतिता दन्ता यजस्वेत्याह सोऽब्रवीत् । यदा पशोः पुनर्दन्ता जायन्तेऽथ पशुः शुचिः ॥ १३ ॥ पुनर्जाता यजस्वेति स प्रत्याहाथ सोऽब्रवीत् । सान्नाहिको यदा राजन्राजन्योऽथ पशुः शुचिः ॥ १४ ॥ इति पुत्रानुरागेण स्नेहयन्त्रितचेतसा । कालं वञ्चयता तं तमुक्तो देवस्तमैक्षत ॥ १५ ॥ रोहितस्तदभिज्ञाय पितुः कर्म चि-

---

புத்திரன் பிறந்தான். (9) ஹே அங்க! புத்திரன் பிறந்து விட்டான். இவனைக்கொண்டு எனக்கு யாகஞ்செய்வாயாக என்று அந்த வருணன் சொன்னான். அதுகேட்ட அரசன் எப்பொழுது பத்து தினங்கள் செல்லுகின்றனவோ அப்பொழுதுதான் பசுபரிசுத்தமாக வாகும் என்றான். (10) பத்துதினங்கள் சென்றபிறகு அந்த வருணன் வந்து யாகஞ்செய் என்றார். அதுகேட்ட அரசன் பசுவுக்கு எப்பொழுது பற்களுண்டாகின்றனவோ அப்பொழுதே அது பரிசுத்தமாகும் என்றார். (11) பற்களுண்டாகி விட்டன. யாகஞ்செய் என அந்த வருணன் மறுபடியும் சொன்னான். பிறகு அரசன் எப்பொழுது இவனுக்குப் பற்கள் விழுகின்றனவோ அப்பொழுது அவன் பரிசுத்தனுவான் என்றார். (12) பற்கள் விழுந்து விட்டன. யாகஞ்செய் என்று வருணன் சொன்னான். அதற்கு அரசன் எப்பொழுது மறுபடியும் பசுவுக்கு பற்களுண்டாகுமோ அப்பொழுது அது பரிசுத்தமாகும் என்றான். (13) திரும்பவும் பற்கள் முளைத்துவிட்டன யாகஞ்செய் என்று வருணன் சொன்னான். அதற்கு அந்த அரசன் ஹே வருணராஜ! க்ஷத்திரியனுன பசு எப்பொழுது கவசந்தரிப்பதற்கு அருஹனுகின்ருனே அப்பொழுதே அந்தப் பசு பரிசுத்தமாகவாகிறது என்றார். (14) இவ்விதம் புத்திரனிடமுள்ள அனுராகமூலம் ஸ்னேஹத்துக்கு வசப்பட்ட சித்தத்தினுல் அந்த அந்தக் காலத்தைக் காட்டி வஞ்சிக்கின்ற அரசனுல் சொல்லப்பட்ட வருணன் அந்தக்காலத்தை எதிர்பார்த்தார். (15) ரோஹிதன் பிதாவினுல் செய்யவிரும்பப்பட்ட அந்தக் காரியத்தையறி

कीर्षितम् । प्राणप्रेप्सुर्धनुष्पाणिररण्यं प्रत्यपद्यत ॥ १६ ॥ पितरं वरुणग्रस्तं श्रुत्वा जातमहोदरम् । रोहितो ग्राममेयाय तमिन्द्रः प्रत्यषेधत ॥ १७ ॥ भूमेः पर्यटनं पुण्यं तीर्थक्षेत्रनिषेवणैः । रोहितायादिशच्छक्रः सोऽप्यरण्येऽवसत्समाम् ॥ १८ ॥ एवं द्वितीये तृतीये चतुर्थे पञ्चमे तथा । अभ्येत्याभ्येत्य स्थविरो विप्रो भूत्वाह वृत्रहा ॥ १९ ॥ षष्ठं संवत्सरं तत्र चरित्वा रोहितः पुरीम् । उपव्रजन्नजीगर्तादक्रीणान्मध्यमं सुतम् ॥ २० ॥

शुनःशेपं पशुं पित्रे प्रदाय समवन्दत । ततः पुरुषमेधेन हरिश्चन्द्रो महायशाः ॥ २१ ॥ मुक्तोदरोऽयजद्देवान्वरुणादीन्महत्कथः। विश्वामित्रोऽभवत्तस्मिन्होता चाध्वर्युरात्मवान् ॥ २२ ॥ जमदग्निरभूद्ब्रह्मा वसिष्ठोऽया-

---

ந்துகொண்டு ப்ராணனைக் காப்பாற்றிக்கொள்ளவிருப்பமுள்ளவனாய் வில்லைக் கையிலெடுத்துக்கொண்டு காட்டை யடைந்தான். (16) பிதா, வருணனால் பிடிக்கப்பட்டு மஹோதரரோகத்தை யடைந்திருப்பதாகக் கேட்டு ரோஹிதன் நகரத்துக்கு வந்தான். இந்திரன் அவனைத் தடுத்தான். (17) தீர்த்தம் க்ஷேத்திரம் இவற்றை ஸேவித்துக்கொண்டு பூமியை ப்ரதக்ஷிணம் செய்வது புண்ணியமானது என ரோஹிதனுக்கு இந்திரனுபதேசித்தான். அந்த ரோஹிதனும் ஒருவருஷம்முடியக் காட்டில் வஸித்தான். (18) இவ்விதமே இந்திரன் கிழப்ராம்ஹணனாகவாகி இரண்டாவது வருஷத்திலும், மூன்றாவது வருஷத்திலும், நான்காவது வருஷத்திலும், ஐந்தாவதுவருஷத்திலும் வந்து வந்து ரோஹிதனிடம் சொல்லிவந்தான். (19) ரோஹிதன் ஆறாவது வருஷத்திலும் காட்டில் ஸஞ்சரித்துவிட்டு பட்டினத்துக்கு வரும்பொழுது அஜீகர்த்தரிடமிருந்து அவருடைய நடுவிலுள்ள புத்திரனை விலைகொடுத்து வாங்கினான். (20)

சுனஃஸேபனான புருஷபசுவைப் பிதாவினிடம் கொடுத்து அவரை வணங்கினான். பிறகு மஹாயசஸ்வியும் மஹான்களால் கொண்டாடத்தகுந்தவனுமான ஹரிஸ்சந்திரன் வருணனால் விடப்பட்ட வயிற்றையுடையவனாயினுங்கூட புருஷமேதத்தினால் வருணாதிகளான தேவர்களை யஜித்தான். அந்த யாகத்தில் விஸ்வாமித்திரர் ஹோதாவாகவானார். ஆத்மவானான ஜமதக்னி அத்வர்யுவாகவானார்,

स्यसामगः । तस्मै तुष्टो ददाविन्द्रः शातकौम्भमयं रथम् ॥ २३ ॥ शुनःशेपस्य माहात्म्यमुपरिष्टात्प्रचक्ष्यते । सत्यसारां धृतिं दृष्ट्वा सभार्यस्य च भूपतेः ॥ २४ ॥ विश्वामित्रो भृशं प्रीतो ददावविहतां गतिम् । मनः पृथिव्यां तामद्भिस्तेजसाऽपोऽनिलेन तत् ॥ २५ ॥ खे वायुं धारयंस्तच्च भूतादौ तं महात्मनि । तस्मिञ्ज्ञानकलां ध्यात्वा तयाऽज्ञानं विनिर्दहन् ॥ २६ ॥ हित्वा तां स्वेन भावेन निर्वाणसुखसंविदा । अनिर्देश्याप्रतर्क्येण तस्थौ विध्वस्तबन्धनः ॥ २७ ॥

इति श्रीमद्भागवते महापुराणे नवमस्कन्धे हरिश्चन्द्रोपाख्यानवर्णनं नाम सप्तमोऽध्यायः ॥ ७ ॥

—•••✱•••—

---

வஸிஷ்டர் ப்ரம்ஹாவாகவானார். அயாஸ்யர் என்பவர் உத்காதாவாகவானார். ஸந்துஷ்டனான இந்திரன் அந்த ஹரிஸ்சந்திரனுக்குப் பொன்மயமான தேரைக் கொடுத்தான். (21–23) சுனஸ்ஸேபனுடைய மாஹாத்மியமானது பின்னால் (விஸ்வாமித்ர புத்திரர்களின் கதை சொல்லுமிடத்து) சொல்லப்படப் போகிறது. பார்யையுடன்கூடின ராஜனுக்கு ஸத்யத்தில் நிலைத்த தைரியத்தைக் கண்டு மிகவும் ப்ரீதியையடைந்த விஸ்வாமித்திரர் நிலைத்த ஞானத்தை அவனுக்கு உபதேசித்தார். அதாவது:—மனத்தை ப்ருதிவியில் நிருத்தி=ப்ருதிவியுடனொன்றுபட்டதாக த்யானித்தும், அந்த ப்ருதிவியை ஜலத்துடனொன்றுபட்டதாக த்யானித்தும், அந்த ஜலத்தைத் தேஜஸ்ஸுடனொன்றுபட்டதாக த்யானித்தும், அந்தத் தேஜஸ்ஸை வாயுவுடனொன்றுபட்டதாக த்யானித்தும், வாயுவை ஆகாசத்திலொன்றுபட்டதாக த்யானித்தும், அந்த ஆகாசத்தைப் பூதாதியான அஹந்தத்துவத்திலொன்றுபட்டதாக த்யானித்தும், அந்த அஹந்தத்துவத்தை மஹத்தத்துவத்திலொன்றுபட்டதாக த்யானித்தும், அந்த மஹத்தத்துவத்திலுள்ள விஷயாகாரதையை விலக்கி ஞானரூபமான அம்சத்தை ஆத்மாவாக த்யானித்தும், அந்த த்யானவிருத்தியினால் ஆத்மாவுக்கு ஆவாரகமான அக்ஞானத்தைப் போக்கிக்கொண்டும், கைவல்யசுகானுபவத்தினால் அந்த விருத்தியையும் நிவிருத்தி செய்துகொண்டும் அதிலிருந்து பந்த

## अथ अष्टमोऽध्यायः ॥

श्रीशुक उवाच—हरितो रोहितसुतश्चम्पस्तस्माद्विनिर्मिता । चम्पापुरी सुदेवोऽतो विजयो यस्य चात्मजः ॥ १ ॥ भरुकस्तत्सुतस्तस्माद्वृकस्तस्यापि बाहुकः । सोऽरिभिर्हृतभू राजा सभार्यो वनमाविशत् ॥ २ ॥ वृद्धं तं पञ्चतां प्राप्तं महिष्यनुमरिष्यती । और्वेण जानतात्मानं प्रजावन्तं

---

நிவிருத்தியை யடைந்தவராய் அநிர்த்தேஸ்யமும் அப்ரதர்க்யமுமான ஸ்வஸ்வரூபத்துடன் இருந்தார். (24–27) (எ–று)

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண நவமஸ்கந்தத்தில்
ஹரிஸ்சந்திரோபாக்யானவர்ணனமென்ற ஏழாவது
அத்தியாயம் முற்றிற்று.

## எட்டாவது அத்தியாயம்.

(அ–கை) अष्टमे रोहितस्योक्तो वंशो यत्राभवन्नृपः ।
सगरः कपिलाक्षेपान्निर्दग्धा यस्य सूनवः ॥ १ ॥

(க–ரை) எட்டாவது அத்தியாயத்தில் ரோஹிதனுடைய வம்சமானது சொல்லப்பட்டிருக்கிறது. இந்த வம்சத்தில் கபிலரை நிந்தித்ததால் எவருடைய புத்திரர்கள் பொசுக்கப்பட்டனரோ அந்த ஸகரஅரசன் உண்டானார். (1) (எ–று)

ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—ரோஹிதனுடைய புத்திரன் ஹரிதன். அவனிடமிருந்து சம்பன் பிறந்தான். இவனால் சம்பா என்ற பட்டினமானது நிர்மாணஞ் செய்யப்பட்டது. இவனிடமிருந்து ஸுதேவன் பிறந்தான். இவனுடைய புத்திரன் விஜயன். (1) அவனுடைய புத்திரன் பருகன். அவனிடமிருந்து வ்ருகனுண்டானான். அவனுக்கு பாஹுகன் பிறந்தான். அந்த அரசன் சத்துருக்களினால் அபஹரிக்கப்பட்ட பூமியை யுடையவனாய் பாரியையுடன்கூடக் காட்டில் ப்ரவேசித்தான். (2) மரணமடைந்த அந்தக் கிழவனை யொட்டித் தானும் அனுமரணத்தையடையப் போகின்ற அவனது மனைவியானவள் தன்னிடம் கர்ப்பமிருப்பதை யறிந்துகொண்ட ஔர்வரால் தடுக்கப்பட்டாள். (3) அதையறிந்துகொண்டு

निवारिता ॥ ३ ॥ आज्ञायास्यै सपत्नीभिर्गरो दत्तोऽन्धसा सह। सह तेनैव सञ्जातः सगराख्यो महायशाः॥ ४ ॥ सगरश्चक्रवर्त्यासीत्सागरो यत्सुतैः कृतः। यस्तालजङ्घान्यवनाञ्छकान्हैहयबर्बरान् ॥ ५ ॥ नावधीद्गुरुवाक्येन चक्रे विकृतवेषिणः। मुण्डाञ्श्मश्रुधरान्कांश्चिन्मुक्तकेशार्धमुण्डितान् ॥ ६ ॥ अनन्तर्वाससः कांश्चिदबहिर्वाससोऽपरान्। सोऽश्वमेधैरयजत सर्ववेदसुरात्मकम् ॥ ७ ॥ और्वोपदिष्टयोगेन हरिमात्मानमीश्वरम्। तस्योत्सृष्टं पशुं यज्ञे जहाराश्वं पुरन्दरः ॥ ८ ॥ सुमत्यास्तनया दृप्ताः पितुरादेशकारिणः। हयमन्वेषमाणास्ते समन्तान्न्यखनन्महीम् ॥ ९ ॥ प्रागुदीच्यां

---

சக்களத்திகளினால் அன்னத்துடன்கூட விஷமானது இவளுக்குக் கொடுக்கப்பட்டது. அந்த விஷத்துடன்கூடவே பிறந்தமைபற்றி ஸகரன் எனப் பெயரைப்பெற்று மஹத்தான யசஸ்ஸுள்ளவனுக வானுன். (4) ஸகரன் சக்கிரவர்த்தியாகவானுன். எவனுடைய புத்திரர்களினல் ஸமுத்திரமானது நோண்டப்பட்டதோ, எவன் தாலஜங்கர்களேயும், யவனர், சகர், ஹைஹயர், பர்ப்பரர் இவர்களேயும், குருவின் (ஔர்வரின்) வார்த்தையை முன்னிட்டுக் கொல்லாது விடுத்து அவர்களே விகாரமான ரூபமுள்ளவர்களாக அதாவது:—சிலரை மொட்டைகளாகவும், சிலரை மீசை (தாடி) இவையுள்ளவர்களாகவும், சிலரைத் தலைமயிரைத் தொங்கவிட்டுக்கொண்டிருப்பவர்களாகவும், சிலரைப் பாதிமொட்டை யடிக்கப்பட்டவர்களாகவும், சிலரை உள்வஸ்திரம் (கௌபீனம்) அற்றவர்களாகவும், சிலரை மேலுத்தரீயமற்றவர்களாகவும் செய்தானே அந்த ஸகரன் அஸ்வமேதயாகங்களினல் ஸமஸ்தமான வேதங்கள் தேவர்கள் இவர்களேச் சரீரமாக வுடையவரும், ஈஸ்வரனுமான ஹரியை ஔர்வரென்ற குருவினுலுபதேசிக்கப்பட்ட உபாயப்படி ஆராதித்தான். இந்திரன் அஸ்வமேதயாகத்தில் விடப்பட்ட அவனுடைய குதிரையை அபஹரித்தான். (5-8) கொழுப்பேறினவர்களாயும் பிதாவின் கட்டளையை நிறைவேற்றுகின்றவர்களாயுமிருக்கின்ற அவனுடைய பத்னியான ஸுமதியினுடைய அந்தப் புத்திரர்கள் குதிரையைத் தேடுகின்றவர்களாய் சுற்றிலும் பூமியை நோண்டினர். (9) வடகிழக்கு திக்கில் கபிலருக்கருகில் குதிரையைக் கண்டனர். குதி

दिशि हयं ददृशुः कपिलान्तिके । एष वाजिहरश्चौर आस्ते मीलितलोचनः ॥ १० ॥ हन्यतां हन्यतां पाप इति षष्टिसहस्रिणः । उदायुधा अभिययुरुन्मिमेष तदा मुनिः ॥ ११ ॥ स्वशरीराग्निना तावन्महेन्द्रहृतचेतसः । महद्व्यतिक्रमहता भस्मसादभवन्क्षणात् ॥ १२ ॥

न साधुवादो मुनिकोपभर्जिता नृपेन्द्रपुत्रा इति सत्त्वधामनि । कथं तमो रोषमयं विभाव्यते जगत्पवित्रात्मनि खे रजो भुवः ॥ १३ ॥ यस्येरिता साङ्ख्यमयी दृढेह नौर्यया मुमुक्षुस्तरते दुरत्ययम् । भवार्णवं मृत्युपथं विपश्चितः परात्मभूतस्य कथं पृथङ्मतिः ॥ १४ ॥ योऽसमञ्जस

---

ரையை அபஹரித்த இந்தத்திருடன் கண்களை மூடிக்கொண்டு இங்கிருக்கிறான். (10) இந்தப் பாபி கொல்லப்படட்டும், கொல்லப்படட்டும் எனச் சொல்லிக்கொண்டு அறுபதினாயிரம் பேர்களும் ஆயுதத்தைக் கையிலெடுத்துக்கொண்டு ஓடிவந்தனர். அப்பொழுது கபிலமுனி கண்விழித்துக்கொண்டார். (11) அப்பொழுது மஹானை நிந்தித்ததன் மூலமே கொல்லப்பட்டவர்களும் இந்திரனால் அழிக்கப்பட்ட சித்தத்தை யுடையவர்களுமான அவர்கள் தங்களுடைய சரீரத்திலிருந்துண்டான அக்னியினால் அதே க்ஷணத்தில் சாம்பலாயினர். (12)

முனியின் கோபாக்னியினால் ராஜபுத்திரர்கள் எரிக்கப்பட்டனர் என்பது நல்லவர் சொல்லும் வார்த்தையன்று. ஜகத்துக்குப் பரிசுத்தியைத் தருகின்ற ஆத்மாவை யுடையவரும் சுத்தஸத்துவ மூர்த்தியுமான அந்தக் கபிலரிடத்தில் ஆகாசத்தில் பூமியின் பொடிகள்போலக் கோபமயமான தமோகுணமானது எவ்விதமிருக்க முடியும். (ஒருபொழுதுமிருக்க முடியாது.) (13) எவரால் தத்துவஞானமயமான ஓடமானது இவ்வுலகில் ஏற்படுத்தப்பட்டதோ எந்த வோடத்தினால் முமுக்ஷுவானவன் தாண்டமுடியாததும் மிருத்யுவுக்கு வழியாகவுள்ளதுமான ஸம்ஸாரஸமுத்திரத்தைத் தாண்டுகின்றானோ ஸர்வக்ஞனும் பரமாத்மபூதருமான அவருக்கு சத்துருவென்றும் மித்திரன் என்றுமான எண்ணமானது என்னமாகவுண்டாகும். (14) எவன் அஸமஞ்ஜஸன் என்று சொல்லப்பட்டானோ

इत्युक्तः स केशिन्या नृपात्मजः। तस्य पुत्रोंऽशुमान्नाम पितामहहिते रतः ॥ १५ ॥ असमञ्जस आत्मानं दर्शयन्नसमञ्जसम्। जातिस्मरः पुरा सङ्गाद्योगी योगाद्विचालितः ॥ १६ ॥ आचरन्गर्हितं लोके ज्ञातीनां कर्म विप्रियम्। सरय्वां क्रीडतो बालान्प्रास्यदुद्वेजयञ्जनम् ॥ १७ ॥ एवं वृत्तः परित्यक्तः पित्रास्नेहमपोह्य वै। योगैश्वर्येण बालांस्तान्दर्शयित्वा ततो ययौ ॥ १८ ॥ अयोध्यावासिनः सर्वे बालकान्पुनरागतान्। दृष्ट्वा विसिस्मिरे राजन्राजा चाप्यन्वतप्यत ॥१९॥ अंशुमांश्चोदितो राज्ञा तुरङ्गान्वेषणे ययौ।

---

அவன் கேசினீ என்பவளிடம் ஸகரனுக்கு பிறந்தவனுவான். அம்சுமான் என்பவன் அவனுடைய புத்திரன். அவன் பாட்டனுருக்கு ஹிதஞ் செய்வதில் பற்றுள்ளவனுக ஆனன். (15) அஸமஞ்ஜஸன் என்பவன் முந்தின ஜன்மத்தில் யோகியாகவிருந்து ஸங்கங்காரணமாய் யோகத்தினின்றும் நழுவினவனுயும், அக்காரணம்பற்றியே இப்பிறவியில் ஜாதிஸ்மரனுயும்=முற்பிறவியின் ஞானமுள்ளவனுயும், இருந்துகொண்டு இப்பொழுதும் ஸங்கமேற்படாவண்ணம் தன்னை அஸமஞ்ஜஸனுக=பிறர்க்குப் பிடித்தமற்றவனுக, காண்பித்துக் கொண்டும், உலகில் நிந்திக்கப்பட்டதும், ஞாதிகளுக்கு ப்ரியமற்றதுமான காரியத்தைச் செய்துகொண்டும், ஜனத்தைப் பயப்படும்படி செய்துகொண்டும் விளையாடுகின்ற குழந்தைகளை ஸரயூநதியில்போட்டுவந்தான். (16–17) இவ்வித நடத்தையுள்ள அவன் ஸ்னேஹத்தைப் போக்கிக்கொண்டு பிதாவினுல் ஊரைவிட்டு விரட்டப்பட்டவனுய்த் தனது யோகைஸ்வரியத்தினுல் அக்குழந்தைகளைத் திரும்பவும் உயிருடன் காண்பித்துவிட்டு அந்த நகரத்தைவிட்டுப் போய்விட்டான். (18) ஹே ராஜன்! அயோத்தியில் வஸிக்கும் யாவரும் குழந்தைகள் திரும்பிவந்ததைக் கண்டு மேலான ஆஸ்சரியத்தை அடைந்தனர். அரசனும் பஸ்சாதாபத்தையடைந்தான். (19) அவனுடைய புத்திரனுன அம்சுமான் என்பவன் அரசனுலேவப்பட்டவனுய் குதிரையைத் தேடுவதற்காகப் புறப்பட்டான். பிதாவினது ப்ராதாக்களினுல் தோண்டப்பட்ட பள்ளத்தை யொட்டிச் செல்லும் வழியாகச் சென்று அங்குள்ள சாம்பலின் அருகில் குதிரையைக் கண்டான். (20) மஹானுன

पितृव्यखातानुपथं भस्मान्ति ददृशे हयम् ॥ २० ॥ तत्रासीनं मुनिं वीक्ष्य कपिलाख्यमधोक्षजम् । अस्तौत्समाहितमनाः प्राञ्जलिः प्रणतो महान् ॥

अंशुमानुवाच—न पश्यति त्वां परमात्मनोऽजनो न बुध्यतेऽद्यापि समाधियुक्तिभिः । कुतोऽपरे तस्य मनःशरीरधीविसर्गसृष्टा वयमप्रकाशाः ॥ २२ ॥ ये देहभाजस्त्रिगुणप्रधाना गुणान्विपश्यन्त्युत वा तमश्च । यन्मायया मोहितचेतसस्ते विदुः स्वसंस्थं न बहिःप्रकाशाः ॥ २३ ॥ तं

---

அம்சுமான் அவ்விடத்திலுட்கார்ந்திருப்பவரும் முனியுமான கபிலரெனப் பெயரிய அதோக்ஷஜனை=விஷ்ணுவை, கண்டு வணங்கி இருகைகளேயும் கூப்பிக்கொண்டு ஒரேஇடத்தில் அசையாது நிருத்தின மனதுடையவனுய் அவரை ஸ்துதிக்கவாரம்பித்தான். (21)

அம்சுமான் சொல்லலுற்ருன்—அஜனனுன ப்ரம்ஹதேவன் கூடத் தன்னைக்காட்டிலும் பரனுன=பரமேஶ்வரனுன, உம்மை ஸமாதியினுல் இப்பொழுதுங்கூட அபரோக்ஷமாகக் காணுதவராகவும், யுக்திகளினுல் பரோக்ஷமாகக் கண்டுகொள்ளாதவராகவுமே இருக்கின்ருர். இப்படியிருக்க அவருடைய மனது சரீரம் புத்தி இவற்றினுல்=ஸத்துவம் தமஸ் ரஜஸ் இவற்றின் காரியங்களினுல், ஏற்பட்ட தேவர் பசு மனிதர் இவர்களுள் ஸிருஷ்டிக்கப்பட்டவர்களும் பிற்காலத்தவர்களும் அக்ஞர்களுமான நாங்கள் எவ்விதமறிவோம். (ஒருபொழுது மறியமாட்டோம்.) (22) தேஹத்தில் தாதாத்மிய ஸம்பந்தம் பெற்றவர்களும் ஸத்வம் ரஜஸ் தமஸ் என்ற முக்குணமுள்ள புத்தியை ப்ரதானமாகக் கொண்டவர்களுமானவர்கள் எவர்களோ அவர்கள் உமது மாயையினுல் மோஹிக்கும்படி செய்யப்பட்ட சித்தமுள்ளவர்களாக இருப்பதுபற்றி வெளியிலுள்ள பொருளேப்பற்றின ஞானமுள்ளவர்களாகவாகி தம்மிடத்தில் நன்கு ப்ரகாசிக்கின்றவராயினுங்கூட உம்மை அறிகின்றனரில்லே. பின்னேயோவெனில் புத்திக்கு வசப்பட்டவர்களாக இருப்பதுபற்றி ஜாக்ருத் ஸ்வப்பினம் இவற்றில் விஷயங்களேயும் ஸுஷுப்தியில் அக்ஞானத்தையுமே அறிகின்றனரேயன்றி எவ்விதகுணஸம்பந்தமுமற்ற உம்மை யறிவதில்லே. (23) ஆகவே மிக்க மூடனுன நான், ஞானகனரும்=சுத்தக்ஞான மூர்த்தியும், ஸ்வயமா

त्वामहं ज्ञानघनं स्वभावप्रध्वस्तमायागुणभेदमोहैः । सनन्दनाद्यैर्मुनिभि-
र्विभाव्यं कथं हि मूढः परिभावयामि ॥ २४ ॥ प्रशान्तमायागुणकर्मलिङ्ग
मनामरूपं सदसद्विमुक्तम् । ज्ञानोपदेशाय गृहीतदेहं नमामहे त्वां पुरुषं
पुराणम् ॥ २५ ॥ त्वन्मायारचिते लोके वस्तुबुद्ध्या गृहादिषु । भ्रमन्ति
कामलोभेर्ष्यामोहविभ्रान्तचेतसः ॥ २६ ॥ अद्य नः सर्वभूतात्मन्कामकर्मे-
न्द्रियाशयः । मोहपाशो दृढश्छिन्नो भगवंस्तव दर्शनात् ॥ २७ ॥ श्रीशुक
उवाच—इत्थं गीतानुभावस्तं भगवान्कपिलो मुनिः । अंशुमन्तमुवाचेद-
मनुगृह्य धिया नृप ॥ २८ ॥ श्रीभगवानुवाच—अश्वोऽयं नीयतां वत्स

---

கவே போக்கப்பட்ட மாயாகுண நிமித்தங்களான பேதமோஹங்களை யுடையவர்களும் முனிகளுமான ஸனந்தனாதிகளினால் சிந்திக்கத்தக்கவருமான உம்மை எவ்விதம் விசாரித்தறிந்து கொள்ளப் போகிறேன். (24) ப்ரசாந்தங்களான ஸத்வாதிகளாகிற மாயா குணங்கள் ப்ரபஞ்சஸிருஷ்டியாதி கர்மங்கள் ப்ரம்ஹாதிஸ்வரூபங்களாகிற லிங்கங்கள் ஆகிய இவற்றையுடையவரும், காரியகாரணத் தன்மையினால் விடுபட்டவரும், ஆனதுபற்றியே நாமரூபமற்றவரும், ஞானோபதேசத்துக்கு வேண்டி சரீரத்தை எடுத்துக்கொண்டவரும், புராணபுருஷருமான உம்மை நமஸ்கரிக்கின்றேன். (25) காமம் லோபம் பொறுமை மோஹம் இவற்றால் மயங்கின சித்தமுள்ளவர்கள் உமது மாயையினால் செய்யப்பட்ட உலகில் ஸத்ய புத்தியுடன் கிருஹாதிகளில் சுழலுகின்றனர். (26) ஹே ஸர்வ பூதாத்மன்! ஹே பகவன்! உம்முடைய தரிசனத்தினால் காமம் கர்மம் இந்திரியம் இவற்றுக்கு ஆஶ்ரயமானதும் திருடமானதும் மோஹமயமுமான எங்களுடைய பாசமானது இப்பொழுது அறுக்கப்பட்டுவிட்டது என்றார். (27) ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—ஹே ந்ருப! இவ்விதம் ஸ்துதிக்கப்பட்ட மஹிமையையுடையவரும் பகவானுமான கபிலமுனியானவர் அந்த அம்சுமானை மனத்தினால் அனுக்கிரஹித்துப் பின்வருமாறு சொல்லலுற்றார். (28) கபில பகவான் சொல்லலுற்றார்—ஹே வத்ஸ! உனது பிதாமஹனின் யக்ஞபசுவான இந்தக் குதிரையானது கொண்டுபோகப்படட்டும். பொசுக்கப்பட்டவர்களான இந்தப் பிதிருக்கள் கங்காஜலத்தை

पितामहपशुस्तव । इमे च पितरो दग्धा गङ्गाम्भोऽर्हन्ति नेतरत् ॥ २९ ॥ तं परिक्रम्य शिरसा प्रसाद्य हयमानयत् । सगरस्तेन पशुना क्रतुशेषं समापयत् ॥ ३० ॥ राज्यमंशुमति न्यस्य निःस्पृहो मुक्तबन्धनः । और्वोपदिष्टमार्गेण लेभे गतिमनुत्तमाम् ॥ ३१ ॥

इति श्रीमद्भागवते महापुराणे नवमस्कन्धे सगरोपाख्यानवर्णनं नाम अष्टमोऽध्यायः ॥ ८ ॥

## अथ नवमोऽध्यायः ॥

श्रीशुक उवाच—अंशुमांश्च तपस्तेपे गङ्गानयनकाम्यया । कालं महान्तं नाशक्नोत्ततः कालेन संस्थितः ॥ १ ॥ दिलीपस्तत्सुतस्तद्वदशक्तः

யடையத் தகுதியுடையவர்களேயன்றி வேறு ஜலத்தையடையத் தகுதியுடையவரன்று என்றார். (29) அவரை வலம்வந்து தலையினால் வணங்கி ஸந்தோஷமடையச்செய்து குதிரையை ஓட்டிவந்தார். ஸகரமஹாராஜன் அந்தப் பசுவினால் யாகசேஷத்தைப் பூர்த்தி செய்துகொண்டார். (30) அவர் ராஜ்யத்தை அம்சுமானிடத்தில் வைத்துவிட்டு எதிலும் பற்றற்றவராகவும் பந்தமற்றவராகவுமாகி ஔர்வராலுபதேசிக்கப்பட்ட வழியை யொட்டி அனுத்தமமான கதியையடைந்தார். (31) (எ-று)

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண நவமஸ்கந்தத்தில் ஸகரோபக்கியான வர்ணனமென்ற எட்டாவது அத்தியாயம் முற்றிற்று.

## ஒன்பதாவது அத்தியாயம்.

(அ-கை) नवमे अंशुमतो वंशः खट्वाङ्गावधि वर्ण्यते ।
गङ्गां भूतलमानिन्ये यस्य पौत्रो भगीरथः ॥ १ ॥

(க-ரை) எந்த அம்சுமானுடைய பௌத்திரரான பகீரதர் கங்கையைப் பூதலத்துக்குக் கொண்டுவந்தாரோ அந்த அம்சுமானுடைய வம்சமானது கட்வாங்கன்வரை இந்த ஒன்பதாவது அத்தியாயத்தி லுபதேசிக்கப்படுகிறது. (1) (எ-று)

कालमेयिवान् । भगीरथस्तस्य पुत्रस्तेपे स सुमहत्तपः ॥ २ ॥ दर्शयामास तं देवी प्रसन्ना वरदास्मि ते । इत्युक्तः स्वमभिप्रायं शशंसावनतो नृपः ॥ ३ ॥ कोऽपि धारयिता वेगं पतन्त्या मे महीतले । अन्यथा भूतलं भित्त्वा नृप यास्ये रसातलम् ॥ ४ ॥ किं चाहं न भुवं यास्ये नरा मय्यामृजन्त्यघम् । मृजामि तदघं कुत्र राजंस्तत्र विचिन्त्यताम् ॥ ५ ॥ भगीरथ

ஸ்ரீசுகர் சொல்லலுற்ருர்—அம்சுமானும் கங்கையை வரவழைக்கவேண்டுமென்ற விருப்பத்துடன் வெகுகாலம் தவஞ்செய்தும் கங்கையை வரவழைக்க முடியாதவனுகி காலத்தினுல் மரணத்தை யடைந்தான். (1) அவனுடைய புத்திரனுன திலீபனும் அவன்போலவே அசக்தனுகி மரணத்தை யடைந்தான். அவனுடைய புத்திரன் பகீரதன். அவன் மிகப் பெரிதான தவத்தைச் செய்தான். (2) தவத்தினுல் ப்ரீதியையடைந்தவளான கங்காதேவியானவள் தன்னை அவனுக்குக் காண்பித்து உனக்கு வரனைத் தருபவளாக இருக்கிறேன் என்ருள். இவ்விதம் சொல்லப்பட்ட அரசன் அவளை வணங்கித் தனது அபிப்பிராயத்தை வெளியிட்டான். (3) அதுகேட்ட கங்கை ஹே அரசனே! பூதலத்தில் விழுகின்ற என்னுடைய வேகத்தை யாராவது தாங்கப்போகிருனு? அவ்விதம் தரிக்காவிடில் பூதலத்தைப் பிளந்துகொண்டு பாதாளஞ் சென்று விடுவேன். (4) மேலும் ஹே ராஜன்! நான் பூமியை யடையமாட்டேன். மனிதர்கள் என்னிடம் தங்களுடைய பாபத்தைக் கழிப்பர். அந்தப் பாபத்தை நான் எங்கு போக்குவேன். அவ்விஷயத்தில் ஆலோசிக்கப்படட்டும் என்ருள். (5) பகீரதன் சொல்லலுற்ருர்—உலகையே பரிசுத்தப்படுத்தக் கூடியவர்களான ஸாதுக்களும்=சாஸ்திரத்தை யனுஸரிப்பவர்களும், ந்யாஸிகளும்=பகவானிடத்திலர்ப்பணஞ் செய்யப்பட்ட எல்லாக் கர்மபலன்களையு முடையவர்களும், சாந்தர்களும்=சமாதிஸாதன நிறைவுபெற்றவர்களும், ஆன *ப்ரம்ஹிஷ்டர்கள்=வேதாப்யாஸரதர்களும் ஹரி

* ब्रंहिष्ठाः=ब्रह्म=जातिः वेदो वा आत्मध्यानं वा विद्यते येषान्ते ब्रह्मवन्तः अतिशयेन ब्रह्मवन्तो ब्रह्मिष्ठाः=என்று வ்யுத்பத்தி கொண்டு இந்தப் பொருள் கூறப்பட்டது. இவ்விதம் பொருள் கொள்ளாவிடில் ब्रह्मस्थाः=என்றேதான் ப்ரயோகம் செய்யப்படவேண்டி வரும்.

उवाच—साधवो न्यासिनः शान्ता ब्रह्मिष्ठा लोकपावनाः। हरन्त्यघं तेऽङ्गसङ्गात्तेष्वास्ते ह्यघभिद्धरिः॥ ६॥ धारयिष्यति ते वेगं रुद्रस्त्वात्मा शरीरिणाम्। यस्मिन्नोतमिदं प्रोतं विश्वं शाटीव तन्तुषु॥ ७॥ इत्युक्त्वा स नृपो देवं तपसातोषयच्छिवम्। कालेनाल्पीयसा राजंस्तस्येशः समतुष्यत॥ ८॥

तथेति राज्ञाभिहितं सर्वलोकहितः शिवः। दधारावहितो गङ्गां पादपूतजलां हरेः॥ ९॥ भगीरथः स राजर्षिर्निन्ये भुवनपावनीम्। यत्र स्वपितॄणां देहा भस्मीभूताः स्म शेरते॥ १०॥ रथेन वायुवेगेन प्रयान्त-

---

பக்தர்களுமான ப்ராம்ஹணர்கள், உன்னிடமேற்படும் தமது அங்கஸங்கத்தினல்(உன்னிடம் ஸ்னானஞ்செய்வதால்) உனதுபாபத்தைப் போக்கிவிடுவர். (அவர்கள் தங்களிடம் வந்தபாபத்தை எங்குபோக்குவர் என்பாயேல்) அவர்களிடம் எல்லாப் பாபங்களேயும் நாசஞ் செய்கின்ற ஹரியன்றே இருக்கின்றூர். (ஆகவே அவர்களிடம் பாப மணுகாது.) (6) எவரிடத்தில் நூல்களில் வஸ்திரமானதுபோல இந்த ப்ரபஞ்சமானது கோக்கப்பட்டிருக்கின்றதோ ஜீவர்களுக்கெல்லாம் ஆத்மாவான ஸ்ரீருத்ரன் உன்னுடைய வேகத்தைத் தரிக்கப்போகின்றூர் என்றூர். (7) ஹே ராஜன்! இவ்விதஞ் சொல்லிவிட்டு அந்த அரசன் தேவனான சிவனைத் தவத்தினல் ஸந்தோஷப் படுத்தினர். ஈஶ்வரன் அற்பகாலத்தினலேயே அவர் விஷயத்தில் ஸந்தோஷத்தை யடைந்தார். (8)

எல்லா வுலகங்களுக்கும் ஹிதத்தைச் செய்பவரான சிவன் அரசனல் சொல்லப்பட்டதைக் கேட்டு அவ்விதமே யாகட்டுமென்று சொல்லி ஹரியின் சரணஸம்பந்தத்தினல் பரிசுத்தமான ஜலத்தையுடைய கங்கையை வெகு ஸாவதானமாகத் தரித்தார்.(9) ராஜருஷியான அந்தப் பகீரதன் லோகங்களேப் பரிசுத்தப்படுத்துபவளான கங்கையைத் தனது பிதிருக்களின் தேஹங்கள் சாம்பலாகி எங்கு கிடக்கின்றனவோ அங்கு கொண்டுசேர்த்தான். (10) வாயுவேகமுள்ள தேரில் ஏறிச்செல்லுகின்ற அரசனேப் பின்தொடர்ந்து செல்லுகின்றவளும் தேசங்களேப் பரிசுத்தப்படுத்துகின்றவளுமான கங்கை பொசுக்கப்பட்டவர்களான ஸகரபுத்திரர்களே நனைத்

मनुधावती। देशान्पुनन्ती निर्दग्धानासिञ्चत्सगरात्मजान् ॥११॥ यज्जलस्प
र्शमात्रेण ब्रह्मदण्डहता अपि। सगरात्मजा दिवं जग्मुः केवलं देहभस्मभिः
॥ १२ ॥ भस्मीभूताङ्गसङ्गेन स्वर्याताः सगरात्मजाः। किं पुनः श्रद्धया देवीं
ये सेवन्ते धृतव्रताः॥ १३ ॥ न ह्येतत्परमाश्चर्यं स्वर्धुन्या यदिहोदितम्।
अनन्तचरणाम्भोजप्रसूताया भवच्छिदः ॥ १४ ॥ सन्निवेश्य मनो यस्मि-
न्श्रद्धया मुनयोऽमलाः। त्रैगुण्यं दुस्त्यजं हित्वा सद्यो यातास्तदात्मताम्
॥ १५ ॥ श्रुतो भगीरथाज्जज्ञे तस्य नाभोऽपरोऽभवत्। सिन्धुद्वीपस्ततस्त-
स्मादयुतायुस्ततोऽभवत् ॥ १६ ॥ ऋतुपर्णो नलसखो योऽश्वविद्यामयान्न-
लात्। दत्त्वाऽक्षहृदयं चास्मै सर्वकामस्तु तत्सुतः ॥ १७ ॥ ततः सुदा-

---

தாள். (11) இந்தக் கங்காஜலம் பட்டமாத்திரத்தினாலேயே ஸகர குமாரர்கள் ப்ராம்ஹணன் விஷயத்தில் செய்த தங்களுடைய குற்றத்தால் கொல்லப்பட்டவர்களாக இருந்தபோதிலுங்கூட கேவலம் சாம்பலான தேஹங்களினாலேயே ஸ்வர்க்கத்தை யடைந்தனர்.(12) சாம்பலாகவான அங்கத்தில் கங்காஜலஸங்கத்தினாலேயே ஸகரபுத்திரர்கள் ஸ்வர்க்கத்தையடைந்தனரென்றால் எவர்கள் நியமத்துடன் கூடினவர்களாய் ப்ரத்தையுடன் கங்காதேவியை ஸேவிக்கின்றனரோ அவர்கள் விஷயத்தில் சொல்லவேண்டுவதென்ன இருக்கிறது. (13) முனிகள் ப்ரத்தையுடன் எவரிடத்தில் மனத்தைச் செலுத்தி சுத்தர்களாகவாகி விடுதற்கரிதான தேஹஸம்பந்தத்தைப் போக்கிக்கொண்டு அப்பொழுதே அவருடைய ஸாயுஜ்யத்தை யடைகின்றனரோ, அந்த அனந்தனுடைய சரணாரவிந்தங்களிலிருந்து உண்டானவளும், ஸம்ஸாரத்தைப் போக்குகின்றவளுமான ஆகாச கங்கையினுடைய மஹிமையானது இங்கு எது சொல்லப்பட்டதோ இது ஒருபெரிய ஆஸ்சரியகரமன்று. (14-15) பகீரதனிடமிருந்து ஸ்ருதன் பிறந்தான். அந்த ஸ்ருதனுக்கு நாபன் பிறந்தான். இவன் மனுவம்சத்திற் பிறந்த நாபனைவிட வேறுபட்டவன். அந்த நாபனிடமிருந்து ஸிந்துத்வீபன் பிறந்தான். அவனிடமிருந்து அயுதாயு என்பவன் பிறந்தான். அவனிடமிருந்து நளனுக்கு ஸகாவான ருதுபர்ணன் பிறந்தான். இவன் நளனுக்கு அக்ஷஹ்ருதயம் என்ற வித்யையை யுபதேசித்து நளனிடமிருந்து அஸ்வவித்யையை

सस्तत्पुत्रो मदयन्तीपतिर्नृप । आहुर्मित्रसहं यं वै कल्माषाङ्घ्रिमुत क्वचित् । वसिष्ठशापाद्रक्षोऽभूदनपत्यः स्वकर्मणा ॥ १८ ॥

राजोवाच—किन्निमित्तो गुरोः शापः सौदासस्य महात्मनः । एतद्वेदितुमिच्छामः कथ्यतां न रहो यदि ॥ १९ ॥ श्रीशुक उवाच—सौदासो मृगयां किञ्चिच्चरन्रक्षो जघान ह । मुमोच भ्रातरं सोऽथ गतः प्रतिचिकीर्षया ॥ २० ॥ स चिन्तयन्नघं राज्ञः सूदरूपधरो गृहे । गुरवे भोक्तुकामाय पक्त्वा निन्ये नरामिषम् ॥ २१ ॥ परिवेक्ष्यमाणं भगवान्विलोक्याभक्ष्यमञ्जसा । राजानमशपत्क्रुद्धो रक्षो ह्येवं भविष्यसि ॥ २२ ॥ रक्षःकृतं

---

யடைந்தான். அவனுடைய புத்திரன் ஸர்வகாமன். (16-17) அவனிடமிருந்து ஸுதாஸன் பிறந்தான். அவனிடமிருந்து மதயந்தியின் பதியான அரசன் பிறந்தான். இவனை மித்ரஸஹனென்றும், அல்லது சிலகாலம் கல்மாஷபாதன் என்றும் சொல்லுவர். வஸிஷ்டசாபத்தினுல் ராக்ஷஸனுகித் தனது கர்மாவினுல் புத்திரனற்றவனுகவுமானுன் என்றுர். (18)

அரசன் சொல்லலுற்றுன்—ஸுதாஸனுடைய புத்திரனும் மஹாத்மாவுமான இவனுக்கு என்ன நிமித்தம்பற்றி குருவான வஸிஷ்டரின் சாபமேற்பட்டதோ இதை யறிந்துகொள்ள விரும்புகிறேம். ரஹஸ்யமில்லாவிடில் இதைச் சொல்லவேண்டுமென்றுர். (19) ஸ்ரீசுகர் சொல்லலுற்றுர்—ஸௌதாஸன் வேட்டையாடும்பொழுது ஒரு ராக்ஷஸனைக் கொன்று அவனது ப்ராதாவை விட்டுவிட்டான். பிறகு அந்த ப்ராதாவானவன் பதில் செய்யவேண்டுமென்ற எண்ணத்துடன் அரசனை அடைந்தான். (20) அரசனுக்குக் கெடுதலைச் சிந்தித்துக்கொண்டு அவன் அரசனுடைய வீட்டில் பரிசாரகவேஷத்தைத் தரித்தவனுய் சாப்பிட எண்ணங்கொண்டவரான வஸிஷ்டருக்கு மனிதமாம்ஸத்தைச் சமைத்துப்போட்டான். (21) இலையில் பரிமாறப்படவிருக்கும் அபோஜ்யமான அதை அப்பொழுதே அறிந்துகொண்டு பகவானுன வஸிஷ்டர் கோபங்கொண்டு இவ்விதம் மனிதமாம்ஸத்தை உபயோகித்ததால் ராக்ஷஸனுக ஆகப்போகின்றனை எனச் சபித்தார்.(22) பிறகு அதை ராக்ஷஸனுற் செய்யப்பட்டதெனவறிந்துகொண்டு அந்தச் சாபத்தைப்

तद्विदित्वा चक्रे द्वादशवार्षिकम् । सोऽप्यपोऽञ्जलिनादाय गुरुं शप्तुं समुद्यतः ॥ २३ ॥ वारितो मदयन्त्याऽपो रुशतीः पादयोर्जहौ । दिशः खमवनीं सर्वं पश्यञ्जीवमयं नृपः ॥ २४ ॥ राक्षसं भावमापन्नः पादे कल्माषतां गतः । व्यवायकाले ददृशे वनौकोदम्पती द्विजौ ॥ २५ ॥

क्षुधार्तो जगृहे विप्रं तत्पत्न्याहाकृतार्थवत् । न भवान्राक्षसः साक्षादिक्ष्वाकूणां महारथः ॥ २६ ॥ मदयन्त्याः पतिर्वीर नाधर्मं कर्तुमर्हसि । देहि मेऽपत्यकामाया अकृतार्थं पतिं द्विजम् ॥ २७ ॥ देहोऽयं मानुषो राजन्पुरुषस्याखिलार्थदः । तस्मादस्य वधो वीर सर्वार्थवध उच्यते ॥२८॥ एष हि ब्राह्मणो विद्वांस्तपःशीलगुणान्वितः । आरिराधयिषुर्ब्रह्म महा-

---

பன்னிரண்டு வருஷங்கள்வரை யனுபவிக்கும்படி செய்தார். அந்த அரசனும் ஜலத்தைக் கையிலெடுத்துக்கொண்டு குருவைச் சபிக்க யத்தனித்தான். (23) மதயந்தியினால் தடுக்கப்பட்டவனாய் அந்த அரசன் திக்குகளையும் ஆகாசத்தையும் பூமியையும் ஆகிய யாவையும் ஜீவமயமாகத் தெரிந்துகொண்டு தீக்ஷ்ணமான அந்த ஜலத்தைத்தனது பாதங்களில் விட்டுக்கொண்டான். (24) ராக்ஷஸமான ஸ்வபாவத்தை யடைந்தவனாய் காலில் கருத்தவனாக இருத்தலையும் அடைந்தான். வனத்தையே வீடாகவுடைய ப்ராம்ஹணதம்பதிகள் போகஞ்செய்யும் காலத்தில் அவர்களைக் கண்டான். (25)

பசியினால் பீடிக்கப்பட்டவனாய் ப்ராம்ஹணனைப் பிடித்துக்கொண்டான். அவருடைய பத்னியானவள் தீனையானவள்போலச் சொல்லலுற்றாள். அதாவது:—ஹே வீர! நீர் ஸாக்ஷாத் ராக்ஷஸனன்று. இக்ஷ்வாகு வம்சத்தவர்களுக்குள் மஹாரதனும் மதயந்தியின் பதியுமாவீர். ஆகவே அதர்மத்தைச் செய்ய அருஹரல்லீர். புத்திரகாமனையுள்ள எனக்கு கிருதார்த்தராகவாகாதவரும் (போக பூர்த்தியை யடையாதவரும்) பதியுமான ப்ராம்ஹணனைத் தாரும். (26–27) ஹே ராஜன்! ஹே வீர! ஜீவனுக்கேற்பட்ட இந்த மனிதசரீரமானது எல்லாப் புருஷார்த்தத்தையும் தரக்கூடியது. ஆகவே இந்தத் தேஹத்தின் வதமானது எல்லாப் புருஷார்த்தத்தின் வதமென்று சொல்லப்படுகிறது. (28) வித்வானும், தவம் சீலம் குணம் இவற்றுடன் கூடினவருமான இந்த ப்ராம்ஹணரோ

पुरुषसंज्ञितम् । सर्वभूतात्मभावेन भूतेष्वन्तर्हितं गुणैः ॥ २९ ॥ सोऽयं ब्रह्मर्षिवर्यस्ते राजर्षिप्रवराद्विभो । कथमर्हति धर्मज्ञ वधं पितुरिवात्मजः ॥ ३० ॥ तस्य साधोरपापस्य भ्रूणस्य ब्रह्मवादिनः । कथं वधं यथा बभ्रोर्मन्यते सन्मतो भवान् ॥३१॥ यद्ययं क्रियते भक्षस्तर्हि मां खाद पूर्वतः। न जीविष्ये विना येन क्षणं च मृतकं यथा ॥ ३२ ॥ एवं करुणभाषिण्या विलपन्त्या अनाथवत् । व्याघ्रः पशुमिवाखादत्सौदासः शापमोहितः॥३३॥ ब्राह्मणी वीक्ष्य दिधिषुं पुरुषादेन भक्षितम् । शोचन्त्यात्मानमुर्वीशमशपत्कुपिता सती ॥ ३४ ॥ यस्मान्मे भक्षितः पाप कामार्तायाः पतिस्त्वया ।

---

மஹாபுருஷனெனப் பெயருள்ளவரும் குணங்கள்மூலம் ப்ராணிகளுக்குள் மறைந்திருப்பவருமான ப்ரம்ஹத்தை எல்லாப் பூதங்களுக்கும் ஆத்மாவென்ற எண்ணத்துடன் ஆராதிக்க விருப்பமுள்ளவராக இருக்கிறார். (29) ஹே விபோ! ஹே தர்மக்ஞ! ப்ரம்ஹருஷிஸ்ரேஷ்டரான அந்த இந்த ப்ராம்ஹணன் ராஜருஷிஸ்ரேஷ்டரான உம்மிடமிருந்து பிதாவினிடமிருந்து புத்திரன்போல எவ்விதம் வதத்தையடைய அர்ஹராவர். (ஒருபொழுதும் அருஹராகவாக மாட்டார்.) (30) ஸாதுவும் பாபமற்றவரும் ஸ்ரோத்ரியருமான அந்த ப்ரம்ஹவாதியினுடைய வதத்தைக் கோவதத்தைப் போல ஸாதுக்களுக்குப் பிடித்தவரான நீர் எவ்விதம் ஸாதுவாக எண்ணினீர். (31) எவரைவிட்டு க்ஷணகாலங்கூட நான் ஜீவிக்கப்போவதில்லையோ அந்த இவர் ஆஹாரமாகச் செய்யப்படுவாராயின் பிணம்போன்ற என்னை முதலில் பக்ஷித்துவிடும் என்றாள். (32) என உருக்கமான வார்த்தையைப் பேசுகின்ற அவள் நாதனற்றவள்போல அழுதுகொண்டிருக்கும்பொழுது சாபமோஹிதனான ஸௌதாஸன் புலியானது பசுவைப்போல அவரைத் தின்றுவிட்டான். (33) பதிவ்ரதையான ப்ராம்ஹணியானவள் கர்ப்பாதான கர்த்தாவான பதி புருஷாதனான ராக்ஷஸனால் பக்ஷிக்கபட்டதைக் கண்டு தன்னைக் குறித்துச் சோகிக்கின்றவளாய் கோபங்கொண்டு "ஹே பாப! எக்காரணம்பற்றி காமார்த்தையான என்னுடைய பதியானவர் உன்னால் பக்ஷிக்கப்பட்டாரோ அக்காரணம்பற்றி ஹே அறிவிழந்த மூட! உனக்கும் கர்ப்பாதானத்தினால் மரண

तवापि मृत्युराधानादकृतप्रज्ञ दर्शितः ॥ ३५ ॥ एवं मित्रसहं शप्त्वा पति-
लोकपरायणा । तदस्थीनि समिद्धेऽग्नौ प्रास्य भर्तुर्गतिं गता ॥ ३६ ॥ वि-
शापो द्वादशाब्दान्ते मैथुनाय समुद्यतः । विज्ञाय ब्राह्मणीशापं महिष्या स
निवारितः ॥ ३७ ॥

तत ऊर्ध्वं स तत्याज स्त्रीसुखं कर्मणाऽप्रजः । वसिष्ठस्तदनुज्ञातो
मदयन्त्यां प्रजामधात् ॥ ३८ ॥ सा वै सप्तसमा गर्भमबिभ्रन्न व्यजायत ।
जघ्नेऽश्मनोदरं तस्याः सोऽश्मकस्तेन कथ्यते ॥ ३९ ॥ अश्मकान्मूलको
जज्ञे यः स्त्रीभिः परिरक्षितः । नारीकवच इत्युक्तो निःक्षत्रे मूलकोऽभ-
वत् ॥ ४० ॥ ततो दशरथस्तस्मात्पुत्र ऐडविडस्ततः । राजा विश्वसहो

---

மானது என்றால் காண்பிக்கப்பட்டிருக்கிறது" என அரசனைச் சபித்தாள். (34–35) இவ்விதம் மித்ரஸஹனைச் சபித்துவிட்டு பதியின் உலகையடைய விருப்பமுள்ளவளாய் அவருடைய எலும்புகளை நன்கு வளர்க்கப்பட்ட நெருப்பிலிட்டுத் தானும் அதில் விழுந்து பர்த்தாவின் கதியையடைந்தாள். (36) பன்னிரண்டு ஆண்டுகள் முடிந்தபின்னர் சாபம் நீங்கி மைதுனத்துக்காக முயற்சித்த அந்த ஸௌதாஸன் ப்ராம்ஹணியின் சாபத்தை யறிந்தவளான மஹிஷியினால் தடுக்கப்பட்டான். (37)

அதற்குப் பிறகு அவன் ஸ்திரீஸுகத்தை விட்டுத் தனது கர்மமூலம் ப்ரஜையற்றவனாகவானான். அவனால் அனுமதிக்கப்பட்ட வஸிஷ்டர் மதயந்தியினிடத்தில் ப்ரஜையை யுண்டுபண்ணினார். (38) அந்த மதயந்தியானவள் ஏழு வருஷங்கள்முடிய கர்ப்பத்தைத் தரித்தாள். அக்கர்ப்பம் வெளிவரவில்லை. ஆகவே வஸிஷ்டரே அவளுடைய கர்ப்பத்தைக் குழவியினாலிடித்தார். அக்குழந்தை அதனால் அஶ்மகன் என்று சொல்லப்படுகிறான். (39) அஶ்மகனிடமிருந்து மூலகன் பிறந்தான். எவன் ஸ்திரீகளினால் மறைக்கப்பட்டு பரசுராமரிடமிருந்து ரக்ஷிக்கப்பட்டானோ அவன் அக்காரணம்பற்றி நாரீகவசன் என்றும், க்ஷத்திரியர்களே உலகில்லாத பொழுது க்ஷத்ரவம்சத்துக்கு மூலமாகவானதுபற்றி மூலகன் என்றும் சொல்லப்பட்டான். (40) அவனிடமிருந்து தசரதனும், அவனிடமிருந்து ஐடவிடன் என்ற புத்திரனும், அவனிடமிருந்து விஶ்

यस्य खट्वाङ्गश्चक्रवर्त्यभूत् ॥ ४१ ॥ यो देवैरर्थितो दैत्यानवधीद्युधि दुर्जयः। मुहूर्तमायुर्ज्ञात्वैत्य स्वपुरं सन्दधे मनः ॥ ४२ ॥ न मे ब्रह्मकुलात्प्राणाः कुलदैवान्न चात्मजाः। न श्रियो न मही राज्यं न दाराश्चातिवल्लभाः॥४३॥ न बाल्येपि मतिर्मह्यमधर्मे रमते क्वचित्। नापश्यमुत्तमश्लोकादन्यत्किञ्चन वस्त्वहम् ॥ ४४ ॥ देवैः कामवरो दत्तो मह्यं त्रिभुवनेश्वरैः। न वृणे तमहं कामं भूतभावनभावनः॥४५॥ ये विक्षिप्तेन्द्रियधियो देवास्ते स्वहृदि स्थितम्। न विन्दन्ति प्रियं शश्वदात्मानं किमुतापरे ॥४६॥ अथेशमायार-चितेषु सङ्गं गुणेषु गन्धर्वपुरोपमेषु। रूढं प्रकृत्यात्मनि विश्वकर्तुर्भावेन

---

வஸஹன் என்ற அரசனும் உண்டாயினர். இந்த விஶ்வஸஹனுக்குச் சக்கிரவர்த்தியான கட்வாங்கன் பிறந்தான். (41) யுத்தத்தில் எவராலும் ஜயிக்கவியலாத இவன் தேவர்களினல் ப்ரார்த்திக்கப்பட்டு அசுரர்களை வதம் செய்தான். ஸந்துஷ்டர்களான தேவர்களிடமிருந்து ஒருமுஹூர்த்தகாலமே ஆயுளிருப்பதாக வறிந்து கொண்டு தனது பட்டினத்துக்குவந்து மனத்தைப் பரமேஶ்வரனிடம் நிறுத்தினன். (42) எனக்குக் குலதைவமான ப்ரம்ஹகுலத்தைக்காட்டிலும் ப்ராணன்களும் அதிகப்ரியமானதன்று, புத்திரர்களுமன்று, தனங்களுமன்று, பூமியுமன்று, ராஜ்யமுமன்று, பத்னியுமன்று. (43) பால்யத்திலுங்கூட என்னுடைய புத்தியானது ஒருஸமயத்திலும் அதர்மத்தில் பற்றுக்கொண்டதில்லை. நான் உத்தமஶ்லோகனைக் காட்டிலும் வேறான வஸ்து வொன்றையும் கண்டேனில்லை. (44) மூவ்வுலகங்களுக்குமீஶ்வரர்களான தேவர்களுளில் எனக்கு வேண்டிய வரனது கொடுக்கப்பட்டது. பூத பாவனனை ஹரியினிடத்தில் பாவனையை யுடையவனான அந்த நான் அந்தக் காமத்தை வரிக்கவில்லை. (45) விஷயத்திலீடுபட்ட இந்திரியம் புத்தி இவற்றை யுடையவர்களாக இருக்கும் தேவர்கள் எவர்களோ அவர்கள்கூடத் தமது ஹிருதயத்திலிருப்பவரும் நிலைத்தவரும் ப்ரியருமான ஆத்மாவை அறியாதபொழுது மற்றவர் அறியார் என்பதில் என்ன தடை. (46) ஆகவே ஈசமாயையினல் செய்யப்பட்டனவும், கந்தர்வபுரத்துக்கொப்பானவுமான குணங்களில் ஸ்வபாவமாக மனத்தில் நிலைத்த ஸங்கத்தை விஶ்வ

हित्वा तमहं प्रपद्ये ॥ ४७ ॥ इति व्यवसितो बुद्ध्या नारायणगृहीतया ।
हित्वान्यभावमज्ञानं ततः स्वं भावमाश्रितः ॥ ४८ ॥ यत्तद्ब्रह्म परं सूक्ष्म-
मशून्यं शून्यकल्पितम् । भगवान्वासुदेवेति यं गृणन्ति हि सात्वताः ॥४९॥

इति श्रीमद्भागवते महापुराणे नवमस्कन्धे अंशुमन्तमारभ्य खट्वाङ्गावधि
सूर्यवंशानुवर्णनं नाम नवमोऽध्यायः ॥ ९ ॥



---

கர்த்தாவான ஹரியினுடைய பாவனையால் போக்கிவிட்டு அவரையே நான் சரணமாக அடைகிறேன். (47) என நிஸ்சயித்துக்கொண்டு நாராயணனால் கிரஹிக்கப்பட்ட புத்தியினால் தேஹாத்யபிமானரூபமான அக்ஞானத்தைப் போக்கிக்கொண்டு பிறகு எதை ஸாத்வதர்கள் பகவான் என்றும் வாஸுதேவனென்றும் சொல்லுகின்றனரோ, எது வாகாதிகளுக்கு விஷயமாகவாகாததுபற்றிச் சூன்யம் போலக் கல்பிக்கப்பட்டதோ, ஆயினும் சூன்யமாக இல்லாததும் சூக்ஷ்மமுமான அந்தப் பரப்ரம்ஹஸ்வரூபத்தை யடைந்தார். (48–49) (எ–று)

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண நவமஸ்கந்தத்தில்
அம்சுமான்முதல் கட்வாங்கன் முடியவுள்ள சூரியவம்ச
வர்ணனமென்ற ஒன்பதாவது அத்தியாயம் முற்றிற்று.



## பத்தாவது அத்தியாயம்.

(அ–கை) दशमे प्राह खट्वाङ्गवंशे श्रीरामसंभवम् ।
तच्चरित्रं च लङ्केशं हत्वाऽयोध्यागमावधि ॥ १ ॥

(க–ரை) இந்தப் பத்தாவது அத்தியாயத்தில் கட்வாங்கவம்சத்தில் ஸ்ரீராமாவதாரத்தையும், லங்கேசனை வதஞ்செய்துவிட்டு அயோதிக்குத் திரும்பிவந்தது வரையுள்ள அந்த ராமனின் சரித்திரத்தையும் சொல்லுகிறார். (1) (எ–று)

ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—ஹே மஹாராஜ! கட்வாங்கனிடமிருந்து தீர்க்கபாகுவும், அவனிடமிருந்து பெரிய கீர்த்தியையுடைய

## अथ दशमोऽध्यायः ॥

श्रीशुक उवाच—खट्वाङ्गाद्दीर्घबाहुश्च रघुस्तस्मात्पृथुश्रवाः । अज-
स्ततो महाराज तस्माद्दशरथोऽभवत् ॥ १ ॥ तस्यापि भगवानेष साक्षा-
द्ब्रह्ममयो हरिः । अंशांशेन चतुर्धाऽगात्पुत्रत्वं प्रार्थितः सुरैः ॥ २ ॥ रा-
मलक्ष्मणभरतशत्रुघ्ना इति संज्ञया । तस्यानुचरितं राजन्नृषिभिस्तत्त्वद-
र्शिभिः । श्रुतं हि वर्णितं भूरि त्वया सीतापतेर्मुहुः ॥ ३ ॥ गुर्वर्थे त्यक्त-
राज्यो व्यचरदनुवनं पद्मपद्भ्यां प्रियायाः पाणिस्पर्शाक्षमाभ्यां मृजितपथ-
रुजो यो हरीन्द्रानुजाभ्याम् । वैरूप्याच्छूर्पणख्याः प्रियविरहरुषारोपित-

---

ரகுவும், அவனிடமிருந்து அஜனும், அவனிடமிருந்து தசரதனும் உண்டாயினர். (1) அந்தத் தசரதனுக்கும், ஸாக்ஷாத் ப்ரம்ஹமயனும் பகவானுமான இந்த ஹரியானவர் தேவர்களினுல் ப்ரார்த்திக்கப்பட்டவராய்க்கொண்டு அம்சாம்சத்தினுல் ராமன் லக்ஷ்மணன் பரதன் சத்துருக்னன் என்ற பெயருடன் நான்கு விதமாகப் புத்திரத்தன்மையை யடைந்தார். ஹே ராஜன்! தத்துவதர்சிகளான மஹருஷிகளினுல் வெகுவாக வர்ணிக்கப்பட்ட ஸீதாபதியான அந்தப் பகவானுடைய சரித்திரமானது உன்னுல் பலதடவை கேட்கப்பட்டிருக்கிறது. (2–3) எவர் பிதாவினுடைய ஸத்தியத்தைக் காக்கவேண்டி விடப்பட்ட ராஜ்யத்தை யுடையவராய்க் கொண்டு ப்ரியையான ஸீதையினுடைய பாணிகளின் ஸ்பர்சத்தைக் கூடப் பொருக்காதவைகளான பத்மம்போன்ற பாதங்களினுல் ஒவ்வொரு காடுதோறும் அலைந்து திரிந்தாரோ, கபீந்திரனுன ஸுக்ரீவன் அனுஜனுன லக்ஷ்மணன் இவர்களினுல் போக்கப்பட்ட வழியில் நேர்ந்த ஸ்ரமத்தையுடையவரும், சூர்ப்பணகையின் காது மூக்கு இவற்றை அறுத்தமைகாரணமாய் அவளால் ஆசை மூட்டப்பட்ட ராவணனுல் செய்யப்பட்ட அபஹாரத்திலிருந்து ஏற்பட்ட ப்ரியமான களத்திரவிரஹமூலமுண்டான கோபத்தினுல் மேல்தூக்கப்பட்ட புருவங்களின் நெரிச்சலினுலேயே பயந்த ஸமுத்திரத்தை யுடையவரும், அந்த ஸமுத்திரத்தின் விக்ஞாபனத்தை யொட்டி ஸமுத்திரத்தில் கட்டப்பட்ட அணையை யுடையவரும், துஷ்டர்களான ராவணுதிகளாகிற வனத்துக்கு அக்னியாக இருப்பவரு

भ्रूविजृम्भत्रस्ताब्धिर्बद्धसेतुः खलदवदहनः कोसल्द्रोऽवतान्नः॥ ४ ॥ विश्वामित्राध्वरे येन मारीचाद्या निशाचराः। पश्यतो लक्ष्मणस्यैव हता नैर्ऋतपुङ्गवाः ॥ ५ ॥ यो लोकवीरसमितौ धनुरैशमुग्रं सीतास्वयंवरगृहे त्रिशतोपनीतम्। आदाय बालगजलील इवेक्षुयष्टिं सज्जीकृतं नृप विकृष्य बभञ्ज मध्ये ॥ ६ ॥ जित्वानुरूपगुणशीलवयोऽङ्गरूपां सीताभिधां श्रियमुरस्यभिलब्धमानाम्। मार्गे व्रजन्भृगुपतेर्व्यनयत्प्ररूढं दर्पं महीमकृत यस्त्रिरराजबीजाम् ॥ ७ ॥ यः सत्यपाशपरिवीतपितुर्निदेशं स्त्रैणस्य चापि शिरसा जगृहे सभार्यः। राज्यं श्रियं प्रणयिनः सुहृदो निवासं त्यक्त्वा ययौ वनमसूनिव मुक्तसङ्गः ॥ ८ ॥

---

மான அந்தக் கோஸலேந்திரன் எங்களை ரக்ஷிக்கட்டும். (4) எவரால் விஸ்வாமித்திரருடைய யாகத்தில் லக்ஷ்மணன் பார்த்துக் கொண்டிருக்கும்பொழுதே (அவருடைய உதவியை நாடாமலே) ராக்ஷஸஸ்ரேஷ்டர்களும் மாரீசனை ஆதியாகக் கொண்டவர்களுமான ராக்ஷஸர்கள் கொல்லப்பட்டனரோ, (5) ஹே ந்ருப! ஸீதையின் ஸ்வயம்வரமண்டபத்தில் எவர் உலகிலுள்ள வீரர்களின் கூட்டத்தில், உக்கிரமானதும்=கனமுள்ளதும், முன்னூறுபேர்களினால் அருகில் கொண்டுவரப்பட்டதும், பரமேஸ்வரனுடையதுமான வில்லைக் கருப்பங்கழியைப் போலவே விளையாட்டாக எடுத்து நாண் பூட்டப்பட்டதாகச் செய்து இழுத்து இளம்யானையினுடையதுபோன்ற லீலையையுடையவராய் நடுவில் ஒடித்தாரோ, (6) எவர், தனக்கு ஒத்ததான குணம் சீலம் யௌவனம் அங்கம் ரூபம் இவற்றை யுடையவளும், ஸீதை என்ற பெயரை யுடையவளும், முன்னர் மார்பில் வைத்துமரியாதை செய்யப்பட்டவளுமான லக்ஷ்மியை ஜயித்து அயோத்திக்குப் போகும் வழியில் போகும்பொழுது, பூமியை க்ஷத்திரியபீஜமற்றதாக எவர் இருபத்தோருதடவை செய்தாரோ அந்தப் பரசுராமருடைய வேரூன்றின கொழுப்பைப் போக்கினரோ, (7) எவர், ஸ்திரீயுக்கு வசப்பட்டவராயினுங்கூட ஸத்யமாகிற கயிற்றினால் கட்டப்பட்டவரான பிதாவினுடைய கட்டளையைத் தலையினால் வஹித்து ராஜ்யத்தையும், ஸம்பத்தையும், விஸ்வாஸமுள்ள ஸுஹிருத்துக்களையும், இருப்பிடமான அயோத்

रक्षःस्वसुर्व्यकृत रूपमशुद्धबुद्धेस्तस्याः खरत्रिशिरदूषणमुख्यबन्धून्। जघ्ने चतुर्दशसहस्रमपारणीयकोदण्डपाणिरटमान उवास कृच्छ्रम् ॥९॥ सीताकथाश्रवणदीपितहृच्छयेन सृष्टं विलोक्य नृपते दशकन्धरेण। जघ्नेऽद्भुतैणवपुषाऽऽश्रमतोऽपकृष्टो मारीचमाशु विशिखेन यथा कमुग्रः ॥१०॥ रक्षोऽधमेन वृकवद्विपिनेऽसमक्षं वैदेहराजदुहितर्यपयापितायाम्। भ्रात्रा वने कृपणवत्प्रियया वियुक्तः स्त्रीसङ्गिनां गतिमिति प्रथयंश्चचार ॥११॥

---

தியாபட்டினத்தையும் ஸங்கத்தையொழித்த யோகியானவன் ப்ராணன்களைப் போலவிட்டுப் பாரியையுடன் கூடக் காட்டுக்குச் சென்ருரோ அந்த ராமன் நம்மைக் காப்பாராக. (8)

எவர், அசுத்தமான=காமத்திஞல் கலங்கின, புத்தியையுடையவளும் ராவணன் தங்கையுமான சூர்ப்பணகையின் ரூபத்தைவிகாரப்படுத்திஞரோ, அவள் நிமித்தமாகச் சண்டைக்கு வந்த கரன் த்ரிசிரஸ் தூஷணன் முதலியோரைப் பந்துக்களாகவுடைய பதிஞன்காயிரம் ராக்ஷஸர்களை எவராலும் பொருக்கவியலாத கோதண்டத்தைக் கையில் தரித்துக்கொண்டு கொன்ருரோ, எவர் வனத்தில் ஸஞ்சரித்துக்கொண்டு கஷ்டமாக இருக்கும்படி வஸித்துவந்தாரோ, (9) ஹே ந்ருபதே! ஸீதையைப்பற்றின கதையின் ச்ரவணத்திஞல் விருத்தியடைந்த மன்மதனை யுடையவஞன தசகந்தர (ராவண) ஞல் (தன்னை யாச்ரமத்திலிருந்து அப்புறப்படுத்தவேண்டி) அனுப்பப்பட்டவனும் ஆச்சரியம் வாய்ந்த சரீரத்துடன் காணப்பட்டவனுமான மாரீசனைக் கண்ணுற்று அதிகாரணமாய் ஆச்ரமத்திலிருந்து அவஞலிழுக்கப்பட்டவராய்க்கொண்டு தக்ஷப்ரஜாபதியை ஸ்ரீருத்திரன்போலப் பாணத்திஞல் சீக்கிரமாய் அவனைக்கொன்ருரோ, (10) எவர், ராக்ஷஸாதமஞன ராவணஞல் செந்ஞயிஞல்போலக் காட்டில் தானில்லாத ஸமயத்தில் விதேஹராஜனின் பெண்ணுன ஸீதையானவள் அபஹரிக்கப்பட்டபொழுது ப்ரியையான ஸீதையின் வியோகத்தை யடைந்தவராய்க்கொண்டு ப்ராதாவான லக்ஷ்மணனுடன்கூட "ஸ்திரீயினிடம் பற்றுக்கொண்டவர்களுக்கு முடிவில் துக்கத்தைத் தரும் கதிதான் வரும்" என்பதைத் தனது அனுஷ்டானமூலம் ப்ரகடனப்படுத்திக் கொண்டு கிருப

दग्ध्वात्मकृत्यहतकृत्यमहन्कबन्धं सख्यं विधाय कपिभिर्दयितागतिं तैः ।
बद्ध्वाथ वालिनि हते प्लवगेन्द्रसैन्यैर्वेलामगात्समनुजोऽजभवार्चिताङ्घ्रिः
॥ १२ ॥ यद्रोषविभ्रमविवृत्तकटाक्षपातसंभ्रान्तनक्रमकरो भयगीर्णघोषः ।
सिन्धुः शिरस्यर्हणं परिगृह्य रूपी पादारविन्दमुपगम्य बभाष एतत् ॥१३॥
न त्वां वयं जडधियो नु विदाम भूमन्कूटस्थमादिपुरुषं जगतामधीशम् ।

---

ணன்போலக் காட்டில் ஸஞ்சரித்தாரோ, (11) மனிதனுக அவதரித்த ப்ரஸித்தரான எவர், தனக்குவேண்டிச் செய்த ராவணயுத்தருபமான காரியத்தினுல் அழிக்கப்பட்ட சாஸ்திரீயமான தஹனுதிகாரியங்களை யுடையவரான ஜடாயுவைப் புத்திரன்போலச் சாஸ்திரத்திற் சொல்லிய முறைப்படி பொசுக்கிவிட்டுத் தன்னைப் பிடிப்பதற்கு வேண்டி நீட்டப்பட்ட கைகளையுடையவனுன கபந்தனைக் கொன்று பிறகு குரங்குகளுடன் ஸக்யத்தைச் செய்துகொண்டு அவர்கள்மூலம் தயிதையான ஸீதையிருக்குமிடத்தை யறிந்துகொண்டு பிறகு வாலியானவன் கொல்லப்பட்டதும் வானரஸ்ரேஷ்டர்களின் ஸைன்யங்களுடன்கூட ப்ரம்ஹதேவன் சிவன் இவர்களால் பூஜிக்கப்பட்ட சரணங்களை யுடையவராய் ஸமுத்திரக்கறையை யடைந்தாரோ அந்த ராமன் நம்மைக் காப்பாராக. (12) (ஸமுத்திரக்கறையில் மூன்றுநாள் முழுதுமுபவாஸமிருந்து எதிர்பார்க்கப்பட்டுங்கூட ஸமுத்திரராஜன் எப்பொழுது தனதருகில் வரவில்லையோ அப்பொழுது) எவருடைய க்ரோதலீலையினுல் பரவின கடாக்ஷத்தின் பாதத்தினுல் (விழுதலினுல்)இங்குமங்குமோடுகின்ற முதலைகளையும் மகரமென்ற மீன்களையுமுடையவனுன ஸமுத்திரராஜன் பயத்தினுல் அடக்கப்பட்டுப்போன சப்தத்தை யுடையவனுய்த் தனது சொந்தமான ரூபத்தை எடுத்துக்கொண்டு பூஜைக்குவேண்டிய அர்க்யம் பாத்யம் முதலியவற்றைத் தலையில் சுமந்துகொண்டு சரணுரவிந்தத்தை யடைந்து பின்வரும் வார்த்தையைச் சொன்னுனோ, (13) ஹே பூமன்! ஜடபுத்திகளான நாங்கள் இதுவறை உம்மை கூடஸ்தனும், ஜகத்துக்களுக்கு நியந்தாவுமான ஆதிபுருஷனுக அறிந்தோமில்லை. இது நிஸ்சிதம். எந்த உமக்கு வசப்பட்ட ஸத்துவகுணத்திலிருந்து தேவகணங்களும், ரஜோகுணத்திலிருந்து

यत्सत्त्वत: सुरगणा रजस: प्रजेशा मन्योश्च भूतपतय: स भवान्गुणेश: ॥ १४ ॥ कामं प्रयाहि जहि विश्रवसोऽवमेहं त्रैलोक्यरावणमवाप्नुहि वीर पत्नीम् । बध्नीहि सेतुमिह ते यशसो वितत्यै गायन्ति दिग्विजयिनो यमुपेत्य भूपा: ॥ १५ ॥

बद्ध्वोदधौ रघुपतिर्विविधाद्रिकूटै: सेतुं कपीन्द्रकरकम्पितभूरुहाङ्गै: । सुग्रीवनीलहनुमत्प्रमुखैरनीकैर्लङ्कां विभीषणदृशाविशदग्रदग्धाम् ॥ १६ ॥ सा वानरेन्द्रबलरुद्धविहारकोष्ठश्रीद्वारगोपुरसदोवलभीविटङ्का । निर्भज्य-

---

ப்ரஜாபதிகளும், தமோகுணத்திலிருந்து பூதபதிகளும் உண்டாயின ரோ குணங்களுக்கு ஈசனான அவர் நீரே. (14) உமதிஷ்டப்படி ஜலத்தில் நடந்தே வேண்டுமானாலும் போம். மூவ்வுலகங்களையும் அழும்படி செய்கின்றவனும் விஸ்ரவஸ்ஸினுடைய புரீஷத்துக் கொப்பானவனுமான ராவணனை ஜயித்துவிடும். ஹே வீர! பத்னியையும் அடையும். (உமக்கு ஜலமானது தடைசெய்யாதுதானாயினும்) திக்விஜயஞ்செய்கின்றவர்களான அரசர்கள் எந்த ஸேதுவையடைந்து பிறரால் செய்யவியலாத உமது கர்மாவை நேரில் கண்டு உமது யஶஸ்ஸைக் கானஞ்செய்வரோ அத்தகைய ஸேதுவை உம்முடைய யஶஸ்ஸை விஸ்தாரப்படுத்தவேண்டி இந்த ஜலத்தில் கட்டும் என்றாரோ அந்த ராமன் நம்மைக் காப்பாராக. (15)

பெரிய குரங்குகளுடைய கைகளினால் அசைக்கப்பட்ட மரங்களின் கிளைகளையுடைய பலதறப்பட் மலைகளின் சிகரங்களால் ரகுபதியான ராமன் ஸமுத்திரத்தில் அணையைக் கட்டி, விபீஷணருடைய புத்தியுடனும், ஸுக்ரீவன் நீலன் ஹனுமான் இவர்களை முதன்மையாகக் கொண்ட ஸைன்யங்களுடனும்கூட ஸீதையைத் தேடும்பொழுது ஹனுமானால் முன்னர் பொசுக்கப்பட்டதான லங்கையில் ப்ரவேசித்தார். (16) பிறகு அந்த லங்கையானது, வானரஶ்ரேஷ்டர்களின் சேனைகளினால் சூழ்ந்து கொள்ளப்பட்ட க்ரீடாஸ்தானத்தையும், தான்யம் கொட்டிவைக்குமிடத்தையும், பொக்கிஷத்தையும், வீட்டின்வாயிற்படியையும், கோபுரத்தையும், ஸபையையும், கொடுங்கைகளையும், விடங்கத்தையும்= புறா முதலியன தங்குவதற்காகக் கட்டப்பட்ட இடத்தையும், உடை

मानधिषणध्वजहेमकुम्भशृङ्गाटका गजकुलैर्ह्रदिनीव घूर्णा ॥१७॥ रक्षःपति-स्तदवलोक्य निकुम्भकुम्भधूम्राक्षदुर्मुखसुरान्तनरान्तकादीन्। पुत्रं प्रहस्त-मतिकायविकम्पनादीन्सर्वानुगान्समहिनोदथ कुम्भकर्णम् ॥१८॥ तां यातु-धानपृतनामसिशूलचापप्रासर्ष्टिशक्तिशरतोमरखड्गदुर्गाम्। सुग्रीवलक्ष्मण-मरुत्सुतगन्धमादनीलाङ्गदर्क्षपनसादिभिरन्वितोऽगात् ॥ १९ ॥ तेऽनीक-पा रघुपतेरभिपत्य सर्वे द्वन्द्वं वरूथमिभपत्तिरथाश्वयोधैः। जघ्नुर्द्रुमैर्गिरि-गदेषुभिरङ्गदाद्याः सीताभिमर्शहतमङ्गलरावणेशान् ॥ २० ॥ रक्षःपतिः स्वबलनष्टिमवेक्ष्य रुष्ट आरुह्य यानकमथाभिससार रामम्। स्वःस्यन्दने

---

யதாகவும், அழிக்கப்படுகின்ற திண்ணை முதலியவற்றையும், கொடி மரத்தையும், ஸ்வர்ணகலசத்தையும், நாற்சந்துகளையும் உடைய தாகவும் ஆகி யானைக்கூட்டங்களினால் அழிக்கப்படும் மடுவானது போலக் கலக்கத்தையடைந்தது. (17) ராவணன் அதைக் கண்டு நிகும்பன் கும்பன் தூம்ராக்ஷன் தூர்முகன் ஸுராந்தகன் நராந்தகன் முதலியோரையும், புத்திரனை இந்திரஜித்தையும், ப்ரஹஸ்தனையும், அதிகாயன் விகம்பனன் முதலியோரையும், மற்றுமுள்ள வீரர்களையும், பிறகு கும்பகர்ணனையும் அனுப்பினான். (18) சிறிய கத்தி சூலம் சாபம் ப்ராஸமென்ற ஆயுதம் ருஷ்டி என்ற ஆயுதம் சக்தி பாணம் தோமரம் என்ற ஆயுதம் பெரிய கத்தி இவற்றால்ப்ரவேசிக்கவியலாத அந்தராக்ஷஸஸேனையில், ஸுக்ரீவன் லக்ஷ்மணன் வாயுபுத்திரனை ஹனுமான் கந்தமாதனன் நீலன் அங்கதன் ஜாம்பவான் பனஸன் முதலியோர்களுடன்கூடினவராய் ப்ரவேசித்தார். (19) அங்கதனை யாதியாகக்கொண்ட ரகுபதியினுடைய அந்த ஸேனாதிபதிகள் யாவரும் யானை காலாள் தேர் குதிரை போர்வீரர்கள் இவர்களுடன்கூடின ராவணனுடைய யாதொரு ஸேனையுண்டோ அதில் ஒருவரோடொருவர் கலக்கும்படி எதிர்த்து நின்று ஸீதையைத்தொட்டதினால் நாசமடைந்த மங்களத்தையுடைய ராவணனைத் தலைவனாகக் கொண்ட அவர்களை மரங்கள் மலைகள் கதைகள் பாணங்கள் இவற்றினால் அடித்தனர். (20) ராக்ஷஸபதியான ராவணன் தனது ஸைன்னியத்தின் நாசத்தைக் கண்டு கோபங்கொண்டவனாய்த் தேரிலேறிக்கொண்டு ராமனை எதிர்த்தோடி வந்தான்.

द्युमति मातलिनोपनीते विभ्राजमानमहनन्निशितैः क्षुरप्रैः ॥ २१ ॥ रामस्तमाह पुरुषादपुरीष यन्नः कान्ताऽसमक्षमसताऽपहृता श्ववत्ते। त्यक्तत्रपस्य फलमद्य जुगुप्सितस्य यच्छामि काल इव कर्तुरलङ्घ्यवीर्यः ॥ २२ ॥

एवं क्षिपन्धनुषि सन्धितमुत्ससर्ज बाणं स वज्रमिव तद्धृदयं बिभेद। सोऽसृग्वमन्दशमुखैर्न्यपतद्विमानाद्धाहेति जल्पति जने सुकृतीव रिक्तः ॥ २३ ॥ ततो निष्क्रम्य लङ्काया यातुधान्यः सहस्रशः। मन्दोदर्या समं तस्मिन्प्ररुदत्य उपाद्रवन् ॥ २४ ॥ स्वान्स्वान्बन्धून्परिष्वज्य लक्ष्मणेषुभिरर्दितान्। रुरुदुः सुस्वरं दीना घ्नन्त्य आत्मानमात्मना ॥२५॥

---

பிறகு மாதலியினால் கொண்டுவரப்பட்டதும் காந்தியுள்ளதுமான இந்திரவிமானத்திலிருக்கும் அந்தராமனை க்ஷுரப்ரம்என்ற கூர்மையான பாணங்களினால் அடித்தான். (21) ராமன் அந்த ராவணனைப்பார்த்து ஹே புருஷாதபுரீஷ!=ராக்ஷஸர்களின் மலத்துக்கொப்பானவனே!, நாயானது யஜமானனில்லாத ஸமயம் பார்த்து வீட்டில் நுழைந்து எதையோ எடுத்துச் செல்லுவதுபோல நாமில்லாத பொழுது அஸத்தான உன்னால் எமது மனைவியானவள் எக்காரணம்பற்றி அபஹரிக்கப்பட்டாளோ அக்காரணம்பற்றி வெறுக்கத்தக்க காரியத்தைச் செய்தவனும், லஜ்ஜையற்றவனுமான உனக்குத் தாண்டமுடியாத வீர்யத்தையுடைய காலமானது போல அதன் பலனை இப்பொழுது கொடுக்கிறேன் என்றார். (22)

இவ்விதம் நிந்தித்துக்கொண்டு அந்த ராமன் வில்லில் பூட்டப்பட்ட பாணத்தை ப்ரயோகித்தார். அந்தப் பாணமானது அவனுடைய ஹிருதயத்தை வஜ்ராயுதம்போல் பிளந்தது. அந்த ராவணன் பத்து முகங்களினாலும் ரக்தத்தைக் கக்கிக்கொண்டு தேய்ந்த புண்ணியத்தையுடைய புண்ணியவான் விமானத்திலிருந்து விழுவது போல ஜனங்கள் ஹா! ஹா! எனச் சொல்லிக் கொண்டிருக்கும் ஸமயத்தில் பூமியில் விழுந்தான். (23) பிறகு ஆயிரக்கணக்கான ராக்ஷஸஸ்திரீகள் மந்தோதரியுடன்கூட லங்கையிலிருந்து வெளிக் கிளம்பி அழுதுகொண்டு அவ்விடம் ஓடிவந்தனர். (24) லக்ஷ்மணனுடைய பாணங்களினால் கொல்லப்பட்டவர்களான தத்தமது பந்துக்களைக் கட்டிக்கொண்டும் தாமாகவே தமது முகத்தில் அடித்

हा हताः स्म वयं नाथ लोकरावण रावण । कं यायाच्छरणं लङ्का त्वद्वि-
हीना परार्दिता ॥ २६ ॥ नैवं वेद महाभाग भवान्कामवशं गतः । तेजोनु-
भावः सीताया येन नीतो दशामिमाम् ॥२७॥ कृतैषा विधवा लङ्का वयं च
कुलनन्दन । देहः कृतोऽन्नं गृध्राणामात्मा नरकहेतवे ॥ २८ ॥ श्रीशुक
उवाच—स्वानां विभीषणश्चक्रे कोशलेन्द्रानुमोदितः । पितृमेधविधानेन
यदुक्तं सांपरायिकम् ॥ २९ ॥ ततो ददर्श भगवानशोकवनिकाश्रमे । क्षा-
मां स्वविरहव्याधिं शिंशपामूलमास्थिताम् ॥ ३० ॥ रामः प्रियतमां भा-
र्यां दीनां वीक्ष्यान्वकम्पत । आत्मसन्दर्शनाह्लादविकसन्मुखपङ्कजाम् ॥३१॥

---

துக்கொண்டும் தீனைகளாய் நல்ல குரலுடன்கூட அழுதனர். (25) ஹே நாத! லோகங்களை யழும்படிசெய்த ஹே ராவண! அந்தோ! நாங்கள் கெடுக்கப்பட்டுவிட்டோமே. உம்மால் விடப்பட்டதும் சத்துருக்களால் பீடிக்கப்பட்டதுமான லங்கையானது யாரைச் சரணமாக=ரக்ஷகனாக, அடையும். (26) ஹே மஹாபாக! எதனாலிந்தத் தசையை யடைவிக்கப்பட்டீரோ ஸீதையின் அந்தத் தேஜஸ்வின் மஹிமையை காமவசப்பட்டவரான நீர் இத்தகையதென அறிந்துகொண்டீரில்லை. (27) ஹே குலநந்தன! இந்த லங்கையானது நாதனற்றதாகச் செய்யப்பட்டது. நாங்களும் நாதனற்றவர்களாகச் செய்யப்பட்டோம். உமது தேஹம் கழுகுகளுக்கு அன்னமாக்கப்பட்டது. ஆத்மாவோ நரகத்துக்குத் தகுதியுடையதாகவாக்கப்பட்டது என்று புலம்பினர். (28) ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—விபீஷணன் கோஸலேந்திரனால் (ராமனால்) தூண்டப்பட்டவராய்க்கொண்டு பின்வரும் தேஹத்துக்கு உபயோகப்படக்கூடியதாக எந்தக் காரியமானது சாஸ்திரத்திற் சொல்லப் பட்டிருக்கிறதோ அதைப் பிதிருமேதவிதான(முறை)ப்படி தனது பந்துக்களுக்குச் செய்துமுடித்தார். (29) பிறகு பகவான் அசோகவனத்திலிருக்கின்ற ஆஶ்ரமத்தில் சிம்சபாவிருக்ஷத்தின் மூலத்திலிருப்பவளும் தனது விரஹமூலமேற்பட்ட வியாதியை யுடையவளும் அனதுபற்றியே இளைத்தவளுமான ஸீதையைக் கண்டார். (30) ராமன், தனது ஸந்தரிசனத்தினாலேற்பட்ட ஸந்தோஷத்தினால் மலர்ந்த முகாரவிந்தத்தை யுடையவளும் தீனையும் மிகப்ரி

आरोप्यारुरुहे यानं भ्रातृभ्यां हनुमद्युतः। विभीषणाय भगवान्दत्त्वा रक्षोगणेशताम् ॥ ३२ ॥ लङ्कामायुश्च कल्पान्तं ययौ चीर्णव्रतः पुरीम्। अवकीर्यमाणः कुसुमैर्लोकपालार्पितैः पथि ॥ ३३ ॥

उपगीयमानचरितः शतधृत्यादिभिर्मुदा। गोमूत्रयावकं श्रुत्वा भ्रातरं वल्कलाम्बरम् ॥ ३४ ॥ महाकारुणिकोऽतप्यज्जटिलं स्थण्डिलेशयम्। भरतः प्राप्तमाकर्ण्य पौरामात्यपुरोहितैः ॥ ३५ ॥ पादुके शिरसि न्यस्य रामं प्रत्युद्यतोऽग्रजम्। नन्दिग्रामात्स्वशिबिराद्गीतवादित्रनिःस्वनैः ॥ ३६ ॥

---

யையுமான பார்யையைக் கண்ணுற்றுக் கருணைகொண்டார். (31) பகவானான ராமன் விபீஷணனுக்கு ரக்ஷோகணங்களுக்கு அதிபதியாக இருக்கும் தன்மையையையும், லங்கையையும், கல்பம் முடியும் வரையுள்ள ஆயுளையும் கொடுத்துவிட்டு ஸீதையை வாஹனத்திலேற்றுவித்துத் தானும் *ப்ராதாக்களான லக்ஷ்மணஸுக்ரீவர்களுடனும், ஹனுமானுடனும் வீபீஷணனுடனும்கூட விமானத்திலேறினர். தனது விரதத்தை முடித்தவரான ராமன் லோகபாலர்களினல் அர்ப்பணஞ்செய்யப்பட்ட புஷ்பங்களினல் வழியிலிறைக்கப்படுகின்றவராய் தனது பட்டினத்தை நோக்கிக் கிளம்பினர்.

ப்ரம்ஹதேவன் முதலியோரினல் ஸந்தோஷத்துடன் கொண்டாடப்படுகின்ற சரித்திரத்தையுடையவரான ராமன், ப்ராதாவான பரதன் கோமூத்திரத்தில் பக்குவமான யவான்னத்தைப் புஜிப்பவனுகவும், மரயுரியை வஸ்திரமாக அணிந்தவனுகவும், ஜடைதரித்தவனுகவும், தரையில் படுப்பவனுகவும் இருப்பதைக் கேட்டு மஹாகாருணிகரான பகவான் மிகவும் தாபப்பட்டார். பரதன் ராமன் வந்ததைக்கேட்டுப் பட்டினத்து ஜனங்கள் மந்திரிகள் புரோஹிதர்கள் இவர்களுடன்கூடப் பாதுகைகளைத் தலையில் வைத்துக்கொண்டு நந்திக்ராமமென்ற தனதிருப்பிடமிருந்து கீதம் வாத்யம் இவற்றின் சப்தங்களுடன் தமையனை ராமனை எதிர் சென்று வரவேற்றார். (34-36) பெரிய கோஷத்துடன்கூட அடிக்கடி வேதத்தைப்

---

* "त्वमस्माकं चतुर्णान्तु भ्राता सुग्रीव पञ्चमः=ஹே ஸுக்ரீவ! நீ ப்ராதாக்களான எங்கள் நால்வருக்கும் ஐந்தாவது ப்ராதாவாக விருக்கின்றனை" என ராமன் சொன்னதாக ஸ்ரீமத்ராமாயணம் யுத்தகாண்டத்தில் சொல்லப்பட்டிருப்பதையொட்டி இங்கு இவ்விதம் சொல்லப்பட்டது.

ब्रह्मघोषेण च मुहुः पठद्भिर्ब्रह्मवादिभिः । स्वर्णकक्षपताकाभिर्हैमैश्चित्रध्वजै रथैः ॥ ३७ ॥ सदश्वै रुक्मसन्नाहैर्भटैः पुरटवर्मभिः । श्रेणीभिर्वारमुख्याभिर्भृत्यैश्चैव पदानुगैः ॥ ३८ ॥ पारमेष्ठ्यान्युपादाय पण्यान्युच्चावचानि च । पादयोर्न्यपतत्प्रेम्णा प्रक्लिन्नहृदयेक्षणः ॥ ३९ ॥ पादुके न्यस्य पुरतः प्राञ्जलिर्बाष्पलोचनः । तमाश्लिष्य चिरं दोर्भ्यां स्नापयन्नेत्रजैर्जलैः ॥ ४० ॥ रामो लक्ष्मणसीताभ्यां विप्रेभ्यो येऽर्हसत्तमाः । तेभ्यः स्वयं नमश्चक्रे प्रजाभिश्च नमस्कृतः ॥ ४१ ॥ धुन्वन्त उत्तरासङ्गान्पतिं वीक्ष्य चिरागतम् । उत्तराः कोशला माल्यैः किरन्तो ननृतुर्मुदा ॥ ४२ ॥

---

படிக்கின்ற ப்ரம்ஹவாதிகளுடனும், தங்கமுலாம் பூசின ஓரப்ரதேசத்தையுடைய கொடிமரங்களுடனும், சித்திரமான கொடிகளுள்ளனவும், நல்ல குதிரைகள் கட்டப்பட்டனவும், பொன்மயமான ஸாமக்ரிகளுள்ளனவுமான தேர்களுடனும், பொன்மயமான கவசந்தரித்த போர்வீரர்களுடனும், ஸமான வகுப்பிற்சேர்ந்த சிற்பிக்கூட்டங்களுடனும், தாஸிகளுடனும், கால்களால் நடந்துவருகின்ற வேலைக்காரர்களுடனும் கூடினவனுய் ராஜார்ஹங்களான சத்திரசாமரங்களையும் பலதறப்பட்ட தின்பண்டங்களையும் எடுத்துக்கொண்டு ராமனை எதிர்கொண்டுவந்து ப்ரேமையினுல் நனைந்த ஹிருதயம் நேத்திரம் இவற்றையுடையவராய் பாதுகைகளை எதிரில் வைத்துக் கால்களில் விழுந்து கண்களில் ஜலத்தை வடியவிட்டுக்கொண்டு இருகைகளையும் கூப்பிக்கொண்டு நின்றுர். (37–40) ஸ்ரீராமன் அவரை வெகுகாலம் தோள்களினுல் ஆலிங்கனஞ்செய்துகொண்டு கண்களினின்றுமுண்டான ஜலங்களினுல் அவரை நனையச்செய்கின்றவராய் லக்ஷ்மணன் ஸீதை இவர்களுடன்கூட ப்ராம்ஹணர்களுக்கும், மற்றும் மிக்கப் பூஜ்யர்கள் எவர்களோ அவர்களுக்கும் தான் நமஸ்கரித்து தனது ப்ரஜைகளினுல் தானும் நமஸ்கரிக்கப்பட்டார். (41) உத்தரகோஸலதேசத்து ஜனங்கள் வெகு காலத்துக்குப் பிறகு வந்த பதியைக் கண்டு உத்தரீயத்தை வீசுகின்றவர்களாயும் பூமாலைகளை இரைத்துக்கொண்டும் ஸந்தோஷத்துடன் நர்த்தனமாடினர். (42)

ஹே ந்ருப! பரதன் பாதுகைகளை எடுத்தான். விபீஷணன் சிறந்த சாமரத்தையும், ஸுக்ரீவன் சிறந்த விசிறியையும், ஹனு

पादुके भरतोऽगृह्णाच्चामरव्यजनोत्तमे । विभीषणः स सुग्रीवः श्वेतच्छत्रं मरुत्सुतः ॥ ४३ ॥ धनुर्निषङ्गान्शत्रुघ्नः सीता तीर्थकमण्डलुम् । अबिभ्रदङ्गदः खड्गं हैमं चर्मर्क्षराण्नृप ॥ ४४ ॥ पुष्पकस्थोऽन्वितः स्त्रीभिः स्तूयमानश्च बन्दिभिः । विरेजे भगवान्राजन्ग्रहैश्चन्द्र इवोदितः ॥ ४५ ॥ भ्रातृभिर्नन्दितः सोऽपि सोत्सवां प्राविशत्पुरीम् । प्रविश्य राजभवनं गुरुपत्नीः स्वमातरम् ॥ ४६ ॥ गुरून्वयस्यावरजान्पूजितः प्रत्यपूजयत् । वैदेही लक्ष्मणश्चैव यथावत्समुपेयतुः ॥ ४७ ॥ पुत्रान्स्वमातरस्तास्तु प्राणांस्तन्व इवोत्थिताः । आरोप्याङ्केऽभिषिञ्चन्त्यो बाष्पौघैर्विजहुः शुचः ॥ ४८ ॥ जटा निर्मुच्य विधिवत्कुलवृद्धैः समं गुरुः । अभ्यषिञ्चद्यथैवेन्द्रं चतुःसिन्धुजलादिभिः ॥ ४९ ॥ एवं कृतशिरःस्नानः सुवासाः स्रग्व्य-

---

மான் வெண்குடையையும், சத்ருக்னன் வில் அம்பறாத்தூணி இவைகளையும், ஸீதை தீர்த்தபாத்திரத்தையும், அங்கதன் பொன்மயமான கத்தியையும், ஜாம்பவான் சர்மமென்ற ஆயுதத்தையும் எடுத்தனர். (43–44) ஹே ராஜன்! ஸ்திரீகளுடன்கூடப் புஷ்பகவிமானத்திலிருப்பவரும் வந்திகளினால் ஸ்துதிக்கப்படுகின்றவருமான பகவான் க்ரஹங்களுடன்கூட உதயமான சந்திரன்போல விளங்கினார். (45) ப்ராதாக்களினால் ஸந்தோஷப்படுத்தப்பட்டவரான அந்த ராமனும் உத்ஸவத்துடன்கூடின பட்டினத்தில் ப்ரவேசித்தார். ராமன் தசரதரின் வீட்டில் ப்ரவேசித்து பூஜிக்கப்பட்டவராய் குருவான பிதாவின் பத்னிகளான கைகேயி முதலியோர்களையும், தனது தாயாரான கௌஸல்யையையும், குருக்களையும், தோழர்களையும், சிறியோர்களையும் முறைப்படி பூஜித்தார். வைதேஹியும் லக்ஷ்மணனும் அவர்களை முறைப்படி பூஜித்தனர். (46–47) அந்தச் சொந்தத் தாய்மார்களோவெனில் ப்ராணன்களைக் கண்ட சரீரங்கள்போல எழுந்து அவர்களை மடியிலுட்காரவைத்துக் கண்ணீர் பெருக்குகளினால் நனைக்கின்றவர்களாய்க் கொண்டு தங்களுடைய சோகங்களைப் போக்கிக்கொண்டனர். (48) குருவான வஸிஷ்டர் குலத்திலுள்ள பெரியார்களுடன்கூட ஜடைகளை விடுவிக்கச்செய்து நான்கு ஸமுத்திரங்களிலுள்ளனவும் கங்காதி நதிகளிலுள்ளனவுமான ஜலங்களினால் இந்திரனைப்போல முறை

लङ्कृतः । स्वलङ्कृतैः सुवासोभिर्भ्रातृभिर्भार्यया बभौ ॥ ५० ॥ अग्रहीदासनं भ्रात्रा प्रणिपत्य प्रसादितः । प्रजाः स्वधर्मनिरता वर्णाश्रमगुणान्विताः । जुगोप पितृवद्रामो मेनिरे पितरं च तम् ॥५१॥ त्रेतायां वर्तमानायां कालः कृतसमोऽभवत् । रामे राजनि धर्मज्ञे सर्वभूतसुखावहे ॥ ५२ ॥ वनानि नद्यो गिरयो वर्षाणि द्वीपसिन्धवः । सर्वे कामादुघा आसन्प्रजानां भरतर्षभ ॥ ५३ ॥ नाधिव्याधिजराग्लानिदुःखशोकभयक्लमाः । मृत्युश्चानिच्छतां नासीद्रामे राजन्यधोक्षजे ॥ ५४ ॥ एकपत्नीव्रतधरो राजर्षिच-

---

ப்படி அபிஷேகஞ் செய்து வைத்தார். (49) இவ்விதம் அப்ய ங்காதிகளினுல் செய்யப்பட்ட தலைஸ்நானத்தை யுடையவரும், நல்ல வஸ்திரமணிந்தவரும், மாலையை யுடையவரும், அலங்கரிக்கப் பட்டவருமாகவாகி நன்கு அலங்கரிக்கப்பட்டவர்களும், நல்ல வஸ் திரமணிந்தவர்களுமான ப்ராதாக்களுடனும், பார்யையான ஸீதை யுடனும் விளங்கினுர். (50) ராமன் ப்ராதாவான பரதனுல் கா லில் விழுந்து வேண்டப்பட்டவராய் ஸிம்ஹாஸனத்தை யேற்றுப் பிதாவானவர்போல வர்ணம் ஆஶ்ரமம் குணம் இவற்றுடன் கூடின வர்களும், சொந்த தர்மத்தில் மிகப் பற்றுள்ளவர்களுமான ப்ரஜை களை ரக்ஷித்தார். அந்த ப்ரஜைகளும் அவரைப் பிதாவாகவே எண் ணினர். (51) எல்லா ப்ராணிகளுக்கும் சுகத்தைத் தருகின்றவரும் தர்மக்ஞனுமான ராமன் ராஜனுக இருக்கும்பொழுது த்ரேதாயுக மானது நடந்தபோதிலுங்கூட அக்காலமானது க்ருதயுகத்துக்கு ஸமானமாகவே இருந்தது. (52) ஹே பரதர்ஷப! வனங்களும், நதிகளும், மலைகளும், தேசங்களும், த்வீபங்களும் ஸமுத்திரங்களும் ஆகிய யாவும் ப்ரஜைகளுக்கு வேண்டுவனவற்றைத் தருவனவாக இருந்தன. (53) அதோக்ஷஜனுன ராமன் அரசனுக இருக்கும்பொ ழுது மனோவியாதியோ, தேஹவியாதியோ, ஜரையோ, சோம்ப லோ, துக்கமோ, சோகமோ, பயமோ, சிரமமோ, இச்சைப்படாத வர்களுக்கு மரணமோ உண்டாகவில்லை. (54) அவர் ஏகபத்னீ வ்ரதத்தை யனுஷ்டிப்பவராகவும், ராஜருஷிசரித்திரமுள்ளவராக வும், சுத்தராகவும், க்ருஹஸ்தாஶ்ரமத்துக்குறிய சொந்த தர்மத் தைத் தான் அனுஷ்டிப்பதன்மூலம் பிறரையும் அனுஷ்டிக்கும்படி

रित: शुचि: । स्वधर्मं गृहमेधीयं शिक्षयन्स्वयमाचरत् ॥ ५५ ॥ प्रेम्णाऽनुवृत्त्या शीलेन प्रश्रयावनता सती । धिया ह्रिया च भावज्ञा भर्तु: सीताऽहरन्मन: ॥ ५६ ॥

इति श्रीमद्भागवते महापुराणे नवमस्कन्धे श्रीरामचरित्रवर्णनं नाम दशमोऽध्याय: ॥ १० ॥



## अथ एकादशोऽध्याय: ॥

श्रीशुक उवाच—भगवानात्मनात्मानं राम उत्तमकल्पकै: । सर्वदेवमयं देवमीज आचार्यवान्मखै: ॥ १ ॥ होत्रेऽददाद्दिशं प्राचीं ब्रह्मणे दक्षिणां

---

செய்துகொண்டும் இருந்தார். (55) பதிவ்ரதையான ஸீதையானவள் பர்த்தாவின் சித்தத்தை யறிந்தவளாயும் வினயத்தினால் வணங்கினவளாயுமிருந்துகொண்டு ப்ரேமையினாலும், அனுவிருத்தியினாலும், நல்லொழுக்கத்தினாலும், புத்தியினாலும், லஜ்ஜையினாலும் ராமனின் மனத்தைக் கவர்ந்துவிட்டாள். (56) (எ-று)

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண நவமஸ்கந்தத்தில்
ஸ்ரீராமசரித்திர வர்ணனமென்ற பத்தாவது
அத்தியாயம் முற்றிற்று.



## பதினொன்றாவது அத்தியாயம்.

(அ-கை) ततश्चैकादशेऽयोध्यामावसन्ननुजैस्सह ।
यज्ञादि यच्चकारेशो रामस्तदनुवर्ण्यते ॥ १ ॥

(க-ரை) பிறகு தம்பிகளுடன்கூட அயோத்தியில் வஸிக்கின்ற ஈஸ்வரரான ராமன் எந்த யக்ஞாதிகளைச் செய்தாரோ அந்த யக்ஞாதியானது இந்தப் பதினொன்றாவது அத்தியாயத்தில் உபதேசிக்கப்படுகின்றது. (1) (எ-று)

ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—பகவானான ராமன் சிறந்த ஆசாரியரை யுடையவராய் ஸர்வதேவமயரும் தேவருமான தன்னைத்

प्रभुः । अध्वर्यवे प्रतीचीं च उदीचीं सामगाय सः ॥ २ ॥ आचार्याय ददौ शेषां यावती भूस्तदन्तरा । मन्यमान इदं कृत्स्नं ब्राह्मणोऽर्हति निःस्पृहः ॥ ३ ॥ इत्ययं तदलङ्कारवासोभ्यामवशेषितः । तथा राज्ञ्यपि वैदेही सौमङ्गल्यावशेषिता ॥ ४ ॥ ते तु ब्रह्मण्यदेवस्य वात्सल्यं वीक्ष्य संस्तुतम् । प्रीताः क्लिन्नधियस्तस्मै प्रत्यर्प्येदं बभाषिरे ॥ ५ ॥ अप्रत्तं नस्त्वया किं नु भगवन्भुवनेश्वर । यन्नोऽन्तर्हृदयं विश्य तमो हंसि स्वरोचिषा ॥६॥ नमो ब्रह्मण्यदेवाय रामायाकुण्ठमेधसे । उत्तमश्लोकधुर्याय न्यस्तदण्डार्पिताङ्घ्रये ॥ ७ ॥

---

தானாகவே சிறந்த முறையுடன்கூடின யாகங்களினால் ஆராதித்துக் கொண்டார். (1) ப்ரபுவான அவர், ஹோதா என்ற ருத்விக்குக்குக் கிழக்கு திக்கையும், ப்ரம்ஹா என்ற ருத்விக்குக்குத் தெற்குத் திக்கையும், அத்வர்யு என்ற ருத்விக்குக்கு மேற்குத் திக்கையும், ஸாமகானஞ்செய்கின்ற உத்காதா என்ற ருத்விக்குக்கு வடக்கு திக்கையும் கொடுத்தார். (2) இவை யாவையும் நிஸ்ப்ருஹனான ப்ராம்ஹணன் அடைய அர்ஹனாகின்றான் என வெண்ணமுள்ளவராய் அந்த நான்கு திக்குகளுக்கும் நடுவிலுள்ள பூமி எவ்வளவோ அவ்வளவு பூமியையும் ஆசாரியருக்குக் கொடுத்தார். (3) இவ்விதம் அவர் அப்பொழுது அலங்காரம் வஸ்திரம் இவற்றுடன் மட்டுமே எஞ்ஜினவராக வானார். அவ்விதமே ராக்ஞியான வைதேஹியும் மாங்கல்யத்தோடுமட்டும் எஞ்ஜினவளாக ஆனாள். (4) அவர்களோ ப்ரம்ஹண்யதேவனுக்குள்ள வாத்ஸல்யத்தையும் சரித்திரத்தையும் கண்டு ப்ரீதர்களாகவும், உருகின சித்தமுள்ளவர்களாகவுமாகி அவரிடமே அதைத் திரும்பிக் கொடுத்துவிட்டுப் பின்வருமாறு சொல்லினர். (5) ஹே பகவன்! புவனேஶ்வர! எங்களுடைய ஹிருதயத்தினுள்ளில் ப்ரவேசித்து சொந்தமான காந்தியினால்=ஸ்வரூபசைதன்னியத்தினால், தமஸ்ஸை=அக்ஞானத்தை, எக்காரணம்பற்றிப் போக்குகின்றீரோ அக்காரணம்பற்றி உம்மால் எங்களுக்குக் கொடுக்கப்படாதது என்ன இருக்கிறது. (6) ப்ரம்ஹண்யதேவனும், ஸர்வக்ஞரும், உத்தமஶ்லோகர்களுக்குள் சிறந்தவரும், முனிகளிடத்தில் அர்ப்பணஞ்செய்யப்பட்ட சரணங்களையுடையவருமான ராமனுக்கு நமஸ்காரம் என்றனர். (7)

कदाचिल्लोकजिज्ञासुर्गूढो रात्र्यामलक्षितः। चरन्वाचोऽश्रृणोद्रामो भार्यामुद्दिश्य कस्यचित् ॥ ८ ॥ नाहं बिभर्मि त्वां दुष्टामसतीं परवेश्मगाम्। स्त्रीलोभी बिभृयात्सीतां रामो नाहं भजे पुनः ॥ ९ ॥ इति लोकाद्बहुमुखाद्दुराराध्यादसंविदः। पत्या भीतेन सा त्यक्ता प्राप्ता प्राचेतसाश्रमम् ॥ १० ॥ अन्तर्वत्न्यागते काले यमौ सा सुषुवे सुतौ। कुशो लव इति ख्यातौ तयोश्चक्रे क्रिया मुनिः॥ ११ ॥ अङ्गदश्चित्रकेतुश्च लक्ष्मणस्यात्मजौ स्मृतौ। तक्षः पुष्कल इत्यास्तां भरतस्य महीपते ॥ १२ ॥ सुबाहुः श्रुतसेनश्च शत्रुघ्नस्य बभूवतुः। गन्धर्वान्कोटिशो जघ्ने भरतो विजये दिशाम् ॥ १३ ॥ तदीयं धनमानीय सर्वं राज्ञे न्यवेदयत्। शत्रुघ्नश्च मधोः पुत्रं

---

ஒருஸமயம் ராமன் லோகத்தை நேரில் அறிந்துகொள்ள ஆவல்கொண்டவராயும் ராத்திரியில் பிறரால் காணமுடியாதவாறு மறைந்து ஸஞ்சரிக்கின்றவராயும் கொண்டு தனது பாரியையைக் குறித்துச் சொல்லும் ஒருவனுடைய வார்த்தையைக் கேட்டார்.(8) அதாவது:—'துஷ்டையும் அஸதியும் பிறனுடைய வீட்டையடைந்தவளுமான உன்னை நான் ஏற்கமாட்டேன். ஸ்திரீயினிடம் மோஹங்கொண்ட ராமன் பிறன்வீட்டில் வஸித்த ஸீதையை ஏற்கட்டும். நானோ அவ்விதமுன்னைத் திரும்பவும் சேர்க்கமாட்டேன்' என்றும். (9) இவ்விதம் வெகு வாயையுடையதும், திருப்திசெய்ய முடியாததும், மூடமுமான உலகிலிருந்து பயந்தவரும் பதியுமான ராமனால் பரித்யாகஞ் செய்யப்பட்ட அந்த ஸீதையானவள் வால்மீகியினுடைய ஆஶ்ரமத்தை யடைந்தாள். (10) கர்ப்பிணியான அந்த ஸீதை ப்ரஸவகாலம் வந்ததும் குசன் என்றும் லவன் என்றும் சொல்லப்பட்ட இரட்டைகளான குழந்தைகளைப் பெற்றாள். அக்குழந்தைகளுக்கு முனியான வால்மீகி ஜாதகர்மம் முதலிய க்ரியைகளைச் செய்தார். (11) அங்கதனும் சித்திரகேதுவும் லக்ஷ்மணனுடைய புத்திரர்களாக எண்ணப்பட்டனர். ஹே மஹீபதே! தக்ஷன் புஷ்கலன் இருவரும் பரதனுடைய புத்திரர்களாகப் பிறந்தனர். (12) சத்ருக்னனுக்கு ஸுபாஹுவும் ஶ்ருதஸேனனும் பிறந்தனர். பரதன் திக்குகளின் விஜயகாலத்தில் கோடிக்கணக்கான கந்தர்வர்களைக் கொன்றான். (13) அவர்களின் தனம் யாவை

लवणं नाम राक्षसम् । हत्वा मधुवने चक्रे मथुरां नाम वै पुरीम् ॥ १४ ॥ मुनौ निक्षिप्य तनयौ सीता भर्त्रा विवासिता । ध्यायन्ती रामचरणौ विवरं प्रविवेश ह ॥ १५ ॥ तच्छ्रुत्वा भगवान्रामो रुन्धन्नपि धिया शुचः । स्मरंस्तस्या गुणांस्तांस्तान्नाशक्नोद्रोद्धुमीश्वरः ॥ १६ ॥ स्त्रीपुंप्रसङ्ग एतादृक्सर्वत्र त्रासमावहः । अपीश्वराणां किमुत ग्राम्यस्य गृहचेतसः ॥१७॥

तत ऊर्ध्वं ब्रह्मचर्यं धारयन्नजुहोत्प्रभुः । त्रयोदशाब्दसाहस्रमग्निहोत्रमखण्डितम् ॥ १८ ॥ स्मरतां हृदि विन्यस्य विद्धं दण्डककण्टकैः । स्वपादपल्लवं राम आत्मज्योतिरगात्ततः ॥ १९ ॥ नेदं यशो रघुपतेः सुरया-

---

யும் கொண்டு வந்து ராஜனுன ராமனுக்குக் கொடுத்தான். சத்துருக்னனும் மது என்பவனின் புத்திரனும் லவணன் எனப் பெயருள்ளவனுமான ராக்ஷஸனைக் கொன்று மதுவனத்தில் மதுரை என்ற பட்டினத்தை நிர்மாணஞ்செய்தான். (14) பர்த்தாவினுல் காட்டில் விரட்டப்பட்ட ஸீதை முனியினிடத்தில் புத்திரர்களை ஒப்படைத்துவிட்டு ராமனுடைய சரணங்களை த்யானித்துக் கொண்டு 'பூமியின் ஓட்டையில் ப்ரவேசித்தாள். (15) பகவானுன ராமன் அதைக் கேட்டு புத்தியினுல் சோகத்தை யடக்கினபோதிலுங்கூட அவளுடைய அந்தந்தக் குணங்களை நினைத்துக் கொண்டு ஈஸ்வரனுயினுங்கூட சோகங்களைத் தடுக்கமுடியாதவராக ஆனுர். (16) ஸ்திரீபுருஷர்களின் அதிக ஸ்னேஹமானது யாவர்க்கும் இப்பேர்ப்பட்டதேயாகும். அதாவது:—ஈஸ்வரர்களுக்கும் கூடப் பயத்தைத் தரக்கூடியதாகவுள்ளது என்றும். ஆகவே இவ்விதமிருக்கும்பொழுது பத்தினியினிடத்திலேயே பதிந்த சித்தமுள்ள மூடன் விஷயத்தில் சொல்லவேண்டுவது என்ன இருக்கிறது.(17)

ப்ரபுவான ராமன் அதற்குப் பிறகு ப்ரம்ஹசரியத்தைத் தரித்துக்கொண்டு பதிமூவாயிரம் வருஷம்முடிய இடையறுது அக்னிஹோத்திரத்தைச் செய்துவந்தார். (18) ராமன் தண்டகாரண்யத்திலுள்ள முற்களினுல் குத்தப்பட்ட தனது சரணபல்லவத்தை நினைப்பவர்களின் ஹிருதயத்தில் வைத்துவிட்டுப் பிறகு தனது ஜோதியை யடைந்தார். (19) தேவர்களின் யாசனையினுல் ஸ்வீகரிக்கப்பட்ட லீலாசரீரத்தை யுடையவரும், தனக்கு மேலோ

च्छयात्तलीलातनोरधिकसाम्यविमुक्तधाम्नः। रक्षोवधो जलधिबन्धनमस्त्रपूगैः किं तस्य शत्रुहनने कपयः सहायाः ॥ २० ॥ यस्यामलं नृपसदस्सु यशोऽधुनापि गायन्त्यघघ्नमृषयो दिगिभेन्द्रपट्टम्। तं नाकपालवसुपालकिरीटजुष्टपादाम्बुजं रघुपतिं शरणं प्रपद्ये ॥ २१ ॥ स यैः स्पृष्टोऽभिदृष्टो वा संविष्टोऽनुगतोऽपि वा। कोशलास्ते ययुः स्थानं यत्र गच्छन्ति योगिनः ॥ २२ ॥ पुरुषो रामचरितं श्रवणैरुपधारयन्। आनृशंस्यपरो राज-

---

ஒப்போ அற்றப்ரபாவத்தை யுடையவருமான ரகுபதிக்கு ஸமுத்திரத்தில் அணைகட்டினதும், பாண ஸமூஹங்களினால் ராக்ஷஸர்களை வதஞ்செய்ததும் கவிகளால் வெகுவாகக் கொண்டாடப்படினுங்கூட இது ஒரு யசஸ்ஸாக ஆகமாட்டாது. ஆகவே அத்தகைய அவருக்கு குரங்குகள் எவ்விதம் ஸஹாயமாக வாகமுடியும். (ஆகவே ஸுக்ரீவாதிகளை யாஸ்ரயித்தது எவ்விதம் வெறும் விளையாட்டுமட்டுமேயோ அவ்விதமேதான் ராவணவதமும் ஸமுத்திரத்தில் ஸேதுபந்தனமும் ஆகும்.) (20) திக்கஜங்களின் நெத்திகளுக்குப் பட்டம்போலுள்ள எவருடைய சுத்தமானதும் பாபத்தைப் போக்கக்கூடியதுமான யசஸ்ஸை மார்க்கண்டேயர் முதலிய முனிகள் தர்மபுத்திரர் முதலிய அரசர்களின் ஸபைகளில் இப்பொழுதுங்கூடக் கானஞ்செய்கின்றனரோ இந்திரன் அல்லது தேவர்கள், குபேரன் அல்லது அரசர்கள் முதலியோர்களின் கிரீடங்களினால் ஸேவிக்கப்பட்ட சரணாரவிந்தங்களை யுடையவரான அந்த ரகுபதியை நான் சரணமாக அடைகின்றேன். (21) அந்த ஸ்ரீராமன் எவர்களால் தொடப்பட்டாரோ, அல்லது பார்க்கப்பட்டாரோ, உட்காரும்படி செய்யப்பட்டாரோ அல்லது பின் தொடரப்பட்டாரோ அந்தக் கோஸலதேசத்தவர் யாவரும் எங்கு யோகிகள் போகின்றனரோ அந்த ஸ்தானத்தை யடையும்படி செய்யப்பட்டனர். (22) ஹே ராஜன்! ராமசரிதத்தைப் பலதடவை கேட்டு மனத்தில் தரிக்கும் புருஷன் வைராக்யநிஷ்டனாகி வாகிக் கர்மபந்தங்களினால் விடுபடுகிறான் என்றார். (23) அரசன் சொல்லுகிறான்—பகவானான அந்த ராமன் தான் எவ்விதம் நடந்துவந்தார். தனது அம்சபூதர்களான ப்ராதாக்களைக் குறித்து எப்படி

न्कर्मबन्धैर्विमुच्यते ॥ २३ ॥ राजोवाच—कथं स भगवान्नामो भ्रातॄन्वा स्वयमात्मनः । तस्मिन्वा तेऽन्ववर्तन्त प्रजाः पौराश्च ईश्वरे ॥ २४ ॥

श्रीशुक उवाच—अथादिशद्दिग्विजये भ्रातॄंस्त्रिभुवनेश्वरः । आत्मानं दर्शयन्स्वानां पुरीमैक्षत सानुगः ॥ २५ ॥ आसिक्तमार्गां गन्धोदैः करिणां मदसीकरैः । स्वामिनं प्राप्तमालोक्य मत्तां वा सुतरामिव ॥ २६ ॥ प्रासादगोपुरसभाचैत्यदेवगृहादिषु । विन्यस्तहेमकलशैः पताकाभिश्च मण्डिताम् ॥२७॥ पूगैः सवृन्तै रम्भाभिः पट्टिकाभिः सुवाससाम् । आदर्शैरं शुकैः स्रग्भिः कृतकौतुकतोरणाम् ॥ २८ ॥ तमुपेयुस्तत्र तत्र पौरा अर्हण-

---

நடந்துவந்தார். அந்த ஈஸ்வரனிடத்தில் அந்த ப்ராதாக்களோ வெளியிலுள்ள ஜனங்களோ பட்டினத்து ஜனங்களோ எப்படி நடந்து வந்தனர். இதைச் சொல்லவேண்டுமென்றார். (24)

ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—*ஸிம்ஹாஸனமேறின பிறகு மூவ்வுலகங்களுக்குமீஸ்வரனான ராமன் ப்ராதாக்களை திக்குகளை ஜயிக்கும் விஷயத்தில் ஏவினார். பரிவாரங்களுடன்கூடினவரய் தன்னைச் சேர்ந்தவர்களுக்கு தன்னைக் காட்டிக்கொண்டு மணமுள்ள ஜலங்களினாலும் யானைகளின் மதத்திவிலைகளினாலும் சுற்றிலும் நன்கு நனைக்கப்பட்ட வழியை யுடையதும், அரசனே நேரில் வந்ததைக் கண்டு மிகவும் மதங்கொண்டதுபோலிருக்கின்றதும், மாடி கோபுரம் ஸபை சைத்யம் தேவாலயம் முதலிய விடங்களில் வைக்கப்பட்ட பொன்மயங்களான கலசங்களினாலும், கொடிமரங்களினாலும் அலங்கரிக்கப்பட்டதும், குலைகளுடன்கூடின பாக்குமரங்களினாலும், வாழைமரங்களினாலும், நல்ல வஸ்திரங்களின் பட்டங்களினாலும், கண்ணாடிகளினாலும், வஸ்திரங்களினாலும், பூமாலைகளினாலும் அலங்கரிக்கப்பட்டதும், செய்யப்பட்ட ஸந்தோஷகரங்களான தோரணங்களையுடையதுமான பட்டினத்தைப்பார்வையிட்டு வந்தார். (25–28) ஆங்காங்கு பட்டினத்து ஜனங்கள் மங்களங்களான பொருள்களைக் கையில்கொண்டு அவரை எதிர்கொண்டழை

---

* ஸ்ரீராமன் ப்ராதா முதலியோரிடத்தில் நடந்த முறையைச் சொல்லுகிறார்.

पाणयः । आशिषो युयुजुर्देव पाहीमां प्राक् त्वयोद्धृताम् ॥ २९ ॥ ततः प्रजा वीक्ष्य पतिं चिरागतं दिदृक्षयोत्सृष्टगृहाः स्त्रियो नराः । आरुह्य हर्म्याण्यरविन्दलोचनमतृप्तनेत्राः कुसुमैरवाकिरन् ॥ ३० ॥

अथ प्रविष्टः स्वगृहं जुष्टं स्वैः पूर्वराजभिः । अनन्ताखिलकोशाढ्यमनर्घ्योरुपरिच्छदम् ॥ ३१ ॥ विद्रुमोदुम्बरद्वारैर्वैदूर्यस्तम्भपङ्क्तिभिः । स्थलैर्मारकतैः स्वच्छैर्भ्राजत्स्फटिकभित्तिभिः ॥ ३२ ॥ चित्रस्रग्भिः पट्टिकाभिर्वासोमणिगणांशुकैः । मुक्ताफलैश्चिदुल्लासैः कान्तकामोपपत्तिभिः ॥ ३३ ॥ धूपदीपैः सुरभिभिर्मण्डितं पुष्पमण्डनैः । स्त्रीपुम्भिः सुरसङ्का-

---

த்தனர். சிலர் ஆசீர்வாதங்களைச் செய்தனர். சிலர் ஹே தேவ! முன்னர் வராஹரூபமெடுத்து உம்மால் உயரெடுக்கப்பட்ட இந்தப் பூமியைக் காரும் என்றனர். (29) பிறகு ப்ரஜைகள் வெகு காலம் சென்று ராஜன் வந்ததைக் கண்டு அவரை நேரில் பார்க்கவேண்டுமென்ற ஆவலினால் வீட்டினுள்ளினின்றும் வெளிக்கிளம்பி ஸ்திரீகளும் புருஷர்களும் மாடிகளிலேறிக்கொண்டு புண்டரீகாக்ஷனைக் கண்டு திருப்தியேற்படாத நேத்திரமுள்ளவர்களாய் புஷ்பங்களினால் அவர்மேல் வர்ஷித்தனர். (30)

பிறகு சொந்த அரசர்களினால் முன்னர் ஸேவிக்கப்பட்டதும், கணக்கிலடங்காதவைகளும் எல்லா ரத்தினங்களையுமுடையதுமான கோசங்களினால் நிறையப்பெற்றதும், விலைமதிக்கவியலாத அதிகமான ஸாமக்ரீகளை யுடையதும், பவளங்களினலிழைக்கப்பட்ட ரேழியையுடைய வாயிற்படிகளினாலும், வைடூர்யமென்ற ரத்தினங்களினால் கட்டப்பட்ட தூண்வரிசைகளினாலும், ஸ்வச்சங்களான மரகதப்பச்சைக் கற்கள் பரப்பின பூமிகளினாலும், ஸ்படிகமயங்களான சுவறுகளினாலும் ப்ரகாசிக்கும்படி செய்யப்பட்டதும், விசித்திரங்களான மாலைகளினாலும், பட்டிகைகளினாலும், வஸ்திரங்கள் மணிக்கூட்டங்கள் இவற்றின் காந்திகளினாலும், சைதன்யத்தினுடையதுபோன்ற ஜ்வலிப்பை யுடையவைகளான முக்தாபலங்களினாலும், அழகிய போகஸாதனங்களினாலும், மணமுள்ள தூபதீபங்களினாலும் அலங்கரிக்கப்பட்டதும், புஷ்பங்களினால் அலங்கரிக்கப்

शैर्जुष्टं भूषणभूषणैः ॥ ३४ ॥ तस्मिन्स भगवान्रामः स्निग्धया प्रिययेष्टया । रेमे स्वाराममधीराणामृषभः सीतया किल ॥ ३५ ॥ बुभुजे च यथाकालं कामान्धर्ममपीडयन् । वर्षपूगान्बहून्नृणामभिध्याताङ्घ्रिपल्लवः॥ ३६ ॥

इति श्रीमद्भागवते महापुराणे नवमस्कन्धे श्रीरामोपाख्यानवर्णनं नाम एकादशोऽध्यायः ॥ ११ ॥

—•••—

---

பட்டவர்களும் தேவர்களுக்கொப்பானவர்களும் ஆபரணங்களுக்கு ஆபரணபூதர்களுமான ஸ்திரீபுருஷர்களினால் ஸேவிக்கப்பட்டதுமான வீட்டில் ப்ரவேசித்தார். (31-34) அந்த வீட்டில் ஆத்மாராமர்களும் தீரர்களுமானவர்களுக்குள் ஶ்ரேஷ்டரும் பகவானுமான அந்த ராமன், ஸ்னேஹம் வாய்ந்தவளும் ப்ரியையும் இஷ்டையுமான ஸீதையுடன்கூட ரமித்தார். (35) மனிதர்களினால் நன்கு தியானிக்கப்பட்ட சரணபல்லவத்தை யுடையவராய் வெகு வர்ஷக் கூட்டங்கள்முடிய தர்மத்துக்குப் பீடை (குறைவு) யின்றி காலத்துக்கேற்றவாறு காமங்களை யனுபவித்து வந்தார் என்றார். (36)

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண நவமஸ்கந்தத்தில்
ஸ்ரீராமசரித்திரவர்ணனமென்ற பதினொன்றாவது
அத்தியாயம் முற்றிற்று.



## நாராயணீயம்.

(அ—கை) ஸ்ரீராமசரித்திரத்தை சொல்லத்தொடங்குகிறார்—

गीर्वाणैरर्थ्यमानो दशमुखनिधनं कोसलेष्वृश्यशृङ्गे
पुत्रीयामिष्टिमिष्ट्वा ददुषि दशरथक्ष्माभृते पायसाग्र्यम् ।
तद्भुक्त्या तत्पुरन्ध्रीष्वपि तिसृषु समं जातगर्भासु जातो-
रामस्त्वं लक्ष्मणेन स्वयमथ भरतेनाथ शत्रुघ्ननाम्ना ॥ ११ ॥

(ப—ரை) गीर्वाणैः=தேவர்களினால் दशमुखनिधनम् = ராவணவதத்தைக் குறித்து अर्थ्यमानः=வேண்டப்படுகின்றவரான त्वम्= நீர் कोसलेषु=கோஸலதேசத்தில் ऋश्यशृङ्गे=ருஶ்யசிருங்க மஹருஷி

पुत्रीयाम्=புத்திரனைத் தரத்தக்க इष्टिम्=யாகத்தை इष्ट्वा=செய்து दशरथक्ष्माभृते=தசரதசக்கிரவர்த்திக்கு पायसाग्र्यम्=சிறந்தபாயஸத்தை ददुषि=கொடுக்குங்கால் तत्पुरन्ध्रीषु=அவருடைய பத்னிகளான तिसृष्वपि=கௌஸல்யை கைகேயி ஸுமித்ரை என்ற மூவரும் तद्भक्त्या=அந்தப் பாயஸபோஜனத்தினால் समम्=ஒரேஸமயத்தில் जातगर्भासु=உண்டான கர்ப்பமுள்ளவர்களாக (सतीषु=ஆனபொழுது) लक्ष्मणेन=லக்ஷ்மணனுடனும், अथ=பின்னர் भरतेन=பரதனுடனும், अथ=பின்னர் शत्रुघ्ननाम्ना=சத்ருக்னனுடனும்கூட स्वयम्=ஸாக்ஷாத்தாகவே रामः=ராமனாக जातः=அவதரித்தீர். (11) (எ-று)

कोदण्डी कौशिकस्य क्रतुवरमवितुं लक्ष्मणेनानुयातो-
यातो भूस्तातवाचा मुनिकथितमनुद्वन्द्वशान्ताध्वखेदः ।
नृणां त्राणाय बाणैर्मुनिवचनबलात्ताटकां पाटयित्वा
लब्ध्वाऽस्मादस्त्रजालं मुनिवनमगमो देव सिद्धाश्रमाख्यम् ॥

(ப-ரை) देव!=ஹே தேவ! (त्वम्=நீர்) कोदण्डी=கோதண்டமென்ற வில்லையுடையவராயும் कौशिकस्य=விஸ்வாமித்திரருடைய क्रतुवरम्=சிறந்த யாகத்தை अवितुम्=ரக்ஷிப்பதற்காக लक्ष्मणेन=லக்ஷ்மணனால் अनुयातः=பின்தொடரப்பட்டவராயும் तातवाचा=பிதாவின் சொல்படி यातः=சென்றவராயும் (போகும்பொழுது) मुनिकथितमनुद्वन्द्वशान्ताध्वखेदः=விஸ்வாமித்திர முனியினாலுபதேசிக்கப்பட்ட பலை என்றும் அதிபலை என்றுமான இரண்டு மந்திரங்களினால் சாந்தமான வழிநடந்த களைப்பை யுடையவராயும் अभूः=ஆனீர். பிறகு नृणाम्=ஜனங்களின் त्राणाय=ரக்ஷணத்துக்கு வேண்டியும் मुनिवचनबलात्=விஸ்வாமித்ரமுனியின் வார்த்தையினதுவலுக்கொண்டும் बाणैः=அம்புகளினால் ताटकाम्=தாடகையை पाटयित्वा=பிளந்து பிறகு अस्मात्=இந்த விஸ்வாமித்ரரிடமிருந்து अस्त्रजालम्=பாணஸமூஹத்தை लब्ध्वा=அடைந்து सिद्धाश्रमाख्यम्=ஸித்தாஸ்ரமமெனப் பெயரிய मुनिवनम्=முனிவனத்தை अगमः=அடைந்தீர். (12) (எ-று)

मारीचं द्रावयित्वा मखशिरसि शरैरन्यरक्षांसि निघ्नन्
कल्यां कुर्वन्नहल्यां पथि पदरजसा प्राप्य वैदेहगेहम् ।

भिन्दानश्चान्द्रचूडं धनुरवनिसुतामिन्दिरामेव लब्ध्वा-
राज्यं प्रातिष्ठथास्त्वं त्रिभिरपि च समं भ्रातृवीरैस्सदारैः ॥

(ப-ரை) त्वम्=நீர் मखशिरसि யாகத்தின் ஆரம்பத்தில் मारीचम्=மாரீசனை द्रावयित्वा=விரட்டிவிட்டு अन्यरक्षांसि=வேறு ராக்ஷஸர்களை शरैः=பாணங்களினால் निघ्नन्=கொன்றவராயும் पथि=போகும் வழியில் अहल्याम्=அஹல்யையை पदरजसा=பாததூளியினால் अकल्याम्=பாபமற்றவளாக कुर्वन्=செய்கின்றவராயும் वैदेहगेहम्=ஜனகனுடைய வீட்டை प्राप्य=அடைந்து चान्द्रचूडम्=சந்திரனைத் தலையிலணிந்த பரமேஶ்வரனுடையதான धनुः=வில்லை भिन्दानः=ஒடிக்கின்றவராயும் கொண்டு अवनिसुताम्=பூமியின் புத்திரியான इन्दिरामेव=லக்ஷ்மியையே लब्ध्वा=அடைந்து सदारैः=பத்னிகளுடன் கூடினவர்களான त्रिभिः=மூன்று भ्रातृवीरैस्समम्=வீரர்களான ப்ராதாக்களுடன்கூட राज्यम्=அயோத்தியாராஜ்யத்தை நோக்கி प्रातिष्ठथाः=பயணப்பட்டீர். (13) (எ-று)

आरुन्धाने रुषान्धे भृगुकुलतिलके संक्रमय्य स्वतेजो
याते यातोऽस्ययोध्यां सुखमिह निवसन्कान्तया कान्तमूर्ते।
शत्रुघ्नेनैकदाथो गतवति भरते मातुलस्याधिवासं
तातारब्धोऽभिषेकस्तव खलु विहतः केकयाधीशपुत्र्या

(ப-ரை) कान्तमूर्ते=ஹே அழகிய திருமேனியையுடையவரே! (त्वम्=நீர்) रुषान्धे=சிவன் வில்லை யொடித்ததன் மூலமேற்பட்ட கோபத்தினால் கலங்கினவரும் आरुन्धाने=வழியை மரிப்பவருமான भृगुकुलतिलके=ப்ருகுகுலத்துக்குத் திலகம்போன்ற பரசுராமர் स्वतेजः=தன்னிடமுள்ள வைஷ்ணவமான தேஜஸ்ஸை सङ्क्रमय्य=உம்மிடம் கலக்கும்படி செய்துவிட்டு याते=போனபொழுது अयोध्याम्=அயோத்தியை यातः=அடைந்தவராய் इह=இந்த அயோத்தியில் कान्तया=அழகிய ஸீதையுடன் सुखम्=சுகமாக निवसन्=வஸித்துக்கொண்டு असि=இருந்தீர். अथ=பிறகு एकदा=ஒருஸமயம் शत्रुघ्नेन=சத்ருக்னனுடன்கூட भरते=பரதன் मातुलस्य=அம்மானுடைய अधिवासम्=வீட்டைக் குறித்து गतवति=போனபொழுது तातारब्धः=பிதாவினால் ஆரம்பிக்கப்பட்ட तव=உம்முடைய अभिषेकः=பட்டாபிஷேக

மானது केकयाधीशपुत्र्या=கேகயராஜன் பெண்ணான கைகேயியினால் विहतः किल=தடைசெய்யப்பட்டதன்றோ. (14) (எ-று)

तातोक्त्या यातुकामो वनमनुजवधूसङ्गतश्चापधारः
पौरानारुद्ध्य मार्गे गुहनिलयगतस्त्वं जटाचीरधारी ।
नावा सन्तीर्य गङ्गामधिपदवि पुनस्तं भरद्वाजमारान्नत्वा
तद्वाक्यहेतोरतिसुखमवसश्चित्रकूटे गिरीन्द्रे ॥ १५ ॥

(ப-ரை) तातोक्त्या=பிதாவின் வார்த்தையினால் वनम्=காட்டுக்கு यातुकामः=செல்லவிருப்பங்கொண்ட त्वम्=நீர் अनुजवधूसङ्गतः=தம்பியான லக்ஷ்மணன் பத்தினியான ஸீதை இவர்களுடன் கூடினவராகவும், चापधारः=வில்லைத் தரிக்கின்றவராகவும், पौरान्=தன்னைப் பின்தொடர்ந்த பட்டினத்து ஜனங்களை मार्गे=வழியில் आरुध्य=தங்கிவிடும்படி செய்துவிட்டு गुहनिलयगतः=குஹனுடைய இடத்தை யடைந்தவராகவும், जटाचीरधारी=சடை மரவுரி இவற்றைத் தரிக்கின்றவராகவும் ஆகி नावा=குஹனுடைய ஓடத்தினால் गङ्गाम्=கங்கையை सन्तीर्य=தாண்டி अधिपदवि=வழியில் तम्=ப்ரஸித்தரான भरद्वाजं पुनः=பரத்வாஜரை आरात्=அருகில்சென்று नत्वा=நமஸ்கரித்துவிட்டு तद्वाक्यहेतोः=அவருடைய வார்த்தை காரணமாக चित्रकूटे=சித்திரகூடமென்ற गिरीन्द्रे=சிறந்த மலையில் अतिसुखम्=அதிகம் சுகமாக अवसः=வஸித்தீர். (15) (எ-று)

श्रुत्वा पुत्रार्तिखिन्नं खलु भरतमुखात्स्वर्गयातं स्वतातं
तप्तो दत्वाम्बु तस्मै निदधिथ भरते पादुकां मेदिनीञ्च ।
अत्रिं नत्वाऽथ गत्वा वनमतिविपुलां दण्डकाञ्चण्डकायं
हत्वा दैत्यं विराधं सुगतिमकलयश्चारु भोश्शारभङ्गीम् ॥

(ப-ரை) भोः=ஹே கிருஷ்ண! स्वतातं खलु=தனது பிதாவான தசரதரை पुत्रार्तिखिन्नम्=புத்திரனுக்கேற்பட்ட வனவாஸகிலேசநிமித்தமாகக் கஷ்டத்தையடைந்ததால் स्वर्गयातम्=ஸ்வர்க்கத்தையடைந்தவராக भरतमुखात्=பரதனுடைய வாயிலிருந்து श्रुत्वा=கேட்டு तप्तः=துக்கமடைந்தவராய்க்கொண்டு तस्मै=அந்தத் தசரதரையும்பொருட்டு अम्बु=தர்ப்பணஜலத்தை दत्वा=கொடுத்து भरते=பரதனிடத்

தில் पादुकाम्=பாதுகையையும் मेदिनीञ्च=பூமியையும் निदधिथ=ந்யாஸமாக வைத்தீர். अथ=பிறகு अत्रिम्=அத்ரிமஹருஷியை नत्वा=நமஸ்கரித்து वनम्=காட்டை गत्वा=அடைந்து अतिविपुलाम्=மிக்க விசாலமான दण्डकाम्=தண்டாரண்யத்தையும் गत्वा=அடைந்து चण्डकायम्=பயங்கரமான சரீரத்தையுடைய विराधम्=விராதனென்ற दैत्यम्=அஸுரனை हत्वा=கொன்று शारभङ्गीम्=சரபங்கரென்ற மஹருஷியை ஸம்பந்தித்துள்ள सुगतिम्=மோக்ஷத்தை चारु=அழகாக अकलय:=ஏற்படுத்தினீர். (சரபங்கருக்கு மோக்ஷத்தைக் கொடுத்தீர்.)

नत्वाऽगस्त्यं समस्ताशरनिकरसपत्राकृतिं तापसेभ्य:
प्रत्यश्रौषी: प्रियैषी तदनु च मुनिना वैष्णवे दिव्यचापे ।
ब्रह्मास्त्रे चापि दत्ते पथि पितृसुहृदं वीक्ष्य भूयो जटायुं
मोदाद्गोदातटान्ते परिरमसि पुरा पञ्चवट्यां वधूट्या ॥

(ப-ரை) अगस्त्यम्=அகஸ்த்யரை नत्वा=நமஸ்கரித்து விட்டு तापसेभ्य:=தாபஸர்களுக்கு प्रियैषी=ப்ரியத்தைச்செய்ய விருப்பங்கொண்டு समस्ताशरनिकरसपत्राकृतिम्-समस्ताशरनिकर=எல்லா அசுரஸமூஹங்களுடையவும் सपत्राकृतिम्=வதத்தை प्रत्यश्रौषी:=ப்ரதிக்ஞை செய்தீர். तदनु च=அதன் பிறகு मुनिना=அகஸ்த்யரினால் वैष्णवे=வைஷ்ணவமான दिव्यचापे=திவ்யமான வில்லும் ब्रह्मास्त्रे चापि=ப்ரம்ஹாஸ்திரமும் दत्ते=கொடுக்கப்பட்டபொழுது पथि=வழியில் पितृसुहृदम्=பிதாவுக்கு ஸ்னேஹிதரான जटायुम्=ஜடாயுவை वीक्ष्य=கண்டு भूय:=அதிகமான मोदात्=ஸந்தோஷத்தினால் गोदातटान्ते=கோதாவரியின் கரையினோரத்திலிருக்கின்ற पञ्चवट्याम्=பஞ்சவடியில் वधूट्या=ஸீதையுடன்கூட परिरमसि पुरा=ஸந்தோஷித்தீர்.(17)

प्राप्तायाः शूर्पणख्या मदनचलधृतेरर्थनैर्निस्सहात्मा
तां सौमित्रौ विसृज्य प्रबलतमरुषा तेन निर्लूननासाम् ।
दृष्ट्वैनां रुष्टचित्तां खरमभिपतितं दूषणञ्च त्रिमूर्धं
व्याहिंसीराशरानप्ययुतसमधिकांस्तत्क्षणादक्षतोष्मा ॥

(ப-ரை) मदनचलधृते:=மன்மதனால் கலங்கின தைரியமுள்ளவளாய் प्राप्ताया:=அருகில் வந்தவளான शूर्पणख्या:=சூர்ப்பணகியி

னுடைய अर्थने:=வேண்டுகோளினல் निस्सहात्मा=பொறுமைகொண்ட மனத்தை யுடையவராகவாகி ताम्=அவளை सौमित्रौ=லக்ஷ்மணனிடத்தில் विसृज्य=அனுப்பி प्रबलतमरुषा=மிக்கவதிக ரோஷமுள்ளவரான तेन=அந்த லக்ஷ்மணனுல் निर्लूननासाम्=அருக்கப்பட்ட மூக்கை யுடையவளும் रुष्टचित्ताम्=கோபத்தையடைந்த சித்தமுள்ளவளுமான एनाम्=இவளை दृष्ट्वा=கண்டு अभिपतितम्=எதிர்த்தோடி வந்தவனுன खरम्=கரனையும், दूषणम्=தூஷணனையும், त्रिमूर्धं च=த்ரிசிரஸ்ஸையும், अयुतसमधिकान्=பதினுயிரத்துக்கு மேல்பட்டவர்களான आशरानपि=ராக்ஷஸர்களையும் अक्षतोष्मा = பூர்ணமான கோபங்கொண்டவராய் तत्क्षणात्=அதே க்ஷணத்தில் व्याहिंसीः=கொன்றீர். (18) (எ-று)

सोदर्या प्रोक्तवार्ताविवशदशमुखादिष्टमारीचमाया-
सारङ्गं सारसाक्ष्या स्पृहितमनुगतः प्रावधीर्बाणघातम् ।
तन्मायाक्रन्दनिर्यापितभवदनुजां रावणस्तामहार्षी-
त्तेनार्तोऽपि त्वमन्तः किमपि मुदमधास्तद्वधोपायलाभात् ॥

(ப-ரை) सारसाक्ष्या = ஸீதையினுல் स्पृहितम्=ஆசைப்படப்பட்ட सोदर्या=ஸஹோதரியான சூர்ப்பணகியினுல் प्रोक्तवार्ताविवशदशमुखादिष्टमारीचमायासारङ्गम् = சொல்லப்பட்ட விருத்தாந்தத்தினுல் பரவசப்பட்ட ராவணனுல் அனுப்பப்பட்ட மாரீசனுகிற மாயாமானை अनुगतः=பின்தொடர்ந்தவராய் बाणघातम् = பாணத்தால் அடித்து प्रावधीः=கொன்றீர். रावणः=ராவணன் तन्मायाक्रन्दनिर्यापितभवदनुजाम्=அவனுடைய பொய்யான அழுகுரல்மூலம் வெளியில் அனுப்பப்பட்ட உமது தம்பியான லக்ஷ்மணனை யுடையவளான ताम्=அந்த ஸீதையை अहार्षीत्=அபஹரித்தான். तेन=அந்த ஸீதாவிரஹத்தினுல் त्वम्=நீர் अर्तोऽपि=வெளிக்குக் கஷ்டப்பட்டபோதிலுங்கூட अन्तः=உள்ளில் तद्वधोपायलाभात् = அவனுடைய வதத்துக்குரிய உபாயலாபமூலம் किमपि=சொல்லவியலாத मुदम्=ஸந்தோஷத்தை अधाः=அடைந்தீர். இதிலிருந்து ஸ்திரீகளிடத்திலீடுபடுபவர்களுக்கு இம்மாதிரியான கஷ்டம்தான் வரும் என்பதைக் காட்டவேண்டி வெளியில் துக்காபினயம் பண்ணினீரேயன்றி உண்மையில் உமது நோக்கம் வேறு என்பதுபெறப்பட்டது. (19)

अन्वधावत दुर्धर्षो मृगेन्द्र इव यूथपम् ॥ २८ ॥ तमापतन्तं भृगुवर्यमोजसा धनुर्धरं बाणपरश्वधायुधम् । ऐणेयचर्माम्बरमर्कधामभिर्युतं जटाभिर्ददृशे पुरीं विशन् ॥२९॥ अचोदयद्धस्तिरथाश्वपत्तिभिर्गदासिबाणर्ष्टिशतघ्निशक्तिभिः। अक्षौहिणीः सप्तदशातिभीषणास्ता राम एको भगवानसूदयत् ॥३०॥ यतो यतोऽसौ प्रहरत्परश्वधो मनोऽनिलौजाः परचक्रसूदनः । ततस्ततश्छिन्नभुजोरुकन्धरा निपेतुरुर्व्यां हतसूतवाहनाः ॥ ३१ ॥ दृष्ट्वा स्वसैन्यं रुधिरौघकर्दमे रणाजिरे रामकुठारसायकैः । विवृक्णचर्मध्वजचापविग्रहं

---

பிறகு அரசன் போனதும் ஆஶ்ரமத்தில் வந்த பரசுராமன் அவனுடைய அந்த கெட்டஸ்வபாவத்தைக் கேட்டு அடிக்கப்பட்ட பாம்புபோலக் கோபங்கொண்டார். (27) எவராலும் எதிர்க்க வியலாத அவர் கோரமான பரசுவை (கோடறியை) யும், அம்புடன் கூடின வில்லையும், சர்மத்தையும் எடுத்துக்கொண்டு ஸிம்ஹமானது யானையைப் போலப் பின்தொடர்ந்து ஓடினார். (28) பட்டினத்தில் ப்ரவேசிக்கும் அர்ஜுனன், ஓடிவருகின்றவரும், வீரியத்தினால் ப்ருகுக்களுக்குள் சிறந்தவரும், வில்லைத் தரிக்கின்றவரும். பாணம் கோடறி இவற்றை ஆயுதங்களாக வுடையவரும், மான் தோலை வஸ்திரமாகக் கொண்டவரும், ஸூரியனுடையதுபோன்ற காந்தியுள்ள ஜடைகளுடன் கூடினவருமான அவரைக் கண்டான். (29) யானை தேர் குதிரை காலாள் இவற்றுடனும், கதை கத்தி பாணம் ருஷ்டி சதக்னீ (பீரங்கி) சக்தி இவற்றுடனும் கூடினவைகளும் மிக்க பயங்கரங்களுமான பதினேழு அக்ஷௌஹிணீ ஸேனைகளைச் சண்டைக்கு அனுப்பினான். பகவானான பரசுராமர் ஒருவராகவே அந்த ஸேனைகளை நாசஞ்செய்தார். (30) மனத்துக்கும் காற்றுக்குமொப்பான வீரியத்தை யுடையவரான இந்தப்பரசுராமர் எங்கு எங்கு ப்ரயோகித்த பரசுவையுடையவராக இருந்துகொண்டு சத்துருஸேனையை யழிக்கின்றாரோ ஆங்காங்கு வீரர்கள் வெட்டப்பட்ட தோள் துடை கழுத்து இவற்றை யுடையவர்களாகவும் கொல்லப்பட்ட தேர்ப்பாகன் வாஹனம் இவற்றை யுடையவர்களாகவுமாகிப் பூமியில் விழுந்தனர். (31) ரக்தப் பெருக்கினால் சேருள்ளதான யுத்தபூமியில் ராமனுடைய கோடறி பாணம் இவற்றால்

निपातितं हैहय आपतद्रुषा ॥ ३२ ॥ अथार्जुनः पञ्चशतेषु बाहुभिर्धनुष्षु बाणान्युगपत्स सन्दधे। रामाय रामोऽस्त्रभृतां समग्रणीस्तान्येकधन्वेषुभिराच्छिनत्समम् ॥ ३३ ॥ पुनः स्वहस्तैरचलान्मृधेऽङ्घ्रिपानुत्क्षिप्य वेगादभिधावतो युधि। भुजान्कुठारेण कठोरनेमिना चिच्छेद रामः प्रसभं त्वहेरिव ॥ ३४ ॥

कृत्तबाहोः शिरस्तस्य गिरेः शृङ्गमिवाहरत्। हते पितरि तत्पुत्रा अयुतं दुद्रुवुर्भयात् ॥ ३५ ॥ अग्निहोत्रीमुपावर्त्य सवत्सां परवीरहा। समुपेत्याश्रमं पित्रे परिक्लिष्टां समर्पयत् ॥ ३६ ॥ स्वकर्म तत्कृतं रामः पित्रे भ्रातृभ्य एव च। वर्णयामास तच्छ्रुत्वा जमदग्निरभाषत ॥ ३७ ॥ राम

---

வெட்டப்பட்ட சர்மம் கொடிமரம் வில்லு சரீரம் இவற்றை யுடையதாய் பூமியில் விழுந்த தனது ஸேனையைக் கண்டு அர்ஜுனன் கோபத்துடன் ஓடிவந்தான். (32) அவன் ஐந்நூறு வில்லுகளில் ஐந்நூறுகைகளினால் ராமனையும் பொருட்டு ஓரேஸமயத்தில் பாணங்களைத் தொடுத்தான். அஸ்திரம் தரிப்பவர்களுக்குள் சிறந்தவரும் ஒரேவில்லை யுடையவருமான ராமன் பாணங்களினால் அந்த வில்லுகளை அப்பொழுதே அறுத்துத் தள்ளினார். (33) திரும்பவும் போரில் ஸாதனங்களான தனது கைகளினால் மலைகளையும் மரங்களையும் வீசி எறிந்து யுத்தத்தில் வேகமாக வோடிவருகின்ற அவனுடைய கைகளை கொடூரமான கூரையுடைய கோடறியினால் பாம்பின் படங்களைப் போலப் பலாத்காரமாக ராமன் வெட்டினார். (34)

வெட்டப்பட்ட கைகளையுடைய அவனுடைய தலையை மலையின் சிகரத்தைப் போல அறுத்துவிட்டார். பிதாவானவன் கொல்லப்பட்டபொழுது அவனுடைய புத்திரர்கள் பதினாயிரம் பேர்களும் பயத்தினாலோட்டம் பிடித்தனர். (35) சத்துருவீரர்களைக் கொன்ற பரசுராமர் மிக க்லேசத்தை யடைந்த காமதேனுவைக் கன்றுடன் கூடத் திருப்பி வோட்டிக் கொண்டு ஆஶ்ரமத்தை யடைந்து பிதாவினிடம் ஸமர்ப்பித்தார். (36) ராமன் அவனை யுத்தேசித்துச் செய்யப்பட்ட தனது காரியத்தைப் பிதாவுக்கும்

राम महाबाहो भवान्पापमकारषीत् । अवधीन्नरदेवं यत्सर्वदेवमयं वृथा ॥ ३८ ॥ वयं हि ब्राह्मणास्तात क्षमयार्हणतां गताः । यया लोकगुरुर्देवः पारमेष्ठ्यमगात्पदम् ॥ ३९ ॥ क्षमया रोचते लक्ष्मीर्ब्राह्मी सौरी यथा प्रभा । क्षमिणामाशु भगवांस्तुष्यते हरिरीश्वरः ॥ ४० ॥ राज्ञो मूर्धाभिषिक्तस्य वधो ब्रह्मवधाद्गुरुः । तीर्थसंसेवया चांहो जह्यङ्गाच्युतचेतनः ॥

इति श्रीमद्भागवते महापुराणे नवमस्कन्धे परशुरामचरितवर्णनं नाम पञ्चदशोऽध्यायः ॥ १५ ॥

---

ப்ராதாக்களுக்கும் விரிவாகச் சொன்னார். அதைக்கேட்டு ஜமதக்னி பின்வருமாறு சொன்னார். (37) ஹே ராம! ராம! ஹே மஹாபாஹோ! எக்காரணம்பற்றி ஸர்வதேவமயனான நரதேவனை வீணில் கொன்றனையோ அக்காரணம்பற்றி நீ பாபம் செய்தவனாகின்றனை. (38) ஹே தாத! நாமோ ப்ராம்ஹணர்கள். எதனால் லோககுருவான ப்ரம்ஹதேவன் பாரமேஷ்ட்யமான பதத்தை அடைந்தாரோ அந்தப் பொருமையினாலேயே பூஜ்யத்தன்மையை அடைந்திருக்கின்றோம். (39) பொருமையினாலேயே ப்ராம்ஹண ஸம்பந்தியான லக்ஷ்மி.(சோபை)யானது சூரியனுடைய ப்ரபைபோல ப்ரகாசத்தை யடைகிறது. க்ஷமையினாலேயே பகவானும் ஈப்வரனுமான ஹரியானவர் சீக்கிரத்தில் ஸந்தோஷத்தை யடைகிறார். (40) மூர்த்தாபிஷிக்தனான அரசனுடைய வதமானது ப்ராம்ஹணவதத்தைக்காட்டிலுங்கூட மேலானது. ஹே அங்க! அச்யுதனிடத்தில் புத்தியைச் செலுத்தினவனாய் தீர்த்தங்களை ஸேவித்தல்மூலம் பாபத்தைப் போக்கிக்கொள்ளுவாயாக என்றார். (41) (எ-று)

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண நவமஸ்கந்தத்தில் பரசுராமசரித்திரவர்ணனமென்ற பதினைந்தாவது அத்தியாயம் முற்றிற்று.



## பதினாருவது அத்தியாயம்.

(அ-கை) षोडशेऽथार्जुनसुतैर्जमदग्नौ हते मुहुः ।
रामात्क्षत्रवधः प्रोक्तो विश्वामित्रस्य चान्वयः ॥ १ ॥

## अथ षोडशोऽध्यायः ॥

श्रीशुक उवाच—पित्रोपशिक्षितो रामस्तथेति कुरुनन्दन । संवत्सरं तीर्थयात्रां चरित्वाश्रममाव्रजत् ॥ १ ॥ कदाचिद्रेणुका याता गङ्गायां पद्ममालिनम् । गन्धर्वराजं क्रीडन्तमप्सरोभिरपश्यत ॥ २ ॥ विलोकयन्ती क्रीडन्तमुदकार्थं नदीं गता । होमवेलां न सस्मार किञ्चिच्चित्ररथस्पृहा ॥ ३ ॥ कालात्ययं तं विलोक्य मुनेः शापविशङ्किता । आगत्य कलशं तस्थौ पुरोधाय कृताञ्जलिः ॥ ४ ॥ व्यभिचारं मुनिर्ज्ञात्वा पत्न्याः प्रकुपितोऽब्रवीत् । घ्नतैनां पुत्रकाः पापामित्युक्तास्ते न चक्रिरे ॥ ५ ॥ रामः

---

(க—ரை) பிறகு அர்ஜுனகுமாரர்களினால் ஜமக்னியானவர் கொல்லப்பட்டதும் அடிக்கடி ராமனால் செய்யப்பட்ட க்ஷத்திரிய வதமும் விஸ்வாமித்ரருடைய வம்சமும் இந்தப் பதினாறுவது அத்தியாயத்திலுபதேசிக்கப்படுகிறது. (1) (எ—று)

ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—ஹே குருநந்தன! பிதாவினாலுபதேசிக்கப்பட்ட ராமன் அப்படியே ஆகட்டுமென அங்கீகரித்து ஒரு வருஷம்முடிய தீர்த்தயாத்திரை செய்துவிட்டு ஆஸ்ரமத்தையடைந்தார். (1) ஒருஸமயம் ஜலம் கொண்டுவருவதற்காகச் சென்ற ரேணுகையானவள், பத்மமாலையை யணிந்தவனும் அப்ஸரஸ்ஸுகளுடன்கூட கங்கையில் விளையாடுகின்றவனுமான கந்தர்வ ராஜனைப் பார்த்தாள். (2) ஜலம் கொண்டுவருவதற்காக நதியையடைந்த அவள் க்ரீடிக்கின்ற சித்ரரதனைக் கண்டு கொஞ்சம் சித்திரரதனிடத்தில் ஆவல்கொண்டவளாய் ஹோமவேளையை மறந்தாள். (3) அந்த ஹோமகாலம் கடந்துபோனதைக் கண்டு முனியின் சாபம் வருமோ எனச் சங்கைகொண்டவளாய் ஆஸ்ரமம் வந்து குடத்தை அவருக்கெதிரில் வைத்து இருகைகளையும் கூப்பிக்கொண்டு நின்றாள். (4) பத்னியின் மானஸவ்யபிசாரத்தை முனியானவர் அறிந்து கோபங்கொண்டவராய் "ஹே புத்திரர்காள்! இந்தப் பாபியைக் கொல்லுங்கள்" என்றார். இவ்விதம் சொல்லப்பட்ட அவர்கள் சொல்படி செய்யாதிருந்தனர். (5) பிறகு தாயையும் ப்ராதாக்களையும் கொல்லும்படி பிதாவினால்தூண்

सञ्चोदितः पित्रा भ्रातॄन्मात्रा सहावधीत्। प्रभावज्ञो मुनेः सम्यक् समाधेस्तपसश्च सः ॥ ६ ॥ वरेण च्छन्दयामास प्रीतः सत्यवतीसुतः। वव्रे हतानां रामोऽपि जीवितं चास्मृतिं वधे ॥ ७ ॥ उत्तस्थुस्ते कुशलिनो निद्रापाय इवाञ्जसा। पितुर्विद्वांस्तपोवीर्यं रामश्चक्रे सुहृद्वधम् ॥ ८ ॥ येऽर्जुनस्य सुता राजन्स्मरन्तः स्वपितुर्वधम्। रामवीर्यपराभूता लेभिरे शर्म न क्वचित् ॥ ९ ॥

एकदाश्रमतो रामे सभ्रातरि वनं गते। वैरं सिसाधयिषवो लब्धच्छिद्रा उपागमन् ॥ १० ॥ दृष्ट्वाऽग्न्यगार आसीनमावेशितधियं मुनिम्। भगवत्युत्तमश्लोके जघ्नुस्ते पापनिश्चयाः ॥ ११ ॥ याच्यमानाः कृपणया

---

டப்பட்டவரும் முனியினது தபஸ் ஸமாதி இவற்றின் ப்ரபாவத்தை நன்கு அறிந்தவருமான அந்த ராமன் தாயாருடன்கூட ப்ராதாக்களை வெட்டிவிட்டார். (6) அதுகண்டு ஸந்தோஷித்த ஸத்யவதியின் புத்திரரான ஜமதக்னி மஹருஷி வேண்டிய வரனைக் கேட்டுக்கொள் என்றார். ராமனும், கொல்லப்பட்டவர்களுக்குத் திரும்பவும் ஜீவிதத்தையும், கொல்லப்பட்டோமென்ற நினைவு இல்லாதிருத்தலையும் வரனகக் கேட்டுக்கொண்டார். (7) அவர்கள் தூக்கத்தின் முடிவில்போல அனுயாஸமாக க்ஷேமத்துடன் கூடினவர்களாகவே எழுந்தனர். பரசுராமன் பிதாவின் தபோவீர்யத்தையறிந்தவராக இருப்பதுபற்றி ஸுஹிருத்துக்களின் வதத்தைச் செய்தார். (8) ஹே ராஜன்! கார்த்தவீரியார்ஜுனனுடைய புத்திரர்கள் எவர்களோ அவர்கள் பிதாவின் வதத்தை நினைத்துக்கொண்டும் பரசுராமனுடைய வீரியத்தினல் விரப்பட்டவர்களுமாக இருப்பதுபற்றி ஒருஸமயத்திலும் சுகத்தை யடையவேயில்லை. (9)

ஒருஸமயம் ராமன் ப்ராதாக்களுடன்கூடக் காட்டுக்குச் சென்றபொழுது வைரத்தை ஸாதித்துக்கொள்ள எண்ணங்கொண்டவர்களாய் அவகாசத்தையடைந்து ஆஶ்ரமத்துக்கு வந்தனர். (10) பாபகாரியத்தில் நிஶ்சயங்கொண்ட அவர்கள் அக்னிஹோத்திர சாலையில் உட்கார்ந்துகொண்டு உத்தமஶ்லோகனன பகவானிடத்திலீடுபட்ட புத்தியையுடையவரான முனியை வெட்டினர். (11) மிக்கத் தீனையும் ராமமாதாவுமான ரேணுகையினல் யாசிக்கப்படி

रामभात्रातिदारुणाः । प्रसह्य शिर उत्कृत्य निन्युस्ते क्षत्रबन्धवः ॥ १२ ॥
रेणुका दुःखशोकार्ता निघ्नन्त्यात्मानमात्मना । राम रामेहि तातेति विचु-
क्रोशोच्चकैः सती ॥ १३ ॥ तदुपश्रुत्य दूरस्थो हा रामेत्यार्तवत्स्वनम् ।
त्वरयाश्रममासाद्य ददृशे पितरं हतम् ॥ १४ ॥ तद्दुःखरोषामर्षार्तिशोक-
वेगविमोहितः । हा तात साधो धर्मिष्ठ त्यक्त्वास्मान्स्वर्गतो भवान् ॥१५॥
विलप्यैवं पितुर्देहं निधाय भ्रातृषु स्वयम् । प्रगृह्य परशुं रामः क्षत्रान्ताय
मनो दधे ॥ १६ ॥ गत्वा माहिष्मतीं रामो ब्रह्मघ्नविहतश्रियम् । तेषां स
शीर्षभी राजन्मध्ये चक्रे महागिरिम् ॥ १७ ॥ तद्रक्तेन नदीं घोरामब्रह्मण्य

---

னுங்கூட மிகக் குரூரர்களான அந்த க்ஷத்திரியாபசதர்கள் பலாத்காரமாகத் தலையை யறுத்துப் போட்டு விட்டனர். (12) பதிவ்ரதையான ரேணுகை துக்கம் சோகம் இவற்றால் பீடிக்கப்பட்டவளாகவும் தன் கையினால் தனது மார்பிலடித்துக்கொண்டும் ஹே ராம! ஹே ராம! ஹே தாத! என இறைந்துக் கதறினாள். (13) அடே ராம! எனக் கஷ்டத்துடன் சொல்லப்பட்ட மாதாவின் குரலை தூரத்திலிருந்த ராமன்கேட்டு வேகமாக ஆஸ்ரமத்தை யடைந்து பிதா கொல்லப்பட்டிருப்பதைக் கண்டார். (14) அந்த பிதிருமரணத்தினாலுண்டான துக்கம் கோபம் பொறாமை கஷ்டம் சோகம் இவற்றின் வேகத்தினால் மிக்க மோஹத்தையடைந்தவராய் 'ஹா தாத! ஸாதோ! தார்மிஷ்ட! எங்களைவிட்டு நீர் ஸ்வர்க்கத்தையடைந்துவிட்டீரே' எனப் புலம்பிப் பிதாவின் தேஹத்தைப் பிராதாக்களிடம் வைத்துவிட்டுத் தான் பரசுவைக் கையிலெடுத்துக்கொண்டு ராமன் க்ஷத்திரியஜாதியையழிக்க மனங்கொண்டார். (15–16) ஹே ராஜன்! அந்த ராமன் ப்ரம்ஹஹத்தி செய்தவர்களினால் போக்கப்பட்ட சோபையையுடைய மாஹிஷ்மதி நகரத்தை யடைந்து அவர்களின் தலைகளினால் மாஹிஷ்மதி நரகத்தின் நடுவில் பெரியமலையை ஏற்படுத்தினார். (அவர்களுடைய தலைகளை வெட்டி மலைபோலக் குவித்தார்.) (17) அவர்களின் ரக்தத்தினால் ப்ராம்ஹண பக்தியற்றவர்களுக்குப் பயத்தை யுண்டுபண்ணக்கூடியதும், கோரமுமான நதியை ஏற்படுத்தினார். க்ஷத்திரியஜாதியானது (உலகில்) அன்னியாயமான காரியத்தைச் செய்யும்பொழுது

भयावहाम् । हेतुं कृत्वा पितृवधं क्षत्रेऽमङ्गलकारिणि ॥ १८ ॥ त्रिःसप्त-
कृत्वः पृथिवीं कृत्वा निःक्षत्त्रियां प्रभुः । स्यमन्तपञ्चके चक्रे शोणितो-
दान् ह्रदान्नव ॥ १९ ॥ पितुः कायेन सन्धाय शिर आदाय बर्हिषि । सर्व-
देवमयं देवमात्मानमयजन्मखैः ॥ २० ॥

ददौ प्राचीं दिशं होत्रे ब्रह्मणे दक्षिणां दिशम् । अध्वर्यवे प्रतीचीं वै
उद्गात्रे उत्तरां दिशम् ॥ २१ ॥ अन्येभ्योऽवान्तरदिशः कश्यपाय च मध्यतः ।
आर्यावर्तमुपद्रष्ट्रे सदस्येभ्यस्ततः परम् ॥ २२ ॥ ततश्चावभृथस्नानविधू-
ताशेषकिल्बिषः । सरस्वत्यां ब्रह्मनद्यां रेजे व्यभ्र इवांशुमान् ॥ २३ ॥
स्वदेहं जमदग्निस्तु लब्ध्वा संज्ञानलक्षणम् । ऋषीणां मण्डले सोऽभूत्सप्त-

---

பிதாவின் வதத்தை நிமித்தமாகக்கொண்டு ப்ரபுவான ராமன் *இருபத்தோரு தடவை பூமியை க்ஷத்திரியர்களற்றதாகச் செய்து ஸ்யமந்தபஞ்சகமென்ற க்ஷேத்திரத்தில் ரக்தமயமான ஜலத்தையுடைய ஒன்பது மடுக்களை யுண்டுபண்ணினார். (18) பிதாவினுடைய தலையை உடலுடன் சேர்த்து தர்ப்பத்தில் படுக்கவைத்து ஸர்வ வேதமயனும், தனது ஸ்வரூபபூதனுமான தேவனை சில இஷ்டியே தங்களினால் ஆராதித்தார். (20)

அந்த யாகத்தில் கிழக்கு திக்கை ஹோதாவுக்கும், தெற்கு திக்கை ப்ரம்ஹாவுக்கும், மேற்குதிக்கை அத்வர்யுவுக்கும், வடக்கு திக்கை உத்காதாவுக்கும், இடையிலுள்ள திக்குகளை மற்ற ருத்விக்குகளுக்கும், மத்யதேசத்தைக் கஶ்யபருக்கும், ஆர்யாவர்த்தத்தை உபத்ரஷ்டா என்ற ருத்விக்குக்கும், மத்தியதேசத்துக்கு மேலுள்ளவிடத்தை ஸபையிலுள்ளவர்களுக்கும் கொடுத்துப் பிறகு ப்ரம்ஹநதியான ஸரஸ்வதியில் செய்யப்பட்ட அவபிருதஸ்னானத்தினால் போக்கப்பட்ட எல்லாப் பாபங்களுமுள்ளவராய் மேகமில்லாதவிடத்திலுள்ள சூரியன்போல விளங்கினார். (21-23) அந்த ஜமதக்னியோவெனில் ஸம்க்ஞானத்தை=முன்பின்னுள்ள

---

* தாயான ரேணுகை தனது கையினால் இருபத்தோரு தடவை அடித்துக்கொண்டபடியால் ராமனும் இருபத்தோருதடவை க்ஷத்திரியர்களை வதஞ்செய்தாரெனப் பெரியார் சொல்லுகின்றனர்.

मो रामपूजित: ॥ २४ ॥ जामदग्न्योऽपि भगवान्रामः कमललोचनः । आगामिन्यन्तरे राजन्वर्तयिष्यति वै बृहत् ॥ २५ ॥ आस्तेऽद्यापि महेन्द्राद्रौ न्यस्तदण्डः प्रशान्तधीः। उपगीयमानचरितः सिद्धगन्धर्वचारणैः॥ २६ ॥ एवं भृगुषु विश्वात्मा भगवान्हरिरीश्वरः । अवतीर्य परं भारं भुवोऽहन्बहुशो नृपान् ॥ २७ ॥ गाधेरभून्महातेजाः समिद्ध इव पावकः । तपसा क्षात्त्रमुत्सृज्य यो लेभे ब्रह्मवर्चसम् ॥ २८ ॥ विश्वामित्रस्य चैवासन्पुत्रा एकशतं नृप । मध्यमस्तु मधुच्छन्दा मधुच्छन्दस एव ते ॥ २९ ॥

पुत्रं कृत्वा शुनःशेपं देवरातं च भार्गवम् । आजीगर्तं सुतानाह ज्येष्ठ एष प्रकल्प्याम् ॥ ३० ॥ यो वै हरिश्चन्द्रमखे विक्रीतः पुरुषः पशुः। स्तु-

---

தை அனுஸந்தானஞ் செய்தல்ரூபமான நினைவை, ஸ்வரூபமாகவுடைய தனது தேஹத்தையடைந்து ருஷிகளின் மண்டலத்தில் ஏழாவது ருஷியாகவும் ராமனால் பூஜிக்கப்பட்டவராகவுமானார். (24) ஹே ராஜன்! ஜமதக்னியின் குமாரரும் புண்டரீகாக்ஷனும் பகவானுமான ராமனேவெனில் அடுத்த மன்வந்தரத்தில் வேதத்தை ப்ரவிருத்திக்கச் செய்யப்போகிறார். (அதாவது:—வேதப்ரவர்த்தகர்களான ஸப்தருஷிகளுக்குள் ஒருவராக ஆகப்போகிறார்.) (25) அவர் ஸித்தர் கந்தர்வர் சாரணர் இவர்களால் கானஞ்செய்யப்படுகின்ற சரித்திரத்தையுடையவராயும், ப்ரசாந்தமான புத்தியையுடையவராயும்,ஆனதுபற்றியே ஆயுதங்களற்றவராயுமாக இப்பொழுதுங்கூட மஹேந்திரமலையில் வஸித்து வருகிறார். (26) இவ்விதம் விஸ்வாத்மாவும் ஈஸ்வரனும் பகவானுமான ஹரியானவர் ப்ருகுக்களிடத்தில் அவதரித்து பெரும்பாலர்களான அரசர்களைக் கொன்று அதிகமான பூமியின் பாரத்தை இரக்கினர். (27) நன்கு எறிகின்ற அக்னிபோல மஹத்தான தேஜஸ்ஸையுடைய விஸ்வாமித்திரர் காதியினிடமிருந்து உண்டானர். இவர் தபஸ்ஸினல் க்ஷத்திரியசரீரத்தைப் போக்கிக்கொண்டு ப்ரம்ஹவர்ச்சஸத்தை=ப்ராம்ஹணசரீரத்தை, அடைந்தார். (28) ஹே நருப! விஸ்வாமித்திருக்கு நூற்றொருபுத்திரர்கள்பிறந்தனர். அவர்களுள் நடுவிலுண்டானவன் மதுச்சந்தஸ் எனப்படுவான். ஆனதுபற்றியே அவர்கள் யாவருமே மதுச்சந்தஸ்ஸுகள் என்று அழைக்கப்பட்டனர். (29)

त्वा देवान्प्रजेशादीन्मुमुचे पाशबन्धनात् ॥ ३१ ॥ यो रातो देवयजने देवै-
र्गाधिषु तापसः । देवरात इति ख्यातः शुनःशेपः स भार्गवः ॥ ३२ ॥
ये मधुच्छन्दसो ज्येष्ठाः कुशलं मेनिरे न तत् । अशपत्तान्मुनिः क्रुद्धो
म्लेच्छा भवत दुर्जनाः ॥ ३३ ॥ स होवाच मधुच्छन्दाः सार्धं पञ्चाशता
ततः । यन्नो भवान्सञ्जानीते तस्मिंस्तिष्ठामहे वयम् ॥ ३४ ॥ ज्येष्ठं मन्त्र-
दृशं चक्रुस्त्वामन्वञ्चो वयं स्म हि । विश्वामित्रः सुतानाह वीरवन्तो
भविष्यथ । ये मानं मेऽनुगृह्णन्तो वीरवन्तमकर्त माम् ॥ ३५ ॥ एष वः

---

அஜீகர்த்தருடைய புத்திரரும் ப்ருகுவம்சத்தில் சேர்ந்தவரும் தேவராதருமான சுனஃஸேபனைப் புத்திரனாகச் செய்துகொண்டு தனது புத்திரர்களைப் பார்த்து "இவன் உங்களுள் மூத்தவனாகக் கல்பிக்கப்படட்டும். (30) எவன் ஹரிஸ்சந்திரனுடைய யாகத்தில் புருஷபசுவாக விலைக்கு விற்கப்பட்டு ப்ரம்ஹதேவர் முதலிய தேவர்களை ஸ்துதித்து பாசபந்தத்திலிருந்து விடுபட்டானோ, தாபஸனான எவன் தேவர்களைக் குறித்துச் செய்யும் யாகத்தில் தேவர்களால் காப்பாற்றப்பட்டவனாய் தேவராதன் எனப் பிரஸித்தி பெற்றானோ அந்த சுனஃஸேபன் ப்ருகுவம்சத்தவனாயினும் காதியின் வம்சத்திற் பிறந்த உங்களுள் ஒருவனேயாவான்" என்றார். (31 32) மதுச்சந்தஸ்ஸு களான விஸ்வாமித்ரகுமாரர்களுக்குள் ஜ்யேஷ்டர்கள் எவர்களோ அவர்கள் அவனுடைய ஜ்யேஷ்டத்வத்தை நல்லதென நினைக்கவில்லை. உடனே முனியான விஸ்வாமித்திரர் கோபங்கொண்டு "ஹே துர்ஜனர்களே! நீங்கள் ம்லேச்சர்களாக ஆகக்கடவீர்" என அவர்களைச் சபித்தார். (33) நடுப்புத்திரனான அந்த மதுச்சந்தஸ் என்பவர் மற்ற ஐம்பது பேர்களுடன்கூட "பிதாவான நீர் எங்களுக்கு ஜ்யேஷ்டத்வத்தையோ கனிஷ்டத்வத்தையோ எதை நினைக்கின்றீரோ அதில் நாங்களிருக்கிறோம்" என்றான். (34) என்று சொல்லி "நாங்கள் யாவரும் உன்னை யனுஸரித்தவர்களான கனிஷ்டர்களாகவே இருக்கிறோம்" என்பதாய் மந்திரத்ரஷ்டாவான சுனஃஸேபனை ஜ்யேஷ்டனாகச் செய்தனர். விஸ்வாமித்திரர் புத்திரர்களைப் பார்த்து "எந்த நீங்கள் என்னுடைய பூஜ்யத்வத்தை அனுஸரித்தவர்களாய்க்

कुशिका वीरो देवरातस्तमन्वित । अन्ये चाष्टकहारीतजयक्रतुमदादय:
॥ ३६ ॥ एवं कौशिकगोत्रं तु विश्वामित्रैः पृथग्विधम् । प्रवरान्तरमापन्नं
तद्धि चैवं प्रकल्पितम् ॥ ३७ ॥

इति श्रीमद्भागवते महापुराणे नवमस्कन्धे परशुरामकृत क्षत्त्रियवध
विश्वामित्रान्वयवर्णनं नाम षोडशोऽध्याय: ॥ १६ ॥



கொண்டு என்னை சிறந்த புத்திரனுள்ளவனாகச் செய்தீர்களோ அந்த நீங்கள் சிறந்த புத்திரனுள்ளவர்களாக ஆகுங்கள். (35) ஹே குசிகர்காள்! இந்தத் தேவராதன் உங்களைச் சேர்ந்த கௌசிகனேயாவான். எக்காரணம்பற்றி வீரனோ=எனது புத்திரனோ, அக்காரணம்பற்றி அந்த இவனைப் பின்பற்றி நடவுங்கள்" என்றார். விஸ்வாமித்திரருக்கு அஷ்டகர், ஹாரீதர், ஜயர், க்ருதுமான் இவர்களை யாதியாகக்கொண்ட மற்ற புத்திரர்களும் இருந்தனர். (36) இவ்விதம் கௌசிககோத்திரமானது விஸ்வாமித்திர புத்திரர்களினால் பலதறப்பட்ட பிரிவுள்ளதாக ஆகிவிட்டது. அதுவும் வேறு ப்ரவரத்தை யடைந்துவிட்டது. அதாவது:—தேவராதனை ஜ்யேஷ்டனாகக்கொண்டு அது கல்பிக்கப்பட்டதே அதன் காரணமாகும்.

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண நவமஸ்கந்தத்தில்
பரசுராமகிருத க்ஷத்திரியவதவர்ணனமும் விஸ்வாமித்ரான்வய
வர்ணனமுமென்ற பதினாருவது அத்தியாயம் முற்றிற்று.



## நாராயணீயம்.

### முப்பத்தாருவது தசகம்.

(அ—ரை) தத்தாத்ரேயாவதாரத்தைச் சொல்லுகிறார்—

अत्रेः पुत्रतया पुरा त्वमनसूयायां हि दत्ताभिधो
जातः शिष्यनिबन्धतन्द्रितमनाः स्वस्थश्चरन् कान्तया ।
दृष्टो भक्ततमेन हेहयमहीपालेन तस्मै वरा-
नष्टैश्वर्यमुखान् प्रदायददिथ स्वेनैव चान्ते वधम् ॥ ३१ ॥

(ப–ரை) दत्ताभिधः=தத்தர் என்ற பெயருள்ளவராய் पुरा= முன்னர் अत्रेः=அத்ரி மஹருஷிக்கு अनसूयायाम्=அனஸூயையி னிடத்தில் पुत्रतया=புத்திரத்தன்மையுடன் जातः=பிறந்த त्वम्=நீர் शिष्यनिबन्धतन्द्रितमनाः—शिष्य=சிஷ்யர்களின் निबन्ध=நிர்ப்பந்தத் தில் तन्द्रित=அலுத்துப்போன मनाः=மனதுள்ளவராய் कान्तया= பத்னியுடன்கூட स्वस्थः=ஸ்வஸ்தராக=ஆத்மாராமராக, चरन्=ஸஞ் சரிக்குங்கால் भक्ततमेन=பக்தர்களுக்குள் சிறந்தவனான हैहयमही- पालेन = கார்த்தவீர்யார்ஜுனனால் दृष्टः=காணப்பட்டவராய்க் கொ ண்டு तस्मै = அவனுக்கு अष्टैश्वर्यमुखान् = அணிமா முதலிய எட்டு யோகஸித்திகளை ஆதியாகக்கொண்ட वरान्=வரன்களை प्रदाय=கொ டுத்து अन्ते=முடிவில் स्वेनैव=தன்னாலேயே वधम्=வதத்தையும் ददि- थ=வரனாகக் கொடுத்தீர். (31) (எ–று)

सत्यं कर्तुमथार्जुनस्य च वरं तच्छक्तिमात्रानतं
ब्रह्मद्वेषि तदाखिलं नृपकुलं हन्तुञ्च भूमेर्भरम् ।
सञ्जातो जमदग्नितो भृगुकुले त्वं रेणुकायां हरे
रामो नाम तदात्मजेष्ववरजः पित्रोरधाः सम्मदम् ॥ ३२ ॥

(ப–ரை) अथ=பிறகு हरे !=ஹே ஹரே ! अर्जुनस्य=கார்த்தவீர் யார்ஜுனனுடைய वरम्=வரனை सत्यम्=ஸத்யமாக कर्तुम्=செய்வ தற்கு வேண்டியும் तदा=அச்சமயத்தில் तच्छक्तिमात्रानतम्=அந்தக் கார்த்தவீர்யார்ஜுனனுடைய சக்தியால்மட்டும் கொஞ்சம் குறைக் கப்பட்ட ப்ராம்ஹண்யபத்திரவத்தையுடையதும் ஆயினும் ब्रह्मद्वे- षि=மனத்தில் ப்ராம்ஹண த்வேஷமுள்ளதும், भूमेः=பூமிக்கு भरम्= பாரமாயானதுமான अखिलम्=ஸமஸ்தமான नृपकुलम्=ராஜகுலத் தை हन्तुञ्च=கொல்லுவதற்கு வேண்டியும், भृगुकुले=ப்ருகுகுலத் தில் जमदग्नितः=ஜமதக்னி மஹருஷிக்கு रेणुकायाम्=ரேணுகையினி டத்தில் तदात्मजेषु=அவர்களின் புத்திரர்களுக்குள் अवरजः=கடைசி யிலுண்டானவராகவும் रामो नाम=ராமன் என்ற பெயருள்ளவராக வும் त्वम्=நீர் सञ्जातः=பிறந்தவராய் पित्रोः=மாதாபிதாக்களுக்கு स- म्मदम्=ஸந்தோஷத்தை अधाः=உண்டுபண்ணினீர். (32) (எ–று)

लब्धाम्नायगणश्चतुर्दशवया गन्धर्वराजे मना-
गासक्तां किल मातरं प्रति पितुः क्रोधाकुलस्याज्ञया ।

**तातज्ञातिगसोदरैः सममिमां छित्त्वाथ शान्तात्पितु-**
**स्तेषां जीवनयोगमापिथ वरं माता च तेऽदाद्वरम् ॥ ३३ ॥**

(ப-ரை) लब्धाम्नायगण:=அத்யயனஞ்செய்யப்பட்ட வேதக் கூட்டத்தை யுடையவரும், चतुर्दशवया:=பதினான்கு வயதுள்ளவரு மான நீர் गन्धर्वराजे=கந்தர்வராஜனிடத்தில் मनाक्=அற்பம் आसक्ताम्=மானஸமான பற்றுக்கொண்ட मातरं प्रति=தாயைக் குறித்து क्रोधाकुलस्य=கோபத்தினால் கலங்கின पितु:=பிதாவான ஜமதக்னி யினுடைய आज्ञया=ஆக்ஞையினால் इमाम्=இந்தத் தாயை तातज्ञातिगसोदरैः समम्=பிதாவின் ஆக்ஞையை மீறின ஸஹோதரர்களுடன் கூட छित्वा=வெட்டிவிட்டு अथ=பிறகு शान्तात्=கோபமிவிருத்தியை யடைந்தவரான पितु:=பிதாவினிடமிருந்து तेषाम्=அவர்களுக்கு जीवनयोगम्=உயிருடன் சேர்க்கையேற்படல் ரூபமான वरम्=வரனை आपिथ=அடைந்தீர். माता च=தாயாரும் ते=உமக்கு वरम्=வரனை अदात्=கொடுத்தாள். (33) (எ-று)

**पित्रा मातृमुदे स्तवाहृतवियद्धेनोर्निजादाश्रमा-**
**त्प्रस्थायाथ भृगोर्गिरा हिमगिरावाराध्य गौरीपतिम् ।**
**लब्ध्वा तत्परशुं तदुक्तदनुजच्छेदी महास्त्रादिकं**
**प्राप्तो मित्रमथाकृतव्रणमुनिं प्राप्यागमः स्वाश्रमम् ॥ ३४ ॥**

(ப-ரை) अथ=பிறகு (त्वम्=நீர்) पित्रा=ஜமதக்னி மஹருஷி யினால் मातृमुदे=மாதாவான ரேணுகையின் ஸந்தோஷத்துக்கு வேண்டி स्तवाहृतवियद्धेनो:=ஸ்துதிமூலம் வரவழைக்கப்பட்ட காம தேனுவை யுடையதும், निजात्=சொந்தமானதுமான आश्रमात्=ஆஶ்ரமத்திலிருந்து भृगो:=பாட்டனாரான ருசீகருடைய गिरा=வார்த்தையினால் प्रस्थाय=கிளம்பி हिमगिरौ=ஹிமாலயத்தில் गौरीपतिम्=மஹாதேவனை आराध्य=ஆராதித்து तत्परशुम्=அவருடைய பரசு என்ற ஆயுதத்தை लब्ध्वा=அடைந்து तदुक्तदनुजच्छेदी=அவ ரால் சொல்லப்பட்ட அஸுரனைக் கொன்றவராயும் महास्त्रादिकम्=அவரிடமிருந்தே பெரிய அஸ்திரம் முதலியவற்றையும் प्राप्त:=அடைந்தவராயும்கொண்டு अथ=பிறகு अकृतव्रणमुनिम्=சிங்கத்தின் வாயி லிருந்து ரக்ஷிக்கப்பட்ட அகிருதவ்ரணர் என்ற முனியை मित्रम्=

மித்ரராக प्राप्य=அடைந்து स्वाश्रमम्=சொந்தமான ஆஶ்ரமத்தை अगम:=அடைந்தீர். (34) (எ-று)

**आखेटोपगतोऽर्जुनः सुरगवीसंप्राप्तसम्पद्गणै-**
**स्त्वत्पित्रा परिपूजितः पुरगतो दुर्मन्त्रिवाचा पुनः ।**
**गां क्रेतुं सचिवं न्ययुङ्क्त कुधिया तेनापि रुन्धन्मुनि**
**प्राणक्षेपसरोषगोहतचमूचक्रेण वत्सो हृतः ॥ ३५ ॥**

(ப-ரை) आखेटोपगत:=வேட்டையாடுமிடத்து ஆஶ்ரமத்துக்கு வந்த अर्जुन:=கார்த்தவீர்யார்ஜுனன் सुरगवीसंप्राप्तसम्पद्गणै:=காமதேனுவினிடமிருந்து அடையப்பட்ட திவ்யபோகங்களினுல் त्वत्पित्रा=உமது பிதாவான ஜமதக்னியினுல் परिपूजित:=நன்கு உபசரிக்கப்பட்டவனுயும் पुरगत:=பட்டினத்தை யடைந்தவனுயும் கொண்டு पुन:=மறுபடியும் दुर्मन्त्रिवाचा=கெட்ட மந்திரியின் வார்த்தையினுல் गाम्=காமதேனுவை क्रेतुम्=வாங்கி வருவதற்காக सचिवम्=மந்திரியை न्ययुङ्क्त=உமது பிதாவினிடமனுப்பினுன். कुधिया=கெட்ட புத்தியுள்ள तेन=அந்த மந்திரியினுல் रुन्धन्मुनिप्राणक्षेपसरोषगोहतचमूचक्रेणापि=பசுவின் ஹரணத்தைத் தடுக்கின்ற முனியின் ப்ராணக்ஷேப(வத)த்தினுல் கோபங்கொண்ட காமதேனுவினுல் கொல்லப்பட்ட ஸைன்னியஸமூஹத்தை யுடையவனுயினுங்கூட वत्स:=காமதேனுவின் கன்றுனது हृत:=கொண்டுபோகப்பட்டது. (35)

**शुक्रोज्जीवित तातवाक्यचलितक्रोधोऽथ सख्या समं**
**बिभ्रद्ध्यातमहोदरोपनिहितं चापं कुठारं शरान् ।**
**आरूढः सहवाहयन्तृकरथं माहिष्मतीमाविशन्**
**वाग्भिर्वत्समदाशुषि क्षितिपतौ सम्प्रास्तुथाः सङ्गरम् ॥ ३६ ॥**

(ப-ரை) अथ=பிறகு त्वम्=நீர் शुक्रोज्जीवित्ततातवाक्यचलितक्रोध:=சுக்கிராசாரியரால் பிழைபிக்கப்பட்ட பிதாவின் வாக்கியத்தினுல் உண்டுபண்ணப்பட்ட கோபத்தையுடையவராயும் सख्या समम्=தோழரான அகிருதவ்ரணமுனியுடன்கூட ध्यातमहोदरोपनिहितम्=தியானிக்கப்பட்ட மஹோதரன் என்ற சிவபார்ஷதனுல் அருகில் கொண்டுவந்து வைக்கப்பட்ட चापम्=வில்லையும் कुठारम्=கோ

டறியையும் शरान्=பாணங்களையும் बिभ्रत्=தரிக்கின்றவராயும் सह-वाहयन्तृकरथम्=குதிரை ஸாரதி இவற்றுடன்கூடின தேரில் आरूढः= ஏறினவராயும் माहिष्मतीम्=மாஹிஷ்மதீ பட்டினத்தில் आविशन्= நுழைந்தவராயும் கொண்டு वाग्भिः=நல்லவார்த்தைகளினால் क्षिति-पतौ=அரசன் वत्सम्=கன்றை अदाशुषि=கொடுக்காதபொழுது सङ्गरम्=யுத்தத்தை सम्प्रास्तुथाः=தொடங்கினீர். (36) (எ-று)

पुत्राणामयुतेन सप्तदशभिश्चाक्षौहिणीभिर्महा-
सेनानीभिरनेकमित्रनिवहैर्व्याजृम्भितायोधनः ।
सद्यस्त्वत्ककुठारबाणविदळन्निश्शेषसैन्योत्करो
भीतिप्रद्रुतनष्टशिष्टतनयस्त्वामापतद्धैहयः ॥ ३७ ॥

(ப-ரை) पुत्राणाम्=புத்திரர்களின் अयुतेन=பதினாயிரத்தினாலும், सप्तदशभिः=பதினேழு अक्षौहिणीभिः=அக்ஷௌஹிணிஸேனைகளினாலும், महासेनानीभिः=பெரிய ஸேனாதிபதிகளினாலும், अनेकमित्रनिवहैश्च=பலமித்திரக்கூட்டங்களினாலும் व्याजृम्भितायोधनः=விருத்திசெய்யப்பட்டயுத்தத்தை யுடையவனும், सद्यः=அப்பொழுதே त्वत्ककुठारबाणविदळन्निश्शेषसैन्योत्करः=உம்முடையதான கோடறி பாணம் இவற்றால் பிளக்கப்பட்ட எல்லா ஸைன்யங்களின் கூட்டங்களையுடையவனும், भीतिप्रद्रुतनष्टशिष्टतनयः=பயத்தினால் ஓடினவர்களும் நஷ்டமானவர்களும், போக எஞ்ஜின புத்திரர்களை யுடையவனுமான हैहयः=கார்த்தவீர்யார்ஜுனன் त्वाम्=உம்மைக் குறித்து आपतत्=ஓடிவந்தான். (37) (எ-று)

लीलावारितनर्मदाजलवलल्लङ्केशगर्वापह-
श्रीमद्बाहुसहस्रमुक्तबहुशस्त्रास्त्रं निरुन्धन्नमुम् ।
चक्रे त्वय्यथ वैष्णवेऽपि विफले बुद्ध्वा हरिं त्वां मुदा
ध्यायन्तं छितसर्वदोषमवधीः सोगात्परं ते पदम् ॥ ३८ ॥

(ப-ரை) लीलावारितनर्मदाजलवलल्लङ्केशगर्वापहश्रीमद्बाहुसहस्रमुक्तबहुशस्त्रास्त्रम्--लीला=விளையாட்டின் நிமித்தம் वारित=ஆயிரம் கைகளினால் தடுக்கப்பட்ட नर्मदाजल=நர்மதையின் ஜலத்தில் वलत्=மிதக்கின்ற लङ्केश=ராவணனுடைய गर्व=கர்வத்தை अपह=போக்குகின்ற

னவும் श्रीमत्=சோபையுள்ளனவுமான बाहुसहस्र=ஆயிரம் கைகளி னல் मुक्त=ப்ரயோகிக்கப்பட்ட बहु=அதிகங்களான शस्त्रास्त्रम्=சஸ் திரம் அஸ்திரம் இவற்றை யுடையவனை अमुम्=இந்தக் கார்த்தவீர் யார்ஜுனனை निरुन्धन्=தடுத்தவரான त्वम्=நீர் अथ=பிறகு त्वयि= உம்மிடத்தில் அவனால் ப்ரயோகிக்கப்பட்டதும் वैष्णवे=வைஷ்ணவ முமான चक्रेऽपि=சக்கிராயுதமுங்கூட विफले=பயனற்றதாக (जाते= ஆனபொழுது) त्वाम्=உம்மை हरिम्=ஹரியாக बुद्ध्वा=அறிந்துகொ ண்டு ध्यायन्तम्=உம்மையே தியானஞ்செய்கின்றவனும், அதன்மூலம் छितसर्वदोषम्=நஷ்டமான எல்லாத் தோஷத்தை யுடையவனுமான (तम्=அவனை) अवधीः=கொன்றீர். सः=அந்தக் கார்த்தவீர்யார்ஜு னன் ते=உம்முடைய परम्=மேலான पदम्=வைகுண்டத்தை अगात्= அடைந்தான். (38) (எ-று)

भूयोऽमर्षितहैहयात्मजगणैस्ताते हते रेणुका-
माघ्नानां हृदयन्निरीक्ष्य बहुशो घोरां प्रतिज्ञां वहन् ।
ध्यानानीतरथायुधस्त्वमकृथा विप्रद्रुहः क्षत्रियान्
दिक्चक्रेषु कुठारयन्विशिखयन्निःक्षत्त्रियां मेदिनीम् ॥

(ப-ரை) भूयः=மறுபடியும் अमर्षित हैहयात्मजगणैः=கோபங் கொண்ட கார்த்தவீர்யார்ஜுன புத்திரர்களின் கூட்டங்களினல் ताते=உமது பிதாவான ஜமதக்னி மஹருஷியானவர் हते=கொல்லப் பட்டபொழுது हृदयम्=மார்பில் बहुशः=இருபத்தோரு தடவை आघ्नानाम्=அடித்துக்கொள்ளுகின்ற रेणुकाम्=தாயான ரேணுகை யை निरीक्ष्य=பார்த்து घोराम्=கோரமான प्रतिज्ञाम्=ப்ரதிக்ஞையை அதாவது:—இருபத்தோரு தடவை க்ஷத்திரியர்களைக் கொல்லுகி றேன் என்ற ப்ரதிக்ஞையை, वहन्=தரித்துகொண்டு त्वम्=நீர் ध्या- नानीतरथायुधः=தியானத்தினல் வரவழைக்கப்பட்ட ரதம் ஆயுதம் இவற்றை யுடையவராய் दिक्चक्रेषु=திக்கோடிகளிலுள்ள विप्रद्रुहः= ப்ராம்ஹணத்ரோஹிகளான க்ஷத்திரியர்களை कुठारयन्=கோடறியி னல் கொன்றும், विशिखयन्=பாணத்தினல் கொன்றும் मेदिनीम्= பூமியை निःक्षत्त्रियाम्=க்ஷத்திரியர்களற்றதாக अकृथाः=செய்தீர்.

तातोज्जीवनकृन्नृपालककुलं त्रिःसप्तकृत्वो जयन्
सन्तर्प्याथ समन्तपञ्चकमहारक्तह्रदौघे पितॄन् ।
यज्ञे क्ष्मामपि काश्यपादिषु दिशन् साल्वेन युद्ध्यन्पुनः
कृष्णोऽमुं निहनिष्यतीति शमितो युद्धात्कुमारैर्भवान् ॥

(ப-ரை) भवान्=நீர் तातोज्जीवनकृत्=பிதாவைப் பிழைக்கச் செய்கின்றவராயும் त्रिःसप्तकृत्वः=இருபத்தோரு தடவை नृपालककुलम्=க்ஷத்ரியகுலத்தை जयन्=ஜயிக்கின்றவராயும் अथ=பிறகு समन्तपञ्चकमहारक्तह्रदौघे=ஸமந்தபஞ்சகமென்ற க்ஷேத்திரத்தில் அமைக்கப்பட்ட ஒன்பது பெரிய ரக்தமடுவில் पितॄन्=பிதிருக்களை सन्तर्प्य=தர்ப்பணத்தினால் திருப்த்தி செய்வித்தவராயும் यज्ञे=யாகத்தில் क्ष्माम्=பூமியை काश्यपादिषु=காஶ்யபர் முதலியோரிடத்தில் दिशन्नपि=கொடுத்தவராயினும் கூட पुनः=மறுபடியும் साल्वेन=ஸால்வனுடன்கூட युद्ध्यन्=யுத்தஞ் செய்பவராய்க் கொண்டு अमुम्=இவனை कृष्णः=கிருஷ்ணன் निहनिष्यति = கொல்லப்போகிறார். इति=என்பதாய் कुमारैः=ஸனத்குமாராதிகள்மூலம் (ज्ञात्वा=அறிந்துகொண்டு) युद्धात्=யுத்தத்திலிருந்து शमितः=சாந்தராக ஆனீர். (40) (எ-று)

न्यस्यास्त्राणि महेन्द्रभूभृति तपस्तन्वन्पुनर्मज्जितां
गोकर्णावधि सागरेण धरणीं दृष्ट्वार्थितस्तापसैः ।
ध्यातेष्वासधृतानलास्त्रचकितं सिन्धुं स्रुवक्षेपणा-
दुत्सार्योद्धृतकेरळो भृगुपते वातेश संरक्ष माम् ॥ ४१ ॥

(ப-ரை) अस्त्राणि = அஸ்திரங்களை महेन्द्रभूभृति=மஹேந்திர மலையில் न्यस्य=வைத்துவிட்டு तपः=தவத்தை तन्वन्=செய்யும் பொழுது गोकर्णावधि=கோகர்ணமென்ற க்ஷேத்திரம் வரை धरणीम्=பூமியை सागरेण=ஸமுத்திரத்தினால் मज्जिताम्=முழுகடிக்கப்பட்டதாக दृष्ट्वा=கண்டு तापसैः=தாபஸர்களினால் अर्थितः=ப்ரார்த்திக்கப்பட்டவராய் पुनः=மறுபடியும் ध्यातेष्वासधृतानलास्त्रचकितम्=தியானஞ் செய்யப்பட்டவுடன் (ஸமீபம்வந்த) வில்லில் பூட்டின ஆக்னேயாஸ்திரத்தினால் பயந்த सिन्धुम्=ஸமுத்திரத்தை स्रुवक्षेपणात्=ஸ்ருவம் விழும் தேசம்வரை उत्सार्य=போகச்செய்து उद्धृतकेरळः=உயரெடுக்கப்பட்ட கேரளதேசத்தை யுடையவரான (त्वम्=நீர்) हेभृगुपते !=

## अथ सप्तदशोऽध्यायः ॥

श्रीशुक उवाच—यः पुरूरवसः पुत्र आयुस्तस्याभवन्सुताः। नहुषः क्षत्त्रवृद्धश्च रजीरम्भश्च वीर्यवान् ॥ १ ॥ अनेना इति राजेन्द्र शृणु क्षत्र-

---

ஹே ப்ருகுபதே! वातेश!=ஹே குருவாயூருக்கீச! माम् = என்னை संरक्ष=காப்பீராக. (41) (எ–று)

இவ்விதம் நாராயணீயத்தில் தத்தாத்ரேய பரசுராம அவதாரசரித்திர வர்ணனமென்ற முப்பத்தாறுவது தசகம் முற்றிற்று.

ஒன்பதாவது ஸ்கந்தார்த்த ஸங்கிரஹமும் முற்றிற்று.

ஆதிமுதல் 375 சுலோகங்கள் சென்றன.



## பதினேழாவது அத்தியாயம்.

(அ–கை) आयोः सप्तदशेऽत्वैलज्येष्ठपुत्रस्य पञ्चसु ।
सुतेषु क्षत्रवृद्धादिचतुर्णां वंशवर्णनम् ॥ १ ॥

(க–ரை) ஐளனுடைய மூத்தகுமாரனை ஆயுஎன்பவனுடைய ஐந்து புத்திரர்களுள் க்ஷத்திரவிருத்தன் முதலிய நால்வரின் வம்ச வர்ணனமானது இந்தப் பதினேழாவது அத்தியாயத்தில் செய்யப் படுகிறது. (1)

மேலும் இந்தச் சந்திரவம்சத்தில் ஸ்ரீகிருஷ்ணவதாரத்தைச் சொல்லவேண்டிஐளன்முதல் வம்சானுக்கிரமமானது சொல்ல ஆரம் பிக்கப்பட்டது. அதில் எந்த ஆயுவின் வம்சத்தில் ஸ்ரீகிருஷ்ணனு டைய அவதாரமானது ஏற்பட்டதோ அந்த ஆயுவின் வம்சமானது அதிவிஸ்தாரமாக இருப்பதால் அது முடிவில் நிரூபிக்கப்படுகிறது. ஆகவே புரூரவஸ்ஸினுடைய ஐந்து புத்திரர்களுக்குள் கனிஷ்டர் களின் வம்சங்களை யுபதேசித்து இப்பொழுது மூத்தவனான ஆயு வின் வம்சம் சொல்லப்படுகிறது—

ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—ஹே ராஜேந்திர! புரூரவஸ்ஸின் புத் திரனை யாதொரு ஆயு என்பவனுண்டோ அவனுக்கு நஹுஷன்,

वृधोऽन्वयम् । क्षत्रवृद्धसुतस्यासन्सुहोत्रस्यात्मजास्त्रयः ॥२॥ काश्यः कुशो गृत्समद इति गृत्समदादभूत् । शुनकः शौनको यस्य बह्वृचप्रवरो मुनिः ॥ ३ ॥ काश्यस्य काशिस्तत्पुत्रो राष्ट्रो दीर्घतमःपिता । धन्वन्तरिर्दैर्घतम आयुर्वेदप्रवर्तकः ॥ ४ ॥ यज्ञभुग्वासुदेवांशः स्मृतमात्रार्तिनाशनः । तत्पुत्रः केतुमानस्य जज्ञे भीमरथस्ततः ॥ ५ ॥ दिवोदासो द्युमांस्तस्मात्प्रतर्दन इति स्मृतः । स एव शत्रुजिद्वत्स ऋतध्वज इतीरितः । तथा कुवलयाश्वेति प्रोक्तोऽलर्कादयस्ततः ॥ ६ ॥ षष्टिवर्षसहस्राणि षष्टिवर्षशतानि च। नालर्कादपरो राजन्मेदिनीं बुभुजे युवा ॥ ७ ॥ अलर्कात्सन्ततिस्तस्मात्सु-

---

க்ஷத்திரவ்ருத்தன், வீரியவானென ரஜீரம்பன், அனேனஸ் என நான்குபுத்திரர்களுண்டாயினர். அவர்களுள் க்ஷத்திரவிருத்தனின் வம்சத்தைச்சொல்லுகிறேன் கேளும் க்ஷத்திரவிருத்தனுக்கு ஸுஹோத்திரன் புத்திரனுவான். அவனுக்கு காஸ்யன், குசன், க்ருத்ஸமதன் என மூன்று புத்திரர்கள் பிறந்தனர். க்ருத்ஸமதனிடமிருந்து சுனகன் பிறந்தான். இவனுக்கு ருக்வேதிகளுள் சிறந்த சௌனகரென்ற முனி பிறந்தார். (1–3) காஸ்யன் என்பவனுக்கு காசி என்பவன் பிறந்தான். அவனுடைய புத்திரன் ராஷ்ட்ரன். இவனுக்கு தீர்க்கதமஸ் என்பவன் பிறந்தான். ஆயுர்வேதப்ரவர்த்தகரான தன்வந்தரி தீர்க்கதமஸ்ஸின் புத்திரர். இவர் யக்ஞத்தில் பாகமுள்ளவரும் வாஸுதேவனின் அம்சபூதரும் நினைத்தமாத்திரத்தினல் கஷ்டத்தைப் போக்குகின்றவருமாவார். அந்த தன்வந்தரியின் புத்திரன் கேதுமான். இவருக்குப் பீமரதன் பிறந்தான் இவனிடமிருந்து திவோதாஸன் பிறந்தான். அவனிடமிருந்து த்யுமான் பிறந்தான். இவன் ப்ரதர்த்தனன் என்றும் சொல்லப்பட்டான். அவனே சத்ருஜித் என்றும் வத்ஸன் என்றும், ருதத்வஜன் என்றும் சொல்லப்பட்டான். அவ்விதமே குவலயாஸ்வன் என்றும் சொல்லப்பட்டான். ப்ரதர்த்தனன் முதலிய சப்தங்களாற் சொல்லப்பட்ட த்யுமானிடமிருந்து அலர்க்கன் முதலியோருண்டாயினர். (4–6) ஹே ராஜன்! அலர்க்கனைக் காட்டிலும் வேறு ஒருவனும் யுவாவாக அறுபத்தாறாயிரம் வருஷங்கள் முடிய இந்தப் பூமியையாண்டதில்லை. (7) அலர்க்கனிடமிருந்து ஸங்

नीथोऽथ सुकेतनः। धर्मकेतुः सुतस्तस्मात्सत्यकेतुरजायत ॥ ८ ॥ धृष्टकेतुः सुतस्तस्मात्सुकुमारः क्षितीश्वरः। वीतिहोत्रस्य भर्गोऽतो भार्गभूमिरभून्नृपः ॥ ९ ॥

इतीमे काश्यो भूपाः क्षत्रवृद्धान्वयायिनः। रम्भस्य रभसः पुत्रो गम्भीरश्चाक्रियस्ततः ॥ १० ॥ तस्य क्षेत्रे ब्रह्म जज्ञे शृणु वंशमनेनसः। शुद्धस्ततः शुचिस्तस्मात्त्रिककुद्धर्मसारथिः ॥ ११ ॥ ततः शान्तरयो जज्ञे कृतकृत्यः स आत्मवान्। रजेः पञ्चशतान्यासन्पुत्राणाममितौजसाम् ॥ १२ ॥

---

ததி என்ற புத்திரன் பிறந்தான். அவனிடமிருந்து ஸுனீதன் பிறந்தான். அவனிடமிருந்து ஸுகேதனன் பிறந்தான். அவனுக்குத் தர்மகேது என்ற புத்திரன் பிறந்தான். அவனிடமிருந்து ஸத்யகேது உண்டானான். (8) அவனிடமிருந்து திருஷ்டகேது என்ற புத்திரனுண்டானான். அவனுக்கு ஸுகுமாரன் என்ற அரசன் பிறந்தான். அவனுக்கு வீதிஹோத்திரன் பிறந்தான். அவனுக்குப் பர்க்கன் பிறந்தான். பர்க்கனிடமிருந்து பார்க்கபூமி என்ற அரசன் பிறந்தான். (9)

இம்மாதிரியான இந்த அரசர்கள் காசியின் வம்சத்தில் பிறந்தவர்களாவர். இவர்கள் காசியின் பிதாமஹனை க்ஷத்திர வ்ருத்தனுடைய வம்சத்தைச் சார்ந்தவர்களாவர். ரம்பனுடைய புத்திரன் ரபஸன். அவனுடைய புத்திரன் கம்பீரன். அவனுடைய புத்திரன் அக்ரியன். (10) அந்த அக்ரியனுடைய பாரியையினிடத்தில் ப்ராம்ஹண ஜாதியானது உண்டாயிற்று. அனேனஸ்ஸினுடைய வம்சத்தைக் கேளும். அனேனஸ்ஸின் புத்திரன் சுத்தன். அவனிடமிருந்து சுசி உண்டானான். அவனிடமிருந்து த்ரிககுப் உண்டானான். அவனிடமிருந்து தர்மஸாரதி உண்டானான். (11) அவனிடமிருந்து சாந்தரயன் பிறந்தான். அவன் ஆத்மவானுக ஞானியாக, இருந்தமைபற்றி கிருதகிருத்யனாக இருந்தான். அதாவது:—புத்திரோத்பாதனஞ் செய்யவில்லை. ரஜிஎன்பவனுக்கு அதிகமான பராக்கிரமமுள்ளவர்களான ஐந்நூறு புத்திரர்களுண்டாயினர். (12) ரஜி என்பவன் தேவர்களால் ப்ரார்த்திக்கப்பட்டு அஸுரர்களைக் கொன்று இந்திரனையும் பொருட்டுத் தேவலோகத்

देवैरभ्यर्थितो दैत्यान्हत्वेन्द्रायाददाद्दिवम् । इन्द्रस्तस्मै पुनर्दत्त्वा गृहीत्वा चरणौ रजेः ॥ १३ ॥ आत्मानमर्पयामास प्रह्लादाद्यरिशङ्कितः । पितर्युपरते पुत्रा याचमानाय नो ददुः ॥ १४ ॥ त्रिविष्टपं महेन्द्राय यज्ञभागान्समाददुः । गुरुणा हूयमानेऽग्नौ बलभित्तनयान्रजेः ॥ १५ ॥ अवधीद्भ्रंशितान्मार्गान्न कश्चिदवशेषितः । कुशात्प्रतिः क्षात्रवृद्धात्सञ्जयस्तत्सुतो जयः ॥ १६ ॥ ततः कृतः कृतस्यापि जज्ञे हर्यवनो नृपः । सहदेवस्ततोऽहीनो जयसेनस्तु तत्सुतः ॥ १७ ॥ सङ्कृतिस्तस्य च जयः क्षत्रधर्मा महारथः । क्षत्रवृद्धान्वया भूपाः शृणु वंशं च नाहुषात् ॥ १८ ॥

इति श्रीमद्भागवते महापुराणे नवमस्कन्धे चन्द्रवंशानुवर्णनं नाम सप्तदशोऽध्यायः ॥ १७ ॥

---

தைத் திருப்பிக் கொடுத்தான். இந்திரன் அந்த ரஜியையும் பொருட்டுத் திரும்பவும் தேவலோகத்தைக் கொடுத்துவிட்டு ரஜியினுடைய கால்களைப் பிடித்துக்கொண்டு ப்ரஹ்லாதன் முதலியோரிடமிருந்து பயத்தை யடைந்தவனுய் தனது ஆத்மாவை அவனுக்கு அர்ப்பணஞ்செய்தான். (அதாவது இந்திரன் ரஜியின் புத்திரனுகப் பிறந்தான்.) பிதாவான ரஜியானவர் மரித்தபிறகு அவனுடைய புத்திரர்கள் யாசிக்கின்ற இந்திரனையும் பொருட்டுத் தேவலோகத்தைக் கொடுக்கவில்லை. யக்ஞபாகத்தையும் தாங்களே பெற்றுக் கொண்டனர். அவர்களுடைய புத்தியை மயக்கவேண்டி ப்ருஹஸ்பதியினுல் (ஆபிசாரமுறையை யொட்டி) அக்னியில் ஹோமஞ் செய்யப்படும்பொழுது இந்திரன், வழியினின்றும் நழுவினவர்களான ரஜியின் புத்திரர்களை வதஞ்செய்து விட்டான். அவர்களுள் ஒருவனும் மீதப்படவில்லை. க்ஷத்ரவிருத்தனின் பௌத்திரனுன குசனிடமிருந்து ப்ரதி என்பவன் பிறந்தான். ப்ரதியினிடமிருந்து ஸஞ்ஜயன் பிறந்தான். ஸஞ்ஜயனிடமிருந்து ஜயன் பிறந்தான். (13-16) அவனிடமிருந்து கிருதன் பிறந்தான். அவனுக்கு ஹர்யவனன் என்ற அரசன் பிறந்தான். அவனிடமிருந்து ஸஹதேவன் பிறந்தான். அவனுக்கு அஹீனன் பிறந்தான். அஹீனனுடைய புத்திரன் ஜயஸேனன். (17) அவனுக்கு ஸங்கிருதி

अथ अष्टादशोऽध्याय: ॥

श्रीशुक उवाच—यतिर्ययातिः संयातिरायतिर्वियतिः कृतिः। षडिमे नहुषस्यासन्निन्द्रियाणीव देहिनः॥ १ ॥ राज्यं नैच्छद्यतिः पित्रा दत्तं तत्परिणामवित्। यत्र प्रविष्टः पुरुष आत्मानं नावबुध्यते ॥ २ ॥ पितरि

---

பிறந்தான். அவனுக்கு ஜயன் பிறந்தான். அவனுக்கு மஹாரதனுன க்ஷத்ரதர்மா பிறந்தான். க்ஷத்ரவிருத்தனுடைய வம்சத்தில் பிறந்த அரசர்கள் சொல்லப்பட்டனர். நஹுஷபுத்திரனுன யயாதியினிடமிருந்துண்டான வம்சத்தைச் சொல்லுகிறேன் கேளும் என்றார். (18) (எ-று)

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண நவமஸ்கந்தத்தில் சந்திரவம்சானுவர்ணனமென்ற பதினேழாவது அத்தியாயம் முற்றிற்று.



## பதினெட்டாவது அத்தியாயம்.

(அ-கை) अष्टादशे ययातेस्तु नाहुषस्य कथोच्यते ।
यस्य पञ्चसु पुत्रेषु कनीयानग्रहीज्जराम् ॥ १ ॥

(க-ரை) நஹுஷகுமாரனுன யயாதியினுடைய கதையும் இந்த யயாதியினுடைய ஐந்து புத்திரர்களுக்குள் கடைசீ புத்திரனுன பூரு என்பவன் பிதாவின் ஜரையைப் பெற்றுக்கொண்டான் என்பதும் இந்தப் பதினெட்டாவது அத்தியாயத்தில் சொல்லப்படுகிறது. (1) (எ-று)

ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—ஜீவர்களுக்கு இந்திரியங்கள்போல நஹுஷனுக்கு யதி, யயாதி, ஸம்யாதி, ஆயதி, வியதி, க்ருதி என்ற இந்த ஆறுபுத்திரர்கள் ஜனித்தனர். (1) யதி என்பவன் எந்த ராஜ்யத்தில் ப்ரவேசித்த புருஷன் ஆத்மாவை அறிந்துகொள்ள முடிவதில்லையோ அந்த ராஜ்யமானது பிதாவினல் கொடுக்கப்படினுங் கூட அதன் பரிணாமத்தை யறிந்தவனாக இருப்பதுபற்றி அதில் ஆவல்கொள்ளவில்லை. (2) பிதாவான நஹுஷன் ஸ்வர்க்கத்தில் இருக்கும்பொழுது இந்திராணியைப் போகத்துக்கு அழைத்தமை

भ्रंशिते स्थानादिन्द्राण्या धर्षणाद्द्विजैः। प्रापितेऽजगरत्वं वै ययातिरभवन्नृपः॥ ३ ॥ चतसृष्वादिशद्दिक्षु भ्रातॄन्भ्राता यवीयसः। कृतदारो जुगोपोर्वीं काव्यस्य वृषपर्वणः॥ ४ ॥ राजोवाच—ब्रह्मर्षिर्भगवान्काव्यः क्षत्रबन्धुश्च नाहुषः। राजन्यविप्रयोः कस्माद्विवाहः प्रतिलोमकः॥ ५ ॥ श्रीशुक उवाच—एकदा दानवेन्द्रस्य शर्मिष्ठा नाम कन्यका। सखीसहस्रसंयुक्ता गुरुपुत्र्या च भामिनी ॥ ६ ॥ देवयान्या पुरोद्याने पुष्पितद्रुमसङ्कुले। व्यचरत्कलगीतालिनलिनीपुलिनेऽबला ॥ ७ ॥ ता जलाशयमासाद्य कन्याः कमललोचनाः। तीरे न्यस्य दुकूलानि विजह्रुः सिञ्चतीर्मिथः ॥ ८ ॥

---

பற்றி இந்திரபதவியிலிருந்து அகஸ்த்யர் முதலிய ப்ராம்ஹணர்களினல் தள்ளப்பட்டு மலைப்பாம்பாகப் பிறந்தபொழுது யயாதியானவன் அரசனுகவானுன். (3) ப்ராதாவான யயாதி தனக்குப் பின் ஜனித்த ப்ராதாக்களான நால்வரையும் நான்கு திக்குகளிலும் ரக்ஷிக்கும்படி ஏற்படுத்தினன். தான் சுக்கிராசாரியருடையவும் வ்ருஷபர்வாவினுடையவும் பெண்களை விவாஹஞ் செய்துகொண்டு பூமியை ஆண்டுவந்தான் என்றுர். (4) அரசன் சொல்லலுற்றுன்—பகவானுன சுக்கிராசாரியரோ ப்ரம்ஹருஷி. நகுஷகுமாரனுன யயாதியோ க்ஷத்திரியன். க்ஷத்திரியன் ப்ராம்ஹணன் இவர்களுக்கு ப்ரதிலோமமான விவாஹமானது எக்காரணம்பற்றி நடந்தது? என்றுன். (5) ஸ்ரீசுகர் சொல்லலுற்றுர்—ஒருஸமயம் கன்னிகையும்=விவாஹமாகாதவளும், அபலையும், சர்மிஷ்டை என்ற பெயருள்ளவளும், அழகு பொருந்தியவளுமான அஸுரஸ்ரேஷ்டனுன வ்ருஷபர்வாவினுடைய பெண்ணுனவள் ஆயிரம் தோழிமார்களுடன் கூடினவளாகவும், குருவின் பெண்ணுன தேவயானியுடன் கூடினவளாகவும் கொண்டு புஷ்பித்த மரக்கூட்டங்களை யுடையதும், அழகாகப் பாடுகின்ற வண்டுகளையுடைய தாமரஸபுஷ்பங்களையும் மணத்திட்டையுமுடையதுமான பட்டினத்தினருகிலுள்ள உத்யானத்தில் ஸஞ்சரித்து வந்தாள். (6-7) கமலம் போன்ற கண்களையுடைய அக்கன்னிகைகள் ஓடையையடைந்து கறையில் பட்டாடைகளைக் கழற்றி வைத்துவிட்டு ஒருவரையொருவர் நனைத்துக்கொண்டு ஜலத்தில் விளையாடினர். (8) பார்வதியுடன்கூட

वीक्ष्य व्रजन्तं गिरिशं सह देव्या वृषस्थितम् । सरसोत्तीर्य वासांसि पर्य-
धुर्व्रीडिताः स्त्रियः ॥ ९ ॥ शर्मिष्ठाऽजानती वासो गुरुपुत्र्याः समव्य-
यत् । स्वीयं मत्वा प्रकुपिता देवयानीदमब्रवीत् ॥ १० ॥

अहो निरीक्ष्यतामस्या दास्याः कर्म ह्यसांप्रतम् । अस्मद्धार्यं धृत-
वती शुनीव हविरध्वरे ॥ ११ ॥ यैरिदं तपसा सृष्टं मुखं पुंसः परस्य ये ।
धार्यते यैरिह ज्योतिः शिवः पन्थाश्च दर्शितः ॥१२॥ यान्वन्दन्त्युपतिष्ठ-
न्ते लोकनाथाः सुरेश्वराः । भगवानपि विश्वात्मा पावनः श्रीनिकेतनः
॥ १३ ॥ वयं तत्रापि भृगवः शिष्योऽस्या नः पिताऽसुरः । अस्मद्धार्यं
धृतवती शूद्रो वेदमिवासती ॥ १४ ॥ एवं शपन्तीं शर्मिष्ठा गुरुपुत्रीमभा-

---

விருஷபத்திலேறிக்கொண்டு செல்லுகின்ற மஹாதேவனைக் கண்டு வெட்கித்தவர்களான ஸ்திரீகள் வேகமாகக் கறையிலேறித் துணிகளை இடையில் சுற்றிக்கொண்டனர். (9) சர்மிஷ்டை குருபுத்திரியின் வஸ்திரமென்பதையறியாது தன்னுடையது எனவெண்ணிக் கொண்டு அதைத் தரித்துக்கொண்டாள். அதுகண்டு கோபித்த தேவயானி பின்வரும் வார்த்தையைச் சொல்லலுற்றாள். (10)

யாகத்திலுள்ள ஹவிஸ்ஸை நாயானதுபோல நாம் தரிக்கக்கூடிய பட்டாடையை தரித்துக்கொண்டிருக்கின்றாள். இந்தத் தேவடியாளின் தகாத காரியத்தைப் பாருங்கள். அந்தோ! இது வெகு கஷ்டம். (11) எந்த மரீசி முதலிய ப்ராம்ஹணர்களினால் இந்த ப்ரபஞ்சமானது விருஷ்டிக்கப்பட்டதோ, எந்த ப்ராம்ஹணர்கள் பரமபுருஷனுடைய முகமோ, எவர்களால் ஜ்யோதீரூபமான ப்ரம்ஹமானது தரிக்கப்படுகிறதோ, எவர்களால் மங்களகரமான வேத மார்க்கமானது காண்பிக்கப்பட்டதோ, லோகநாதர்களான ஸுரேஶ்வரர்களும், ஸ்ரீயுக்கு ஆஶ்ரயபூதனும் பரிசுத்தனும் விஶ்வாத்மாவுமான பகவானுங்கூட எவர்களை நமஸ்கரித்துப் பூஜிக்கின்றனரோ, அவர்களுள் நாங்களோ ப்ருகுவம்சத்தவர். இவளுடைய பிதாவான அஸுரனோ எங்கள் சிஷ்யன். அந்த எங்களால் தரிக்கக்கூடியதைக் கெட்டவளான இவள் சூத்திரன் வேதத்தைப் போலத் தரித்தாளே? என்றாள். (12-14) இவ்விதம் சபிக்கின்ற குருபுத்திரியைப் பார்த்து சர்மிஷ்டையானவள் காலினால் மிதிக்கப்

षत । रुषा श्वसन्त्युरङ्गीव धर्षिता दष्टदच्छदा ॥ १५ ॥ आत्मवृत्तमविज्ञाय कत्थसे बहु भिक्षुकि । किं न प्रतीक्षसेऽस्माकं गृहान्बलिभुजो यथा ॥१६॥ एवंविधैः सुपरुषैः क्षिप्त्वाचार्यसुतां सतीम् । शर्मिष्ठा प्राक्षिपत्कूपे वास आदाय मन्युना ॥ १७ ॥ तस्यां गतायां स्वगृहं ययातिर्मृगयां चरन् । प्राप्तो यदृच्छया कूपे जलार्थी तां ददर्श ह ॥ १८ ॥ दत्त्वा स्वमुत्तरं वासस्तस्यै राजा विवाससे । गृहीत्वा पाणिना पाणिमुज्जहार दयापरः ॥१९॥ तं वीरमाहौशनसी प्रेमनिर्भरया गिरा । राजंस्त्वया गृहीतो मे पाणिः परपुरञ्जय ॥ २० ॥ हस्तग्राहो परो मा भूद्गृहीतायास्त्वया हि मे । एष ईशकृतो वीर सम्बन्धो नौ न पौरुषः ॥ २१ ॥ यदिदं कूपलग्नाया भवतो

---

பட்ட பாம்புபோலக் கோபத்தினால் பெருமூச்சுவிட்டுக் கொண்டும் உதட்டைக் கடித்துக்கொண்டும் சொல்லத் தொடங்கினாள். (15) ஹே பிச்சைக்காரியே! உனது நடத்தையை யோசித்துப் பார்க்காமல் ரொம்பவும் தற்புகழ்ச்சிசெய்து கொள்ளுகின்றனையே, காக்கைகள்போல எங்கள்வீட்டில் காற்றுவரவில்லையா? என்றாள். (16) இம்மாதிரிகளான மிகக்கொடூர வார்த்தைகளினால் சர்மிஷ்டையானவள் கோபத்துடன் ஸதீயான ஆசாரியபுத்திரியைத் திட்டிவிட்டுப் புடவையையும் பிடுங்கிக்கொண்டு கிணற்றில் அவளைத் தள்ளிவிட்டாள். (17) அந்த சர்மிஷ்டை வீடுபோனதும், வேட்டையாடிக் கொண்டு எதிருச்சையாகக் கிணற்றில் ஜலமெடுக்கவேண்டி வந்த யயாதியானவன் அங்கு தேவயானியைக் கண்டான். (18) தயாபரனான அரசன், வஸ்திரமில்லாத அவளுக்குத் தனது மேல்வஸ்திரத்தைக் கொடுத்துக் கையினால் அவளது கையைப்பிடித்துக் கரையேற்றினான். (19) சுக்கிராசாரியரின் பெண்ணான தேவயானி ப்ரேமைநிறைந்த வார்த்தையினால் அந்த வீரனைப் பார்த்து ஹே ராஜன்! பரபுரஞ்ஜய! உம்மால் என்னுடைய கையானது பிடிக்கப் பட்டுவிட்டது. (20) உம்மால் பிடிக்கப்பட்ட என்னுடைய கையைக் கிரஹிக்கப்பிற எவனும் யோக்கியனல்லன். ஹே வீர! நம்மிருவருக்குமேற்பட்ட இந்த ஸம்பந்தமானது ஈஸ்வரகிருதமேயன்றி மனிதகிருதமன்று. (21) ஹே மஹாபுஜ! கிணற்றில் முழுகினவளான எனக்கு உம்முடைய யாதொரு இந்தத் தரிசனமுண்

दर्शनं मम। न ब्राह्मणो मे भविता हस्तग्राहो महाभुज। कचस्य बार्हस्पत्यस्य शापाद्यमशपं पुरा ॥ २२ ॥ ययातिरनभिप्रेतं दैवोपहृतमात्मनः। मनस्तु तद्गतं बुद्ध्वा प्रतिजग्राह तद्वचः॥ २३ ॥ गते राजनि सा वीरे तत्र स्म रुदती पितुः। न्यवेदयत्ततः सर्वमुक्तं शर्मिष्ठया कृतम् ॥ २४ ॥

दुर्मना भगवान्काव्यः पौरोहित्यं विगर्हयन्। स्तुवन्वृत्तिं च कापोतीं दुहित्रा स ययौ पुरात् ॥ २५ ॥ वृषपर्वा तमाज्ञाय प्रत्यनीकविवक्षितम्। गुरुं प्रसादयन्मूर्ध्ना पादयोः पतितः पथि ॥ २६ ॥ क्षणार्धमन्युर्भगवान्

---

டோ அது எவனை நான் முன்னர் சபித்தேனே ப்ருஹஸ்பதியின் குமாரனான அந்த கசனுடைய *சாபத்தினால்தான் ஏற்பட்டது. ப்ராம்ஹணன் எனக்குப் பர்த்தாவாகவாகப்போவதில்லை என்றாள். (22) யயாதி அசாஸ்திரீயமாக இருப்பதுபற்றித் தனக்குப் பிடிக்காதிருப்பினும் தைவத்தினால் அமைக்கப்பட்டதையும் மனது அவளிடமீடுபட்டிருப்பதையும் அறிந்துகொண்டு அவளது வார்த்தையை யங்கீகரித்தான். (23) வீரனான அந்த அரசன் போனதும் அந்தத் தேவயானி பிறகு அழுதுகொண்டு சர்மிஷ்டையினால் பிச்சைக்காரி என்று சொல்லப்பட்டதையும் கிணற்றில் தள்ளப்பட்டதையும் ஆகிய யாவையும் பிதாவினிடம் சொன்னாள். (24)

பகவானான அந்தச் சுக்கிராசாரியர் மனவருத்தத்தை யடைந்து புரோஹிதவிருத்தியை நிந்தித்துக்கொண்டும், உஞ்சவிருத்தியைப் புகழ்ந்துகொண்டும் புத்திரியுடன்கூடப் பட்டினத்திலிருந்து வெளியிற் சென்றுவிட்டார். (25) விருஷபர்வாவானவன் அதைச் சத்துருக்களான தேவர்களுக்கு அனுகூலமான காரியமாக எண்

---

* ப்ருஹஸ்பதியின் புத்திரனான கசன் சுக்கிராசாரியரிடமிருந்து மிருதஸஞ்ஜீவினீ என்ற வித்தையை அப்யாஸஞ்செய்தான். அப்பொழுது தேவயானி அவனைப் பதியாக அடையவிரும்பினள். அவன் "நீ குருவின் பெண். என்னால் பூஜிக்கத்தக்கவள். உன்னை நான் மணக்கமாட்டேன்" என்றான். அதுகேட்டுக் கோபங்கொண்ட தேவயானி "இந்த வித்தை உனக்குப் பயனற்றதாகப் போகக்கடவது" என்று சபித்தாள். அவனும் "உனக்கு ப்ராம்ஹணன் பர்த்தாவாக ஆகாமல் போகக்கடவது" என்று சபித்தான்.

शिष्यं व्याचष्ट भार्गवः । कामोऽस्याः क्रियतां राजन्नैनां त्यक्तुमिहोत्सहे
॥ २७ ॥ तथेत्यवस्थिते प्राह देवयानी मनोगतम् । पित्रा दत्ता यतो यास्ये
सानुगा यातु मामनु ॥ २८ ॥ स्वानां तत्सङ्कटं वीक्ष्य तदर्थस्य च गौरवम् ।
देवयानीं पर्यचरत्स्त्रीसहस्रेण दासवत् ॥ २९ ॥ नाहुषाय सुतां दत्त्वा सह
शर्मिष्ठयोशना: । तमाह राजन् शर्मिष्ठामाधास्तल्पे न कर्हिचित् ॥ ३० ॥
विलोक्यौशनसीं राजन् शर्मिष्ठा सप्रजां क्वचित् । तमेव वव्रे रहसि
सख्याः पतिमृतौ सती ॥ ३१ ॥ राजपुत्र्याऽर्थितोऽपत्ये धर्मं चावेक्ष्य धर्म-

---

ணிக்கொண்டு குருவைச் சாந்தமாக்கவேண்டி வழியில் தலையினால் அவருடைய கால்களில் விழுந்தான். (26) அரைக்ஷணமே கோப முடையவரும் பகவானுமான சுக்கிராசாரியர் சிஷ்யனைப் பார்த்து "ஹே ராஜன்! இவளுடைய விருப்பத்தைப் பூர்த்தி செய்துவையும். இவளை விட்டுவிட நான் ஸம்மதிக்கமாட்டேன்" எனச் சொன்னார். (27) அப்படியே செய்கிறேன் என அசுரன் உறுதிசெய்த பிறகு தேவயானீ தனது மனத்திலுள்ளதைத் தெரிவித்தாள். அதாவது:- "பிதாவினால் எவரையும் பொருட்டு கொடுக்கப்பட்டு நான் செல் லுவேனோ அந்த என்னையொட்டியே இவளும் பரிவாரத்துடன் வர வேண்டும்" என்றாள். (28) சர்மிஷ்டையானவள் தன்னைச் சேர்ந்த பிதா முதலியவர்களுக்கு அந்தச் சுக்கிராசாரியர் விலகுவதன்மூலம் வரும் கஷ்டத்தையும், அவர் விலகாதிருப்பதன்மூலம் வரும் கௌர வத்தையும் ஆலோசித்தறிந்துகொண்டு ஆயிரக்கணக்கான ஸ்திரீபரி வாரங்களுடன் தேவயானிக்குக்குத் தாஸிபோலப் பணிவிடை செய் துவந்தாள். (29) சுக்கிராசாரியர் சர்மிஷ்டையுடன்கூடத் தனது பெண்ணை யயாதிக்குக் கொடுத்து "ஹே ராஜன்! ஒருபொழுதும் சர்மிஷ்டையுடன் நீர் போகஞ்செய்யக்கூடாது" என்றார். (30) ஹே ராஜன்! பதிவ்ரதையான சர்மிஷ்டை, சுக்கிராசாரியரின் பெண்ணான தேவயானி குழந்தைகளுள்ளவளாக இருப்பதைக் கண்டு ருதுகாலத்தில் அதே ஸகியின் பதியையே ரஹஸ்யத்தில் ப்ரார்த்தித்தாள். (31) ராஜபுத்திரியினால் ருதுகாலத்தில் குழந் தையையடையும் விஷயத்தில் ப்ரார்த்திக்கப்பட்டவனும்தர்மமறிந் தவனுமான அரசன் அவளுடைய காமத்தைப் பூர்த்திசெய்வது தர்

वित्। स्मरन् शुक्रवचः काले दिष्टमेवाभ्यपद्यत ॥ ३२ ॥ यदुं च दुर्वसुं चैव देवयानी व्यजायत । द्रुह्युं चानुं च पूरुं च शर्मिष्ठा वार्षपर्वणी ॥३३॥ गर्भसम्भवमासुर्या भर्तुर्विज्ञाय मानिनी । देवयानी पितुर्गेहं ययौ क्रोधविमूर्छिता ॥३४॥ प्रियामनुगतः कामी वचोभिरुपमन्त्रयन् । न प्रसादयितुं शेके पादसंवाहनादिभिः ॥ ३५ ॥ शुक्रस्तमाह कुपितः स्त्रीकामानृतपूरुष । त्वां जरा विशतां मन्द विरूपकरणी नृणाम् ॥ ३६ ॥

ययातिरुवाच—अतृप्तोऽस्म्यद्य कामानां ब्रह्मन्दुहितरि स्म ते । व्यत्यस्यतां यथाकामं वयसा योऽभिधास्यति ॥ ३७ ॥ इति लब्धव्यवस्थानः

---

மமேயாகும் என வாலோசித்துக்கொண்டும் சுக்கிராசாரியருடைய வார்த்தையையும் நினைத்துக்கொண்டும் தைவப்ராபிதமாகவேவுள்ள அவளுடைய சேர்க்கையை யடைந்தானேயொழிய காமத்தினுல் செய்யவில்லை. (32) தேவயானீ, யதுவையும் தூர்வஸுவையும் பெற்ருள். வ்ருஷபர்வாவின் பெண்ணுன சர்மிஷ்டை த்ருஹ்யுவையும், அனு என்பவனையும், பூரு என்பவனையும் பெற்ருள். (33) அஸுரன் பெண்ணுக்குப் பர்த்தாவினிடமிருந்து கர்ப்பமுண்டானதைக் கர்வங்கொண்ட தேவயானி அறிந்துகொண்டு கோபத்தினுல் மூர்ச்சிதையாகவாகிப் பிதாவின் வீட்டை யடைந்தாள். (34) காமியான அரசன் ப்ரியையான பத்னியைப் பின்தொடர்ந்து சென்றுவார்த்தைகளினுலும் கால்களைப் பிடித்துவிடல் முதலியவற்றினுலும் வேண்டியும்கூட அவளை ஸமாதானப்படுத்த முடியாதவனுகவானுன். (35) சுக்கிராசாரியர் கோபங்கொண்டு ஹே ஸ்திரீகாம! ஹே அந்ருதபூருஷ! ஹே மந்த! மனிதர்களின் ரூபத்தை நாசஞ்செய்யும் ஜரையானது உனக்குவரட்டும் என்று சொன்னுர். (36)

யயாதி சொல்லலுற்ருர்—ஹே ப்ரம்ஹன்! நான் இப்பொழுது உம்முடைய புத்திரியினிடத்திலேற்பட்ட காமசுகங்களினுல் திருப்தியை (போதுமென்ற எண்ணத்தை) அடையாதவனுக இருக்கிறேன் என்ருன். அதுகேட்ட சுக்கிராசாரியர், எவன் ஜரையைத் தரிப்பானே அவனுடைய யௌவனத்தினுல் இஷ்டப்படி அந்த ஜரையை மாற்றிக்கொள் என்ருர். (37) இவ்விதம் ஜரைவிஷயமான வ்யவஸ்தையை=வறையறையை, அடைந்தவனுன அரசன்,

पुत्रं ज्येष्ठमवोचत । यदो तात प्रतीच्छेमां जरां देहि निजं वयः ॥ ३८ ॥ मातामहकृतां वत्स न तृप्तो विषयेष्वहम् । वयसा भवदीयेन रंस्ये कतिपयाः समाः ॥ ३९ ॥ यदुरुवाच—नोत्सहे जरसा स्थातुमन्तराप्राप्तया तव । अविदित्वा सुखं ग्राम्यं वैतृष्ण्यं नैति पूरुषः ॥ ४० ॥ तुर्वसुश्चो-

மூத்தகுமாரனைப் பார்த்து ஹே தாத! ஹே யதோ! உனது தாயின் பிதாவினுல் கொடுக்கப்பட்ட இந்த ஜரையை வாங்கிக்கொள்ளு. உன்னுடைய யௌவனத்தை எனக்குக்கொடு, ஹே வத்ஸ! நான் விஷயங்களில் திருப்தியை யடையாதவனுக இருக்கிறேன். உன்னுடையதான யௌவனத்திஞல் சிலவருஷங்கள் முடிய ரமிக்கின்றேன் என்ருன். (38-39) யது சொல்லலுற்ருன்—இடையில் ப்ராப்தமான உமது ஜரையுடன்கூட இருப்பதற்கு நான் ப்ரியப்படவில்லை. ஜீவன் விஷயசுகத்தை யறியாது வைராக்கியத்தை யடையமாட்டானன்ருே என்ருன்.(*) (40) ஹே பாரத! பிதா

(*) இவ்விதம் சொன்ன யதுவின் கருத்து பின்வருமாறு—எனக்கோ இடையருது பகவத்பஜனஞ்செய்யவேண்டுமென்ற ஆவலிருக்கிறது. அதற்கோ வைராக்கியம் இன்றியமையாதது. வைராக்கியமோ க்ராம்ய சுகானுபவ மூலந்தானேற்படக்கூடும். அந்த க்ராம்யசுகானுபவத்துக்கோ யௌவனம் இன்றியமையாதது. ஆகவே பரம்பரையாக நிரந்தர பகவத்பஜனத்துக்கு ஸாதனமான யௌவனத்தை நான் எப்படி தானஞ்செய்ய முடியும். மேலும், உமக்கோ இந்த ஜரையானது இடையில் வந்ததாகவிருக்கிறது. அதாவது:—பகவத்பக்தரான ருஷியின் வாக்கியத்தை மீறி நடந்ததாலேற்பட்டிருக்கிறது. கிரமப்ராப்தமாக இருந்து அதை நான் பெறுவேனுஞல் பிதிருவாக்யபரிபாலன ரூபமான புண்ணியமேற்பட்டு அதன்மூலம் ஒருஸமயம் பகவத்ப்ரஸாதமேற்பட்டு நிரந்தர பகவத்பஜனம் ஏற்பட்டாலும் ஏற்படலாம். இதுவோ அவ்விதமில்லை. ப்ராம்ஹண சாபத்திஞல் வந்ததாக இருக்கிறது. ஆகவே அந்த சாபம் எனக்கும் ஜராத்வாராப்ராப்தமாகி பகவத்பஜன வைராக்கியத்தை யுண்டாக்கிவிடும். மேலும், अन्तराप्राप्तया=இடையில் வந்த இந்த ஜரையை நீர் என்னிடம் கொடுத்து எனது யௌவனத்தை அடையவிரும்புவது கேவலம் போகத்துக்காகவும் அதிலும் என் மாதாவைப் போகிப்பதற்காகவுமேயாதலால் அதை நோக்கும்போது பரம்பரையாக எனக்கு மாதிருகமன தோஷம் வருவதற்கும் இடமேற்படுகிறது. ஆகவே யௌவனத்தைக் கொடுக்கமுடியாது என்று கருதிஞன் என்ரும்.

दितः पित्रा द्रुह्युश्चानुश्च भारत । प्रत्याचख्युरधर्मज्ञा ह्यनित्ये नित्यबुद्धयः ॥ ४१ ॥ अपृच्छत्तनयं पूरुं वयसोनं गुणाधिकम् । न त्वमग्रजवद्वत्स मां प्रत्याख्यातुमर्हसि ॥ ४२ ॥ पूरुरुवाच—को नु लोके मनुष्येन्द्र पितुरात्मकृतः पुमान् । प्रतिकर्तुं क्षमो यस्य प्रसादाद्विन्दते परम् ॥ ४३ ॥ उत्तमश्चिन्तितं कुर्यात्प्रोक्तकारी तु मध्यमः । अधमोऽश्रद्धया कुर्यादकर्तोच्चरितं पितुः ॥ ४४ ॥ इति प्रमुदितः पूरुः प्रत्यगृह्णाज्जरां पितुः । सोऽपि तद्वयसा कामान्यथावज्जुजुषे नृप ॥ ४५ ॥ सप्तद्वीपपतिः सम्यक् पितृवत्पालयन्प्रजाः । यथोपजोषं विषयाञ्जुजुषेऽव्याहतेन्द्रियः ॥ ४६ ॥

---

வினால் சொல்லப்பட்ட தர்வஸுவும், த்ருஹ்யுவும் அனுவும் ஆகிய இம்மூவரும் தர்மமறியாதவர்களாகவும், அனித்யமான யௌவனத்தில் நித்யபுத்தியுள்ளவர்களுமாக இருப்பதுபற்றி மறுத்து விட்டனர். (41) வயதினால் சிறியவனும் குணத்தினால் அதிகனுமான பூரு என்ற புத்திரனைப் பார்த்து ஹே வத்ஸ! நீ உன்னுடைய தமயன்கள் போல என்னை மறுத்துவிட அர்ஹனல்லன் என்றான். (42) பூரு சொல்லலுற்றான்—ஹே மனுஷ்யேந்த்ர! எவருடைய ப்ரஸாதத்தினால் புருஷன் பரத்தை=மேலான ஸ்தானத்தை, அடைகின்றானோ தேஹத்தைக் கொடுத்த அந்தப் பிதாவுக்குப் பதில் செய்ய உலகில் எவன்தான் சக்தனாவான். (43) பிதாவினால் சிந்திக்கப்பட்டதை எவன் செய்வானோ அவன் உத்தமன். பிதாவினால் சொல்லப்பட்டதை எவன் செய்வானோ அவன் மத்யமன். பிதா சொன்னதை அஶ்ரத்தையுடன் எவன் செய்வானோ அவன் அதமன். பிதா சொன்னதைச் செய்யாதவன் எவனோ அவன் பிதாவின் மலத்துக் கொப்பானவனேயாவான். (44) இவ்விதம் சொல்லி விட்டுப் பூருவானவன் மிக்க ஸந்தோஷத்தை யடைந்தவனாய்ப் பிதாவினிடமிருந்து ஜரையைப் பெற்றுக் கொண்டான். ஹே ந்ருப! அந்த யயாதியும் அவனுடைய வயதினால் உள்ளபடி காமங்களையனுபவித்து வந்தான். (45) ஏழு தீவுகளுக்கும் பதியான அரசன் ப்ரஜைகளைப் பிதாபோலப் பாலனஞ்செய்து கொண்டும், இந்திரிய சக்திக்குக் குறைவில்லாதவனாக விருந்துகொண்டும், தனது ப்ரீதிக்கேற்றவாறு விஷயங்களை அனுபவித்து வந்தான். (46) பத்னி

देवयान्यप्यनुदिनं मनोवाग्देहवस्तुभिः । प्रेयसः परमां प्रीतिमुवाह प्रेयसी रहः ॥ ४७ ॥ अयजद्यज्ञपुरुषं क्रतुभिर्भूरिदक्षिणैः। सर्वदेवमयं देवं सर्ववेदमयं हरिम् ॥ ४८ ॥ यस्मिन्निदं विरचितं व्योम्नीव जलदावलिः । नानेव भाति नाभाति स्वप्नमायामनोरथः ॥ ४९ ॥ तमेव हृदि विन्यस्य वासुदेवं गुहाशयम् । नारायणमणीयांसं निराशीरयजत्प्रभुम् ॥ ५० ॥ एवं वर्षसहस्राणि मनःषष्ठैर्मनःसुखम् । विदधानोऽपि नातृप्यत्सार्वभौमः कदिन्द्रियैः ॥ ५१ ॥

इति श्रीमद्भागवते महापुराणे नवमस्कन्धे ययातिचरितवर्णनं नामाष्टादशोऽध्यायः ॥ १८ ॥

---

யான தேவயானியும்கூட ஒவ்வொருநாளும் மனது வாக்கு தேஹம் வஸ்து இவற்றினல் பர்த்தாவுக்கு ரஹஸ்யத்தில் மேலான ப்ரீதியை யுண்டுபண்ணினள். (47) அதிகமான தக்ஷிணையையுடைய யாகங்களினல் யக்ஞபுருஷனும், எல்லா வேதஸ்வரூபரும், எல்லா தேவஸ்வரூபரும், தேவனுமான ஹரியை ஆராதித்தார். (48) ஸிருஷ்டிக்கப்பட்ட இந்த ப்ரபஞ்சமானது ஆகாசத்தில் மேகக்கூட்டமானது போல இந்திரியங்களின் ப்ரவிருத்தி உள்ளவரை எந்த அதிஷ்டானத்தினிடத்தில் வேறுபட்டது போலத் தோற்றத்தை யடைகிறதோ, இந்திரியங்கள் ஒய்ந்ததும் ஸ்வப்பினம் மாயை இவற்றுடன் கூடின மனோரதம் போலத் தோற்றுவதில்லையோ, வாஸுதேவனும், ஹிருதயகுஹையில் ப்ரகாசிப்பவனும், ஸூக்ஷ்ம ஸ்வரூபனும், ப்ரபுவுமான அந்தநாராயணனை ஹிருதயத்தில் அசையாது தியானஞ் செய்துகொண்டு பலனில் விருப்பமற்றவராய் ஆராதித்து வந்தார். (49–50) இவ்விதம் சக்கிரவர்த்தியான அரசன் ஆயிரம் வருஷங்கள்முடிய மனத்துக்குப் பிடித்தமான காமோபபோகத்தை மனத்தை ஆறுவதாகவுடையனவும் கெட்டனவுமான =வெளிநோக்குடையனவுமான, இந்திரியங்களினல் அனுபவித்தபோதிலுங்கூட திருப்தியை யடையாதவனுகவே இருந்தான். (51)

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண நவமஸ்கந்தத்தில்
யயாதிசரிதவர்ணனமென்ற பதினெட்டாவது
அத்தியாயம் முற்றிற்று.

जानो भवितारो वदामि ते ॥४५॥ भविता सहदेवस्य मार्जारिर्यच्छ्रुतश्रवाः।
ततोऽयुतायुस्तस्यापि निरमित्रोऽथ तत्सुतः ॥ ४६ ॥ सुनक्षत्रः सुनक्षत्राद्बृहत्सेनोऽथ कर्मजित्। ततः सुतञ्जयाद्विप्रः शुचिस्तस्य भविष्यति ॥४७॥
क्षेमोऽथ सुव्रतस्तस्माद्धर्मसूत्रः शमस्ततः। द्युमत्सेनोऽथ सुमतिः सुबलो जनिता ततः ॥ ४८ ॥ सुनीथः सत्यजिदथ विश्वजिद्यद्रिपुञ्जयः।
बार्हद्रथाश्च भूपाला भाव्याः साहस्रवत्सरम् ॥ ४९ ॥

इति श्रीमद्भागवते महापुराणे नवमस्कन्धे दिवोदासवंशवर्णनं, जरासन्धाद्युत्पत्तिवर्णनं, रिपुञ्जयान्तराजवर்णनं नाम द्वाविंशोऽध्यायः ॥ २२ ॥



ஞன ஜராஸந்தனுக்கு ஸஹதேவன் என்பவன் புத்திரன். ஸஹதேவனுடைய புத்திரன் மார்ஜாரி. இவனுடைய புத்திரன் ஶ்ருதஶ்ரவஸ். அவனிடமிருந்து அயுதாயு, அவனுக்கு நிரமித்ரன், பிறகு அவனுடைய புத்திரன் ஸுநக்ஷத்திரன், ஸுநக்ஷத்திரனிடமிருந்து ப்ருஹத்ஸேனன், அவனிடமிருந்து கர்மஜித், அவனிடமிருந்து ஶ்ருதஞ்ஜயன், அவனிடமிருந்து விப்ரன், அந்த விப்ரனுக்கு சுசி இவர்களுண்டாகப் போகின்றனர். (46–47) சுசியினிடமிருந்து க்ஷேமன், அவனிடமிருந்து ஸுவ்ரதன், அவனிடமிருந்து தர்மஸூத்ரன், அவனிடமிருந்து சமன், அந்தச் சமனிடமிருந்து த்யுமத்ஸேனன், அவனிடமிருந்து ஸுமதி, அவனிடமிருந்து ஸுபலன் இவர்கள் ஜனிக்கப்போகின்றனர். (48) ஸுபலனிடமிருந்து ஸுநீதன், அவனிடமிருந்து ஸத்யஜித், அவனிடமிருந்து விஶ்வஜித், அவனிடமிருந்து ரிபுஞ்ஜயன் ஆகிய இவர்கள் ஜனிக்கப்போகின்றனர். இந்த ப்ருஹத்ரதவம்சத்திலுள்ளவர்கள் ஆயிரம் வருஷங்கள்வரை அரசர்களாக இருக்கப்போகின்றனர் என்றார். (49)

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண நவமஸ்கந்தத்தில்
திவோதாஸ வம்சவர்ணனம் ஜராஸந்தாதிகளின் உத்பத்தி
வர்ணனம் ரிபுஞ்ஜயாந்த அரசவர்ணனமென்ற
இருபத்திரண்டாவது அத்தியாயம் முற்றிற்று.

—•••*•••—

## अथ त्रयोऽविंशोऽध्यायः ॥

श्रीशुक उवाच—अनोः सभानरश्चक्षुः परोक्षश्च त्रयः सुताः । सभानरात्कालनरः सृञ्जयस्तत्सुतस्ततः ॥ १ ॥ जनमेजयस्तस्य पुत्रो महाशीलो महामनाः । उशीनरस्तितिक्षुश्च महामनस आत्मजौ ॥ २ ॥ शिबिर्वनः शमिर्दक्षश्चत्वारोशीनरात्मजाः । वृषादर्भः सुवीरश्च मद्रः कैकेय आत्मजाः ॥ ३ ॥ शिबेश्चत्वार एवासंस्तितिक्षोश्च रुशद्रथः । ततो

---

## இருபத்துமூன்றாவது அத்தியாயம்.

(அ-கை) त्रयोविंशे त्वनोर्द्रुह्योस्तुर्वसोश्चान्वयः क्रमात् ।
यदोश्चवंशोऽनुक्रान्तो यावज्ज्यामघसम्भवः ॥ १ ॥

(க-ரை) இந்த இருபத்துமூன்றாவது அத்தியாயத்தில் அனுவினுடையவும், த்ருஹ்யுவினுடையவும், துர்வஸுவினுடையவும், வம்சமானது முறையே சொல்லப்பட்டு ஜ்யாமகன் என்பவனுடைய உத்பத்திவரை தொடர்ந்துவரும் யதுவின் வம்சமும் சொல்லப்படுகிறது. (1) (எ-று)

யயாதியின் புத்திரர்களுக்குள் ஐந்தாவது புத்திரனான பூருவின் வம்சத்தைச் சொல்லி இப்பொழுது நான்காவது புத்திரனான அனுவின் வம்சத்தைச் சொல்லத்தொடங்குகிறார்—

ஸ்ரீசுகர் சொல்லலுற்றார்—அனுவுக்கு ஸபாநரன், சக்ஷுஸ், பரோக்ஷன் என மூன்று புத்திரர்களுண்டாயினர். ஸபாநரனிடமிருந்து காலநரனுண்டானான். அவனுடைய புத்திரன் ஸ்ருஞ்ஜயன். (1) பிறகு ஜனமேஜயன் அந்த ஸ்ருஞ்ஜயனிடமிருந்துண்டானான். அந்த ஜனமேஜயனுடைய புத்திரன் மஹாசீலன். மஹாசீலனுடைய புத்திரன் மஹாமனஸ். உசீநரனும், திதிக்ஷுவும் மஹாமனஸ்வினுடைய புத்திரர்கள். (2) சிபி, வேனன், சமி, தக்ஷன் ஆகிய நால்வரும் உசீநரனுடைய புத்திரர்கள். சிபிக்குவிருஷாதர்ப்பன், ஸுவீரன், மத்ரன், கைகேயன் என நான்கு புத்திரர்களேயுண்டாயினர். திதிக்ஷு என்பவனுக்கு ருசத்ரதன் பிறந்தான். அவனுக்கு ஹேமன் பிறந்தான். அவனுக்கு ஸுதபஸ்ஸும், அந்த ஸுதபஸ்ஸுக்குப் பலியும் பிறந்தனர். (3-4) பலி

हेमोऽथ सुतपा बलिः सुतपसोऽभवत् ॥ ४ ॥ अङ्गवङ्गकलिङ्गाद्याः सुह्म-
पुण्ड्रान्ध्रसंज्ञिताः । जज्ञिरे दीर्घतमसो बलेः क्षेत्रे महीक्षितः ॥ ५ ॥ चक्रुः
स्वनाम्ना विषयान्षडिमान्प्राच्यकांश्च ते । खनपानोऽङ्गतो जज्ञे तस्माद्दि-
विरथस्ततः ॥ ६ ॥ सुतो धर्मरथो यस्य जज्ञे चित्ररथोऽप्रजाः । रोमपाद
इति ख्यातस्तस्मै दशरथः सखा ॥ ७ ॥ शान्तां स्वकन्यां प्रायच्छदृष्य-
शृङ्ग उवाह ताम् । देवेऽवर्षति यं रामा आनिन्युर्हरिणीसुतम् ॥ ८ ॥ ना-
ट्यसङ्गीतवादित्रैर्विभ्रमालिङ्गनार्हणैः । स तु राज्ञोऽनपत्यस्य निरूप्येष्टिं
मरुत्वतः ॥ ९ ॥ प्रजामदाद्दशरथो येन लेभेऽप्रजाः प्रजाः । चतुरङ्गो रोम
पादात्पृथुलाक्षस्तु तत्सुतः ॥ १० ॥ बृहद्रथो बृहत्कर्मा बृहद्भानुश्च तत्सु-

---

என்ற அரசனுடைய பத்னியினிடத்தில் உதத்யருடைய புத்திரரான தீர்க்கதமஸ்ஸுக்கு அங்கன் வங்கன் களிங்கன் முதலியோரும் ஸும்ஹன் புண்ட்ரன் அந்த்ரன் என்ற பெயருள்ளவர்களும் உண்டாயினர். (5) அவர்கள் பாரதவர்ஷத்துக்குக் கிழக்குத் திக்கிலுள்ளவைகளான ஆறுதேசங்களைத் தத்தமது பெயருடன் ஏற்படுத்தினர். அங்கனிடமிருந்து கனபானன் பிறந்தான். அவனிடமிருந்து திவிரதன் பிறந்தான். (6) அவனிடமிருந்து தர்மரதன் பிறந்தான். இந்தத் தர்மரதனுக்குச் சித்ரரதன் பிறந்தான். இவனுக்குப் புத்திரனற்றவனும் ரோமபாதன் என்ற ப்ரஸித்திபெற்றவனுமான புத்திரன் பிறந்தான். அந்த ரோமபாதனையும் பொருட்டு ஸகாவான தசரதன் சாந்தை என்ற தனது பெண்ணை ஸ்வீகாரமாகக் கொடுத்தான் ருஷ்யஶ்ருங்கமஹருஷி அவளை விவாஹஞ் செய்துகொண்டார். மானின் புத்திரரான இந்த ருஷ்யஶ்ருங்கரை, இந்திரன் மழைபொழியாதுபோகவே தாஸிகள் நாட்யம் ஸங்கீதம் வாத்யம் இவற்றினாலும், விளையாட்டு ஆலிங்கனம் பூஜை இவற்றினாலும் ரோமபாதருடைய தேசத்துக்கு அழைத்து வந்தனர். அந்த ருஷ்யஶ்ருங்கரோவெனில் புத்திரனில்லாதவனான தசரனுக்கு மருத்வத்ஸம்பத்தமான இஷ்டியைச் செய்து ப்ரஜையையுண்டாக்கினார். இந்த மருத்வத்ஸம்பத்தமான யாகத்தினால் புத்திரனற்ற தசரதன் நான்கு புத்திரர்களை யடைந்தார். பிறகு ரோமபாதரிடமிருந்து சதுரங்கன் பிறந்தான். அந்தச் சதுரங்

ताः। आद्याद्बृहन्मनास्तस्माज्जयद्रथ उदाहृतः ॥ ११ ॥ विजयस्तस्य सम्भू-
त्यां ततो धृतिरजायत। ततो धृतव्रतस्तस्य सत्कर्माऽधिरथस्ततः॥ १२ ॥
योऽसौ गङ्गातटे क्रीडन्मञ्जूषान्तर्गतं शिशुम्। कुन्त्यापविद्धं कानीनमनप-
त्योऽकरोत्सुतम् ॥१३॥ वृषसेनः सुतस्तस्य कर्णस्य जगतीपतेः। द्रुह्योश्च
तनयो बभ्रुः सेतुस्तस्यात्मजस्ततः ॥ १४ ॥ आरब्धस्तस्य गान्धारस्तस्य
धर्मस्ततो धृतः। धृतस्य दुर्मनास्तस्मात्प्रचेताः प्राचेतसं शतम् ॥ १५ ॥
म्लेच्छाधिपतयोऽभूवन्नुदीचीं दिशमाश्रिताः। तुर्वसोश्च सुतो वह्निर्वह्नेर्भ-

---

கனுடைய புத்திரன் ப்ருதுளாக்ஷன். (7–10) அந்த ப்ருதுளாக்ஷனுக்கு ப்ருஹத்ரதன், ப்ருஹத்கர்மா, ப்ருஹத்பானு என மூன்று புத்திரர்கள் பிறந்தனர். மூத்தவனான ப்ருஹத்ரதனிடமிருந்து ப்ருஹன்மனஸ் பிறந்தான். அந்த ப்ருஹன்மனஸ்ஸினிடமிருந்து ஜயத்ரதன் பிறந்தான். (11) அவனுக்கு ஸம்பூதி என்ற பத்னியினிடத்தில் விஜயன் பிறந்தான். அந்த விஜயனிடமிருந்து திருதி பிறந்தான். அவனிடமிருந்து த்ருதவ்ரதன் பிறந்தான் அவனுக்கு ஸத்கர்மா பிறந்தான். அவனிடமிருந்து அதிரதன் பிறந்தான். (12) கங்கைக் கறையில் விளையாடுமிவன் குந்தியினால் பெட்டியிலடக்கஞ்செய்து விடப்பட்டதும், கன்னிகையாக இருக்கும்பொழுதே பிறந்ததுமான குழந்தையைப் புத்திரனற்றவனாக இருப்பதுபற்றிப் புத்திரனாகச் செய்துகொண்டான். (13) ஜகதீபதியான அந்தக் கர்ணனுக்கு விருஷஸேனன் பிறந்தான். யயாதியின் புத்திரனான த்ருஹ்யுவுக்கு பப்ருஎன்ற புத்திரன் பிறந்தான். அவனுடைய புத்திரன் ஸேது. அந்த ஸேதுவினிடமிருந்து ஆரப்தன் பிறந்தான். அனுக்குக் காந்தாரன் பிறந்தான். அவனுக்குத் தர்மன் பிறந்தான். அவனுக்கு த்ருதன் ஜனித்தான் திருதனுக்கு துர்மனஸ் பிறந்தான். அவனிடமிருந்து ப்ரசேதஸ் பிறந்தான். இந்த ப்ரசேதஸ்ஸுக்கு நூறு புத்திரர்களுண்டாயினர். (14–15) இவர்கள் வடக்குதிக்கை யாஶ்ரயித்தவர்களாகவும் மிலேச்சாதிபதிகளாகவும் ஆயினர். யயாதியின் புத்திரனான துர்வஸுவுக்கு வன்ஹி என்ற புத்திரன் பிறந்தான். வன்ஹிக்குப் பர்க்கன் பிறந்தான். அவனுக்குப் பானுமான் பிறந்தான். (16) அவ

र्गोऽथ भानुमान् ॥ १६ ॥ त्रिभानुस्तत्सुतोऽस्यापि करन्धम उदारधीः । मरुतस्तत्सुतोऽपुत्रः पुत्रं पौरवमन्वभूत् ॥ १७ ॥ दुष्यन्तः स पुनर्भेजे स्वं वंशं राज्यकामुकः । ययातेर्ज्येष्ठपुत्रस्य यदोर्वंशं नरर्षभ ॥ १८ ॥ वर्णयामि महापुण्यं सर्वपापहरं नृणाम् । यदोर्वंशं नरः श्रुत्वा सर्वपापैः प्रमुच्यते ॥ १९ ॥ यत्रावतीर्णो भगवान्परमात्मा नराकृतिः । यदोः सहस्रजित्क्रोष्टा नलो रिपुरिति श्रुताः ॥ २० ॥ चत्वारः सूनवस्तत्र शतजित्प्रथमात्मजः । महाहयो वेणुहयो हैहयश्चेति तत्सुताः ॥ २१ ॥ धर्मस्तु हैहयसुतो नेत्रः कुन्तेः पिता ततः । सोहञ्जिरभवत्कुन्तेर्महिष्मान्भद्रसेनकः ॥ २२ ॥ दुर्मदो भद्रसेनस्य धनकः कृतवीर्यसूः । कृताग्निः कृत

---

னுடைய புத்திரன் த்ரிபானு. இவனுடைய புத்திரன் கம்பீரமான புத்திபடைத்த கரந்தமன். அந்தக் கரந்தமனுடைய புத்திரன் மருதன். இவன் புத்திரனற்றவனாய் புருவம்சத்திலுண்டான துஷ்யந்தனையே புத்திரனாக ஸ்வீகரித்துக்கொண்டான். (17) ராஜ்யத்தில் விருப்பமுள்ளவனான அந்தத் துஷ்யந்தன் திரும்பவும் தனது பௌரவமான வம்சத்தையே அடைந்தான். ஹே நரர்ஷப! யயாதியின் ஜ்யேஷ்டபுத்திரனான யதுவின் வம்சத்தைச் சொல்லுகிறேன் கேளும். மஹாபுண்ணியமானதும், மனிதர்களின் எல்லாப் பாபங்களையும் போக்குகின்றதுமான யதுவின் வம்சத்தைக் கேட்டு மனிதன் எல்லாப் பாபங்களினின்றும் விடுபடுகிறான். (18-19) இந்த வம்சத்தில் பரமாத்மாவான பகவான் மனிதசரீரத்துடன் அவதரித்தார். யதுவுக்கு ஸஹஸ்ரஜித், க்ரோஷ்டா, நளன், ரிபு என ப்ரஸித்தர்களான நான்கு புத்திரர்களுண்டாயினர். அவர்களுள் மூத்தவனான ஸஹஸ்ரஜித்துக்கு சதஜித் என்ற புத்திரன் பிறந்தான். அந்தச் சதஜித்துக்கு மஹாஹயன், வேணுஹயன், ஹைஹயன் என மூன்று புத்திரர்களுண்டாயினர். (20-21) ஹைஹயனுடைய புத்திரன் தர்மன். அவனுடைய புத்திரன் நேத்ரன். நேத்திரனுடைய புத்திரன் குந்தி. குந்தியினுடைய புத்திரன் ஸோஹஞ்ஜி. ஸோஹஞ்ஜியினுடைய புத்திரன் மஹிஷ்மான். அவனுடைய புத்திரன் பத்ரஸேனகன். (22) பத்ரஸேனகனுடைய புத்திரன் துர்மதன். அவனுடைய புத்திரன் தனகன். தனகனுக்கு க்ருதவீர்

वर्मा च कृतौजा धनकात्मजाः ॥ २३ ॥ अर्जुनः कृतवीर्यस्य सप्तद्वीपेश्वरोऽभवत् । दत्तात्रेयाद्धरेरंशात्प्राप्तयोगमहागुणः ॥२४॥ न नूनं कार्तवीर्यस्य गतिं यास्यन्ति पार्थिवाः । यज्ञदानतपोयोगश्रुतवीर्यजयादिभिः ॥ २५ ॥ पञ्चाशीतिसहस्राणि ह्यव्याहतबलः समाः । अनष्टवित्तस्मरणो बुभुजेऽक्षय्यषड्वसु ॥ २६ ॥ तस्य पुत्रसहस्रेषु पञ्चैवोर्वरिता मृधे । जयध्वजः शूरसेनो वृषभो मधुरूर्जितः ॥ २७ ॥ जयध्वजात्तालजङ्घस्तस्य पुत्रशतं त्वभूत् । क्षत्रं यत्तालजङ्घाख्यमौर्वतेजोपसंहृतम् ॥ २८ ॥

---

யன், கிருதாக்னி, கிருதவர்மா, கிருதௌஜஸ் என நான்கு புத்திரர்கள் பிறந்தனர். (23) கிருதவீர்யனுடைய புத்திரனுன அர்ஜுனன் ஹரியின் அம்சாவதாரரான தத்தாத்ரேயரிடமிருந்து அடையப்பட்ட யோகரூபமான மஹத்தான குணத்தை யுடையவனுய் ஏழு தீவுகளுக்கும் ஈஃப்வரனுகவானுன். (24) யக்ஞம், தானம், தவம்=கிருச்ராதியனுஷ்டானம், யோகம், ஃப்ருதம்=சாஸ்திராப்யாஸம், பலம், ஜயம், ஆதி=துஷ்டநிக்ரஹம், இவற்றுடன் கூடினவனுன கார்த்தவீரியனுடைய கதியை=மஹிமையை, மற்ற அரசர்கள் அடையவே மாட்டார். இது நிஃப்சயம். (25) எண்பத்தையாயிரம் வருஷங்கள்முடிய தடுக்கப்படாத பலமுள்ளவனுகவும், விஞசமற்றதான பணத்தையுடைய ஸ்மரணத்தை யுடையவனுகவும், அதாவது:—எவனுடைய ஸ்மரணமானது பணத்துக்கு நாசத்தையே தராதோ அத்தகையவனுகவும் இருந்துகொண்டு ஆறு இந்திரியங்களுக்குமுறிய குறைவற்ற விஷயங்களை அனுபவித்து வந்தான். (26) அவனுடைய ஆயிரம் புத்திரர்களுக்குள் பரசுராமருடைய போரில் ஜயத்வஜன், சூரஸேனன், விருஷபன், மது, ஊர்ஜிதன் என்ற ஐந்து பேர்களே எஞ்ஜினர். (27) ஜயத்வஜனிடமிருந்து தாலஜங்கன் பிறந்தான். அவனுக்கு நூறுபுத்திரர்கள் பிறந்தனர். தாலஜங்கம் என்ற பெயரையுடைய அவனுடைய நூறுபுத்திரர்கள் ரூபமான யாதொரு க்ஷத்திரியகுலமுண்டோ அது, ஔர்வரிடமிருந்து கிடைத்த தேஜஸ்ஸை=ஆக்னேயாஸ்திரத்தை, யுடைய ஸகரமஹாராஜனுல் நாசஞ்செய்யப்பட்டு விட்டது. (28)

तेषां ज्येष्ठो वीतिहोत्रो वृष्णिः पुत्रो मधोः स्मृतः । तस्य पुत्रशतं त्वासीद्वृष्णिज्येष्ठं यतः कुलम् ॥ २९ ॥ माधवा वृष्णयो राजन्यादवाश्चेति संज्ञिताः । यदुपुत्रस्य च क्रोष्टोः पुत्रो वृजिनवांस्ततः॥ ३० ॥ श्वाहिस्ततो रुशेकुर्वै तस्य चित्ररथस्ततः । शशबिन्दुर्महायोगी महाभोजो महानभूत् ॥ ३१ ॥ चतुर्दशमहारत्नश्चक्रवर्त्यपराजितः । तस्य पत्नीसहस्राणां दशानां

---

அந்தத் தாலஜங்கனின் புத்திரர்களுக்குள் வீதிஹோத்திரன் மூத்தவன். அவனுக்கு மது பிறந்தான். மதுவின் புத்திரன் வ்ருஷ்ணி. அந்த மதுவுக்கு வ்ருஷ்ணியை ஜ்யேஷ்டனாகவுடைய நூறு புத்திரர்களுண்டாயினர். இந்தக் குலமானது எக்காரணம்பற்றி மதுவினிடமிருந்தும் விருஷ்ணியினிடமிருந்தும் யதுவினிடமிருந்தும் ஏற்பட்டதோ அக்காரணம்பற்றி ஹே ராஜன்! இக்குலத்தில் பிறந்தவர் மாதவர்கள் என்றும், வ்ருஷ்ணிகளென்றும், யாதவர்களென்றும் பெயருள்ளவர்களாயினர். யதுவின் புத்திரனான க்ரோஷ்டுவுக்கு வ்ருஜினவான் பிறந்தான். அவனிடமிருந்து ஸ்வாஹி என்பவன் பிறந்தான். அவனுக்கு ருசேகு என்பவன் பிறந்தான். அவனுக்குச் சித்திரரதன் பிறந்தான். அந்த சித்திரரதனிடமிருந்து மஹாயோகியும் மஹாபோஜனும்=மஹான்களான தேவர்களை எப்பொழுதும் யாகங்களினால் திருப்தி செய்துவைப்பவனும், மஹானுமான் சசபிந்து என்பவன் பிறந்தான். (29-31) அவன் *பதினான்கு மஹாரத்தினங்களை யுடையவனாகவும் பிறரால் ஜயிக்கப்படாதவனாகவும் சக்கிரவர்த்தியாகவும் இருந்தான். ஹே ஸுமஹாயச:! அந்தச் சசபிந்துவினுடைய (*)பதினாயிரம் பத்னிகளுக்குள்

---

* யானை, குதிரை, தேர், ஸ்திரீகள், (அப்ஸரஸ்ஸுகள்) அம்புகள், மஹாபத்மம் முதலிய நிதிகள், திவ்யமான புஷ்பமாலைகள், ஜரை வியாதி இவற்றைப்போக்கும் வஸ்திரங்கள், கல்பகம் முதலிய விருக்ஷங்கள், சக்தி, பாசம், பத்மராகம் முதலிய மணிகள், வெண்குடை, விமானம் ஆகிய பதினான்கு சிறந்த பொருள்களை யுடையவன் என்பது பொருள்.

(*) तस्य पत्नीसहस्राणां दशासन् सुमहायशः=என்ற வேறு பாடப்படி ஹே ஸுமஹாயச:! அந்தச் சசபிந்துவுக்கு பத்னீஸஹஸ்ரங்களுடைய பத்து அதாவது:—பதினாயிரம் பத்னிகளிருந்தனர். அவர்களிடத்தில் ஒவ்வொருவரிடத்திலும் லக்ஷம் லக்ஷம்வீதம் மொத்தம் நூறுகோடி புத்திரர்களை யுண்டுபண்ணினான் என்றும் பொருள் கொள்ளலாம்.

सुमहायशाः ॥ ३२ ॥ दशलक्षसहस्राणि पुत्राणां तास्वजीजनत् । तेषां तु षट् प्रधानानां पृथुश्रवस आत्मजः ॥ ३३ ॥ धर्मो नामोशना तस्य हयमेधशतस्य याट् । तत्सुतो रुचकस्तस्य पञ्चासन्नात्मजाः शृणु ॥ ३४ ॥ पुरुजिद्रुक्मरुक्मेषुपृथुज्यामघसंज्ञिताः । ज्यामघस्त्वप्रजोऽप्यन्यां भार्यां शैब्यापतिर्भयात् ॥३५॥ नाविन्दच्छत्रुभवनाद्भोज्यां कन्यामहारषीत् । रथस्थां तां निरीक्ष्याह शैब्या पतिममर्षिता ॥ ३६ ॥ केयं कुहक मत्स्थानं रथमारोपितेति वै । स्नुषा तवेत्यभिहिते स्मयन्ती पतिमब्रवीत् ॥ ३७ ॥

---

ஒவ்வொருவரிடத்திலும் தனித்தனி லக்ஷம்லக்ஷம் புத்திரர்கள்வீதம் அவர்களிடம் மொத்தம் பத்துலக்ஷஸஹஸ்ரம் (அதாவது:—நூறு கோடி) புத்திரர்களை அவன் உண்டுபண்ணினன். (ப்ருதுஶ்ரவஸ், ப்ருதுகீர்த்தி, ப்ருதுயஶஸ் என்றதாதிய) ஆறுபேர்களை முக்கியர்களாகக்கொண்ட அந்த நூறுகோடி புத்திரர்களுக்குள் அறுவருள் முக்கியனை ப்ருதுஶ்ரவஸ்ஸினுடைய புத்திரன் தர்மன் எனப்பெயருள்ளவன். அந்தத் தர்மனுடைய புத்திரன் உசனஸ் என்பவன். இவன் நூறு அஶ்வமேதங்களைச் செய்தவன். அந்த உசனஸ்ஸின் புத்திரன் ருசகன் அவனுக்கு ஐந்து புத்திரர்கள் பிறந்தனர். அவர்களைச் சொல்லுகிறேன் கேளும். (32–34) அவர்கள் புருஜித், ருக்மன், ருக்மேஷு, ப்ருது, ஜ்யாமகன் என்ற பெயருள்ளவர்களாவர். ஜ்யாமகனே புத்திரனற்றவனுயினுங்கூட சைப்யை என்ற மலடிக்குப் பதியாக இருப்பதால் அவளிடமிருந்துண்டான பயத்தினுல் வேறு பார்யையை மணந்துகொள்ளாதிருந்தான். ஒருஸமயம் தனக்குச் சத்துருவான அரசனுடைய வீட்டிலிருந்து போஜ்யையான=போகத்துக்கு அர்ஹையான, கன்னிகையைப் பலாத்காரமாக அபஹரித்துக் கொண்டுவந்தான். தேரிலிருக்கும் அக்கன்னிகையைக் கண்டு பொறுமைகொண்ட சைப்யையானவள் அரசனைப் பார்த்து "ஹே ஏமாற்றக்காரனே! என்னுடைய ஸ்தானமான தேரிலேற்றிவைக்கப்பட்டவளான இவள் யார்?" என்று கேட்டாள். "இவள் உன்னுடைய மருமகள்" என அரசனால் பதில் சொல்லப்பட்டபொழுது சைப்யை சிரித்துக் கொண்டு பதியைப் பார்த்து "நானே மலடி, வேறுசக்களத்தியுமற்றவள். எனக்கு மரு

अहं वन्ध्याऽसपत्नी च स्नुषा मे युज्यते कथम् । जनयिष्यसि यं राज्ञि तस्येयमुपयुज्यते ॥ ३८ ॥ अन्वमोदन्त तद्विश्वेदेवाः पितर एव च । शैब्या गर्भमधात्काले कुमारं सुषुवे शुभम् । स विदर्भ इति प्रोक्त उपयेमे स्नुषां सतीम् ॥ ३९ ॥

इति श्रीमद्भागवते महापुराणे नवमस्कन्धे यदुवंशानुवर्णनं नाम त्रयोऽविंशोऽध्यायः ॥ २३ ॥



மகள் என்பது எப்படிப் பொருந்தும்" என்றாள். அதுகேட்ட அரசன் ஹே ராக்ஞி! எவனை நீ பெறப்போகின்றாயோ அவனுக்கு இவள் உபயோகப்படப்போகிறாள் என்றான். (35–38) அரசனின் அந்த வார்த்தையை அவனாலாராதிக்கப்பட்ட எல்லாத் தேவர்களும், பிதிருக்களும் அப்படியே ஆகுக என ஆமோதித்தனர். (அரசனின் ப்ரதிவசனமேற்பட்ட முகூர்த்தத்தின் பெருமையினால் சைப்யையானவள் ரஜோநிவிருத்தியை யடைந்தவளாக இருந்தபோதிலுங்கூட) கர்ப்பத்தைத் தரித்து ப்ரஸவகாலத்தில் சுபனான குமாரனைப் பெற்றாள். அந்தக் குமாரன் விதர்ப்பன் என்று சொல்லப்பட்டான். முன்னர் அரசனால் கொண்டுவந்து வைக்கப்பட்ட பதிவ்ரதையான மருமகளை விவாஹஞ் செய்துகொண்டான் என்றார்.

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண நவமஸ்கந்தத்தில் யதுவம்சானுவர்ணனமென்ற இருபத்துமூன்றாவது அத்தியாயம் முற்றிற்று.



## இருபத்து நான்காவது அத்தியாயம்.

(அ–கை) चतुर्विंशे विदर्भस्य पुत्रत्रयसमुद्भवाः ।
वंशा नानामुखाः प्रोक्ता रामकृष्णोद्भवावधि ॥ १ ॥

(க–ரை) இந்த இருபத்துநான்காவது அத்தியாயத்தில் விதர்ப்பனுடைய மூன்று புத்திரர்களிடத்திலுண்டானயினவும் பல தரப்பட்ட பிரிவுள்ளனவுமான வம்சங்கள் ராமகிருஷ்ணர்களின் அவதாரம்வரை சொல்லப்பட்டிருக்கின்றன. (1) (எ–று)

## अथ चतुर्विंशोऽध्यायः ॥

श्रीशुक उवाच—तस्यां विदर्भोऽजनयत्पुत्रौ नाम्ना कुशक्रथौ । तृतीयं रोमपादं च विदर्भकुलनन्दनम् ॥ १ ॥ रोमपादसुतो बभ्रुर्बभ्रोः कृतिरजायत । उशिकस्तत्सुतस्तस्माच्चेदिश्चैद्यादयो नृप ॥ २ ॥ क्रथस्य कुन्तिः पुत्रोऽभूद्धृष्टिस्तस्याथ निर्वृतिः । ततो दशार्हो नाम्नाऽभूत्तस्य व्योमः सुतस्ततः ॥३॥ जीमूतो विकृतिस्तस्य यस्य भीमरथः सुतः। ततो नवरथः पुत्रो जातो दशरथस्ततः ॥ ४ ॥ करम्भिः शकुनेः पुत्रो देवरातस्तदात्मजः । देवक्षत्रस्ततस्तस्य मधुः कुरुवशादनुः ॥ ५ ॥ पुरुहोत्रस्त्वनोः पुत्र-

---

ஸ்ரீசுகர் சொல்லலுற்ருர்—விதர்ப்பன் அவளிடத்தில் குசன் க்ரதன் என்று பெயருள்ள இரண்டு புத்திரர்களேயும், விதர்ப்ப குலத்தை ஸந்தோஷப்படுத்துகின்ற ரோமபாதன் என்ற மூன்ருவது புத்திரனேயுமுண்டுபண்ணினுன். (1) ஹே ந்ருப! ரோமபாதனுடைய புத்திரன் பப்ரு. பப்ருவுக்கு க்ருதி என்பவன் பிறந்தான். அவனது புத்திரன் உசிகன். அவனிடமிருந்து சேதி பிறந்தான். அவனிடமிருந்து தமகோஷன் முதலியோர் பிறந்தனர். (2) க்ரதனுக்குக் குந்தி என்ற புத்திரன் பிறந்தான். த்ருஷ்டி என்பவன் அவனுடைய புத்திரன். அவனுடைய புத்திரன் நிர்விருதி. அவனிடமிருந்து தசார்ஹன் என்று பெயருள்ளவன் பிறந்தான். அவனுக்கு வ்யோமன் என்ற புத்திரன் பிறந்தான். அவனிடமிருந்து ஜீமூதன் பிறந்தான். அவனுக்கு விகிருதி என்பவன் பிறந்தான். இவனுக்குப் பீமரதன் புத்திரன். அவனிடமிருந்து நவரதன் என்ற புத்திரன் பிறந்தான். அவனிடமிருந்து தசரதன் பிறந்தான். (3–4) தசரதனிடமிருந்து சகுனி பிறந்தான். கரம்பி என்பவன் இவனுடைய புத்திரன் கரம்பியின் புத்திரன் தேவராதன். அவனிடமிருந்து தேவக்ஷத்ரன் பிறந்தான். அவனுக்கு மது பிறந்தான். அவனுக்குக் குருவசன் பிறந்தான். அவனிடமிருந்து அனு என்பவன் பிறந்தான். (5) அனுவின் புத்திரன் புருஹோத்ரன். அவனுக்கு ஆயு என்பவன் பிறந்தான். அவனிடமிருந்து ஸாத்வதன் பிறந்தான். ஹே மாரிஷ! அந்த ஸாத்வதனுக்குப் பஜ

स्तस्यायुः सात्वतस्ततः । भजमानो भजिर्दिव्यो वृष्णिर्देवावृधोऽन्धकः
॥ ६ ॥ सात्वतस्य सुताः सप्त महाभोजश्च मारिष । भजमानस्य निम्लोचिः
किङ्किणो धृष्टिरेव च ॥ ७ ॥ एकस्यामात्मजाः पत्न्यामन्यस्यां च त्रयः
सुताः। शताजिच्च सहस्राजिदयुताजिदिति प्रभो ॥ ८ ॥ बभ्रुर्देवावृधसुत-
स्तयोः श्लोकौ पठन्त्यमुम् । यथैव शृणुमो दूरात्संपश्यामस्तथान्तिकात्
॥ ९ ॥ बभ्रुः श्रेष्ठो मनुष्याणां देवैर्देवावृधः समः। पुरुषाः पञ्चषष्टिश्च षट्
सहस्राणि चाष्ट च ॥ १० ॥ येऽमृतत्वमनुप्राप्ता बभ्रोर्देवावृधादपि । महा-
भोजोऽपि धर्मात्मा भोजा आसंस्तदन्वये ॥ ११ ॥ वृष्णेः सुमित्रः पुत्रोऽभू-
द्युधाजिच्च परन्तप । शिनिस्तस्यानमित्रश्च निम्नोऽभूदनमित्रतः ॥ १२ ॥

---

மானன், பஜி, திவ்யன், வ்ருஷ்ணி, தேவாவ்ருதன், அந்தகன், மஹாபோஜன் என ஏழு புத்திரர்கள் பிறந்தனர். பஜமானனுக்கு ஒரு பத்னியினிடத்தில் நிம்லோசி, கிங்கிணன், த்ருஷ்டி என்றுமான புத்திரர்களும், ஹே ப்ரபோ! வேறுபத்னியினிடத்தில் சதாஜித், ஸஹஸ்ராஜித், அயுதாஜித் என்றுமாக மூன்று புத்திரர்களும் பிறந்தனர். (6–8) தேவாவ்ருதனுடைய புத்திரன் பப்ரு. பிதா புத்திரன் இவ்விருவர்கள் விஷயத்திலும் முன்னரே ஸித்தங்களான சுலோகங்களைப் படிக்கின்றனர். அவையாவன—"இப்பிதாபுத்திரர்கள் பலவிதமாகத் தமது சரீரங்களை யோகப்ரபாவத்தினல் மாற்றிக்கொண்டு வெகு தூரத்திலிருப்பதாக எவ்விதம் கேள்விப்படுகின்றோமோ அவ்விதமே ஸமீபத்திலும் காண்கின்றோம். பப்ரு மனிதர்களுக்குள் சிறந்தவன். தேவாவ்ருதன் தேவர்களுக்கு ஸமமானவன்" என்றும். பப்ருவினிடமிருந்தும், தேவாவ்ருதனிடமிருந்தும், ஆறுயிரத்து எழுபத்துமூன்று புருஷர்கள் எவர்களோ அவர்கள் அமிருதத்வத்தை (மோக்ஷத்தை) யடைந்திருக்கின்றனர். மஹாபோஜனும் தர்மாத்மாவாவான். அவனுடைய வம்சத்தில் போஜர்களுண்டாயினர். (9–11) ஹே பரந்தப! வ்ருஷ்ணிக்கு ஸுமித்ரன் என்ற புத்திரனும் யுதாஜித் என்ற புத்திரனும் பிறந்தனர். அவனுக்குச் சினியும் அனமித்ரனும் பிறந்தனர். அனமித்ரனிடமிருந்து நிம்னன் பிறந்தான். (12) நிம்னனுக்கும் ஸத்ராஜித்தென்றும், ப்ரஸேனன் என்றுமான புத்திரர்களுண்டாயினர்.

सत्राजितः प्रसेनश्च निम्नस्याप्यासतुः सुतौ । अनमित्रसुतो योऽन्यः शि-
निस्तस्याथ सत्यकः॥ १३ ॥ युयुधानः सात्यकिर्वै जयस्तस्य कुणिस्ततः।
युगन्धरोऽनमित्रस्य वृष्णिः पुत्रोऽपरस्ततः ॥ १४ ॥ श्वफल्कश्चित्ररथश्च
गान्दिन्यां च श्वफल्कतः। अक्रूरप्रमुखा आसन्पुत्रा द्वादश विश्रुताः॥१५॥
आसङ्गः सारमेयश्च मृदुरो मृदुविद्गिरिः । धर्मवृद्धः सुकर्मा च क्षेत्रोपे-
क्षोऽरिमर्दनः ॥ १६ ॥ शत्रुघ्नो गन्धमादश्च प्रतिबाहुश्च द्वादश । तेषां स्व-
सा सुचीराख्या द्वावक्रूरसुतावपि ॥ १७ ॥ देववानुपदेवश्च तथा चित्रर-
थात्मजाः । पृथुर्विदूरथाद्याश्च बहवो वृष्णिनन्दनाः ॥ १८ ॥ कुकुरो भज-
मानश्च शुचिः कम्बलबर्हिषः। कुकुरस्य सुतो वह्निर्विलोमा तनयस्ततः॥१९॥
कपोतरोमा तस्यानुः सखा यस्य च तुम्बुरुः । अन्धको दुन्दुभिस्तस्य

---

அனமித்ரனுடைய புத்திரனுன யாதொரு வேறு சினி என்பவனுண்டோ அவனுக்கு ஸத்யகன் பிறந்தான். (13) ஸத்யகனுடைய புத்திரன் யுயுதானன். அவனுடைய புத்திரன் ஜயன். அவனுடைய புத்திரன் குணி. அவனிடமிருந்து யுகந்தரன் பிறந்தான். அனமித்ரனுக்கே விருஷ்ணி என்று வேறு புத்திரனுண்டு. அவனிடமிருந்து ஶ்வபல்கனும், சித்ராதனும் பிறந்தனர். ஶ்வபல்கனுக்குக் காந்தினீயினிடத்தில் மிகக் கீர்த்தி வாய்ந்த அக்ரூரரை முதன்மையாகக் கொண்ட (அதாவது:—அக்ரூரரைத் தவிர்த்து) பன்னிரண்டு புத்திரர்களுண்டாயினர். (14-15) அவர்களாவன—ஆஸங்கன், ஸாரமேயன், ம்ருதுரன், ம்ருதுவித், கிரி, தர்மவ்ருத்தன், ஸுகர்மா, க்ஷேத்ரோபேக்ஷன், அரிமர்த்தனன், சத்ருக்னன், கந்தமாதன், ப்ரதிபாஹு எனப் பன்னிரண்டு பேர்களாம். ஸுசீரா என்ற பெயரையுடையவள் அவர்களின் தங்கை. அக்ரூரருக்கும் தேவவான் என்றும் உபதேவன் என்றுமாக இரண்டு புத்திரர்கள் பிறந்தனர். அவ்விதமே சித்திரரதனுடைய புத்திரர்களும் ப்ருது விதூரதன் இவர்களை ஆதியாகக்கொண்ட பலர். குகுரன், பஜமானன், சுசி, கம்பளபர்ஹிஷன் இவர்கள் வ்ருஷ்ணியின் புத்திரர்களாவர். குகுரனுடைய புத்திரன் வன்ஹி. அவனுடைய புத்திரன் விலோமா. (16–19) அந்த விலோமாவுக்குக் கபோதரோமா புத்திரன். அவனுடைய புத்திரன் அனு. இவனுக்குத் தும்புரு

दरियोतः पुनर्वसुः ॥ २० ॥ तस्याहुकश्चाहुकी च कन्या चैवाहुकात्मजौ । देवकश्चोग्रसेनश्च चत्वारो देवकात्मजाः ॥ २१ ॥ देववानुपदेवश्च सुदेवो देववर्धनः । तेषां स्वसारः सप्तासन्धृतदेवादयो नृप ॥ २२ ॥ शान्तिदेवोपदेवा च श्रीदेवा देवरक्षिता । सहदेवा देवकी च वसुदेव उवाह ताः ॥२३॥ कंसः सुनामा न्यग्रोधः कङ्कः शङ्कुः सुहूस्तथा । राष्टपालोऽथ सृष्टिश्च तुष्टिमानौग्रसेनयः ॥ २४ ॥ कंसा कंसवती कङ्का शूरभू राष्ट्रपालिका । उग्रसेनदुहितरो वसुदेवानुजस्त्रियः ॥ २५ ॥

शूरो विदूरथादासीद्भजमानः सुतस्ततः। शिनिस्तस्मात्स्वयम्भोजो हृदीकस्तत्सुतो मतः ॥ २६ ॥ देवबाहुः शतधनुः कृतवर्मेति तत्सुताः ।

---

என்ற மஹருஷி ஸகா. அனுவினிடமிருந்து அந்தகன் பிறந்தான். அவனிடமிருந்து துந்துபி பிறந்தான். அவனிடமிருந்து தரித்யோதன் பிறந்தான். தரித்யோதனிடமிருந்து புனர்வஸு பிறந்தான். (20) புனர்வஸுவுக்கு ஆஹுகனும் ஆஹுகீ என்ற பெண்ணும் பிறந்தனர். தேவகனும், உக்ரஸேனனும் ஆஹுகனுடைய புத்திரர்கள். தேவகனுக்கு தேவவான், உபதேவன், ஸுதேவன், தேவவர்த்தனன் என நான்கு புத்திரர்களுண்டாயினர். ஹே ந்ருப! அவர்களின் ஸஹோதரிகள் திருததேவா, சாந்திதேவா, உபதேவா, ஸ்ரீதேவா, தேவரக்ஷிதா, ஸஹதேவா, தேவகீ என ஏழு பேர்களிருந்தனர். அவர்களை வஸுதேவர் விவாஹஞ்செய்து கொண்டார். (21–23) கம்ஸன், ஸுநாமா, ந்யக்ரோதன், கங்கன், சங்கு, ஸுஹு, ராஷ்ட்ரபாலன், ஸ்ருஷ்டி, துஷ்டிமான் ஆகிய ஒன்பதுபேர்களும் உக்கிரஸேனனுடைய புத்திரர்களாவர். (24) கம்ஸா, கம்ஸவதீ, கங்கா, சூரபூ, ராஷ்ட்ரபாலிகா இவ்வைந்துபேர்களும் உக்கிரஸேனனுடைய பெண்கள். வசுதேவருடைய தம்பியின் பத்னிகளாவர். (25)

விதூரதனிடமிருந்து சூரன் பிறந்தான். அவனுடைய புத்திரன் பஜமானன். அவனிடமிருந்து சினி பிறந்தான். அவனிடமிருந்துஸ்வயம்போஜன் பிறந்தான். அவனுடைய புத்திரன் ஹ்ருதீகன். (26) தேவபாஹு, சததனு, க்ருதவர்மா இவர்கள் ஹ்ருதீகனுடைய புத்திரர்கள். தேவமீடனுக்குச் சூரன் என யாதொரு புத்

देवमीढस्य शूरस्य मारिषा नाम पत्न्यभूत् ॥ २७ ॥ तस्यां स जनयामास
दश पुत्रानकल्मषान् । वसुदेवं देवभागं देवश्रवसमानकम् ॥ २८ ॥ सृञ्जयं
श्यामकं कङ्कं शमीकं वत्सकं वृकम् । देवदुन्दुभयो नेदुरानका यस्य जन्म-
नि ॥ २९ ॥ वसुदेवं हरेः स्थानं वदन्त्यानकदुन्दुभिम् । पृथा च श्रुतदेवा च
श्रुतकीर्तिः श्रुतश्रवाः॥३०॥ राजाधिदेवी चैतेषां भगिन्यः पञ्च कन्यकाः ।
कुन्तेः सख्युः पिता शूरो ह्यपुत्रस्य पृथामदात् ॥ ३१ ॥ साऽऽप दुर्वाससो
विद्यां देवहूतिं प्रतोषितात् । तस्या वीर्यपरीक्षार्थमाजुहाव रविं शुचिम्
॥ ३२ ॥ तदैवोपागतं देवं वीक्ष्य विस्मितमानसा । प्रत्ययार्थं प्रयुक्ता मे
याहि देव क्षमस्व मे ॥ ३३ ॥ अमोघं दर्शनं देवि आधत्से त्वयि चात्म-

---

திரனுண்டோ அவனுக்கு மாரிஷா என்பவள் பத்னியாகவானுள். (27) அவளிடத்தில் அந்தச் சூரன் வஸுதேவர், தேவபாகர், தேவ ஸ்ரவஸர், ஆனகர், ஸ்ருஞ்ஜயர், ஸ்யாமகர், கங்கர், சமீகர், வத்ஸகர், வ்ருகர், எனக் குற்றமற்றவர்களான பத்துப்புத்திரர்களை யுண்டுபண்ணினர். எவருடைய ஜனனகாலத்தில் தேவதுந்துபிகளும் ஆனகங்களும் முழங்கினவோ ஹரியின் அவதாரத்துக்கு ஸ்தானமான அந்த வஸுதேவரை ஆனகதுந்துபி என்றே சொல்லுகின்றனர். ப்ருதையும், ஸ்ருததேவையும், ஸ்ருதகீர்த்தியும், ஸ்ருதஸ்ரவஸ்ஸும், ராஜாதிதேவியும் ஆகிய இந்த ஐந்து கன்னிகைகளும் இவர்களின் ஸஹோதரிகளாவர். சூரனை பிதா, ஸகாவும் அபுத்திரனுமான குந்தி என்பவனுக்கு ப்ருதையைக் கொடுத்தார். (28–31) அந்த ப்ருதையானவள் தனது பரிசரியையினல் ஸந்தோஷிக்கும்படி செய்யப்பட்ட துர்வாஸஸ்ஸினிடமிருந்து தேவர்களை அழைப்பதற்கு ஹேதுவான வித்யையை அடைந்தாள். அந்த வித்யையின் பரீக்ஷைக்கு வேண்டி சுத்தரான சூரியனை யழைத்தாள். (32) அப்பொழுதே அருகில் வந்த சூரியனைக்கண்டு ஆஸ்சரியத்தையடைந்த மனத்தை யுடையவளாய் ஹே தேவ! பரீக்ஷைக்கு வேண்டி வித்யையானது என்னல் ப்ரயோகிக்கப்பட்டது. திரும்பிப்போம். என்விஷயத்தில் பொருத்துக் கொள்ளும் என்ருள். (33) ஹே தேவி! என்னுடைய தரிசனமானது வீண்போகாதது. ஆகவே உன்னிடத்தில் புத்திரனை யுண்டுபண்ணுகிறேன். ஹே ஸுமத்

जम् । योनिर्यथा न दुष्येत कर्ताऽहं ते सुमध्यमे ॥ ३४ ॥ इति तस्यां स आधाय गर्भं सूर्यो दिवं गतः । सद्यः कुमारः संजज्ञे द्वितीय इव भास्करः ॥ ३५ ॥ तं साऽत्यजन्नदीतोये कृच्छ्राल्लोकस्य बिभ्यती । प्रपितामहस्तामुवाह पाण्डुर्वै सत्यविक्रमः ॥ ३६ ॥ श्रुतदेवां तु कारूषो वृद्धशर्मा समग्रहीत् । यस्यामभूद्दन्तवक्त्र ऋषिशप्तो दितेः सुतः ॥ ३७ ॥

कैकेयो धृष्टकेतुश्च श्रुतकीर्तिमविन्दत । सन्तर्दनादयस्तस्यां पञ्चासन्कैकयाः सुताः ॥ ३८ ॥ राजाधिदेव्यामावन्त्यौ जयसेनोऽजनिष्ट ह । दमघोषश्चेदिराजः श्रुतश्रवसमग्रहीत् ॥ ३९ ॥ शिशुपालः सुतस्तस्याः

---

யமே! உனது யோனியானது எவ்விதஞ் செய்தால் கெட்டுவிடாதோ அவ்விதம் செய்யவும் போகிறேன் என்றார். (34) இவ்விதம் சொல்லிவிட்டு அந்தச் சூரியன் அவளிடத்தில் கர்ப்பத்தையுண்டுபண்ணிவிட்டு தேவலோகத்தையடைந்தார். இரண்டாவது சூரியன் போல அப்பொழுதே குமாரன் உண்டானான். (35) அந்தக் குந்தி உலகுக்குப் பயந்தவளாய் அக்குழந்தையை நதியின் ஜலத்தில் வெகு கஷ்டத்துடன் விட்டுவிட்டாள். உண்மையான பராக்கிரமமுள்ள உன்னுடைய ப்ரபிதாமஹன் அந்தக் குந்தியை விவாஹஞ்செய்துகொண்டார். (36) ஶ்ருததேவை என்பவளை கரூஷதேசாதிபதியான விருத்தசர்மா விவாஹஞ்செய்துகொண்டார். இவளிடத்தில் ருஷிகளினால்=ஸனகாதிகளினல், வைகுண்டத்தில் சபிக்கப்பட்ட ஜயன் முந்தினபிறவியில் திதியின் புத்திரனான ஹிரண்யகசிபுவாக இருந்து இப்பிறவியில் தந்தவக்த்ரனாகப் பிறந்தான்.

ஶ்ருதகீர்த்தி என்பவளைக் கேகயதேசாதிபதியான த்ருஷ்டகேது என்பவன் விவாஹஞ்செய்துகொண்டான். இவளிடத்தில் ஸந்தர்த்தனன் முதலிய கேகயதேசாதிபதிகளான ஐந்து புத்திரர்கள் ஜனித்தனர். (38) ராஜாதிதேவீ என்பவளிடத்தில் ஜயஸேனன் என்பவன் விந்தன் அனுவிந்தன் என்ற ஆவந்தீதேச (உஜ்ஜயினீதேச) ராஜாக்களை உண்டுபண்ணினன். தமகோஷன் என்ற சேதிதேசத்தரசன் ஶ்ருதஶ்ரவஸ் என்பவளை விவாஹஞ்செய்துகொண்டான். (39) அவளுடைய புத்திரன் சிசுபாலன். அவனுடைய உத்பத்தியானது முன்னர் ஏழாவது ஸ்கந்தத்தில் சொல்லப்

कथितस्तस्य संभवः। देवभागस्य कंसायां चित्रकेतुबृहद्बलौ ॥ ४० ॥
कंसवत्यां देवश्रवसः सुवीर इषुमांस्तथा। कङ्कायामानकाज्जातः सत्यजि-
त्पुरुजित्तथा ॥ ४१ ॥ सृञ्जयो राष्ट्रपाल्यां च वृषदुर्मर्षणादिकान्। हरिके-
शहिरण्याक्षौ शूरभूम्यां च श्यामकः ॥ ४२ ॥ मिश्रकेश्यामप्सरसि वृका-
दीन्वत्सकस्तथा। तक्षपुष्करशालादीन्दुर्वाक्ष्यां वृक आदधे ॥ ४३ ॥
सुमित्रार्जुनपालादीन् शमीकात्तु सुदामिनी। कङ्कश्च कर्णिकायां वै ऋत-
धामजयावपि ॥ ४४ ॥ पौरवी रोहिणी भद्रा मदिरा रोचना इला। देव-
कीप्रमुखा आसन्पत्न्य आनकदुन्दुभेः ॥ ४५ ॥ बलं गदं सारणं च दुर्मदं
विपुलं ध्रुवम्। वसुदेवस्तु रोहिण्यां कृतादीनुदपादयत् ॥ ४६ ॥

---

பட்டிருக்கிறது. தேவபாகன் என்பவனுக்குக் கம்ஸை என்பவளிடத்தில் சித்ரகேது என்றும், ப்ருஹத்பலன் என்றுமாக இரண்டு புத்திரர்களுண்டாயினர். (40) கம்ஸவதீ என்பவளிடத்தில் தேவஸ்ரவஸ் என்பவனுக்கு ஸுவீரன் அதுபோல இஷுமான் இருவரும் பிறந்தனர். கங்கை என்பவளிடத்தில் ஆனகன் என்பவனிடமிருந்து ஸத்யஜித் புருஜித் முதலியோர் பிறந்தனர். (41) ராஷ்ட்ரபாலி என்பவளிடத்தில் ஸ்ருஞ்ஜயன் என்பவன் வ்ருஷன் துர்மர்ஷணன் முதலியோர்களை யுண்டுபண்ணினன். சூரபூமி என்பவளிடத்தில் ஶ்யாமகன் என்பவன் ஹிரண்யகேசன் ஹிரண்யாக்ஷன் இவர்களை யுண்டுபண்ணினன். (42) மிஶ்ரகேசீ என்ற அப்ஸரஸ்ஸினிடத்தில் வத்ஸகன் என்பவன் வ்ருகன் முதலியோர்களை யுண்டுபண்ணினன். துர்வார்க்ஷீ என்பவளிடத்தில் வ்ருகன் என்பவன் தக்ஷன் புஷ்கரசாலன் முதலியோர்களை யுண்டுபண்ணினன். (43) ஸுதாமினீ என்பவள் சமீகர் என்பவரிடமிருந்து ஸுமித்ரன் அர்ஜுனபாலன் முதலியோர்களை யுண்டுபண்ணினள். கர்ணிகை என்பவளிடத்தில் கங்கன் என்பவன் ருததாமன் அஜயன் இவர்களை யுண்டுபண்ணினன். (44) வசுதேவருக்குப் பௌரவீ, ரோஹிணீ, பத்ரா, மதிரா, ரோசனா, இளா, தேவகீ முதலிய பத்தினிகளிருந்தனர். (45) வஸுதேவரோ, ரோஹிணியினிடத்தில் பலன், கதன், ஸாரணன், துர்மதன், விபுலன், துருவன் இவர்களையும் கிருதன் முதலியோர்களையும் உண்டுபண்ணினார். (46)

सुभद्रो भद्रवाहश्च दुर्मदो भद्र एव च। पौरव्यास्तनया ह्येते भूताद्या द्वादशाभवन् ॥ ४७ ॥ नन्दोपनन्दकृतकशूराद्या मदिरात्मजाः। कौशल्या केशिनं त्वेकमसूत कुलनन्दनम् ॥ ४८ ॥ रोचनायामतो जाता हस्तहेमाङ्गदादयः। इलायामुरुवल्कादीन्यदुमुख्यानजीजनत् ॥ ४९ ॥ विपृष्ठो धृतदेवायामेक आनकदुन्दुभेः। शान्तिदेवात्मजा राजन् श्रमप्रतिश्रुतादयः ॥ ५० ॥ राजानः कल्पवर्षाद्या उपदेवासुता दश। वसुहंससुवंशाद्याः श्रीदेवायास्तु षट् सुताः ॥ ५१ ॥ देवरक्षितया लब्धा नव चात्र गदादयः। वसुदेवः सुतानष्टावादधे सहदेवया ॥५२॥ पुरुविश्रुतमुख्यांस्तु साक्षाद्धर्मो वसूनिव। वसुदेवस्तु देवक्यामष्ट पुत्रानजीजनत् ॥ ५३ ॥ कीर्तिमन्तं सुषेणं

---

வஸுதேவருக்குப் பௌரவீ என்ற பத்னியினிடத்தில் ஸுபத்ரன், பத்ரவாஹன், துர்மதன், பத்ரன் இவர்களும் பூதன் முதலியோருமான இந்தப் பன்னிரண்டு புத்திரர்களுண்டாயினர். நந்தன், உபநந்தன், கிருதகன், சூரன் முதலியோர் மதிரையின் புத்திரர்களாவர். கௌஸல்யை என்ற பத்னியானவள் குலத்தை ஸந்தோஷப்படுத்தக்கூடிய கேசி என்ற ஒரேபுத்திரனை யுண்டுபண்ணினள். (47–48) இந்த வஸுதேவரிடமிருந்து ரோசனை என்பவளிடத்தில் ஹஸ்தன், ஹேமாங்கதன் முதலியோருண்டாயினர். இளை யென்பவளிடத்தில் யதுவை முக்கியமாகக் கொண்ட உருவல்கன் முதலியோரை யுண்டுபண்ணினர். (49) வஸுதேவருக்கு த்ருததேவா என்பவளிடத்தில் விப்ருஷ்டன் என்ற ஒரேபுத்திரன் பிறந்தான். ஹே ராஜன்! ஶ்ரமன், ப்ரதிஶ்ருதன் முதலியோர் சாந்திதேவா என்பவளின் புத்திரர்களாவர். (50) கல்பவர்ஷனை ஆதியாகக்கொண்ட பத்து ராஜாக்கள் உபதேவையின் புத்திரர்களாவர். வஸு, ஹம்ஸன், ஸுவம்சன் முதலிய ஆறுபேர்கள் ஸ்ரீதேவையின் புத்திரர்களாவர். (51) தேவரக்ஷிதை என்பவளினால் இந்த வஸுதேவரிடத்தில் கதன் முதலிய ஒன்பது புத்திரர்கள் அடையப்பட்டனர். வஸுதேவர் ஸஹதேவை என்பவளுடன் சேர்ந்து ஸாக்ஷாத் தர்மன் வஸுக்களைப் போல புரு, விஶ்ருதன் முதலிய எட்டுப்புத்திரர்களை யுண்டுபண்ணினர். வஸுதேவரோ தேவகியினிடத்தில் எட்டுப் புத்திரர்களை யுண்டுபண்ணினர். (52–53)

च भद्रसेनमुदारधीः । ऋजुं सम्मर्दनं भद्रं सङ्कर्षणमहीश्वरम् ॥ ५४ ॥ अष्टमस्तु तयोरासीत्स्वयमेव हरिः किल । सुभद्रा च महाभागा तव राजन्पितामही ॥ ५५ ॥ यदा यदेह धर्मस्य क्षयो वृद्धिश्च पाप्मनः । तदा तु भगवानीश आत्मानं सृजते हरिः ॥ ५६ ॥ न ह्यस्य जन्मनो हेतुः कर्मणो वा महीपते । आत्ममायां विनेशस्य परस्य द्रष्टुरात्मनः ॥ ५७ ॥ यन्मायाचेष्टितं पुंसः स्थित्युत्पत्त्यप्ययाय हि । अनुग्रहस्तन्निवृत्तेरात्मलाभाय चेष्यते ॥

---

அதாவது:—உதாரமான புத்தியுள்ளவசுதேவர் கீர்த்திமான் என்பவனையும், ஸுஷேணனையும், பத்ரஸேனனையும், ருஜுஎன்பவனையும், ஸம்மர்த்தனனையும், பத்ரனையும், ஆதிசேஷரூபமான ஸங்கர்ஷணனையுமாக ஏழு புத்திரர்களை யுண்டாக்கினர். (54) ஸாக்ஷாத் ஹரியே அவ்விருவருக்கும் எட்டாவது புத்திரனுகப் பிறந்தார், ஹே ராஜன்! மஹாபாகையும் உனது பிதாமஹியுமான ஸுபத்ரையும் பிறந்தாள். (55) இவ்வுலகில் எவ்வெப்பொழுது தர்மத்துக்குத் தேய்வும் பாபத்துக்கு விருத்தியுமேற்படுகிறதோ அவ்வப்பொழுது பகவானும் ஈஸ்வரனுமான ஹரியானவர் தன்னைத் தானே விருஷ்டித்துக்கொள்ளுகிறார். (யாவருமறியுமாறு வெளியில் வருகிறார்.) (56) ஹே மஹீபதே! பரனும், த்ரஷ்டாவும், ஆத்மாவுமான இந்த ஈஸ்வரனுக்குத் தனது மாயையை (ஸங்கல்பத்தை) தவிர்த்து பிறவிக்கோ, கர்மத்துக்கோ வேறு காரணம் கிடையாதன்றோ. (57) எவருடைய மாயாசேஷ்டிதமானது ஜீவனுடைய அனுக்கிரஹமாகவாகிறதோ ஜீவனுக்கு அனுக்கிரஹஞ்செய்கின்றவரான அவருக்குக் கர்மாதி பாரதந்திரியமூலம் ஜன்மாதிகள் ஸம்பவிக்க இடமேது? ஏன்? அவருடைய அந்த மாயாசேஷ்டிதமே, * ஸ்திதிஸ்ருஷ்டிலயம் இவற்றையும் பொருட்டும், ஆத்மலாப (மோக்ஷ) த்தையும் பொருட்டுமே காரணமாக விரும்பப்படுகிறது, அவரை ஶ்ரவணஞ்செய்பவர்க்கு ஸ்திதியாதிகள் நிவிருத்தியையடைந்துவிடுவதாலென்க. (58)

---

* ப்ரளயத்தில் ஒடுங்கின தேஹாதி உபாதியையுடைய ஜீவனுக்குத் தர்மாதிகள் ஸம்பவிக்க இடமில்லையானதுபற்றி உபாதிகளை விருஷ்டித்துக்கொடுத்து தர்மாதிகளை ஸம்பாதித்துத் தருவதால் பகவன் மாயாசேஷ்டிதமானது ஜீவனுக்கு அனுக்ராஹகமாகவாகிறது என்பது கருத்து.

अक्षौहिणीनां पतिभिरसुरैर्नृपलाञ्छनैः। भुव आक्रम्यमाणाया अभाराय कृतोद्यमः ॥ ५९ ॥ कर्माण्यपरिमेयानि मनसापि सुरेश्वरैः। सह सङ्कर्षणश्चक्रे भगवान्मधुसूदनः ॥ ६० ॥ कलौ जनिष्यमाणानां दुःखशोकतमोनुदम्। अनुग्रहाय भक्तानां सुपुण्यं व्यतनोद्यशः ॥ ६१ ॥ यस्मिन्सत्कर्णपीयूषे यशस्तीर्थवरे सकृत्। श्रोत्राञ्जलिरुपस्पृश्य धुनुते कर्मवासनाम् ॥ ६२ ॥ भोजवृष्ण्यन्धकमधुशूरसेनदशार्हकैः। श्लाघनीयेहितः शश्वत्कुरुसृञ्जयपाण्डुभिः॥ ६३ ॥ स्निग्धस्मितेक्षितोदारैर्वाक्यैर्विक्रमलीलया। नृलोकं रमतामास मूर्त्या सर्वाङ्गरम्यया ॥ ६४ ॥ यस्याननं मकरकुण्डलचारुकर्णभ्राजत्कपोलसुभगं सविलासहासम्। नित्योत्सवं न ततृपुर्दृशि-

---

அக்ஷௌஹிணிகளுக்குப் பதிகளும், அரசர்களுக்குறிய அடையாளமுள்ளவர்களுமான அஸுரர்களினால் ஆக்ரமிக்க (அமுத்த)ப்பட்டவளான பூமியினுடைய பாரத்தை இரக்கவேண்டி செய்யப்பட்ட முயற்சியை யுடையவரும் மதுசூதனனுமான பகவான் பலராமனுடன்கூட தேவஸ்ரேஷ்டர்களால் மனத்தாலுங்கூட நிர்ணயிக்கமுடியாத கர்மங்களைச் செய்திருக்கிறார். (59–60) கலியில் ஜனிக்கப்போகின்றவர்களான பக்தர்களுக்கு அனுக்கிரஹிக்கவேண்டி துக்கம் சோகம் அக்ஞானம் இவற்றைப் போக்குகின்றதும் மிகப் புண்யமானதுமான யசஸ்ஸை விஸ்தாரப்படுத்தி இருக்கிறார். (61) ஸாதுக்களின் காதுகளுக்கு அமுதமான இந்த யசஸ்ஸாகிற சிறந்த தீர்த்தத்தில் ஸ்ரோத்ரங்களையேபான பாத்திரமாகக் கொண்ட புருஷன் ஒருதடவை ஆசமனஞ்செய்து (அதனுடைய அழகினாலிழுக்கப்பட்ட சித்தத்தை யுடையவனாய்க்கொண்டு) கர்மவாஸனையைப் போக்கிக்கொள்ளுகிறான். (62) போஜர், விருஷ்ணிகள், அந்தகர், மதுக்கள், சூரஸேனர், தசார்ஹர் இவர்களினாலும், குருக்கள் ஸிருஞ்ஜயர்கள் பாண்டுக்கள் இவர்களினாலும் அடிக்கடி கொண்டாடத்தக்க சரித்திரத்தை யுடையவரான பகவான் அழகிய புன்சிரிப்பு வீக்ஷணம் இவற்றினால் காம்பீர்யம்வாய்ந்த வாக்குகளினாலும், பராக்கிரமம் பொருந்தியலீலையினாலும், எல்லாஅங்கங்களினாலும் அழகுவாய்ந்த ஸ்ரீமூர்த்திகளினாலும் மனிதவுலகை ரமிக்கும்படி செய்திருக்கிறார். (63–64) மகரம் போன்ற குண்டலங்களினால் அழகுவாய்ந்த காதுகளினாலும் ப்ரகாசிக்கின்ற

भिः पिबन्त्यो नार्यो नराश्च मुदिताः कुपिता निमेश्च ॥ ६५ ॥ जातो गतः पितृगृहाद्व्रजमेधितार्थो हत्वा रिपून्सुतशतानि कृतोरुदारः । उत्पाद्य तेषु पुरुषः क्रतुभिः समीजे आत्मानमात्मनिगमं प्रथयञ्जनेषु ॥ ६६ ॥ पृथ्व्याः स वै गुरुभरं क्षपयन्कुरूणामन्तः समुत्थकलिना युधि भूपचम्वः । दृष्ट्या विधूय विजये जयमुद्विघोष्य प्रोच्योद्धवाय च परं समगात्स्वधाम ॥ ६७ ॥

इति श्रीमद्भागवते महापुराणे नवमस्कन्धे यदुवंशानुकीर्तनं नाम चतुर्विंशोऽध्यायः ॥ २४ ॥ इति नवमस्कन्धः समाप्तः ॥

---

கன்னங்களினுலும் மிக்க சோபை வாய்ந்ததும், மிக்க லீலைவாய்ந்த மந்தஹாஸத்தையுடையதும், நிலைத்த உத்ஸவத்தை=தரிசிப்பவர்க்கு ஆனந்தத்தை விளைவிக்கும் வியாபாரத்தை, உடையதுமான எந்தப் பகவானுடைய முகத்தைத் தமது கண்களினுல் பானஞ்செய்கின்ற புருஷர்களும் ஸ்திரீகளும் பரமஸந்தோஷத்தையடைந்தவர்களாய் இமைகொட்டுதலில் கோபங்கொண்டு திருப்தியை யடையாதவர் களாகவே இருகின்றனரோ, எந்தப் புருஷன் சொந்தரூபத்துடன் முதலில் அவதரித்துப் பிறகு மனுஷ்யாகாரத்தை யடைந்தவராய்க் கொண்டு பிதாவின் வீட்டிலிருந்து கோகுலம் சென்று அங்குள்ள ஜனங்களுக்குப் புருஷார்த்தத்தை விருத்திசெய்துகொண்டு சத்து ருக்களைக் கொன்று வெகு பத்னிகளை விவாஹஞ்செய்துகொண்டு அவர்களிடத்தில் நூற்றுக் கணக்கான புத்திரர்களையு முண்டு பண்ணி, தன்னுடையதான வேதமார்க்கத்தை ஜனங்களிடத்தில் விஸ்தாரப்படுத்தவேண்டி யாகங்களினுல் தன்னையே ஆராதித்துக் கொண்டாரோ அவர், குருக்களுக்கு உள்ளிலுண்டான கலஹம் நிமித்தமாக பூமிக்கேற்பட்ட பெரிய சுமையைப் போக்கியும், போரில் அரசர்களின் ஸேனைகளை தனது பார்வையினுலேயே நாசஞ் செய்து அர்ஜுனனுல் ஜயிக்கப்பட்டது என உத்கோஷித்தும், உத்தவருக்குப் பரதத்துவத்தை யுபதேசித்தும் சொந்தமான இருப்பிடத்தைச் சொந்த ஸ்வரூபத்துடனேயே அடைந்தார் என்றுர்.

இவ்விதம் ஸ்ரீமத்பாகவத மஹாபுராண நவமஸ்கந்தத்தில் யதுவம்சானுவர்ண்ணனமென்ற இருபத்துநான்காவது அத்தியாயம் முற்றிற்று.

நவமஸ்கந்தம் முற்றிற்று. சுபம்.

